**Moliya Valikal**
**(A new Novel from Norway)**

**First Edition**
**August 2018**
**ISBN:** 978-0-244-40632-5

**Publication Editor**
**R.Thiagalingam**
**Vetlandsveien 117**
**0686 Oslo**
**Norway**

**Pages: 317**

**Printed & Published by**
**Lulu.com**

# பகுதி 4

## 1 பிறந்த நாள்

அருள் மகளின் முதலாவது பிறந்த நாளை வீட்டில் கொண்டாடினான். அவனுக்குப் பிறந்த நாள் என்பது கோயிலில் அர்ச்சனை செய்வதோடு முடிந்ததான ஞாபகம். இப்போது எங்கும் மாறிவிட்டது. கேட்டுக் கேள்வி இல்லாது மற்றவர் செய்வதை செய்வது எங்கள் கலாச்சாரம் என்கின்ற மூடப் பார்வை முழுமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது. அதிகாரத்தோடு இருந்து ஆட்சி செய்தபோது திணிப்பை மறுத்த நம்மினம் இப்போது பணத்தால் வந்த பனிக் குணத்தில், அகதிப் பிச்சையில் வந்த புதுப் பணத்தில் செய்கிறார்கள் என்பது அருளின் எண்ணம். ஐரோப்பியக் கலாச்சாரத்தின் மீது கொண்ட பித்துக் குணத்தால் தாய் நாட்டிலும் நிலமை தலைகீழாக மாறிவிட்டது. தனது எண்ணம் எப்போதும் சரியாக இருக்க வேண்டும் என்று அவன் எண்ணுவது இல்லை. மற்றவர்களின் விருப்பிற்குக் குந்தகம் விளைவிப்பதான கதையில் அவன் பொதுவாக ஈடுபடுவது இல்லை. அவர்கள் பணம் அவர்கள் செலவு என்பது அவன் எண்ணம் ஆகும்.

பெண் பிள்ளைக்குப் பெயர் தேடி அலைந்து களைத்த அருள் ஒரு முடிவுக்கு வந்து இருந்தான். பழைய பெயர் ஒன்றைச் சிறிது நவீனம் ஆக்கித் தனது மகளுக்கு வைப்பது என்று முடிவு செய்தான். அல்லி என்கின்ற பெயரை அவன் நவீனத்துவம் கருதி அல்லிகா ஆக்கி இருந்தான். அல்லிகா கேட்பவர்களுக்குப் புதுமையாக இருந்தது. இங்கே சொல்வதற்கும் அது வசதியான பெயர் என்பதில் அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது.

அல்லிகாவின் முப்பத்து ஒன்றாவது நாளை அவன் வீட்டில் செய்தான். அப்போது சொரூபாவுக்கு இயலாது என்பதால் சாப்பாடு வெளியில் இருந்து எடுத்தான். அத்தோடு வருபவர்களிடமும் சில கறிகளும், பலகாரமும் செய்து வருமாறு கூறி இருந்தான். முப்பத்து ஒன்றுக்கு வந்தவர்கள் ஊர்க்கதை ஒட்டுமொத்தமாய் கதைத்து

இரவுச் சாப்பாட்டையும் குழையலாக முடித்துக் கொண்டு புறப்பட்டது பல காலத்திற்குப் பின்பு ஏற்பட்ட சுவையான அனுபவமாய் அமைந்தது. பிறந்த நாளைக் கொண்டாட பிற்பகலே அழைப்பதாக அருளும் சொரூபாவும் உத்தேசித்து இருந்தார்கள். பிற்பகல் வந்தால் கேக் வெட்டிய பின்பு கதைத்துக் குடித்துச் சாப்பிட்டுப் பின்பு தொடர்ந்தும் சமா வைத்துப் பலகாரம் இனிப்பு வகை சாப்பிட்ட பின்பு வீட்டிற்குச் செல்ல நடுச்சாமம் ஆகிவிடும். பிள்ளைகளுக்குப் பிறந்த நாள் கொண்டாடுகிறோம் என்கின்ற சாட்டில் பெரியவர்கள் தாங்கள் அனுபவிப்பது பலருக்கும் விளங்கியது. அதுவும் போத்தல்களுக்கு அலையும் ஆண்களைக் கண்டவுடன் பெண்களுக்கு யாருக்குக் கொண்டாட்டம் என்கின்ற கேள்வி அரைத்த மிளகாயை உடலில் அப்பிவிட்டதாக எப்போதும் மனதில் எரிந்து கொண்டு இருக்கும். குடிக்கும் மனிதர்கள் பல விதமாக இருப்பார்கள். சில வேளைகளில் அது அசௌகரியமாக மாறிவிடுவதும் உண்டு. குடிப்பதற்கு தடைபோட வேண்டும் என்று எண்ணுபவர்கள் அதுவே தங்களுக்குள் ஏதாவது முரண்பாட்டை உண்டுபண்ணிவிடுமோ என்கின்ற பயத்தில் உயர்த்தி அதைத் தூக்கிப் பிடிப்பதில்லை.

அருளும் சொரூபாவும் அந்தப் பிறந்த நாளை மிகவும் எளிதாகத்தான் கொண்டாடினார்கள். கஸ்ரப்பட்டு உழைப்பதைக் கவனமாகச் செலவு செய்ய வேண்டும் என்பதில் அருளுக்கு ஏக அக்கறை உண்டு. சொரூபாவுக்கு நவீன அங்காடிகளுக்குள் செல்லும் போது அரச பரம்பரையில் பிறந்ததான எண்ணம் தோன்றுவது உண்டு. தோன்றினாலும் அதை நடைமுறைப்படுத்தும் துணிவு அவளுக்கு வருவது இல்லை. அருளிற்கு அவளின் அந்த அவதி விளங்கும். அவன் அவளுக்கு அளிக்கும் விளக்கத்தில் அமைதி அடைவாள். வரவுக்கு மீறிச் செலவு செய்து கடனில் உள்வது ஒரு வருத்தம் என்று இப்போது கண்டு பிடித்து இருக்கிறார்கள்.

அரச பரம்பரை போல இடைக்கிடை கனவு கண்டாலும் கொண்டாட்டங்களைச் சிக்கனமாக வீட்டில் அன்னியோன்னியமாக முடிக்க வேண்டும் என்கின்ற அருளின் கருத்துக்கு அவள் மறுப்புக் கூறுவது இல்லை.

விட்டுக்கொடுப்பே உறவை வாழ வைக்கும் என்பதை அவள் நம்பினாள்.

சொரூபாவும் அருளும் சேர்ந்து கேக்கும் செய்து சமையலும் செய்து இருந்தனர். மிகவும் நெருங்கிய வட்டத்தோடு அந்தப் பிறந்த நாள் நிறைவு பெற்றது. அதற்காக அவன் சாப்பாட்டிலும் மதுவிலும் எந்தக் குறையும் வைக்கவில்லை. "TS"சையும் புவனலோசினியையும் அழைத்துச் செல்வதற்குச் சரிஸ்கா தனது புதிய நீல நிற மஸ்டாக் காருடன் வந்திருந்தாள். அந்தக் கொண்டாட்டம் முடிந்து மூன்று மாதங்களின் பின்புதான் றூபனின் மகன் வினேசிற்குப் பிறந்த நாள் வந்தது. றூபனிடம் இயற்கையாகவே தாங்கள் ஊரில் செய்து பார்க்க முடியாதவற்றை எல்லாம் இங்கே செய்து பார்த்துவிட வேண்டும் என்கின்ற பரபரப்பு உண்டு. அந்தப் பரபரப்பை தீர்த்துக் கொள்ளும் அளவிற்கு இங்கு உழைப்பும் வருமானமும் இருக்கின்றன. றூபன் ஒரு பாடசாலை மண்டபத்தை வாடகைக்கு எடுத்து இருந்தான். முதன் நாளே அருள், சிவா, "TS", சொரூபன், நிமலன், சிவநாயகம் என்கின்ற றூபனின் நண்பன் உள்பட இன்னும் சிலர் வந்து மண்டபத்தை அலங்கரித்தனர். மண்டபம் அலங்கரித்து முடிந்த போது ஐந்தாவது முறை தேநீர் பருகிவிட்டார்கள். இரவு அதற்கு மேல் அங்கு நிற்க முடியாது என்ற பின்புதான் இரண்டு மணிக்கு வீட்டிற்குச் சென்றார்கள்.

றூபன் கிட்டத்தட்ட நூற்று ஐம்பது நபர்களை அந்தப் பிறந்த நாள் வைபவத்திற்கு அழைத்து இருந்தான். இது புலன் பெயர்ந்த தமிழர்களின் புதிய கலாச்சாரம். அதில் எத்தினை நபர்கள் வருவார்கள் என்பதில் ஒருவித ஸ்திரம் அற்ற தன்மை இருந்தது. கோலிற்குள் ஆகக் கூடியது நூற்று இருபது நபர்கள் மட்டுமே இருக்கலாம். அதற்கு மேல் ஆட்கள் வந்து விட்டால் அங்கும் இங்கும் ஆகச் சமாளிக்க வேண்டும் என்கின்ற திட்டத்தைச் சிவாவிடம் கூறி இருந்தான்.

அடுத்த நாள் இரண்டு மணிக்கு வைபவம் தொடங்கியது. எல்லோரும் வரவும் சாப்பாடு வாகனத்தில் வரவும் சரியாக இருந்தது. நேரம் இரண்டு மணி ஆனதால் பலரும் பசியில் தவித்தார்கள். சமையல் அறைக்குள் சிலர் அடிக்கடி

போய் விட்டுக் கட்டினார்கள். அது இரகசியமாக நடந்தது. அதைப் பரகசியமாகப் பாடசாலையில் வைத்துக் குடிப்பதற்கு அனுமதி கிடையாது. வைபவத்திற்கு வந்தவர்கள் வரிசையில் நிற்க... அவர்களுக்குச் சாப்பாடு கடதாசித் தட்டுகளில் பரிமாறப்பட்டது. அவர்கள் அந்தச் சாப்பாட்டை நவீன பிச்சையாகப் பெற்றுக் கொண்டு சென்றார்கள். உள்ளே கோலில் மேசைகள் அடுக்கி அதன் மீது கடதாசி உறை போடப்பட்டு இருந்தது. கடதாசிக் குவளைகள் குளிர் பாணம் குடிப்பதற்காக வைக்கப்பட்டு இருந்தன. பலரும் குளிர் பாணத்தையே பருகினார்கள். ஒரு சிலர் மட்டும் நீர் வாங்கிப் பருகினார்கள்.

பின்பு புகைப்படக் கருவிக்கு முன்பு நின்று கேக் வெட்டிப் படம் எடுத்துப் போட்டிக்குப் பாட்டுப் பாடும் போது சிறுவர்களில் பாதிப்பேர் நித்திரைத் தூக்கத்தில் தவித்தார்கள். முழுதும் முடிந்து போகும் போது பலரையும் தூக்கிச் சென்று காரில் படுத்திப் பயணத்தைத் தொடங்க வேண்டி இருந்தது. அதன் பின்பு வந்த காலத்தில் பிறந்த நாள் என்பது வராத மாதங்களோ கிழமைகளோ இல்லை என்பதாக ஒஸ்லோவில் வாழும் தமிழர்களின் கொண்டாட்டங்கள் அபிவிருத்தியாகி சிலருக்கு ஆக்கினை ஆகியது. பிறந்த நாளுக்கு அடுத்ததாகப் பல கொண்டாட்டங்கள் இடம் பிடிப்பதற்காய் காத்திருந்தன. அவற்றை வரவேற்க அண்டத்தின் அசைவுகளுக்குள் அகப்பட்ட காலமும், அதன் அசைவுகளுக்குள் அகப்பட்ட இந்த மனிதர்களும்.

# 2 சுதி மாறிய இராகம்

இந்த வருடத்திற்கான கோடைக்கால விடுமுறையும் வந்து போய்விட்டது. நோர்வேக்கு வந்து ஒரு கழுதை வயதும் நொடிகளாய் பறந்ததான திகைப்பு. இன்றுதான் மற்றாஸ் விமான நிலையத்தில் நின்று விமானத்திற்காய் மசுங்கியதான ஞாபகம் "TS"சிற்கு. காலம் மனித ஆயுளைக் கரைப்பதிற்காய் அண்டத்தில் அவசர அவசரமாகப் பாய்கிறதா என்கின்ற கேள்வி "TS"சிடம். நரைகள் தலையில் அடர்ந்து அதன் வண்ணத்தை நிரந்தரமாக மாற்றுகிறது. ஒற்றையடிப் பாதையான வாழ்வில் இறந்து போன வயதைத் திரும்பப் பிடிப்பதற்கு எந்த வழியும் இல்லை. தனது காலம் இறப்பது பற்றி அவர் அதிகம் கவலைப்படுவது இல்லை. சரிஸ்காவின் வாழ்க்கையில் மாற்றங்கள் ஏற்படும் என்கின்ற எண்ணம் இப்போது அவரிடம் சற்றும் இல்லை. இரும்பு மனிசியாக அந்த விடயத்தில் எந்த விட்டுக் கொடுப்பும் காட்டுவதற்கு அவள் தயாராக இல்லை. கோடை விடுமுறைக்கு இந்தியா சென்று தமிழ்நாடு பார்த்துப் பின்பு புகையிரதத்தில் டெல்லி சென்று அங்கு இருந்து வாகனம் வாடகைக்கு வைத்துக் கொண்டு, டெல்லி புகையிரத நிலையத்தின் ஒரு பக்க வாசலில் வாடகைக் காரில் ஏற்றி மறுபக்க வாசலில் இறக்கிய சாரதியைப் பார்த்துச் சிரித்து, டெல்லி, ஆக்ரா, ஜெய்ப்பூர் என்கின்ற முக்கோணப் பயணத்தைத் தொடங்கி, அதை இரசித்து அனுபவித்தும், தாஜ்மகாலின் வெள்ளை பளிங்கில் செருக்கப்பட்ட சிவப்புச் சித்திரங்களைப் பார்த்துப் பார்த்து இரசித்தும், ஜெய்ப்பூரின் பிர்லா வெள்ளை ஆலயத்தை விட்டு வர மனதில்லாது குந்தியிருந்து குழந்தைப் பிள்ளை போல் அடம் பிடித்தாலும், துறவறம் கேட்பதாயும் இல்லாது, இல்லறம் விரும்புவதாயும் இல்லாது தனது உணர்ச்சிகளை மறைத்து, கல்லாய் "TS"சின் கனவு உலகை நிர்மூலமாக்கிய குற்ற உணர்வு எதுவும் இன்றி வேலையும், கணினியும் தனது அலுவலும் என்பதில் அவள் மும்மரமாக இருந்தாள். யாராவது வெளியே வேலையில் அல்லது விருந்தில் சீண்டினால் அன்று "TS"சோடும்

புவனலோசினியோடும் கொடுத்த வாக்கை எல்லாம் மீறி அந்த ஆத்திரத்தை மொத்தமாய் கொட்டித் தீர்க்க... பெற்ற கடனுக்காக இந்த வயதிலும் அவள் மனம் நோகாது கேட்கும் தியாகம் செய்வது அடிக்கடி நடந்தேறும்.

அவள் வாழ்க்கை எப்படிப் போகப் போகின்றது என்கின்ற கேள்வி மாத்திரம் ஓயாத அலைகளாக,தான் எங்கே போகிறேன், என்ன செய்கிறேன் என்பதை மறந்தவராக "TS" சில வேளைகளில் தன் போக்கில் நடப்பதும் உண்டு. உலகத்தின் எந்த மூலையில் எங்கள் சமுதாயம் பெண்களை வைத்து இருந்தாலும் கவலை ஒரே விதமாகத் தலை எடுக்க விடாது அவர்களை அழுத்தும். இப்போது அவளை எண்ணியதும் அவர் கூடு துறந்த ஆவியானார். "Tram"மால் இறங்கிய "TS"சின் கூடு இயந்திர மனிதனைப் போல வீட்டை நோக்கி நடந்தது.

முதல் செய்த அடிமை வேலையை மாற்றி இப்போது ஒரு பாடசாலையில் வேலை செய்தாலும் கழுவும் வேலை செய்ய வேண்டி இருக்கிறதே என்கின்ற கவலை அடிக்கடி தோன்றுவது உண்டு. கழுவும் வேலை செய்து பிழைப்பதல்ல எங்கள் தலைமுறை வாழ்க்கை என்கின்ற கவலை அவரை அடிக்கடி வாட்டும். தொழிலையும் சாதியையும் தலையில் தூக்கி வைத்து ஆடுவது அற்பம் என்றாலும் தன் கௌரவத்தைத் தின்னுவதான ஒரு வேலையில் ஒட்டிக் கொண்டது அவர் தன்மானத்தை அடவு வைத்ததான பரிதவிப்பை அவருக்கு இன்றும் தருகிறது. காலம் கடந்த பின்பு படிக்க முடியாது என்கின்ற எண்ணத்தில், இருப்பதை விட்டுப் பறப்பதற்கு ஆசைப்படக் கூடாது என்று தன்னைத் தானே சமாதானம் செய்து கொள்வார். இந்தப் பாடசாலையில் முதல் இருந்த அதிபர் மிகவும் கருணையாக நடந்து கொண்டார். அவருக்கு மற்றவர்கள் கஸ்ரப்படுவதுதான் கஸ்ரப்படுவதான உணர்வை உண்டு பண்ணிவிடும். இப்போது புதிதாக வந்திருக்கும் அதிபர் மகா கருமி அல்லது கிருமி என்று சொல்ல வேண்டும். வேலை செய்பவர்களை எவ்வளவு வேலை வாங்கலாமோ அவ்வளவு வாங்க வேண்டும் என்பது அவர் கொள்கையாக இருந்தது. மற்றவர் வேதனையில் அவர் ஆதாயம் தேடும்

அக்கறை. அப்படியான அவர் கொள்கை இறுக இறுக "TS"சின் வேலை கூடிக் கொண்டு போயிற்று. அகதிகளாய் வந்து செக்கு மாடுகளாய் அகப்பட்டுக் கொண்ட நமக்கு இனி ஊர் போய் சேரும் பாக்கியம் இருக்காது என்கின்ற ஏக்கம் அவரை அந்த நேரம் தாக்கும். மனித மூளையில் கவலையும் மகிழ்வும் மாறி மாறிச் சுழலாது விட்டு இருந்தால் பித்துப் பிடித்த மனித இனத்தால் உலகம் எப்போதோ அழிந்து இருக்கும் என்கின்ற எண்ணம் "TS"சிற்கு உண்டானது.

உலகத்தைத் தன்னால் மாற்ற முடியாவிட்டாலும் வீட்டில் சந்தோஷமாய் இருந்து இருக்கலாம். ஒவ்வொரு மனிதனும் கடவுளிடம் எப்போதும் வரம் கேட்பது அதையே. "TS"சும் துர்கையிடம் அதையே வரம் கேட்டார். வரம் கேட்கத்தான் முடியும். கொடுப்பதும் விடுவதும் அவள் விருப்பம். வரம் கிடைக்கவில்லை. வரலக்ஷ்மியால் "TS"சின் விதியை எந்த விதத்திலும் மாற்ற முடியவில்லை. விதி மிகவும் வலிதாக விளையாடியது. காலம் மருந்திடும் என்கின்ற கணிப்பும் இப்போது பிழைத்து விட்டதை உணரும் போது "TS"சிற்குத் துர்க்கை தன்னை நிரந்தரமாய் கைவிட்ட ஏக்கம், இயலாமை புகைச்சலாகப் பொங்கி எழும். இருந்தும் மனிதனின் தலையில் எழுதி விட்டதை அவன் அனுபவித்துத் தானே ஆக வேண்டும் என்று அவர் சமாதானம் அடைய முயற்சிப்பார். இப்போதும் தன்னைத் தானே அப்படிச் சமாதானம் செய்து கொண்டே வீட்டிற்கு வந்துவிட்டார்.

உள்ளே வரும் போதே புவனலோஜினியின் பிட்டு வாசனை மூக்கைத் துளைத்தது. சிவன் முதுகில் வாங்கியது போன்று வாங்காது பிட்டுச் சாப்பிடும் பாக்கியமாவது கிடைத்து இருக்கிறதே என்பது மகிழ்வு தந்தது. அதுவும் இந்தக் குளிர் நாட்டில் சுடுடச்சுடப் பிட்டும் சம்பலும்... பசி நண்டு போல் வயிற்றை அவருக்குக் கிள்ளியது. குளித்துவிட்டு வந்து சாப்பிட வேண்டும் என்று எண்ணிய வண்ணம் அவசரமாக உடுப்புகளைக் களைந்து விட்டுக் குளியல் அறைக்குள் புகுந்தார். வெந்நீர் மேலில் படும் போது ஏற்படும் சுகம் இந்த நாட்டில் வரம் பெற்ற கணமாய் அவர்மீது விழுந்தது.

புவனலோசினி "TS" வெளியே வருவதற்கு ஐந்து நிமிடங்கள் ஆகும் என்கின்ற கணிப்பில் பிட்டை இருவருக்கும் தட்டுக்களில் இட்டு மீண்டும் மெக்றோவேவ் அவுனில் சூடாக்கிச் சம்பலையும் கொதித்த கோழிக் குளம்பையும் விட்டுச் சாப்பாட்டை தயாராக்கிய அதே வேளை பாலைக் கொதிக்க வைத்து தேநீரும் தயாரித்தாள். வந்ததும் எடுத்துக் கொண்டு போய் பரிமாறினால் சரி என்று எண்ணினாள். சாப்பாட்டைப் பார்ப்பதற்கு நேரம் கிடைக்காத அக்கறையில் கண்கள் தொலைக்காட்சியில் பதியச் சாப்பிடுதல் நடந்தேறும். கண்ணிற்கு இல்லாவிட்டாலும் நாவிற்குச் சுவை தெரியும். "TS"சிற்கு உப்புப் புளிப்புச் சரியாக இருக்க வேண்டும். சிறிது குறைந்தாலும் உப்புத் தூள் கேட்பார். உப்புத் தூள் கேட்டால் சாப்பாட்டில் சறுக்கி விட்டது என்று அர்த்தம். புவனலோசினி அதற்காகப் பல முறை சுவைத்துப் பார்த்தே கறிக்குக் கடைசி விலாசம் கொடுப்பது வழக்கம். எப்போதாவது அலமலக்கத்தில் ஒட்டுமொத்தமாய் மறந்து மாட்டிக் கொள்வதும் உண்டு. அப்போதும் உப்புத்தான் "TS" அவளிடம் கேட்பார். ஆனால் அதில் உனக்குச் சமைக்கத் தெரியாதோ என்கின்ற கேள்வியின் நளினம் சொல்லாமற் சொல்வதான ஒரு உணர்வு புவனலோசினிக்கு ஏற்படும். எதற்காக அந்தச் சங்கடங்களில் மாட்டிக் கொள்ள வேண்டும் என்று அவள் கூடிய மட்டும் கவனம் எடுத்துக் கொள்வது உண்டு.

சரிஸ்கா ஏற்கனவே தனக்குப் பசிப்பதாகக் கேட்டுப் பிட்டு வாங்கிச் சாப்பிட்டு விட்டாள். அவள் மச்சம் மாமிசம் விரும்பி உண்பவள். அதில் ஏதாவது ஒன்று இருந்தால் வேறு கறிகள் அவளுக்குத் தேவை இல்லை. இல்லா விட்டால் அம்மா உருளைக் கிழங்குப் பொரியல், கத்தரிக்காய் பொரியல் செய் என்று தாயை நோண்டி எடுப்பாள். பொரியல் சாப்பிட்டால் கொழுப்பு முட்டிவிடும் என்பது பற்றிப் பல் மருத்துவருக்குத் தெரியாதா என்று தாய் கேட்டால் எனக்குச் சுவையும் முக்கியம், அது மட்டும் நீ பொரி அம்மா என்று அடம் பிடிப்பாள்.

"TS" குளித்துச் சாறம் மாற்றிக் கொண்டு கோலுக்கு வந்தார். பிட்டும் பால் தேநீரும் கோலுக்கு வந்தன. "TS"

தொலைக்காட்சியை இயக்கிவிட்டுத் தட்டை எடுத்துப் பிட்டைப் பிசைந்தார். சம்பலுடனும் கோழி இறைச்சிக் கறியுடனும் பிசைந்த பிட்டு திரணையாக வாய்க்கு அருகே போகும் போது அழைப்பு மணி ஒலித்தது. வாய்க்குள் போக வேண்டிய பிட்டுத் தட்டிற்கு மீண்டும் கொழுக்கட்டை போல வந்து இறங்கியது. "இந்த நேரம் சொல்லாமல் கொள்ளாமல் யாரது?" என்பது அவருக்கு விளங்கவில்லை. "அதுவும் எப்படி வெளிக் கதவைத் தாண்டி உள்ளே வந்தார்கள்? சில வேளை ஏதாவது வியாபாரம் அல்லது பிரச்சாரம் செய்பவர்கள் இப்படி வந்து விடுவதும் உண்டு. நல்ல காலம் கதவில், உள்ளே இருந்து பார்க்கும் ட்டை இருக்கிறது. அதன் ஊடாகப் பார்ப்போம்." என்று எண்ணியவாறு "TS" எழுந்து சென்று கதவு ஓட்டையால் வெளியே யார் நிற்பது என்று பார்த்தார். "TS"சிற்குத் தூக்கி வாரிப் போட்டது. அவள் அந்த நேரத்தில் இந்த இடத்தில் நிற்பதால் அந்த அதிர்ச்சி வந்தது என்பதைவிட அவள் நிற்கும் கோலத்தைப் பார்த்தே அவருக்கு அந்த அதிர்ச்சி வந்தது.

அவள் தலைமுடிகள் வாரப்படாமல் நான்கு திசைகளையும் முள்ளம் பன்றி போல் முறைத்துப் பார்த்தன. நெற்றியில் பொட்டு இல்லாது அவர்கள் தாம்பத்திய வாழ்வின் அடையாளம் தொலைந்து இருந்தது. சொண்டு காய்ந்து கறுத்து பாலைவன நிலமாய் வெடித்து இருந்தது. கண்கள் சிவந்து இருப்பது போன்று இருந்தாலும் அதை நிதானமாகக் கவனிக்க முடியவில்லை. சரிந்து போன சுமைதாங்கி ஆகிச் சோர்ந்து போனதான அவள் உருவம். நிமிர்ந்த அவள் உருவமும் கொங்கைகளும் இன்று குனிந்து தாழ்ந்ததான கோலம். "TS"சால் அதற்கு மேல் சிந்திக்க முடியவில்லை. அவசரமாக கதவைத் திறந்தார்.

"வா சக்தி. என்ன கோலம் இது? எங்க சண்முகன்?"

அவள் முகம் இருண்டு போயிற்று. அழுது விடுவாளோ என்று "TS"சிற்குப் பயம் ஆகிற்று. குமுறும் எரிமலைகளின் மேற்பரப்புச் சாந்தமாகவே இருக்கிறது. அது திடீரென வெடித்துச் சிதறுகிறது. வெடித்துச் சீற முதல் கந்தக வாசத்தோடு சிலவேளை புகை கக்குகிறது. சக்தியின் இருண்ட முகம் கந்தக வாசத்திலான புகையாக

"TS"சிற்கு அடி வயிற்றில் பகிரென்றது. "எங்கே தொலைந்தான் சண்முகன்? என்ன நடந்தது?" என்பது விளங்காது அவர் அவஸ்தை தொடர்ந்தது. "TS" மேலங்கியை வாங்கிக் கொளுவி விட்டார். அவள் பாதணிகளைக் கழற்றி வைத்துவிட்டு உள்ளே சென்றாள். சோபாவில் இருந்த வண்ணம்,

"இது நீங்கள் ஏன் இப்ப வந்தனி எண்டு கேட்கிற மாதிரி இருக்குது?" என்றாள் சக்தி. அவளின் வதனத்தின் கருமேகங்கள் கலையாது நிலையாக இருந்தன. அவள் வசனங்களில் அளவுக்கு மீறிய கனம் இருந்தது. சக்தி பொதுவாக கலகலப்பானவள். மற்றவர்களையும் கலகலப்பு ஊட்டுவது அவளுக்குப் பிடிக்கும். சண்முகனைப் பற்றி "TS" அரை குறையாகச் சில விசயங்கள் கேள்விப்பட்டு இருந்தார். அவரால் அதை நம்ப முடியவில்லை. ஒருத்தன் முன்னுக்கு வருகிறான் என்றால் அந்தரத்தில் பத்து விதமாகக் கதைக்கும் யாழ்ப்பாணப் பரவணிக் குணம் அது என்று நினைத்தார். இன்று சக்தி வந்திருக்கும் கோலத்தைப் பார்த்த போது அந்த நினைவுக்கு உயிர் கொடுத்ததான வலியை அது அவருக்குத் தந்தது. தீர விசாரித்து அறியும் முன்பு கற்பனையாக வழங்கப்படும் தீர்ப்பு கண்ணகியின் சிலம்பை உடைக்க வைத்த தவற்றிலும் மேலானது என்பது அவருக்கு விளங்கியது.

"என்ன சக்தி இப்பிடிச் சொல்லுகிறாய்? நாங்கள் அப்பிடி நினைப்பமா? என்ன அவசரமோ? என்ன பிரச்சனையோ எண்டுதான் அப்பிடிக் கேட்டன். கேட்டது பிடிக்காட்டி மன்னிச்சுக் கொள்ளும்?" என்றார் "TS".

"உங்களை நான் சாப்பிடுகிற நேரம் வந்து சங்கடப் படுத்துகிறன் போல. பாருங்க அண்ணா... யார் யாரிலையோ இருக்கிற கோபம் கண்ணில்லாத குருட்டு வக்கிரத்தோடை யார் யாரையோ அடிக்கப் பார்க்குது. சொறி அண்ணா? நான் ஏதோ யோசனையில அப்பிடிச் சொல்லிப் போட்டன். முதல் கோணல் முற்றும் கோணல் எண்ட மாதிரி எங்கடை வாழ்க்கை. பானைக் கள்ளை அள்ளி ஊத்தினா பாலையா எதிர் பார்க்க முடியும் எண்ட மாதிரிப் போயிட்டுது. அப்பிடித்தான் நானும் மாறிப் போனன் ஆக்கும்?" என்றாள் சக்தி.

"நீ உருவத்திலும் உள்ளத்திலும் முன்ன மாதிரி இல்லை சக்தி. நடுப் பாலைவனத்தில தனியா விட்ட மாதிரி உன்ரை தோற்றம். நீயா என்ன நடக்குது எண்டு சொல்லாமல் நாங்கள் கற்பனை பண்ணிக் கதைக்க முடியாது. அது பண்போ தர்மமோ இல்லை. உனக்கு எங்களில நம்பிக்கை இருந்தா என்ன நடக்குது எண்டு சொல்லு சக்தி." என்றார் "TS".

புவனலோசினி எழுந்து சென்று சக்திக்குப் பிட்டு எடுத்து வந்தாள். அதைச் சக்தியிடம் கொடுத்தாள். சக்தி வாங்குவதா விடுவதா என்று தட்டைப் பார்த்து சிந்தித்த வண்ணம் இருந்தாள்.

"சாப்பிடு சக்தி. சண்டை பிடிக்கலாம். அதுக்காகச் சாப்பிடாமல் இருந்தால் சண்டையும் பிடிக்க ஏலாது." என்று கூறிய வண்ணம் தட்டை அவள் கையில் திணித்துவிட்டு தேநீர் எடுத்துவரச் சென்றாள். சக்தி பிட்டைக் குழைத்துக் குழைத்துக் கொழுக்கட்டை போலச் சிறிய உருண்டை ஒன்று பிடித்து அதில் அரைப் பகுதியைக் கடித்து மெல்லத் தொடங்கினாள். எதை நினைத்தாளோ தெரியவில்லை. திடீரென அவள் கண்கள் பனித்தன. "TS" அதைப் பார்த்து நடுங்கிப் போய்விட்டார்.

"கவலைப்படாத சக்தி... எல்லாத்துக்கும் ஒரு முடிவு வரும்." என்றார் "TS".

"ஓ அண்ணை... எல்லாத்துக்கும் ஒரு முடிவு வரும்" என்றாள் சக்தி.

சரிஸ்கா அறையைத் திறந்து கொண்டு கோலுக்குள் வந்தாள். அவளுக்குக் கதைப்பது கேட்டு இருக்க வேண்டும். அவள் சக்தியை கண்டதும் முன்பு போல விளையாட்டாக,

"என்ன சக்தி அக்கா... பேய் அறைஞ்ச மாதிரி வந்து இருக்கிறியள்?" என்றாள்.

"பேய் ஒரு நாளைக்குத்தான் அறையும். இது நித்தமும் அறையிற பிசாசு" என்றாள் சக்தி.

"உங்கடை குடும்ப விஷயங்களைக் கேட்கிற அளவுக்கு எனக்கு அனுபவம் காணாது. நீங்கள் இவையளோடை

இருந்து கதையுங்கோ. ஏதும் உதவி வேணும் எண்டாக் கேளுங்க... எனக்கு நாளைக்கு நிறைய நாறல் வாயளைப் பார்க்கிற அலுவல் இருக்குது. கோவிக்காதையுங்க... நான் போய் படுக்கப் போகிறன்" என்று கூறிவிட்டு அவள் மீண்டும் சென்று தனது அறைக்குள் புகுந்து கொண்டாள். புவனலோசினி தேநீரைக் கொண்டு வந்து வைத்துவிட்டுத் தனது பிட்டை எடுத்துச் சாப்பிடத் தொடங்கினாள்.

"புட்டு ஆறி இருக்கும்" என்றாள் சக்தி புவனலோசினியைப் பார்த்து.

"பருவாய் இல்லை. மனசுக்க இருக்கிற கவலையை எங்களிட்டை எண்டாலும் சொல்லும். எங்களுக்குப் பதில் சொல்லத் தெரியாட்டியும் உனக்கு ஆறுதலாகும் வரைக்கும் காது குடுத்துக் கேட்பம்" என்றாள் புவனலோசினி அவளைப் பார்த்து.

"அவர் நிறைய மாறிப் போயிட்டார் அக்கா" அவளால் அதற்கு மேல் சொல்ல முடியவில்லை. தொண்டை அடைத்து அழுகை பீரிட்டது. கண்ணாடி வைரங்கள் திரவமாய் கண்ணைவிட்டு தெறித்துக் காலடியில் விழுந்தன. சக்தி கண்ணைத் துடைத்துக் கொண்டாள். முன்பு எல்லாம் அழுவது பெண்களின் பலவீனத்தைக் காட்டுவது என்று அவள் நினைப்பது உண்டு. கலகலப்பாக இருக்கும் மனிதர்களையே மற்றவர்கள் விரும்புவார்கள் என்றும் எண்ணி இருந்தாள். இப்போது இலக்கணத்திற்கு வேலை இல்லாத வாழ்க்கை. எப்படியும் எழுதலாம் என்கின்ற சோக இலக்கியமான படைப்பு.

"உனக்குக் கஸ்ரமாய் இருந்தால் வேண்டாம் சக்தி. நீ சாப்பிடு... வேறை ஏதாவது கதைக்கலாம். புவனா இன்னும் ஒரு பால் ரீ, சாப்பிட்டு முடிஞ்சதும் வைச்சா. சுடச்சுடக் குடிப்பம்" என்றார் "TS". அவருக்குத் தாங்கள் சக்தியைத் தொந்தரவு பண்ணுவதாய் தோன்றியது.

"அப்பிடி இல்லை அண்ணை. அவர் நிறைய மாறீட்டார். நான் என்ன செய்கிறது? கடவுளா அதைக் குடுக்க வேணும். கடவுள் குடுக்காட்டி யார் என்ன செய்கிறது? அதைச் சாட்டா வைச்சுக் கொண்டு கெட்டுப் போக வேணும் எண்டு நினைச்சா யாரால தடுக்க ஏலும்? நான் அவருக்கு என்ன குறை வைச்சன்? வீட்டில இருந்து,

இல்லாட்டிப் பார்ட்டிக்குப் போனா, தண்ணியடிக்கிற சுதந்திரத்தில நான் எப்பவாவது தலையிடுகிறனா? வீட்டுக்கு வந்தாச் சாப்பாடு சமையல் இல்லாமல் இருந்து இருக்கா? கடையைப் பூட்டிக் கொண்டு பத்து மணிக்கு வந்தால் என்ன பதினொரு மணிக்கு வந்தால் என்ன சாப்பாடு குடுத்து அவரோடை தானே நித்திரைக்குப் போகிறன். காலமையில போய் கடையிலையும் நிக்கிறன். நான் கடையில நிக்கிறது அவருக்குப் பிடிக்காது. நிம்மதி இல்லாமல் குட்டி போட்ட பூனை ஆட்டம் அங்கும் இங்கும் அலைவார். ஐஞ்சு நிமிசத்துக்கு ஒரு முறை வீட்டை போகேல்லையோ சமைக்கேல்லையோ எண்டு சரியா அக்கறைப்படுவார். எப்ப நான் வெளிக்கிடுவன் தன்ரை ஆட்டம் ஆடலாம் எண்ட காத்திருப்பு. நான் வெளிக்கிட்டதும் தொடங்கீடுவார். கொஞ்ச நெஞ்சக் காசே அண்ணை அழிச்சுப் போட்டார். அப்பிடி வீணாக் காசை அழிக்காதையுங்கோ எண்டா எனக்குப் பிள்ளையே பிறக்காது எண்டு என்ரை நெஞ்சைச் சொல்லால கிழிச்சுப் போடுவார். நான் என்ன செய்கிறது? எல்லா வைத்தியமும் செய்து பார்த்தாச்சு. அது வயித்தில தங்குது இல்லை. ஐ.வீ.எப் மூலம் செய்தாலும் தங்காது எண்டுகினம். அதிலும் தங்காது எண்டாப் பிறகு எதுக்கு வீணாக் கஸ்ரப்படுவான்? இது யாற்றை குறை? கடவுளுக்குக் கண்ணில்லை. எனக்கு இப்பிடி ஒரு வாழ்க்கையைத் தந்து இருக்கிறார். ஆனா... என்ன எண்டாலும் இவருக்குக் கொஞ்சமாவது மனிதாபிமானம் இருக்க வேணும். அதை ஒரு சாட்டா வைச்சுக் கொண்டு இந்த ஆட்டம் ஆடக் கூடாது. அழிஞ்சு போக வேணும் எண்டு நினைச்சா நான் என்ன அண்ணை செய்கிறது?" என்றாள் சக்தி.

"எப்பேல இருந்து உந்த விளையாட்டு அவருக்குப் பழக்கமானது?" என்றார் "TS".

"கடை எடுத்த நாளில இருந்து கொஞ்சம் கொஞ்சமாய் துவங்கி இருக்கிறார். முதல்ல நல்ல வியாபாரம். இவரும் ஒழுங்காக் கடையைத் திறப்பார். அதில பெரிசா தெரிய இல்லை. பிறகு பிறகு அதுகின்ரை மோகம் அவருக்கு இன்னும் கூடிட்டுது. சில வேளை விசரில கடையைப் பூட்டிப் போட்டு உள்ளுக்க நிண்டும் விளையாடுகிறவராம். பார்த்த சனங்கள் சொல்லிச்சுதுகள். அதைவிடக் கடையை

வெள்ளனப் பூட்டிப்போட்டு உள்ள நிண்டு விளையாடுகிறது. இப்ப அவரால அதை கொன்றோல் பண்ண முடியுது இல்லை. நான் கேட்டா என்னிலை நாய் மாதிரிப் பாய்வார். ஈன இரக்கம் இல்லாமல் என்னை இப்ப மலடி எண்டு பேசுகிறார் அண்ணை" என்று கூறிய சக்தி தாங்க முடியாது கதறி அழத் தொடங்கினாள். புவனலோசினி சாப்பாட்டுத் தட்டை வைத்துவிட்டு அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்டாள். "TS"சிற்கு இவ்வளவு நடந்து இருக்கிறதா என்கின்ற நினைப்பு மலைப்பைத் தந்தது. சக்தி சிறிது நேரத்தில் தன்னைச் சமாளித்துக் கொண்டு மீண்டும் கதைக்கத் தொடங்கினாள்.

"இப்ப குடியும் மோசம். விளையாட்டில விடுகிற காசின்ரை வேதனையில ஒவ்வொரு நாளும் போத்தில் வேறை கொண்டு வருவார். அதை ஆவாவெண்டு வெறு வயித்தில குடிச்சுப் போட்டு அரை வாய்க்கு மேல சாப்பிடாமல் போய் படுத்திடுவார். நான் சமைச்சுக் காத்திருந்து மெனக்கெடுகிறது எல்லாம் வேஸ்ற். எனக்கு என்ன செய்கிறது எண்டு தெரிய இல்லை. ஊருக்குத் திரும்பிப் போகலாம் எண்ட எண்ணமும் வரும். நாடு இருக்கிற நிலைமையில அங்க என்ன நடக்குமோ தெரியாது. இனித் திரும்பிப் போனாலும் நூதனப் பொருளாய் நோண்டி எடுத்துப் போடுங்கள். இது ஒரு விதமான சித்திரவதை எண்டால் அது இன்னொரு விதமான சித்திரவதையாக இருக்கும். இருதலைக் கொள்ளி எறும்பு போல என்ரை பாடு போயிட்டுது. அண்டைக்கு அரங்கேற்றம் எண்டு என்னைக் கடையில விட்டிட்டுப் போனவர் கடை பூட்டவும் வரேல்லை. எனக்குக் கடை எப்பிடிப் பூட்டுகிறது எண்டும் தெரியாது. இரவில நான் கடையில நிண்டதும் இல்லை. பிறகு ஒரு மாதிரிக் கடையைப் பூட்டிப் போட்டு வீட்டை வந்திட்டன். அவர் வரேக்க நல்ல வெறி. சாமம் ஒரு மணி இருக்கும். எங்க போய் அப்பிடி விட்டுக் கட்டினவரோ தெரியாது. அப்பிடித்தான் அண்டைக்கும் சினிமாக்காரியள் வருகினம் எண்டும் ஓடினார். நான் புத்தியாக் கடைய எட்டு மணிக்குப் பூட்டிப் போட்டு வந்திட்டன். இரண்டு மணிக்கு வீட்டை வந்தார். ஏதோ வித்தியாசமான மணம். பசி பசி எண்டு கொட்டிக் கொட்டிச் சாப்பிட்டார். அவர் அப்பிடிச் சாப்பிட்டதை அண்டைக்குத்தான் நான் முதல் முறை பார்த்தன். என்னத்துக்கு அப்பிடிப் பசிச்சுது எண்டு

எனக்குத் தெரியாது. என்னத்தைக் குடிச்சார் எண்டு எனக்குச் சொல்லவும் மாட்டார். ஆள்ளிட்டை இருந்து ஒரு மணம் வரும். அது குடி மணம் மாதிரி இல்லை. இப்பவும் அது எனக்கு ஞாபகம் இருக்குது. தமிழ் படத்துக்குப் போயும் ஏதோ பிரச்சனைப் பட்டுக் கொண்டு உடன திரும்பி வந்திட்டார். அது எனக்கு அண்டைக்கு வசதியாப் போச்சுது. கடையைப் பூட்ட நான் நிக்க வேண்டி வரேல்லை. மற்றக் கடையை வித்தாச்சுது. உந்தக் கடையையும் வில்லுங்கோ எண்டாலும் அவருக்கு மனசு வருகுதில்லை. பூட்டிப் போட்டு நிண்டு விளையாட யாரும் விடுவினமே? எல்லாத்துக்கும் சேர்த்து நெருப்பை வைச்சாத்தான் நிம்மதி வரும் எண்டு நினைக்கிறன்" என்றாள் சக்தி. புவனலோசினி எழுந்து கொள்ள அவளும் எழுந்தாள். "TS"சும் எழுந்து சென்று கையைக் கழுவி விட்டு வந்து சோபாவில் இருந்தார். சிறிது நேரத்தில் புவனலோசினியும் சக்தியும் தேநீர்க் குவளைகளுடன் கோலுக்குள் வந்தார்கள்.

"சக்தி நீ இங்க வந்தது சண்முகனுக்குத் தெரியுமே?" என்றார் "TS".

"இல்லை அண்ணை. நான் விசரில வெளிக்கிட்டு வந்திட்டன்" என்றாள் சக்தி.

"சண்முகன் தேடமாட்டானே?"

"தேடட்டும்... நல்லாத் தேடட்டும்... அப்பிடி ஆவது ஏதாவது புத்தி வருகுதோ எண்டு பார்ப்பம்" என்றாள் சக்தி.

"மொபீலுக்கு அடிப்பார் தானே?" என்று புவனலோசினி கெட்டிக்காரத் தனமாய் கேட்பதாய் நினைத்துக் கொண்டு கேட்டாள்.

"நான் அதையும் வீட்டிலதான் விட்டிட்டு வந்து இருக்கிறன்" என்றாள் சக்தி. "TS"சிற்குச் சிரிப்பு வந்தாலும் அவர் அதைக் காட்டிக் கொள்ளாது அடக்கிக் கொண்டார். பின்பு சக்தியைப் பார்த்து,

"என்ன செய்கிற ஐடியா?"

"என்னண்ணை சொல்லுகிறியள்? போகத்தான் வேணும். விட்டிட்டு ஓடி அவமானப்படுகிற ஐடியா எல்லாம் எனக்கு

இல்லை. நான் ஊரில இருக்கிற யாரையும் அவமானப்படுத்தவும் விரும்ப இல்லை. வாழ்வோ, சாவோ ஏதோ ஒரு முடிவு வரும் வரைக்கும் போராடிப் பார்க்க வேண்டியதுதான். இன்னும் ஒரு பத்து நிமிசத்தில நான் வெளிக்கிட வேணும்" என்றாள் சக்தி.

"சக்தி இரு. நான் கொண்டு வந்து விடுகிறன். புவனலோசினி... நீயும் வெளிக்கிடு... சக்தியைக் காரில கொண்டு போய் விட்டிட்டு வருவம்" என்றார் "TS".

வரும் போது கவலையாக வந்த சக்தி பின்பு கதைத்துக் கதைத்து சகஜ நிலைக்கு வந்தாலும் மீண்டும் காரில் ஏறி வீட்டிற்குப் போகும் போது தண்டனைக்குப் போகும் கைதி போலச் சொற்கள் இழந்து நிசப்தக் கடலில் நிம்மதி இன்றித் தவித்தாள். அவள் தவிப்பும், அந்த அமைதியும் "TS"சிற்கு பெரும் சங்கடத்தைத் தந்தது. வாகன அடர்த்தி இல்லாத இரவைப் பகலாக்கும் தெருக்களை விழுங்கிக் கார் விரைந்தது. உள்ளும் வெளியும் ஒருவித அமைதியான அந்தரம் பரவியது. ஒஸ்லோவின் தெருக்கள் வாகனங்களோடு கோபித்துக் கொண்டதாக வெறித்துப் போய் கிடந்தன. இரவின் குளிரில் எத்தினை மனிதர்கள் வெளியே நடமாட விரும்புவார்கள் என்று "TS"சிற்கு எண்ணத் தோன்றியது. வெள்ளிக் கிழமை மாத்திரம் அதற்கு எப்போதும் விதிவிலக்காக இருக்கும். நல்லூர் திருவிழா போல நடமாட்டம் நான்கு திசைக்கும் சேபிக்கும். "TS" சக்தியை மேற்கொண்டு யோசிக்க விடாது கதைத்தார்.

"யோசிக்காத சக்தி. எல்லாத்துக்கும் வைத்தியம் இருக்குது. விளையாட்டு, போதைப் பொருள் எல்லாம் ஒரு வித வருத்தம் மாதிரித்தான். அதை உணர்ந்து மாத்த வேணும் எண்டு நினைச்சா மாத்தீடலாம்" என்றார் "TS".

"பயித்திய காரனைக் கேட்டால், தான் பயித்தியம் எண்டு சொல்ல மாட்டான். குடிகாரனைக் கேட்டால் குடிகாரன் எண்டு சொல்ல மாட்டான். விளையாட்டுக்கு அடிமையானவையும் அப்பிடிதான். இப்பிடி அடிமையாகிற மனிசர்கள் தங்களின்ரை உண்மை நிலையை உணர்ந்து கொள்ளுகிறது கிட்டத்தட்ட நடக்காத விஷயம். நம்பிக்கையான உறவுகள் வலுவிற்கு இழுத்துக் கொண்டு

போய் வைத்தியம் செய்தால்தான் உண்டு. அவருக்கு இருக்கிற அப்படியான உறவு நான்தான். என்னால அவரை வலுவுக்கு இழுத்துக் கொண்டு போக முடியாது. என்ரை சொல்லைக் கேட்க மாட்டார். இப்ப சொல்லுங்க அண்ணை நான் எப்பிடி அவரைத் திருத்த முடியும்?" என்றாள் சக்தி. "TS"சிற்கு அவள் நிலை விளங்கியது. தான் கதைப்பதை சண்முகன் எப்படி எடுத்துக் கொள்வான் என்றும் விளங்கவில்லை. எது எப்படி இருந்தாலும் சக்திக்காக சண்முகனுக்காகத் தானும் ஒரு முறை கதைத்துப் பார்க்க வேண்டும் என்று அவர் முடிவு செய்து கொண்டார்.

"நான் கதைச்சுப் பார்க்கிறன் சக்தி. அவனுக்கு நான் சொல்லுகிறது விளங்குமோ தெரியாது எண்டு நான் முயற்சி செய்யாமல் இருக்க முடியாது. அது நான் உங்களோடை பழகினதுக்கே அர்த்தம் இல்லாமல் செய்து போடும். நீயும் சண்முகனும் நல்லா இருக்கோணும். அதுதான் எங்களுக்குச் சந்தோஷம் தரும்" என்றார் "TS". அவர் உணர்ச்சி வசப்பட்டிருந்தார். அவரால் தனது கண் முன்னே ஒரு நண்பன் அழிந்து போவதைப் பொறுக்க முடியவில்லை.

*

சக்தி முன் கதவைத் திறந்தாள். இரண்டு பூட்டில் ஒன்று ஏற்கனவே திறந்து இருந்தது. அவள் முகம் மீண்டும் அவஸ்தையின் மொழி அவசரமாகப் பேசிற்று. "TS"சையும் புவனலோசினியையும் எச்சரிக்கும் விதமாக,

"அவர் வந்திட்டார்" என்று மெதுவான குரலில் சொன்னாள். "TS" "ம்..." என்று கூறித் தலையை மேலும் கீழும் ஆட்டினார். புத்திமதி சொல்லலாம். புத்திமதியை ஏற்கும் மன நிலையில் சண்முகன் இருக்கிறானா என்கின்ற எண்ணம் அவருக்கு உள் மனதில் ஒருவித சங்கடத்தை ஏற்படுத்தியது. சக்திக்கு ஊட்டிய நம்பிக்கையைத் தனது சங்கடத்தால், மனித விருப்பையும் மீறிக் கோணும் முகத்தாற் காட்டிக் கொடுத்து விடக்கூடாது என்று அவர் கவனம் எடுத்தார். பாதணிகளைக் கழற்றி மேல் அங்கியைத் தொங்க விட்ட பின்பு மூவரும் உள்ளே சென்றார்கள். உள்ளே கோலில் தொலைக்காட்சிக்கு முன்பு நிலத்தில் இருந்து பக்கத்தில் சாம்பல்

போடுவதற்கான தட்டையும் வைத்துக் கொண்டு அவன் புகைத்தான். தனக்குள் சிரித்தான். சக்தி இவர்களோடு இந்த நேரம் வருவாள் என்று அவன் எதிர்பார்த்து இருக்கவில்லை. இருந்தும் அவனுக்குச் அடக்க முடியாத சிரிப்பே வந்தது.

உள்ளே சென்ற "TS"சிற்கு அவன் என்ன செய்கிறான் என்பது விளங்கியது. அதன் மணம் அவருக்கு அவன் மேல் பரிதாபத்தையும் கோபத்தையும் ஒரே நேரத்தில் உண்டு பண்ணியது. கோவப் படுவதால் எதையும் அவனோடு சாதிக்க முடியாது என்பது அவருக்குத் தெளிவாகியது. இந்த நிலையில் புத்திமதி சொல்வது ஏற்றதல்ல என்று அவர் முடிவு செய்தார்.

"வாங்க "TS" அண்ணை. வாங்க அக்கா. இங்க வாங்க... ஆகா... ஆனா…" என்று கூறிச் சண்முகன் காரணம் இல்லாது சிரித்தான். "TS"சிற்கு அவன் சிரிப்பதன் காரணம் தெளிவாகத் தெளிவாகியது.

"இல்லை சண்முகன். இப்ப சக்தியைக் கொண்டு வந்து விடத்தான் வந்தநாங்கள். இன்னொரு நாளைக்கு வந்து உங்களோடை விபரமாய் கதைக்கிறம்" என்றார் "TS".

"அண்ணை… "TS" அண்ணை. வாங்கோ அண்ணை இப்பவே கதைப்பம். இவள் என்ன இப்ப விட்டிட்டு ஓடுகிறாள். குதிரைக்கு அதுதான் கொம்பைக் குடுக்க இல்லை. ஆகா... " என்று சண்முகன், தான் ஏதோ பெரிய பகிடி கூறியது போல விழுந்து விழுந்து சிரித்தான். "TS"ற்கு என்ன சொல்வது என்று விளங்காத கணங்கள். இருந்தும் அந்த அமைதிக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பது போல,

"ஓ குதிரைக்குக் கொம்பும் இல்லை. குடிச்சுச் சூதாடுகிறவனுக்கு வாழ்வும் இல்லை" என்றாள்.

"பெத்துத் தவழ்ந்து இருந்தா எனக்கு ஏன் பித்துப் பிடிக்குது? இது வாய் மட்டும்தான் இருக்குது" எப்பிடி அண்ணை என்ரை வசனம்? உண்மையான வசனங்கள். நான் இப்ப உண்மையைத் தவிர வேறை எதுவும் கதைக்கிறேல்லை. ஆகா…" சண்முகன் மீண்டும் சிரித்தான்.

"TS"சிற்கு அதற்கு மேல் அங்கு நிற்பதால் பிரயோசனம் இருப்பதாய் தோன்றவில்லை.

"சக்தி. சண்முகனுக்குப் பசிக்கும். சாப்பாட்டைக் குடு. இப்ப கதைக்கிறது ஒண்டும் அவனுக்கு நினைவில நிற்காது. அதுல எந்தப் பிரயோசனமும் இல்லை. நான் ஒரு நாளைக்குக் கடைக்கு வந்து கதைச்சுப் பார்க்கிறன். அதுதான் எனக்குச் சரி எண்டு படுகுது. நீ என்ன நினைக்கிறா?" என்றார் "TS".

"ஐயோ... உங்களுக்குத் தேவை இல்லாமல் சிரமம் கொடுக்கிறன். நீங்கள் சொல்லுகிறதுதான் சரி. நிதானமா இருந்தாலே கோணல் மாணலா நினைப்பார். இப்ப எதுவும் எடுபடாது. இதை எங்க வாங்கி வாறாரோ தெரிய இல்லை. முதல்ல சாராயம் குடிச்சு முடிஞ்சுது. இப்ப இது புகையிது. பைத்தியம் மாதிரி சிரிச்சுக் கொண்டு திரியட்டும். நான் என்ன செய்ய முடியும்?" என்றாள் சக்தி. அவளுக்குச் சண்முகன் மீது மிகையான வெறுப்பாய் இருந்தது.

"சமாளி சக்தி. சாப்பாட்டைக் குடு. நான் இன்னும் ஒரு நாளைக்கு வந்து கதைக்கிறன்"

"சரி அண்ணை"

"அப்ப நாங்கள் வாறம் சண்முகா"

கூறிய "TS" பதிலுக்குக் காத்து இருக்காது புறப்பட்டச் சென்றார்.

"அண்ணா நீங்களும் என்னைக் கை விட்டாச்சே?" என்று கூறிச் சண்முகன் சிரிப்பது கேட்டது.

# 3 சண்முகன் சரணடைந்தான்

தனது சொல்லிற்குச் சண்முகன் இவ்வளவு மதிப்புக் கொடுப்பான் என்று "TS" நினைத்து இருக்கவில்லை. அன்று வாடகை கட்டாவிட்டால் கடையை விட வேண்டி வரும் என்று கடையின் உரிமையாளர் எச்சரிக்கை விடுத்துச் சண்முகன் தலை குனிந்து நிற்கும் நேரத்திலேயே "TS" அவன் கடைக்குள் சென்றார். "TS"சை கண்டவுடன் சண்முகனுக்கு அழுகையே வந்து விட்டது. கடையின் சொந்தக்காரன் "TS"சைப் பார்த்து,

"உன்னுடைய நண்பனுக்குப் புத்திமதி சொல்லு. அழிஞ்சு போகிற மாதிரி வேலை செய்ய வேண்டாம் எண்டு சொல்லு. நல்ல மனைவியையும், வாழ்க்கையையும், வருமானத்தையும் விளையாட்டுக்கும், மதுவுக்கும், போதைக்கும் அடவு வைக்க வேண்டாம் எண்டு சொல்லு. எவன் எப்பிடிப் போனால் என்ன எண்டு நான் போகலாம். அவனுடைய மனைவி பாவம். இவன் அழிகிறதால அந்த அப்பாவிப் பெண்ணின் வாழ்வும் அநியாயமாகும். எனக்குக் காசு முக்கியம். குறிப்பிட்ட நாளுக்கு உள்ள காசு வராட்டி நான் சட்ட நடவடிக்கைதான் எடுப்பன்" என்று பொரிந்து தள்ளினான். கோபத்தோடு அவன் கடையை விட்டு வெளியேறவும் சக்தி வரவும் சரியாக இருந்தது. சக்தியைக் கண்டதும் அவன் திரும்பி வந்தான்.

"நீ கடையை இந்த உதவாக்கரையிட்டை இருந்து பொறுப்பு எடுத்தா நான் வாடகைக் காசைப் பிரிச்சுக் கட்டக் கூடிய மாதிரிச் செய்து தருவன். ஆனா... இவனை இந்தக் கடைக்கு உள்ள விடக் கூடாது. வேலைக்கு ஆளை வைச்சாலும் சரி இவன் இந்தக் கடைக்கு உள்ள வரக்கூடாது. இவனை முதல்ல வைத்தியம் செய்ய அனுப்பு. குணமான பிறகு பார்க்கலாம். இயலும் எண்டாச் சொல்லு. இல்லாட்டி உங்கடை கடை கிட்டடியில வேறை யாருக்கும் கை மாற வேண்டி வரும். நல்லா யோசி. நான் நாளைக்கு காலமை வாறன்" என்று கூறியவன் அதற்கு மேல் அங்கு நிற்காது புயல் போலச் சென்று விட்டான். சண்முகன் என்ன செய்வது என்று புரியாது குனிந்த

தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். சக்தி வாயைப் பொத்திய வண்ணம் விம்மி விம்மி அழுதாள்.

"சக்தி அழுது பிரயோசனம் இல்லை. சண்முகனால இனி ஏலாது. அவனைக் கடைக்கு உள்ள விட்டா இரண்டு பேரும் தெருவில நிப்பியள். அந்த நிலைமை வராமல் தடுக்கிறது எண்டா கடையின்ரை முழுப் பொறுப்பும் உன்னிட்டை மட்டும்தான் கொஞ்சக் காலம் இருக்க வேணும். நீ கடையைக் கொண்டு நடத்து. நான் சண்முகனை கூட்டிக் கொண்டு போய் வைத்தியம் செய்யச் சேர்க்கிறன். பின்னேரம் வேலை செய்கிறதுக்கு, முதல்ல கடையில நிண்ட பெடியனைக் கூப்பிடு. அதோடை வேறை யாரையும் கேட்டுப்பார். சண்முகன் ஆறு மாதத்துக்குக் கிட்ட உந்தக் கடையிக்க வர முடியாது. விளங்குதா சக்தி?" என்றார் "TS". அவர் கோபத்தில் கட்டளை இடுவது போலவே அதைச் சொன்னார்.

"நான் தனிய?..." என்று இழுத்தாள் சக்தி.

"தனியத்தான். இங்க தனியத்தான் பொம்பிளையள் எல்லாம் செய்கினம். தனிய கூட்டு எண்டு சாட்டுச் சொல்லிக் கொண்டு நிண்டா நீ நடுத் தெருவிலதான் நிக்க வேணும். இங்க பயப்பிட என்ன இருக்குது? அதை விட்டிட்டு அலுவலைப் பார். சரியா?"

"சரி."

"வா சண்முகா நாங்கள் போவம்?"

"கடைய விட்டிட்டு எங்கை அண்ணை போகிறது?" என்றான் சண்முகன்.

"உந்தக் கதையே வேண்டாம். இப்ப வாறியோ... இல்லையோ?" என்று "TS" கோபமானார்.

"சரி... சரி... கோவப்படாதேங்க "TS" அண்ணை. நான் வாறன். இவள் தனியச் சமாளிப்பாளோ எண்டுதான் எனக்குப் பயமா இருக்குது." என்றான் சண்முகன்.

"அது எல்லாம் சக்தி சமாளிப்பாள்... நீ வா. நீ இங்க நிண்டாத்தான் முதலுக்கு மோசமாகும்." என்று கூறிய "TS" நடக்கத் தொடங்கினார். வேள்விக்கு வெட்டக் கொண்டு போகும் ஆட்டைப் போல சென்ற சண்முகனைப்

பார்க்கச் சக்திக்கு மீண்டும் அழுகை பீரிட்டது. அதை அடக்கி, இனி அவள் அழுவது இல்லை என்று முடிவு செய்தாள்.

சண்முகன் தனது சொல்லைக் கேட்டு வேள்விக்குத் தலையைக் கொடுக்கும் ஆடு போல வருவான் என்கின்ற நம்பிக்கை அவன் அவர் பின்னால் வரத் தொடங்கும் வரை "TS"சிடம் இருந்தது இல்லை. அவன் தனது சொல்லிற்கு மதிப்புத் தருவதோடு கடைச் சொந்தக்காரன் பயப்படுத்தியதில் மருண்டு போய்விட்டான் என்பதும் அவருக்கு விளங்கியது. அன்று போன சண்முகன் அதன் பின்பு கடையின் கல்லாப்பிட்டியிலோ விளையாடும் இயந்திரங்களிலோ நிற்பதை யாரும் கண்டதில்லை. அவன் தனது வைத்தியத்தில் குறியாக இருந்ததோடு, தான் திருந்திப் பழைய மனிதனாக வேண்டும் என்பதிலும் வெறியாக இருந்தான்.

# 4 பூவும் புனிதமும்

பூக்கள் மலர்ந்தால் வண்டுகளை வா என்று அவை வருந்தி அழைப்பது இல்லை. மலரைத் தேடி வண்டுகள் எப்போதும் படை எடுக்கும். அது இயற்கை கொடுத்த, மாற்ற முடியாத வண்டுகளின் தலை விதி. வண்டுகள் தங்களிடம் படை எடுக்கும் என்கின்ற அசையாத நம்பிக்கை மலர்களுக்கும் கால காலமாய் உண்டு. அவை இயற்கை அழித்த பணிக்காக வாசத்தைப் பரப்பி, வண்டைக் கிரக்கம் கொள்ள வைக்கும். இயற்கை எத்தனையோ பருவம் எய்தல்களையும், பருவம் எய்தியதினைப் பண்பாகச் சொல்லும் முறையையும் அது தனக்குள் பொதிந்து படைப்பைச் செழிக்க வைக்கிறது. தமிழர்களுக்கு மட்டும் அந்த இயற்கையின் பொதிவு திருப்தி தருவதில்லை. பெண் பருவம் எய்திவிட்டாள் என்பதைப் பறை தட்டிச் சொல்வதாக ஒரு சடங்கு எங்களின் சம்பிரதாயமாக, காலத்தைத் தாண்டிய அவமானமாகத் தொடர்வதாய் "TS"சிற்கு ஒரு நெருடல் இருந்து கொண்டே வருகிறது. அந்தரங்கமானதை, ஆபாசமாய், அம்மணமாய் என்பதாய் அவருக்குத் தோன்றும். இருந்தும் மற்றவர்கள் செய்வதை அவர் விமர்சிப்பதும் இல்லை. அதைப் புறக்கணிப்பதும் இல்லை. இந்த நாட்டில் சுதந்திரமாக உழைப்பதற்கும் சுதந்திரமாக உழைத்ததைச் செலவு செய்வதற்கும் முழு உரிமையும் எல்லோருக்கும் உண்டு. அவரவர் உழைத்ததை எப்படிச் செலவு செய்வது என்பது அவரவர் விருப்பம். இருந்தும் இந்த வைபவங்கள் மற்றவர்களின் வரவையும் அவர்களது சன்மானங்களையும் எதிர்பார்ப்பதான நெருடலும் அவரிடம் உண்டு. அதை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதே அவர் எண்ணம். அத்தால் கமலனின் மகளின் சாமத்திய வீட்டிற்குச் செல்வதும் அவர் கடமை ஆகியது.

"TS" தனது வசதிக்கு ஏற்பவே சன்மானம் வழங்குவதாய் முடிவு செய்து தொகையைக் காகித உறைக்குள் வைத்து ஒட்டிப் பெயரிட்டார். கமலன் இன்று பெரிய செல்வந்தன்.

அன்று அவனும் இங்கு அகதியாகவே வந்தான். கடைநிலை வேலையான கழுவும் வேலையே முதலில் செய்தான். ஒவ்வொரு மனிதரிடமும் ஒவ்வொரு திறமை ஒளிந்து இருக்கும். அது வெளிப்படுவதற்கான சந்தர்ப்பங்கள் வந்து அமைய வேண்டும். சில வேளைகளில் சந்தர்ப்பங்களும் வசதிகளும் சிலருக்குத் திறமைகளைத் தந்ததான மாயையை ஏற்படுத்தி விடும். மாயை வேறு, ஒவ்வொரு கற்களாக எடுத்து வைத்துக் கோட்டையைக் கட்டிக் கொள்வது வேறு. கமலன் அவனது திறமையால் சிறிய வீடு கட்ட நினைத்தான். கூரையைப் பிரித்துக் கடவுள் கொட்டியதாக அவனது சேவைக்கு இருந்த கிராக்கியும் சந்தர்ப்பமும் அவனை அளப்பரிய கோட்டையைக் கட்ட வைத்தது. இன்று அவனிடம் எப்படியும் செலவு செய்யலாம் என்னும் அளவிற்குப் பணம் கொட்டிக் கிடக்கிறது. அதன் வெளிப்பாடு இன்றைய சாமத்திய வீட்டில் எப்படி இருக்கப் போகிறது என்பது பற்றி "TS"சிற்கு ஒரு ஊகம் உண்டு. நிகழ்வைப் பொறுத்து இருந்து பார்க்க வேண்டும் என்று அவர் எண்ணிக் கொண்டார்.

சரிஸ்கா தனது உலகத்தை விட்டு வெளியே வரமாட்டாள். அவளிடம் கேட்டுப் பிரயோசனம் இல்லை என்பதால் இப்பொழுது கேட்பதையே நிறுத்திக் கொண்டு விட்டார். தனிமை பலருக்குப் பிரச்சனை ஆவது உண்டு. அவளுக்குத் தனிமை பிரச்சனையாக இருப்பது இல்லை. அதை வரமாக்கும் வித்தை அவளுக்குத் தெரியும். தனது தொழில் பற்றிப் படித்தல், கதைகள் வாசித்தல், மென்பொருள் தயாரித்தல், தொலைக்காட்சி பார்த்தல் என்பதாக அலுக்காத உலகம் ஒன்றைத் தன்னைச் சுற்றி அமைத்து, அதற்குள் அவள் அமைதி காண முயன்றாள். தொலைக்காட்சியில் நான்கு விதமான கருத்துக்களும் காட்சிகளும் வரும். பெண்கள் மீதான ஆண்களின் வன்முறையைக் கண்டால் அவள் கொதிக்கத் தொடங்கி விடுவாள். ஆத்திரத்தில் அறைக்குள் சென்று கதவை அடித்துச் சாத்திவிட்டுப் படுத்துக் கொள்வாள். அப்போது புவனலோசினியோ, "TS"சோ அவளது அறைக்குள் செல்வது இல்லை. அது எந்தப் பிரயோசனமும் இல்லாது பேச்சு வாங்குவதாய் முடியும் என்பது புவனலோசினியின் அனுபவம். அவள் வாங்கிக் கட்டிய அனுபவத்தைப்

பார்த்த "TS"சிற்கு அதற்குப் பின்பு அப்படியான சந்தர்ப்பங்களில் அங்கே செல்லும் துணிவு வந்தது இல்லை.

புவனலோஜினி தன்னிடம் இருந்த மொத்த நகைகளையும் அடுக்கிக் கொண்டு நீல நிறக் காஞ்சிபுரத்தில் தயாரானாள். "TS" வழமை போல மேற்சட்டை, காற்சட்டையோடு புறப்பட்டு நின்றார். அது புவனலோசினிக்குத் திருப்தி தரவில்லை. மேலங்கியைக் கொண்டு வந்து "TS"சிற்கு அணிவித்தாள்.

"இது எல்லாம் என்னத்துக்கு புவனா?" என்றார் "TS".

"சும்மா இருங்க அப்பா. பெரிய பெரிய ஆட்கள் எல்லாம் வருவினம். ஒருத்தரும் கோட் இல்லாமல் அங்க வரமாட்டினம். நீங்கள் கோட் இல்லாமல் நிண்டா வித்தியாசமாய் தெரியும். கொஞ்ச நேரம் தானே சும்மா போட்டு இருங்கோ." என்றாள் புவனலோசினி.

"வேட்டி சட்டையோடை வெளிக்கிட்டு இருக்க வேணும். அதுதான் முறை." என்றார் "TS".

"கோட்டுப் போடுகிறதுதான் இப்ப இங்க முறை எண்டு சனம் நினைக்குதுகள். இங்க குளிர்தானே? யாரும் இயக்கத்துக்கு கடும் சப்போட்டானவைதான் கலாச்சாரப் பாதுகாவலர் எண்ட நினைப்பில வேட்டி கட்டுகிறவையாம். நீங்க வேட்டியைக் கட்டிக் கொண்டு இப்ப வந்தாலும் வில்லங்கம் வரும். பேசாமல் கோட்டோடை வாங்கோ." என்றாள் புவனலோசினி.

"அது வேறை அப்பிடியே? நான் உதைப் பற்றி இப்பிடி ஒரு நாளும் யோசிச்சதே கிடையாது." என்றார் "TS".

"இப்ப இருக்கிற நிலமையில கடுந் தமிழ் கதைக்கிறவையும், கடும் கலாச்சாரம் பேணுகிறவையும் அப்பிடியான ஆட்கள் எண்டுதான் கணிப்பு. எங்களுக்கு ஏன் அப்பா இப்ப தீவிரவாதம். நாங்கள் சராசரி மனிசராய் மற்றவைக்குத் தீங்கு செய்யாமல் எங்கடை உழைப்பில வாழ்ந்திட்டுப் போனாலே காணும்." என்றாள் புவனலோசினி.

புவனலோசினி அணிவித்த கறுத்த மேலங்கி "TS"ற்கு அழகாகவே இருந்தது. ஐந்து வயது குறைந்து ஒருபடி அழகு அவர் உடலில் ஏறியதான தோற்றம் கண்ணாடியில் தெறித்தது. புவனலோசினி அலங்காரத்தை முடித்த பின்பு குங்குமப் பொட்டு நெற்றியில் வைத்துக் கைப் பையையும் எடுத்துக் கொண்டாள்.

*

அதிகமான ஆட்களுக்கு அழைப்பு விடுத்து விடுதியில் ஆடம்பரமாய் கொண்டாடும் வசதி அவனிடம் இருக்கிறது. ஆடம்பர விடுதிகளிலும் ஒரு குறிப்பிட்ட தொகையினரைக் கொள்ளக் கூடிய மண்டபங்களே இருக்கும். அப்படியான மண்டபங்களில் எங்கள் கொண்டாட்டத்தை நடத்தி உணவு வழங்குவது கடினம் என்பதால் ஒஸ்லோவின் புறநகர் பகுதியில் இருந்த பெரியதொரு பாடசாலையின் மண்டபங்களை, அதாவது பாடசாலைக்கு உள்ளே இருக்கும் விளையாட்டு மைதானம், மண்டபம், அதன் சமையல் அறைகள் அத்தோடு பல அறைகள் என்பதாகப் பாடசாலையை வாடகைக்கு எடுத்து இருந்தான். அது வேறு ஒரு வித்தைக் காட்டவும் வசதியாக இருக்க வேண்டும் என்பதைக் கமலன் கருத்தில் எடுத்துக் கொண்டது "TS"சிற்கு முதலில் தெரியாது. பாடசாலை என்பதால் வாகனங்கள் நிறுத்தி வைப்பதற்கு அதன் மைதானங்கள், சுற்றுப் புறங்கள் வசதியாக இருக்கும் என்கின்ற எண்ணத்தோடே "TS" காரில் சவாரி செய்து கொண்டு வந்தார். பாடசாலைக்கு வந்த போது அவருக்கு தனது எண்ணம் தவிடு பொடியான தவிப்பு விளங்கியது. எங்கும் அடுக்கிவிட்டதாக இடைவெளி தராத வாகனங்கள். இரண்டாவதாக இருந்த மைதானத்தில் வாகனங்கள் இல்லாவிட்டாலும் அதற்குள் வாகனங்கள் போகாதவாறு தடுத்து வைக்கப்பட்டு இருந்தது. அருகில் உள்ள தெருக்கள், கிடைத்த இடங்கள் எல்லாம் வாகனங்களின் ஆக்கிரமிப்பு. "TS"சிற்கு ஒரே ஒரு வழி மட்டுமே இருந்தது. புவனலோசினியைப் பாடசாலைக்கு அருகாக இறக்கிய பின்பு, வாகனத்தைத் தொலைவில் நிறுத்தி விட்டு, நடந்து பாடசாலைக்குத் திரும்பி வந்தார். "TS" வாகனத்தை நிறுத்தி விட்டுத் திரும்பி வரும் வரைக்கும் பாடசாலைக்குள் செல்லாது வெளியே "TS"சிற்காய்

புவனலோஜினி காத்து நின்றாள். "TS" வந்ததும் அவரோடு பாடசாலைக்குள் சென்றாள்.

பாடசாலையை ஏழு நட்சத்திர விடுதிக்கு உள்ளே செல்வதான உணர்வைத் தரும் அளவிற்கு அலங்கரித்து இருந்தனர். இதற்கு முன்பு இப்படி அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தைப் பார்த்ததாக "TS"சிற்கு ஞாபகம் இல்லை. எத்தினை நபர்கள் இதற்கு உழைத்தார்கள் என்பதும் அவருக்கு விளங்கவில்லை. தரைக்கு விரிக்கப்பட்ட விஷேச கம்பளத்தில் இருந்து அனைத்தும் வித்தியாசமாய் தங்க நிறத்திலும் வெள்ளி ஒளியிலும் உள்ளே மிளிர வேண்டும் என்பதாகப் பார்த்துப் பார்த்து அலங்காரம் செய்யப்பட்டு இருந்தது. பாடசாலையில் கிடைத்த இடம் எல்லாம் மேசை, கதிரை போடப்பட்டு, அவையும் அணிந்து, அலங்கரித்துத் தங்கள் முதுகில் விருந்தினர் குடிப்பதற்கு விதம் விதமான குளிர்பானங்களைத் தாங்கி நின்றன. வீடியோ, லண்டனில் இருந்து வரவழைக்கப்பட்ட மேளம், மேடையில் கட்டி இருந்த பெரிய சார்மினியின் விளம்பரப் பதாதைகள் என்று அமர்க்களப்பட்டது. சாமத்தியவீடு ஒருபடி மேலே சென்று சினிமாத் தாரகைகளின் கேளிக்கை நிகழ்ச்சி போல மாறுவதான மூர்ப்பின் அறிகுறி அனைத்திலும். அழைத்து வர, நடனமாட ஒரு பெண்கள் குழு இங்கிலாந்தில் இருந்து அழைத்து வரப்பட்டிருந்தது.

ஒஸ்லோவில் இருக்கும் ஐயர்வாள் தொடக்குக் கழிக்கத்தான் வரமுடியாது என்று மறுத்ததால் லண்டன் ஐயர் வந்து அலுவலை வீட்டில் முடித்து விட்டார். இல்லாவிட்டால் அவர் ஒரு பக்கத்தில் தொடக்குக் கழிப்பதற்காய் தொடையை ஆட்டிச் சூடேற்றிய வண்ணம் இருந்து இருப்பார். "TS" ஐயரின் அந்த அவஸ்தையைப் பல கலியான வீடுகளில் பார்த்து இருக்கிறார். காலா காலமாய் வந்துவிட்ட மூட மூட்டைகளைக் காசாக்க ஐயர் கால்களின் ஆட்டலில் கந்தகச் சூடு கிளப்பும் வித்தையைப் பயின்று கொண்டு இருப்பார் என எண்ணுவார்.

இருந்தால், எழுந்தால், நடந்தால் என்று அத்தினை அசைவுகளையும் படம் பிடிக்க அசையும், அசையாப் படமி விழிப்பாக மோப்பம் பிடிக்கத் தயாராகின. அதன்

ஒளி வெள்ளம் சூரியனாக மண்டபத்தை நிறைத்தது. மேடையில் ஊஞ்சலும் அதைச் சுற்றிய அலங்காரமும். அதற்கு முன்பு பெருங் கோலமும் அதன் சித்திர வேலைகளும். அதில் சார்மினி என்கின்ற பெயரின் ஜொலிப்பு. திகதி உட்பட விபரங்கள் அதில் வண்ணங்களில். சார்மினியை அழைத்து வரத் தோழிகளும் சிறுவர்களும் நடனமாடும் பெண்களும் அலங்காரமாய் ஆவலோடு காத்து நின்றனர். உள்ளேயும் வெளியேயும் என்றும் இல்லாத விழாக்கோலம் இன்று. அதற்குள் குஞ்சு குருமன்களின் ஓட்டமும் ஒளிப்பும்.

திடீரெனப் பரபரப்பு. வெளியே அள்ளுப்பட்டு ஆட்கள் சென்றார்கள். "TS"சிற்கும் உள்ளே இருக்கப் பிடிக்கவில்லை. வெளியே சென்றார். அட்டை போன்ற வழமையான வாகனத்தைவிட மூன்று மடங்கு நீட்டான பேருந்து போன்ற, ஆனால் பேருந்து அல்லாத மகிழூர்ந்து, வெள்ளை நிறம் கண்ணைப் பறிக்க மன்னர்களின் இரதத்தையே மண்டியிட வைத்துத் தனி மனிதர்களுக்குச் சேவகம் செய்யும் வாகனமாக, உள்ளே நட்சத்திரச் சொகுசும் கொண்டதாய் வந்து நின்றது. "RoYaL GoLd limousin car" வந்து வட்டம் அடித்து வித்தைக் காட்டி வாகனங்களை உள்ளே செல்லவிடாது தடுத்து வைத்திருந்த மைதானத்தின் முன்பு நின்றது. அதில் இருந்து கமலனுக்கு நெருங்கிய உறவினர்கள் சில மணித்துளி மன்னர்களாக வந்து இறங்கினார்கள். பணம் வரும் போது ஆண்டிகள் அரசர்கள் ஆவார்கள். பணம் போகும் போது அரசர்கள் ஆண்டிகள் ஆவார்கள் என்கின்ற தத்துவத்தின் உண்மை "TS"சிற்கு அப்போது முழுமையாக விளங்கியது. ஆண்டியும் ஆகாமல், அரசனும் ஆகாமல் நடுக்கத்தில் வாழும் நடுத்தர வகுப்பினருக்கு வேறு ஒரு பிழைப்பு.

லிமுசின் வந்து விட்டது. சடங்கான பெண்ணைக் காணவில்லையே என்கின்ற தவிப்பு வெளியே வந்து நின்ற ஆண்களிடமும், சிறுவர்களிடமும். பின்பு எதையோ அறிந்ததாகப் பெண்களும் வாசலுக்கு ஒவ்வொருவராக வந்து சேர்ந்தார்கள். ஆண்டிகளான தற்காலிக அரச வம்சம் லிமுசினைவிட்டு இறங்கினாலும் அதைவிட்டு நகர்வதாக இல்லை. அவர்கள் பெண்ணிற்காகக் காத்து

நிற்கிறார்கள் என்பது விளங்கியது. அப்படி என்றால் இன்னும் ஒரு லிமுசினில் பெண் வருவாள் போலும் என்று பலருக்கும் ஒரு குருட்டு யோசனை தோன்றியது. அவர்கள் தெருவை எட்டி எட்டிப் பார்த்துத் தவித்தார்கள். எந்த லிமுசினும் வரவில்லை. விழாவுக்குப் பிந்தி வந்து நிறுத்த முடியாது சுற்றி அலையும் சில வாகனங்கள் வெற்றிடமான மைதானத்தை வெறியோடு பார்த்த வண்ணம் நின்றன. கணங்கள் யுகங்களாக, இதயம் துடிப்பதற்குப் பதிலாக வெடிப்பதாக ஆவலான உள்ளங்கள் அவதியில் அல்லாடும் படலம் தொடர்ந்தது. எட்டி எட்டிப் பார்த்தும் எந்த லிமுசினையும் காணாது சலித்துப் போன கண்கள் பல. வெறுத்துப் போய் உள்ளே போவோமோ என்று எண்ணிய உள்ளங்கள் சில. வசதி வாய்த்தது என்று சிகரெட்டைப் புகைக்கத் தொடங்கியவர்கள் பலர். உள்ளே செய்ய முடியாத நல்ல காரியத்தை அவர்கள் வெளியே திருப்தியாகச் சட்டத்துக்கு விரோதம் இல்லாது செய்து பலருக்கும் பாவ விமோசனம் கொடுக்கும் படலத்தைத் தொடங்கினர். புகையை இரசித்துச் சுவைத்தனர். அவர்களின் சுகிப்பு பலருக்கு முகத்தில் சுழிப்பை உண்டு பண்ணியது. தப்பி ஓடிவிட... உள்ளே செல்ல எத்தனித்த அவர்களை வானத்தில் இருந்து வந்த சத்தம் உள்ளே செல்ல விடாது தடுத்து நிறுத்தியது. வானத்து ஒலி வரவர வக்கிரம் ஆகியது. வானத்தில் இராவணனின் புஸ்பக விமானம் வரவில்லை. நோர்வேஜியர்களின் வாடகை உலங்குவானூர்தி அதன் காற்றாடி முழங்க வந்தது. ஈழத்தில் இந்த உலங்குவானூர்திகள் சுட்டுத் தள்ளும். குண்டு போடும். அதன் சத்தம் கேட்டால் பருந்தைக் கண்ட கோழிக் குஞ்சுகள் போல ஈழத்தமிழர் ஓடுவார். ஒடுங்குவர். பள்ளம் பார்த்து வீழுவார். பதுங்கு குழி தேடுவார். இங்கு... இன்று... பயம் அல்ல. இது சங்கதி... சந்தோஷம்...

சாமத்தியப்பட்ட பெண்ணை உலங்குவானூர்தி இலங்கை வேந்தனைப் புஸ்பக விமானம் தாங்கி வந்தது போலச் சத்தத்தோடு தாங்கி வந்தது. அது இப்போது தமிழருக்கு அறிமுகமாகும் புதிய கலாச்சாரம். முருகனுக்கு மாத்திரம் ஆறுமுகம் இல்லை. இந்த உலங்குவானூர்திகளுக்கும் ஆறுமுகம் இருக்கிறது என்பது "TS"சின் நினைப்பு. எல்லோருக்கும் இது புதிதாகவே இருந்தது. இரையும்

உலங்குவானூர்தி எம்மவர்க்குப் புதிது அல்ல. அதில் மனிதரும், மிருகங்களும் வருவதும் புதிதல்ல. அதில் சாமத்தியப்பட்ட பெண்ணை ஊர்வலமாக அழைத்து வருவது புதிது. அவரவர் உழைப்புக்கு ஏற்ற அவரவர் செலவு. கமலனின் உழைப்புக்கு அவன் மகளை உலங்குவானூர்தியில் அழைத்து வரலாம்.

உலங்குவானூர்தியின் இரைச்சலுக்குச் சிலர் காதைப் பொத்தினார்கள். அது சுழற்றி அடித்த குளிர் காற்றைத் தாங்க முடியாத சிலர் பாடசாலைக்கு உள்ளே சென்றார்கள். எதையும் தாங்கும் இதயத்தோடு கமலனின் உறவினர்கள் புயலை எதிர்க்கும் மரங்களாக மைதானத்தில் நின்றார்கள். உலங்குவானூர்தியில் இருந்து சடங்கான பெண், கமலன், அவன் மனைவி, மனைவியின் சினேகிதி மேகலா ஆகியோர் இறங்கி வந்தார்கள். இதுவரை பொறுமையாகத் தரித்து நின்ற லிமோசின் இப்போது அவர்களை நோக்கிப் பதுங்கிய புலி பாய்வது போல விரைந்து வந்தது. உலங்குவானூர்தியால் இறங்கிப் பாடசாலைக்குள் வருவதற்குக் காலில் மண் படாது ஏற்றி வரவே அந்த லிமோசின் இவ்வளவு நேரமாகப் பாயப்போகும் புலி போலப் பதுங்கிக்கிடந்தது என்பது அப்போதே பலருக்கும் விளங்கியது. அவர்கள் அதில் ஏறி இறங்கித் தங்கள் ஊர்வலத்தை முடித்தனர். பின்பு அவர்களைக் கூத்தாடும் பெண்கள் கும்மியடித்து அழைத்துச் சென்றார்கள். அதைத் தொடர்ந்து பாடசாலைக்குள் சடங்கு என்னும் கூத்து விமர்சையாகத் தொடங்கியது.

சடங்கு நடக்கும் பொழுதே பலருக்கும் கலந்த கோலா, சோலோப் போத்தல்கள் கலவை அடிப்பவர்களைப் பார்த்து வழங்கப்பட்டது. கலக்காமல் அடிப்பவர்கள் சமையல் அறைக்குள் சென்று வந்தார்கள்.

விருந்து அங்கே பாடல், கூத்து என்று நீண்டு கொண்டே போனது. அந்த வைபவத்தின் இரவுச் சாப்பாட்டிற்குக் கமலன் தனது கடையில் இருந்து பீச்சா வரவழைப்பதாக இடையில் மொய் எழுதும் போது அறிவித்தான். இருந்து பீச்சா சாப்பிடும் எண்ணம் "TS"சிடம் சற்றும் இருக்கவில்லை. என்னதான் இவ்வளவைச் செலவு செய்தாலும் காற்றோட்டம் ஒழுங்காக இல்லாத

பாடசாலைக்குள் நீண்டநேரம் இருக்க "TS"சிற்குப் பிடிக்கவில்லை. மண்டை ஓட்டையே வெடிக்க வைப்பதாகத் தலை இடித்தது. யாரோ இருவர்; வெறி அளவுக்கு மீறி ஏறியதால் தர்க்கம் செய்யத் தொடங்கினார்கள். அவர்களைச் சுற்றி ஒரு கூட்டம் நின்று விலக்குத் தீர்க்க முயற்சித்தது. நான்கு பக்கமும் ஒழுங்கற்ற சத்தம் இரைச்சலாக மாறியது. "TS" புவனலோசினியைப் பார்த்தார். விருந்தினர்கள் தொடர்ந்தும் வந்து கொண்டு இருந்தார்கள்.

# 5 தடம் ஏறிய வண்டி

"TS"சிற்குச் சண்முகனை அந்தச் சரணாலயத்தில் சேர்க்கும் போது அதிசயத்தில் எல்லாம் நம்பிக்கை இருந்தது கிடையாது. இருந்தும் அதிசயம் யாரையும் கேட்டுக் கொண்டு நடப்பது இல்லை என்பதை நிரூபித்தது. வாழ்க்கை தொலைந்து போனதாய் மருவிய சக்திக்கு மட்டும் துர்க்கை இரகசியமாக வரம் கொடுத்ததான சந்தோஷம். இப்போது யாரைக் கண்டாலும் அவளை அறியாமலே அவளுக்குச் சிரிப்பு வந்து விடுகிறது. சக்தி அழுவதை விட்டுச் சிரிப்பது "TS"சிற்கு மிகவும் பிடிக்கும். அவள் சிரிப்பதைப் பார்ப்பதற்கே கடைக்குப் பொருட்கள் வாங்க வாடிக்கையாளர்கள் வருவார்கள் என்கின்ற நம்பிக்கை "TS"சிற்கு இருந்தது. உலகில் பிழை விடாத மனிதர்கள் என்று யாரும் இல்லை என்பது பழைய தத்துவம். அந்தப் பிழையில் இருந்து திருந்திக் கொள்வதும், புது வாழ்க்கைக்கு மாறுவதும், இன்று நிறுவன மயமாக்கப்பட்டு இருக்கும் தற்போதைய ஐரோப்பிய புதிய நடைமுறை. மனிதர்களின் பிழைகளில் பெரும்பான்மை அவனது சுயத்தை மீறி நடப்பதாகவும், அப்படி நடப்பது அவன் தவறல்ல எனவும், அது ஒரு நோய் என்பதாகவும் ஒரு மென்மையான புரிந்துணர்வு ஐரோப்பியரிடம் இருக்கிறது. நோய் என்றால் வைத்தியம்தான் செய்ய வேண்டும். தண்டனைக் கொடுக்க முடியாது. தவற்றிற்குத் தண்டனை கொடுத்து ஒரு மனிதனை அழிக்காது இதமாக வைத்தியம் செய்து அந்த மனிதனை மாற்றி விடுகிறார்கள். அது மனிதன் மிருகத்தைவிட உயர்ந்ததான ஒரு அறிகுறி. அந்தப் பட்டியலில் சண்முகனும் அடக்கமானான். ஒரு காலத்தில் நொந்தாலும் இன்று அவன் மீண்டும் மதிக்கும் அளவிற்கு நிமிர்ந்து நிற்கிறான்.

சண்முகன் இப்போது இயந்திரத்தில் விளையாடாமல், மதுக் குடிக்காமல், போதைப் பொருள் தேடி அலையாமல், கடையில் நின்று வியாபாரம் செய்தாலும் சக்தி கடையை விற்று விட்டு வேறு ஏதாவது தொழில் செய்ய வேண்டும்

என்று அவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைத்து இன்னும் ஒரு முறை அழகு பார்க்கும் துணிவு இப்போது அவளுக்கு இல்லை. இன்னும் ஒரு முறை நரகம் பார்க்கும் துணிவும் அவளிடம் இல்லை. கடையை விற்பதற்கான அலுவல்கள் நடை பெறுகிறது. கடை விற்றதும் சண்முகன் பேருந்துச் சாரதி அனுமதிப் பத்திரம் பெறுவதற்குப் படிக்கப் போவதாக கூறுகிறான். வேலை இல்லாது இருந்தால் வேலை வழங்கும் அலுவலகம் அதற்கான ஏற்பாட்டைச் செய்து தரும் என்பது அவன் எண்ணம். பேருந்துச் சாரதிக்கு நல்ல கிராக்கி இருப்பதோடு மேலதிக வேலையும் செய்து உழைக்கலாம் என்பது அவன் திட்டம். இப்போது ஒஸ்லோவில் தமிழரின் முக்கிய வேலைகளில் இதுவும் ஒன்றாகி உள்ளது அவனுக்குச் சற்றுச் சஞ்சலத்தைத் தந்தது.

தனது போதைப் பொருள் வரலாறு எங்காவது பதிந்து இருக்குமோ என்கின்ற பயம் இருந்தாலும் அப்படி நடந்து இருக்காது என்பதை அவன் நம்பினான். நோர்வேச் சட்டங்கள் அப்படி இறுக்கமாக இருந்தன. அத்தோடு போதைப் பொருள் பாவித்த காலத்தில் எந்தக் காரணம் கொண்டும் வேலை வழங்கும் அலுவலகத்திற்குச் சண்முகன் சென்றதும் இல்லை. அப்போது அவன் வருமானம் அவனது கடையில் இருந்து வந்தது. சொந்தமாக வருமானத்தை வைத்திருக்கும் மனிதர்கள் மேல் வேலை வழங்கும் அலுவலகத்திற்கு எந்த அக்கறையும் கிடையாது. அது வேலை இல்லாதவர்களுக்கு வேதனைக் கொடுக்கும் அலுவலகம் என்பது சிலர் எண்ணம்.

*

கொண்டாட்டங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம் என்பது "TS"சின் எண்ணம். ஒரு வகை கமலன் செய்வது போல் செய்ய வேண்டும். அதிக பொருளாதார வலு அதற்கு இருக்க வேண்டும். மண்டபம் கொள்ளாத விருந்தினர்களில் யார் வந்தார்கள் யார் வரவில்லை என்பது ஞாபகம் இருக்காது. யாருடனும் அரை நொடிக்கு மேல் நின்று கதைக்க முடியாத அவசரம். யார் சாப்பிட்டார்கள்... யார் சாப்பிடவில்லை என்று கேட்க

முடியாது. கேட்க நினைக்கும் போது விருந்தினரைக் காண முடியாது. வந்து கண் காணாமல் போகிறவர்களை வரவில்லை என்கின்ற பட்டியலில் சேர்க்காது உறுதிப்படுத்த வேண்டியவர்கள் என்கின்ற அட்டவணையில் வைக்கும் அவதி. வலு இல்லாதவர்கள் தங்களுக்கு வலு இருப்பதாக நினைத்துக் கொண்டு செய்தால் நீண்ட காலத்திற்கு உழைத்துக் கட்ட வேண்டிய அவஸ்தை தொடரும். அது பொருளாதார வளத்தைக் காட்டும் சடங்காக முடிந்தாலும் அவன் அப்படிப் பிறந்த நாள் கொண்டாடியதாக சிலகாலம் ஊருக்குள் கதை அடிபடும். இரண்டு மூன்று தரம் நிழற்படங்களையும், கானொணியையும் போட்டுப் பார்ப்பார்கள். பின்பு அதை மறந்து வேறு ஒரு கொண்டாட்டம் அவர்கள் நினைவுகளை அடைத்துக் கொள்ளும். வலுவில்லாமல் வலு இருப்பதாய் நினைத்துக் கொண்டு செய்தவர்களுக்குத் துண்டு விழுந்த கடன் மாத்திரம் இடைக்கிடை அந்த வைபவத்தைச் சுமையாக ஞாபகப்படுத்திச் செல்லும். மிகுதி கானல் நீர் போன்ற மாயையாகக் காலத்தால் அடித்துச் செல்லப்படும்.

அடுத்தது மிகவும் அன்னியோன்னியம் ஆனது. வீட்டில் தங்களுக்கு மிகவும் வேண்டியவர்களோடு தாங்களே சமைத்துப் பரிமாறி, கதைத்து, குடித்து மகிழ்ந்து இருத்தல். சிலர் சாப்பாட்டை மாத்திரம் வெளியில் எடுத்துத் தங்கள் பழுவைக் குறைத்துக் கொண்டாடுவார்கள். அதில் குடும்பக் கொண்டாட்டம் என்கின்ற உணர்வும், பகட்டுக்கு வெளிக்கிடத் தேவை இல்லாத போலியற்ற தோற்றமும், அன்னியத் தன்மை அற்ற கதைகளும், நட்பும், நகைப்பும் ஆகத் துண்டு விழும் கொண்டாட்டம் பற்றி நினைக்கும் அவஸ்தை இல்லாத அமைதியான கொண்டாட்டம்.

சிலர் இரண்டு விதமான கொண்டாட்டத்தையும் மாறி மாறிக் கொண்டாடுவார்கள். சிலர் ஒரே விதமான கொண்டாட்டத்தை மட்டும் தமது தெரிவாக்கிக் கொள்வார்கள். கொண்டாட்டம் என்பது மற்றவர்கள் தங்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைவிட அது தங்களுக்கு எப்படியான திருப்தியை பொருளாதார அதிருப்தி இல்லாமல் தருகிறது என்பதுதான் முக்கியம் என்பது "TS"சின் எண்ணம்.

சண்முகனும் சக்தியும் அதில் இப்போது நன்கு தெளிவாக இருந்தார்கள். கொண்டாட்டத்தில் மட்டும் அல்ல வேலை, வாழ்க்கை என்பன ஈறாக வாழ்வின் ஒவ்வொரு கணத்திற்கும் எது முக்கியம் என்பது அவர்களுக்கு இப்போது நன்கு விளங்கத் தொடங்கி இருந்தது. வாழ்க்கையில் விளங்கியதை மனதில் வைத்துக் கொண்டு சக்தியின் பிறந்த நாளை அதற்கு ஏற்ப வீட்டில் நெருக்கமாகக் கொண்டாட "TS"சை, சிவாவை, அருளை, சொரூபனை, றூபனை, தாமோதரன் குடும்பத்தை, சக்தியின் தோழியான வித்தியா குடும்பம் ஆகியவர்களை அழைத்து இருந்தான்.

ஒரு மணி போல் எல்லோரும் சண்முகனின் வீட்டிற்கு வந்து விட்டார்கள். ஆட்கள் வந்ததும் சண்முகன் முதலில் தேநீர் மாத்திரம் வழங்கினான். தேநீரோடு சிற்றுண்டியை வழங்கினால் மத்தியானச் சாப்பாட்டை ஒழுங்காகச் சாப்பிட மாட்டார்கள் என்பதால் தேநீர் மட்டும் வழங்குவதில் கவனமாக இருந்தான். "TS"சும் புவனலோசினியும் உள்ளே சென்று மேலங்கிகளைக் களைந்து கொளுவி விட்டுச் சண்முகனிடம் தேநீர் வாங்கிக் கொண்டு வந்து சோபாவில் குளிர் எடுபட ஆறுதலாக இருந்தார்கள். அவர்கள் அப்படி இருக்கும் போது சிவாவும் மனோகரியும் சுகனோடு உள்ளே வந்தார்கள். "TS" ஒரு முறை ஏன் சுகன் என்று பெயர் வைத்தாய் என்று சிவாவைக் கேட்டார். அவன் அதற்குச் சுகத்தால் வந்ததால் சுகன் என்று பெயர் வைத்தேன் என்றான். ஆண்கள் மட்டும் சுகம் பெறுவதாய் தாம்பத்தியத்தை இயற்கை படைக்கவில்லை என்பது அவனுக்கு நன்கு தெரியும். அவன் அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. "TS" அதற்கு "அது உனக்கு மாத்திரம்..." என்றார். அதற்கு அவன் "அதற்காக வேதனை என்று பெயர் வைக்க முடியுமோ?" என்று கேட்டு மடக்கினான். சுகனைக் கண்டதும் "சுகன் இங்க மாமாவிட்டை வாருங்கோ." என்று "TS" கையை நீட்டினார்.

"டுகார் மீய செக். எய் வில் இக்க கொம்ம." "உங்களுக்கு நிறையத் தாடி இருக்கிறது... நான் வரமாட்டேன்." என்று நோஸ்க்கில் கூறிவிட்டுத் தாயின் பின் ஓடினான்.

"மாமா சேவ் எடுத்திருக்கிறார்... உரஞ்சாது..." என்றார் "TS" தமிழில்.

"நான் மாத்தன்." என்று கூறிய வண்ணம் தாயைப் பின்தொடர்ந்தான்.

"நீ மாத்த வேண்டாம்... இங்க வா." என்றாள் புவனலோசினி. அவன் சென்று புவனலோசினியின் மடியில் ஏறி இருந்தான்.

சிவா சோபாவில் அமர்ந்ததும் அதுவரையும் அடக்கி வைத்து இருந்த கேள்வியை அவசர அவசரமாக "TS"சைப் பார்த்துக் கேட்டான்.

"என்ன கமலன் பெரிய சோ எல்லாம் காட்டினானாம்?" என்று கதைக்குப் பிள்ளையார் சுளி போட்டான்.

"உழைக்கிற காசைச் செலவு செய்யவும் வேணும் எல்லோ?" என்றார் "TS".

"பெடியளுக்கு உந்தக் காசைக் குடுத்தாலாவது நாட்டுக்குப் பிரயோசனமாகும்." என்றான் றூபன்.

"நாட்டுக்குப் பிரயோசனம் ஆகாது. இன்னும் விதவைகளும் முடங்களும்தான் உற்பத்தி ஆகும். அதுக்கு இங்க கெலிக்கப்ரரில சோக் காட்டுகிறது நல்லது. குண்டைப் போடுகிற கெலியிலும் பெண்டுகளைத் தூக்கிக் கொண்டு போகிற கெலி சோக்காவே இருக்கும். ஏகப்பட்ட சனமே அண்ணை? ஊர் எல்லாம் சொன்னவன் எண்டு கேள்வி. எங்கடை முதலாளியும் போயிட்டு வந்து புளுகித் தள்ளினார். அவரும் அவனுக்குப் பழக்கமாய் இருந்து இருக்குது. எப்ப போய் இவன்ரை பீச்சாவுக்க விழுந்தவர் எண்டு எனக்குத் தெரியாது." என்றான் சிவா.

"நாட்டில நடக்கிற பிரச்சனைக்கு இது கொஞ்சம் ஓவர்தான்." என்றான் சண்முகன்.

"நாட்டில நெடுகத்தான் பிரச்சனை நடக்கும். அது தொடர்ந்து நடக்க வேணும். அப்பதான் பலரின்ரை வியாபாரம் உலகம் எல்லாம் நடக்கும். இது எல்லாம் திட்டமிட்ட அரசியல் வியாபாரம். அதுக்காக நாங்கள் சாப்பிடாமல் இருக்க முடியுமோ? அங்கதான் சா விழுகுது எண்டு சனம் சாப்பிடாமல் இருக்குதோ? அங்க சண்டை

நடக்கிறதுக்காக இங்க அவன் தன்ரை பிள்ளைக்குச் சாமத்தியவீடு கொண்டாடாமல் விட ஏலுமோ? சமாதானப் பறவையா வந்த அம்மையாரையும் இப்ப சதிகாரி ஆக்கி ஆச்சுது. யாழ்ப்பாண இராட்சியம் கட்டினவை, அதை வேரோட பேர்த்துக் கொண்டு போகிறம் எண்டு சொல்லி, சனங்களைப் பட்டி மாடுகளாய் ஓட்டிக் கொண்டு போய், கிளாலிக்க நெருப்புப் பந்தம் பட்ட மசுக்குட்டிகளாய் சாக விட்டிட்டு, காட்டுக்க தப்பி ஓடிப் போயாச்சுது. இனி என்ன இராட்சியம் தொடங்குது எண்டு பார்ப்பம். அதுவும் ஒரு நாளைக்கு எப்பிடி முடியுது எண்டும் பார்ப்பம். எங்களுக்கு இனி நோர்வே தானே நிரந்தர நாடு. அப்ப கமலன் செலவு செய்கிறதும் நியாயம்தான். வரேக்க எல்லாரும் இங்க ஆண்டியள் மாதிரிதான் வந்தம். இங்க உழைக்கிறம்... இங்க செலவு செய்கிறதிலும் பிழை இல்லையே? யார் தங்கடை இருப்பைக் கொஞ்சம் உயர்த்திக் காட்டோணும் எண்டு நினைக்கினமோ அவை செலவு செய்யட்டும். அது வேண்டாம் எண்டுகிறவை பேசாமல் இருக்கட்டும்." என்றான் சிவா.

"சிவா அண்ணைக்கு பெடியள் எதைச் செய்தாலும் எல்லாக் கதைக்கையும் அதைப் புகுத்திக் குறை சொல்லி, ஒருக்காப் பிலாக்கணம் வைச்சாத்தான் அவருக்கு நிம்மதி வரும். அவங்களும் இல்லாட்டித் தமிழற்ற நிலை அங்கை எப்பிடி இருந்து இருக்கும் எண்டதை மாத்திரம் ஓரவஞ்சகமாய் கதைக்க மாட்டார். இவ்வளவு சனம் ஒரே நேரத்தில ஆமிக்குப் பயந்து சாரை சாரையா இடம் பெயர்ந்து போனா இழப்புகள் வரத்தானே செய்யும்? ஆமியும், நேவியும் சனத்தை குறிவைச்சுச் சுடுகிறத்துக்கு அவங்கள் என்ன செய்ய முடியும்?" என்றான் றூபன். அவனால் சிவா பெடியளைக் குறை சொல்வதைப் பொறுக்க முடியவில்லை.

"றூபன்... எல்லாரையும் கலைச்சுப் போட்டு மொத்தமாப் போராட்டத்தைக் குத்தகைக்கு எடுக்கேக்க...." என்று சிவா தொடங்க,

"ஐயோ சிவா அண்ணை... அந்தப் பிரசங்கம் இப்ப வேண்டாம். நாங்கள் நாட்டில இல்லை. அங்க

நடக்கிறதைக் கண்டபடி கதைக்கிற உரிமையும் எங்களுக்கு இனி இல்லை." என்றான் ருூபன்.

"இங்கை இல்லை... எங்கையும் அவை செய்கிறதைக் கதைக்கிறதுக்கு உரிமை இல்லை. ஊரில கதைச்சா மண்சுமந்த மேனியராய் வங்கர் வெட்டும் வேலை செய்ய வேண்டி வரும். சில வேளை யேசுபிரானுக்குக் கிடைத்த தண்டனையும் கிடைக்கலாம். ஐரோப்பாவிலும் அதற்கான அடியாட்கள் இருக்கினம்." என்றான் சிவா.

"சிவா நாங்கள் வதந்திகளை எல்லாம் ஆதாரமாய் கதைக்கக் கூடாது. மக்களுக்காகப் போராடுகிற பெடியளுக்கு மக்களின்ரை மதிப்பு நிச்சயம் தெரியும். அவங்களைப் பற்றிக் குறைவாக் கதைக்கிறது ஒரு வகையில எங்களை நாங்களே குறை சொல்லுகிற மாதிரி இல்லையே சிவா?" என்றார் "TS".

"நிச்சயமா இல்லை அண்ணை. அப்படிக் கதைக்கிறதே என்னுடைய போராட்டம். கடமை. நீங்கள் இடைக்கிடை வந்து வந்து போன அனுபவத்தோடை முழுமையான வலி தெரியாமல் கதைக்கிறியள். அங்க என்ன நடந்தது எண்டு எங்களுக்குத் தெரியும். இப்ப என்ன நடக்குது எண்டு நீங்கள் நாட்டில இருந்து பார்த்து இருக்க வேணும். நீங்களும் ஆயுதம் தூக்கி இருக்க வேணும். தமிழரே தமிழரை கொல்ல வரேக்க தப்பி ஓடியிருக்க வேணும். அப்ப தெரிஞ்சு இருக்கும் வலி. தேசியத்தின்ரை யுத்த வெறி. பதவிக்காகப் பலியாக்கப்பட்ட அப்பாவியளின்ரை தீராத ஆத்ம அலறல்கள். அது விளங்குகிறதுக்கு அதை அனுபவிச்சு இருக்க வேணும். நான் உயிரோடை இருந்து இண்டைக்கு இந்தக் கதையைச் சொல்லுகிறன் எண்டா அது யாரோ சில சனங்கள் போட்ட பிச்சை அண்ணை. அந்தப் பிச்சைக்கு இயக்கத்தின்ரை கண்ணில மண்ணைத் தூவ வேண்டி இருந்திச்சு. அப்ப அந்தச் சனங்கள் தேசியத்தைத் தூக்கிப் பிடிக்க இல்லை. தேசியத்துக்கு முதல் மனிதம் முக்கியம் எண்டு நினைச்சதால எங்களுக்கு உயிர்ப் பிச்சை கிடைச்சுது. அந்தச் சனங்களைச் சொல்ல வேணும் போராளிகள் எண்டு. கண் விண் தெரியாமல் சகட்டு மேனிக்குச் சகோதரங்களைச் சுட்டுத் தள்ளுகிறவங்கள் உண்மையான போராளியளா?

என்னைப் பொறுத்த வரை அவங்கள் கொலையாளிகள். தமிழினத்தின் எதிராளிகள்." என்றான் சிவா.

"சரி சிவா... பிழையள் இல்லாமல் போராட்டம் இல்லை. பிழையள் நிச்சயமா திருத்தப்படும். எங்களுக்கு ஒரு நல்ல விடிவு வரும். நாங்கள் அதுக்கு இயலுமானதை விருப்பத்தோடை செய்வம்." என்றார் "TS".

"ஏதோ ஒரு விடிவு வந்தால் நல்லதுதான்." என்றான் சிவா வெறுப்போடு. அவனைப் பொறுத்த வரை நாடு அழிந்து அங்கே இருந்த எங்கள் இனமும் அழிந்து, அது ஒரு சுடுகாடானாலும், தமிழருக்கு விடிவு வரும் என்கின்ற நம்பிக்கை அவனுக்கு இப்போது கிடையாது. விட்டுக் கொடுப்பு இல்லாத முரட்டுப்பிடி விபரீதமான முடிவிலேயே தமிழினத்தைக் கொண்டு சென்றுவிடும் என்று எண்ணினான். எந்தத் தப்பையும் தட்டிக் கேட்காமல், தட்டிக் கேட்கப் பயந்து கொண்டு, தட்டிக் கொடுப்பது போலக் கேட்கும் போது எல்லாம் அள்ளிக் கொடுத்துச் சொந்த இனத்தையே அழித்துக் கொண்டிருக்கும் புலன் பெயர்ந்தவர்கள் பரிதாபமானவர்கள் என்று அவன் எண்ணினான்.

"இங்க இருந்து துவக்கு வாங்கி அனுப்பக் கூடிய மாதிரி இருந்து இருந்தால் எங்கடை நாட்டில எப்பிடிப் போராட்டம் நடந்து இருக்கும்?" என்றான் றூபன்.

"ஓ... நிறையக் கோழிக் கள்ளருக்கு மரண தண்டனை கிடைச்சு இருக்கும்." என்றான் சிவா. அருளும், சண்முகனும் அதைக் கேட்டுச் சிரிக்க,

"உங்கட குசும்பு மாறாது." என்றான் றூபன்.

"என்ன குசும்பு? ஏன் நான் மாற வேணும்? நல்லது நடக்க வேணும். கெட்டது நடக்கக் கூடாது எண்டு நான் நினைக்கிறதில என்ரை குசும்பு எப்பவும் மாறாது. நான் திரும்பத் திரும்ப விளம்பிக் கொண்டுதான் இருப்பன்." என்றான் சிவா.

இந்தக் கதையை விட்டுச் சிவாவை நகர்த்த வேண்டும் என்று "TS" எண்ணினார்.

"எங்க வேத்டே கொண்டாடுகிற பெண்ணைக் காண இல்லை? நாங்கள் ஒவ்வொருத்தராய் வாழ்த்துச் சொல்லுகிறது இல்லையா?" என்றார் "TS".

"அண்ணை... திசை திருப்பலைக் கொண்டு வந்து என்னிலை முடிக்காதையுங்கோ." என்று சக்தி சமையல் அறையில் இருந்து குரல் கொடுத்தாள்.

அன்று மது அருந்தாவிட்டாலும் கிண்டலும், முஸ்பாத்தியுமாக அவர்கள் அன்றைய பொழுது கழிந்தது. ஆறு மணி போல் அதற்கு மேல் இருந்தால் இரவுச் சாப்பாட்டைப் பற்றிக் கதை வரும் என்று ஒவ்வொருவராக நழுவத் தொடங்கினார்கள். அதைப் பார்த்த "TS"சும் சரிஸ்கா தனியே இருப்பாள் என்கின்ற கவலையோடு புறப்பட்டார்.

# 6 வடக்கின் பறவைகள்

கதை சொல்வது போல அல்ல நிஜ வாழ்க்கை என்பது "TS"சிற்கு விளங்கியது. கதையில் கற்பனைப் பாத்திரத்திற்கு என்று இருக்கும் அதன் கொள்கையில் இருந்து அது மாறாது தனது காரியத்தை முடிப்பதில் குறியாக இருக்கும். இயற்கையாக அமையாத அல்ல பிடிவாதத்தையே மட்டும் கொண்ட படைப்பைப் பேரிலக்கியம் என்பது மடமையே. மனிதன் மனதிற்கும் புத்திக்கும் இடையில் ஒவ்வொரு கணமும் நிஜ வாழ்க்கையில் தாவிக் கொண்டே இருப்பான். போராடிக் கொண்டே இருப்பான். அதில் அவன் ஆயிரம், ஆயிரம் உணர்ச்சிச் சுழலுக்குள் அகப்பட்டு திசை இல்லாது பயணிப்பான். எழுந்த மானத்திற்குப் பலதைச் செய்துவிட்டு விழுந்து விழுந்து சோகம் கொள்வான். எத்தினையோ நபர்களுக்கு தாங்கள் இப்படி வரவேண்டும் என்கின்ற குறிக்கோளும் ஆசையும் இருந்திருக்கும். அவர்கள் எப்படி வந்தார்கள் என்பது அவரவருக்குக் கிடைக்கும் சந்தர்ப்பம், சூழ்நிலைக்கு ஏற்ப மாறுபடும். முதலாளிகளாக இருந்தவர்கள் தொழிலாளிகள் ஆனதும், தொழிலாளிகளாக இருந்தவர்கள் முதலாளிகளானதும் ஈழத்திலேயே நடந்தது. யாழ்ப்பாணத்து வியாபாரக் காந்தங்கள் இலங்கையில் இருக்க முடியாது மற்றாசிற்கு ஓடி அங்கே வியாபாரம் தொடங்கிய கதைகள் "TS"சிற்குத் தெரியும். மனித வாழ்க்கையில் இப்படித்தான் வாழ வேண்டும் என்று விட்டுக் கொடுப்பு இல்லாமல் வாழ்பவனைச் சில காலத்தில் சுற்றி இருப்பவர்கள் பயித்தியம் என்று பட்டம் கட்டி விடுவார்கள். சந்தர்ப்பம் சூழ்நிலைக்கு ஏற்ப இசைவாக்கம் அடையத் தெரியாத மனிதன் பயித்தியம் என்பது சுற்றி இருக்கும் சமூகத்தின் கணிப்பாகிறது. கொள்கைகள்கூட சந்தர்ப்பத்திற்கு ஏற்ப நெகிழ்ந்து கொடுக்க வேண்டும். நெகிழ்ந்து கொடுக்க மாட்டேன் என்கின்ற கொள்கைகள் சிலவேளை முறிந்தே போய்விடுவது உண்டு.

எப்போதோ ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் எவரும் தடுக்க முடியாது நடந்த சம்பவத்திற்காய் இல்லற வாழ்க்கையே வேண்டாம் என்கின்ற சரிஸ்காவின் வளைந்து கொடுப்பில்லாத பிடிவாதம் பலருக்கும் பயித்தியக்காரத் தனமாகவே தோன்றும். பெற்ற தாய்க்கே அது அப்படியே தோன்றியது. அவமானங்கள் ஒரே விதமாக இருந்தாலும் சில மனிதர்கள் இன்று புதிதாய் பிறந்தோம் என்பதாக அதை மறந்து வாழ்கிறார்கள். சில மனிதர்கள் மலடாக அதை எண்ணி எண்ணி மாய்ந்து மடிகிறார்கள். புவனலோசினி மறந்து வாழப் பழகிக் கொண்டாள். சரிஸ்கா மறு பக்கம் நின்று கொண்டாள். தான் மாறும் போது தன்னைப் போல் மகள் மாற முடியாதா என்கின்ற ஆதங்கம் புவனலோசினியிடம். வளைந்து கொடுக்காத வாழ்க்கை மற்றவர்களுக்குப் பயித்தியக்காரத் தனமாய் தோன்றினாலும் அதை வளைக்க நினைத்து முறிக்க கூடாது என்கின்ற பௌவியத்தோடு "TS" சரிஸ்காவை நச்சரிப்பதை நிறுத்தி விட்டார். புவனலோசினியால் அப்படி இருந்துவிட முடியவில்லை. ஒஸ்லோவில் அடிக்கடி கலியாண வீடுகள் நடைபெறுகின்றன. சரிஸ்காவின் வயதை ஒத்தவர்கள் அனேகர் கலியாணம் செய்து பிள்ளைகளோடு வாழ்கிறார்கள். அவர்கள் பிள்ளைகளைக் குழந்தைகள் பராமரிப்பு நிலையங்களுக்கும் தமிழ் பாடசாலைகளுக்கும் அழைத்துச் செல்வதைப் புவனலோசினி நித்தம் பார்க்கிறாள். ஒவ்வொரு முறையும் கலியாண வீட்டிற்குச் சென்றாலோ அல்லது பிள்ளைகளின் பிறந்த நாளிற்குச் சென்றாலோ புவனலோசினிக்கு ஆதங்கமாகவும், கவலையாகவும் மண்டை வெடிக்கும். அதை யார் மீதும் காட்ட முடியாது மனதிற்குள் பூட்டி வைத்துக் குமைவாள். மனதிற்குள் பூட்டி வைப்பவை எப்போது வெளியே வந்துவிடும் என்பது எவருக்கும் தெரியாது.

*

அன்று தபால் எடுத்துக் கொண்டு வரும் போது அதில் ஒரு திருமண அழைப்பிதழ் இருந்ததைப் புவனலோசினி கண்டு கொண்டாள். அதைக் காணும் போது எல்லாம் புவனலோசினிக்கு ஒருவித ஆற்றாமையும், கவலையும், பரபரப்பும் ஏற்படும். யாருக்கு யாரோடு எங்கே திருமணம்

நடக்கப் போகின்றது என்பதைப் பார்க்க இருக்கும் பரபரப்பு அதைப் பார்த்ததும் தனது மகளுக்கும் இப்படி நடக்கவில்லையே? அவள் அதற்குச் சம்மதிக்கிறாள் இல்லையே? என்கின்ற ஆதங்கமாக, கவலையாக மாறி அவளை ஏறி மிதிக்கும். அதன் கையாலாகத்தனத்தில் சோர்வு உண்டாகும். இவ்வளவும் இருந்து என்ன என்கின்ற எண்ணம் அவளுக்குத் தோன்றும்.

சோர்வோடு சோபாவில் வந்திருந்து அந்தத் திருமண அழைப்பிதழைப் பிரித்துப் பார்த்தாள். அது புவனலோசினியின் நண்பியான ரஞ்சனியின் மகளுக்கும் லண்டனில் வாழும் சதீபன் என்பவருக்கும் நடக்க இருக்கும் திருமணம். திருமணம் ஒஸ்லோவில் உள்ள ஒரு பாடசாலை மண்டபத்தில் நடைபெறுகிறது. எல்லோரையும் வந்து மணமக்களை ஆசீர்வதிக்குமாறு அதில் வேண்டி இருந்தனர். பதினாறு செல்வங்களும் பெற்று மன மகிழ்வுடன் வாழ வாழ்த்துவது சந்தோஷமே. அப்படி ஒரு வாழ்வைச் சொந்த மகளுக்குக் கொடுக்க முடியாது இருப்பதை எண்ணப் புவனலோசினியால் தாங்க முடியவில்லை. புவனலோசினி கவலையில் மூழ்கி இருக்கும் போது சரிஸ்கா இன்றும் வழமை போல் வேலையால் வந்தாள். அவள் உடுப்புக்களைக் களைந்து விட்டுச் சமையல் அறைக்குச் செல்லாது தாயைத் தேடிக் கோலிற்கு வந்து,

"என்ன சாப்பாடு அம்மா?" என்று செல்லம் பொழிந்தாள். ஏற்கனவே எரிந்த மனதில் அந்தக் கேள்வி இன்னும் நெய்யாகச் சொரிய, நிதானம் பறிபோக, அவளோடு எப்படிக் கதைக்கக் கூடாதோ அப்படிக் கதைக்கத் தொடங்கினாள் புவனலோசினி.

"ஓ... உன்ரை பிள்ளை வந்து உன்னை உந்தக் கேள்வி கேட்கிற வயசில நீ எங்களைக் கேள். எல்லாம் நாங்கள் குடுத்த இடம். எல்லாம் கலியாணம் பிள்ளை எண்டு வாழ்க்கையைப் பார்க்குதுகள். இது என்ன எண்டா அம்மா சமைச்சு வைச்சிருப்பா தான் எப்பவும் குழந்தையாகவே இருக்கலாம் எண்டு பார்க்குது?" என்றாள் புவனலோசினி. தாயின் இந்தத் திடீர்த் தாக்குதலைச் சரிஸ்கா எதிர்பார்க்கவில்லை. அவளுக்கு அம்மாவின் மீது கோபம் வந்தது. தன்னை, தனது உணர்ச்சிகளை விளங்கிக்

கொள்ளாது கதைக்கும் அம்மா மீது வெறுப்பாய் இருந்தது. மேசையில் கிடந்த திருமண அழைப்பிதழில் கண் போயிற்று. அம்மாவின் கோபத்திற்கு என்ன காரணம் என்று விளங்கினாலும் அவளின் கோபம் அடங்கவில்லை. ஊரில் யார் யாருக்கோ கலியாணம் நடைபெறும். பிள்ளை பிறக்கும். அதற்கு அம்மா தன் மீது கோவம் கொள்வதற்கு என்ன உரிமை இருக்கிறது என்கின்ற எண்ணம் ஏற்பட்டது. அது கோபமாகப் பொங்கிக் கட்டுமீறிக் கொப்பளித்தது.

"இப்ப நீங்கள் என்ன சொல்லுகிறியள்? நீங்கள் எனக்கு அம்மாதான். ஆனா... என்ரை வாழ்க்கையை நீங்கள் வாழ ஏலாது. எனக்கு எது இன்பம் ஆனது, எது துன்பம் ஆனது எண்டது எனக்கு மாத்திரம்தான் தெரியும். என்ரை வேதனையை, சோகத்தை என்னால மட்டும்தான் விளங்கிக் கொள்ள முடியும். எனக்குப் பிடிக்காத விஷயத்தை நீங்கள் என் மீது திணிக்க முடியாது. அது சட்டத்திற்கும் தார்மீகத்திற்கும் புறம்பானது. என்னை என்ரை பாட்டுக்கு இருக்க விட வேணும். உங்களுக்கு என்னை ஒற்றையாப் பார்க்கிறது கஸ்ரமா இருந்தால் எனக்கு ஒரு வழிதான் இருக்குது. பிறகு நீங்கள் கவலைப்படக் கூடாது." என்றாள்.

அதிகமாக அழுத்தம் கொடுத்தால் சரிஸ்கா, தான் வீட்டை விட்டு வெளி ஏறுவேன் என்று சொல்கிறாள் என்பது புவனலோசினிக்கு விளங்கச் சிறிது நேரம் பிடித்தது. அதற்கு என்ன பதில் சொல்வது என்று அவளுக்கு விளங்கவில்லை. அப்படி ஒரு நிலை வருவதையே புவனலோசினியால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. தனது கோபத்தையும், ஆற்றாமையையும் அவளால் கட்டுப்படுத்தவும் முடியவில்லை. சரிஸ்காவைச் சில சொற்களால் தீண்டினாலே அவள் பெரிய போடாய் போடப் பழகிவிட்டாள். அவளே இல்லாமல் இருப்பதிலும் அவள் இப்போது இருப்பது போல இருந்தாலே பெரிய நிம்மதி ஆகும் எனப் புவனலோசினி எண்ணினாள்.

"என்ன அம்மா...? நான் என்ன செய்யட்டும்?"

"ஐயோ தாயே நீ ஒண்டும் செய்ய வேண்டாம்... நான் ஏதோ வாய் தவறிச் சொல்லிப் போட்டன். நீ றூமுக்க போய் உன்ரை அலுவலைப் பார். நான் சாப்பாடு கொண்டு

வாறன்." என்று கூறிக் கையெடுத்துக் கும்பிட்டாள் புவனலோசினி.

"நீ சாப்பாடு கொண்டு வரத் தேவை இல்லை. எனக்குச் சாப்பாடு போட்டுச் சாப்பிடத் தெரியும். என்னோடை இனி இந்தத் தேவை இல்லாத கதையளைத் துவக்காமல் இருந்தியள் எண்டாச் சரி." என்று கூறிய சரிஸ்கா தனது அறைக்குள் சென்று விட்டாள். புவனலோஜினி தனது கவலை தீரும் வரை சோபாவில் இருந்து சத்தம் கேளாது கண்ணீர் உகுத்தாள். பின்பும் மனம் கேளாது சரீஸ்காவிற்குத் தேநீர் தயாரிக்க எழுந்து சென்றாள்.

# 7 சிவ தரிசனம்

அன்று சிவாவும், மனோகரியும், சுகனும் "TS" வீட்டிற்கு வருவதாகச் சிவா ஏற்கனவே அலைபேசியில் தொடர்பு கொண்டு கூறி இருந்தான். "TS" அவர்களுக்காக எதிர்பார்ப்போடு காத்து இருந்தார். காத்து இருப்பதின் அவஸ்தை தெரியாது, தொலைக்காட்சியைப் பார்த்தாலும், மாற்றமில்லாது திடீரெனத் தாவும் மனக் குரங்கு அவரை உச்சியது. புவனலோசினி அன்று சரிஸ்காவோடு கதை வழிப் பட்ட சம்பவம் திடீரென அவர் கண் முன்னே வந்து நின்றது. அன்று சரிஸ்காவுக்குத் தேநீர் தயாரிக்கவே அவள் சமையல் அறைக்கு வந்து விட்டாள். தானாக உணவைத் தனக்குப் பரிமாறிக் கொண்டு தாய் தயாரித்த தேநீரையும் வாங்கிக் கொண்டு மீண்டும் தனது அறைக்குச் சென்று விட்டாள். அவள் அப்படி வந்து தானாக உணவைப் போட்டு எடுத்துச் சென்றது புவனலோசினிக்குப் பிடிக்கவில்லை. தான் உணவு பரிமாறி அவள் சாப்பிட வேண்டும் என்கின்ற வழக்கத்தை அவள் மாற்றுவதை புவனலோசினி மனதளவில் விரும்பவில்லை. அதை மாற்றுவது போலத் தானே கதைத்து விட்டேனே என்கின்ற கவலையில் அவள் வாடினாள். சரி அம்மாதான் கோபத்தில் கதைத்தாள் என்றால் அதற்கு அவளும் அதைத் தூக்கிப் பிடிக்க வேண்டுமா என்று சரிஸ்காவின் மீது அவளுக்குக் கோபம் வந்தது. குஞ்சிற்கு இறக்கை முளைத்து விட்டது. அது கூடு விட்டுப் பறக்கப் பார்க்கிறது என்று எண்ணிய வண்ணம் வந்து சோபாவில் இருந்தாள். அப்போதுதான் கலியாணம் செய்து கொடுத்தால் என்கின்ற ஞாபகம் வந்தது.

அன்று புவனலோஜினி சோபாவில் "TS"சிற்காய் காத்திருந்தாள். "TS" வீட்டிற்குப் போய் சாப்பிட்ட பின்பு தமிழ்ப்படம் பார்க்க வேண்டும் என்கின்ற அன்றாடத் தமிழனின் சுதி எண்ணத்தோடு வந்தார். வந்ததும் வராததுமாய் புவனலோசினி நடந்ததை அவர் காதில் ஓதினாள். "TS"சிற்குச் சரிஸ்கா மீது கோபம் வரவில்லை. அவள் ஏற்கனவே தனது நிலையைப் பற்றித் தெளிவாகக்

கூறி விட்டாள். அதன் பின்பும் அவளை நெருக்குவது அநாகரிகம். பெற்ற பாசத்தில் அது புவனலோசினிக்கு விளங்கவில்லை என்பது அவருக்குக் கோபத்தை உண்டு பண்ணியது. பிள்ளைகள் என்று எடுத்துக் கொள்ளும் உரிமைக்கும் வயது வரம்பாக வருகிறது. ஒரு குறிப்பிட்ட வயதிற்குப் பின்பு அதை விளங்கிக் கொண்டு அவரவர் எல்லைக்குள் நிற்பதே உத்தமம். அதை மீறினால் சண்டமாருதங்களைச் சந்திக்க வேண்டி வரும் என்பது உண்மை. அந்த உண்மையை விளங்கிக் கொள்ளாது சீண்டி விட்டு இப்போது தன்னைக் கண்டதும் ஒப்புச் செல்லும் புவனலோசினி மீது அவருக்குக் கோபம் வந்தது. இருந்தும் "TS" தனது கோபத்தை கட்டுப்படுத்திக் கொண்டு,

"நீ இன்னும் அவளைச் சின்னப் பிள்ளை எண்டு நினைச்சே நச்சரிச்சுக் கொண்டு திரிகிறாய்? கொஞ்சம் விளங்கிக் கொள்ளப் பார். அவள் இப்ப எங்களுக்குப் புத்திமதி சொல்லக் கூடிய அறிவோடை இருக்கிறாள். அவளுக்கு எது வேணும் எது வேண்டாம் எண்டுகிறது நிச்சயமாகத் தெரியும். விரும்பி வாழ்க்கையை ஏற்படுத்திக் கொள்ளுகிறதுகளே விதம் விதமான காரணத்தோடை அறுத்துக் கொண்டு திரியுதுகள். அவள் வேண்டாம் எண்டுகிறவளை வலுக்கட்டாயமாகப் பிடிச்சு தள்ளினாலும் அதுதான் நடக்கும். அவளா விரும்பி வந்தால் சரி... அது வரைக்கும் நான் அவளைத் தொந்தரவு பண்ணுகிறது இல்லை எண்டு முடிவு எடுத்து இருக்கிறன். அதை நீயும் கடைப்பிடிக்கிறது எங்கள் எல்லாருக்கும் நல்லது எண்டு நான் நினைக்கிறன். அப்பிடி இல்லை எண்டு நீ ஏதும் அவளோடை கதைச்சாப் பிறகு என்னிட்டை வந்து கொம்பிளையின் பண்ணக் கூடாது. தற்சமயம் அவள் ஏதும் இசகு பிசகான முடிவு எடுத்தக் கொண்டு வெளிக்கிட்டாலும் நான் ஏன் எண்டு கேட்கமாட்டன். அப்பிடி ஏதும் நடக்காமல் இருக்கிறது எண்டா நீ உன்ரை நடக்காத ஆசைக்குக் கொள்ளி வைச்சிட்டு பேசாமல் இருக்கிற வழியப் பார். இதுக்கு மேல எனக்கு அதைப் பற்றிச் சொல்லுகிறதுக்கு ஒண்டும் இல்லை." என்றார் "TS".

"நீங்கள் எப்பவும் அவளுக்குச் சப்போட்டாகவே கதையுங்கோ. உங்கடை அப்பாக்குட்டித் தங்கம்மா மாதிரி இவளும் செல்வியாகவே இருந்து சிவபதம் அடைஞ்சிடுவாள். அதோடை எங்கடை பெயரே இல்லாமல் போயிடும்." என்றாள் புவனலோசினி இயற்கையின் விதியை ஞாபகப் படுத்துவதாய்.

"உலகத்தில கோடான கோடி சனங்கள் பிறந்து வாழுகினம். எல்லாச் சனத்துக்கும் சந்ததி இருக்குதா? சந்ததி இல்லாமல் அழிஞ்சு போகிறது சிலருக்கு விதியா இருக்கும். அதுதான் எங்களுக்கும் விதி எண்டா நாங்கள் என்ன செய்கிறது? எப்பவோ நடக்கிற அந்தக் காரியத்திற்காக இப்ப வாழுகிற வாழ்க்கையை நரகம் ஆக்காதை. நாங்கள் இருக்கிற வரைக்கும் எங்கடை வாழ்க்கையை நல்லா வாழ்ந்திட்டுப் போவம். அதுக்குப் பிறகு அது கடவுளின்ரை சித்தம். எங்களுக்குப் பரம்பரை இருக்கிறதும் இல்லாததும் அவன் சித்தம். நீ உந்த விஷயம் பற்றி அவளோடை கதைக்காதை. நான் இனி உதை பற்றி உன்னோடை கதைக்கமாட்டன்." என்று "TS" முடிக்கவும் வாசல் மணி அடிக்கவும் சரியாக இருந்தது. ஏதோ சொல்வதற்கு வாய் எடுத்த புவனலோசினி அதை அடக்கிக் கொண்டாள். "TS" சாப்பிடவில்லை. விருந்தினர்கள் வந்து விட்டார்கள். இனி அவர்கள் சாப்பிடும் போதுதான் சாப்பிட வேண்டிய இக்கட்டான நிலை. அது வரைக்கும் அவருக்கு வயிற்றை நிரப்ப ஏதாவது தாராளமாய் தேநீருடன் வைத்துவிட வேண்டும் என்று அவள் எண்ணினாள். சாப்பிட்டுப் படம் பார்க்கும் "TS"இன் எண்ணம் கனவாக அவர் எழுந்து சென்று கதவைத் திறந்தார். மும்மூர்த்திகளாய் நின்றவர்களைப் பார்த்து,

"வாங்க... வாங்க..." என்றார்.

"நீங்கள் சொல்லாட்டியும் நாங்கள் வருவமில்லை." என்கின்ற தென் இந்தியச் சினிமா வசனத்தோடு சிவா தனது மேலங்கியைக் கழற்றிக் கொளுவி விட்டுச் சுகன் கழற்றிக் கொடுத்த மேலங்கியை வாங்கிக் கொளுவினான்.

"இவர் இப்ப பெரிய ஆள் ஆகீட்டார்?" என்றாள் எட்டிப் பார்த்த புவனலோசினி.

"பிறகு என்ன? முதலாம் வகுப்புத் தொடங்கீட்டார். அவற்றை புத்தகங்கள் வாசிச்சா எங்களுக்கே விளங்காது எண்டு கதை அடிக்கிறார். இப்பவே பள்ளிக்கூடத்தில சாரஸ்த (காதலி) தனக்கு இருக்கு எண்டு என்னிட்டையே வந்து சொல்லுகிறார்." என்றாள் மனோகரி.

"அட படவா? முளைச்சு மூண்டு இலை விடேல்லை... அதுக்கு உள்ள உனக்கு உந்த நடப்பா?" என்றார் "TS".

"அது எங்கடை வகுப்பில எல்லாரும் சாரஸ்த வைச்சிருக்கினம். நீங்கள் அன்ரிய வைச்சிருக்கிற மாதிரி. அப்பா அம்மாவை வைச்சிருக்கிற மாதிரி. நான் வைச்சிருந்தா என்ன?" என்றான் சுகன்.

"அது சரி நீ வைச்சிரு தம்பி. நான் அதைப்பற்றி இனிக் மறந்தும் கேட்க இல்லை." என்றார் "TS".

"இங்க ரீச்சரே கேட்கிறது இல்லை. உங்களுக்கு உது லேற்றாத்தான் விளங்கி இருக்குது." என்றான் சுகன்.

"என்ன செய்கிறதடா சுகன்? எங்களுக்கு உந்த அதிஸ்ரம் இருக்க இல்லை. இப்பவும் புரிந்துணர்வு இல்லை. நாங்கள் கிழடாகிப் போயிட்டம். இனி எதுவும் செய்ய ஏலாது." என்றார் "TS".

"ஏன் "TS" அண்ணை... ஐம்பதிலும் ஆசை வரும் எண்டுகினம். அப்பிடி உங்களுக்கு இல்லையா?" என்றான் சிவா.

"ஓம் சிவா. ஆசை வருகுதோ இல்லையோ நல்லா நரை வந்து இருக்குது." என்றார் "TS".

"உங்களுக்கு நரையும் ஒரு வடிவுதான்." என்றான் சிவா.

"காணும் சிவா. பிறகு அவருக்குக் கெப்பர் கூடிடும்." என்றாள் புவனலோசினி.

"அக்கா உசாராகத்தான் இருக்கிறியள். "TS" அண்ணைக்குப் பாய்கிற அளவுக்கு எல்லாம் துணிவு கிடையாது... பயப்பிடாதையுங்க." என்றான் சிவா.

எல்லோரும் வந்து சோபாவில் இருக்கப் புவனலோசினி தேநீர் தயாரித்து வருவதற்குச் சென்றாள். மனோகரியும்

எழுந்து அவளோடு சேர்ந்து கொண்டாள். அதற்கு இடையில் அறையை விட்டு வெளியே வந்த சரிஸ்கா,

"என்ன சிவா அண்ணை அட்டகாசம் செய்கிறியள்?" என்றாள்.

"அக்கா எனக்குப் பல்லால இரத்தம் வருகுது." என்றான் சுகன்.

"பல்லில இருந்து இரத்தம் தானடா வரும். படவா ஓசியில வைத்தியம் பார்க்க நினைக்கிறியா?. நான் பார்த்தா டபிள் வில் அப்பாவுக்கு அனுப்புவன். ஆனா... உனக்குப் பிறியாப் போச்சுதே. அது சரி ஒழுங்கா இரண்டு நேரமும் பல்லுத் தீட்டுறியா?" என்றாள் சரிஸ்கா.

"அவையின்ரை பரம்பரை அப்பிடித் தானாம். காரியக் காரர். ஓசியிலதான் வைத்தியம் பார்ப்பினம்." என்றாள் மனோ.

"இங்க வாடா சுகன்." என்றாள் சரிஸ்கா. சுகன் பாய்ந்து அவளிடம் ஓடினான். சரிஸ்கா குனிந்து அவன் கன்னத்தில் விரல் வைத்து அழுத்தி முரசை உற்றுக் கவனித்து விட்டு,

"ஒருக்கா பல்லு லேசாக் கிளின் பண்ணி விடுகிறன் சிவா அண்ணை." என்றாள்.

"அவங்களுக்கு ஸ்கூலால பிறியாப் பார்ப்பினம் தானே. நீ ஏன் இப்ப கஸ்ரப் படுகிறாய் சரிஸ்கா?" என்றான் சிவா.

"பருவாய் இல்லை அண்ணை. நான் கிளீன் பண்ணி விடுகிறன்." என்று கூறி விட்டு சுகனின் தோழில் கையைப் போட்ட வண்ணம் "வா என்ரை அறைக்கு." என்று அழைத்துச் சென்றாள். சிறிது நேரத்தின் பின்பு,

"அக்கா நோக நோக இன்னும் இரத்தம் வரப் பண்ணிப் போட்டா. நான் நாளைக்கு எப்பிடி ஸ்கூல் போகிறது?" என்று உண்மையான கவலையோடு கையில் பிளாஸ்ரிக் கப்பிற்குள் இரத்தத்தையும் எச்சிலையும் துப்பிய வண்ணம் சுகன் கேட்டான். பிள்ளையின் கவலையை நினைத்து "TS"சும் சிவாவும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

"பாருங்க அண்ணை... எப்பிடி எல்லாம் கவலைப் படுகிறான். நாங்கள் அந்தக் காலத்தில இப்படி எல்லாம் கதைச்சிருக்க முடியுமா?" என்றான் சிவா.

"ம்... காலம், இடம், கலாச்சாரம், சட்டம் எல்லாம் அவங்களுக்கு இந்தச் சுதந்திரத்தை இந்த வயசிலேயே குடுத்து இருக்குது. அது அவங்கடை அதிஸ்ரம் சிவா." என்றார் "TS".

"உதுக்கு எல்லாம் உந்தக் கலாச்சாரம் முக்கியம் அண்ணை. எங்களுக்குச் சின்னனில பெட்டையளுக்குப் பக்கத்தில போகிறது எண்டாலே வியத்துப் போயிடும். இங்க இதுகளுக்கு ஆண் பெண் வித்தியாசமே தெரியாது. எண்டாலும் அந்தக் கலாச்சாரத்தில இருக்கிற திறில் இதிலை இருக்காது." என்றான் சிவா.

"உண்மைதான். எங்கடை கலாச்சாரத்தில சில பிழைகள் இருக்கிற அதே நேரம் சில உன்னதமான பண்புகளும் இருக்குது. அந்த உன்னதமான பண்புகளை இங்க காண முடியாது. ஆனா... இவங்கடை கலாச்சாரத்தில இருக்கிற சில நல்ல பண்புகளை, மனித நேயத்தை, சட்டத்தை மதிக்கிறதை எங்கடை கலாச்சாரங்களில காணமுடியாமல் இருக்கும்." என்றார் "TS".

*

"அது சரி... உங்கடை பாடு எப்பிடிப் போகுது அண்ணை?" என்றான் சிவா.

"நீ என்ன புதுமையாய் கேட்கிறாய். எங்கடை பாடு ஏதோ போகுது. அவ்வளவுதான்." என்றார் "TS".

"ஏன் அண்ணை நீங்களே சலிக்கிறியள்?" என்றான் சிவா.

"நான் சலிக்காமல் யார் சலிக்கேலும் சிவா? கலியாணம் வேண்டாம் எண்டு சரிஸ்கா திட்டவட்டமாய் சொல்லிப் போட்டாள். வேறை வழி இல்லை எண்டு நான் பேசாமல் இருந்தாலும் புவனா அடிக்கடி ஏதாவது கதைச்சு கலகத்தை ஏற்படுத்திப் போட்டு மூக்கை உறுஞ்சுகிறதைப் பார்க்க எனக்கு விசரா இருக்குது. என்ன செய்கிறது? அவள் ஒரு டொக்ரர். அவள் தனக்கு வேண்டாம் எண்டால் நல்லா யோசிச்சுத் தானே முடிவு எடுத்திருப்பாள். பிறகு

அதுக்க நாங்கள் தலையிடுகிறது நல்லது இல்லை எண்டு நான் நினைக்கிறன். அது புவனாவுக்கு விளங்குது இல்லை. ஏதாவது குத்தல் கதை கதைச்சால் அவள் இந்தா வெளிக்கிடுகிறன் எண்டு நிற்பாள். பிறகு இரண்டு பேரையும் சமாதானப் படுத்த நான் அல்லாட வேண்டி இருக்கும்." என்றார் "TS" தணிந்த குரலில். சிவா யோசித்துக் கொண்டு இருந்தான்.

"சரிஸ்கா சும்மா பகிடிக்கே முதல்ல சொல்லுகிறாள் எண்டு நினைச்சன். பிறகுதான் அவள் அதை உண்மையாகவே சொல்லுகிறது எனக்கும் விளங்கிச்சுது.' என்றார் தொடர்ந்து "TS".

'நீங்கள் சொன்ன மாதரி அவவுக்கு நாங்கள் புத்திமதி சொல்ல முடியாது. அவவின்ரை பாட்டில விட வேண்டியதுதான். இங்க எவ்வளவு பேர் கலியாணம் செய்யாமல் இருக்கினம். என்ன வாரிசு இல்லாமல் போயிடும். அதுக்குத் தொந்தரவும் பண்ணக் கூடாது எண்டதும் உண்மை." என்றான் சிவா.

"எங்களுக்கும் அந்தக் கவலையாகவே இருக்குது. பார்ப்பம்... தொடர்ந்தும் மாற்றம் இல்லாட்டி யாரை ஆவது சொந்தத்தில தத்து எடுத்துக் கொண்டு வந்தால் வாழ்க்கையும் ஆகும், வாரிசும் ஆகும். ஒரு உதவியாகவும் இருக்கும்." என்றார் "TS".

"அதுக்குப் பஞ்சம் இருக்காது. அது தானே எவ்வளவோ தாய் தகப்பன் இல்லாத பிள்ளையள் இப்ப ஊரில தவிக்குதுகள்." என்றான் சிவா.

"அது எண்டா உண்மை. எங்களால செய்யக் கூடிய உதவியாகவும் அது இருக்கும்." என்றார் "TS".

"நாட்டுக்கு உதவியா இருக்கும் எண்டு சொல்ல முடியாது. அந்தப் பிள்ளைக்கும் அவங்களைச் சார்ந்த குடும்பத்திற்கும் உதவியாய் இருக்கும் எண்டு சொல்லலாம்." என்றான் சிவா.

"ம்… விளங்குது." என்றார் "TS".

"இப்ப பெடியளின்ரை கை நல்லா ஓங்கி இருக்குதாம். முல்லைத்தீவில வெற்றிவிழா நடக்குது போல இருக்குது.

இலங்கை இராணுவத்துக்கு எதிர்பார்க்காத பலத்த இழப்பு எண்டு கதையா இருக்குது." என்றான் சிவா. அவனுக்கு "TS"சின் மனதை மாற்றுவதோடு அவரிடம் இருந்து கதை பிடுங்க வேண்டும் என்கின்ற எண்ணம். "TS" இப்போது தானும் தன்னுடைய வேலையும் என்று இருப்பதில் மட்டும் அதிகம் அக்கறை செலுத்தினார். நோர்வேயின் வடக்கில், வேற்று இடங்களில் இருந்து ஒஸ்லோவிற்கு வந்த பல விசுவாசிகள் என்று சொல்லிக் கொள்பவர்கள் இப்போது காசு சேர்ப்பது, பிரச்சாரம் செய்வது என்று மும்மரமாக செயற்படுகிறார்கள். அதற்குள் தலையைப் புகுத்தாது ஒட்டியும் ஒட்டாமலும் இருப்பதே தனக்கு உகந்தது என்பதே "TS"சின் தற்போதைய நிலையாகும்.

"சிவா நீ கேள்விப் படுகிறதைத்தான் நானும் கேள்விப் படுகிறன். அதைவிட எனக்கு ஒண்டும் பெரிசாத் தெரியாது. இப்ப புதுசு புதுசா வேறை இடங்களில இருந்து வந்தவங்கள் காசு சேர்த்துத் திரிகிறாங்கள். என்னிட்டையும் வந்து காசு வாங்கிக் கொண்டு போகிறாங்கள். முல்லைத்தீவுச் சண்டைக் கசெற்றும் இப்ப வந்து இருக்குது." என்றார் "TS".

"தாமோதரனும் காசு சேர்க்கிற குளுவில சேர்ந்து இருக்கிறாராம்... உங்களிட்டை வரேல்லையே?" என்றான் சிவா.

"அவரும் வந்தவர். அவர் ஒண்டும் என்னோடை கதைக்க இல்லை. நோத்தில இருந்து வந்த பெடியள்தான் வலு கராராக் கதைக்கிறாங்கள். நான் கேட்டா என்ன கேட்காட்டி என்ன குடுப்பன். அது என்னுடைய கடமை எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"உங்கடை அந்த எண்ணம் பிழை அண்ணை. உங்களுக்கு அது ஒரு நாளைக்கு விளங்கும். நீங்கள் குடுக்கிற பணம் ஒரு நாளும் ஈழத்தில ஆக்கத்தை ஏற்படுத்தப் போகிறது இல்லை. அதுக்குப் பதிலாப் பல மடங்கு அவலம்தான் உருவாகும். சரி இப்ப பெடியள் வலுவாகத் தானே இருக்கிறாங்கள். இதை ஒரு சந்தர்ப்பமா வைச்சுக் கொண்டு பேச்சுவார்த்தையில ஏதாவது உரிமைகளை பெற்றுச் சமாதானமா வாழுவம் எண்டு நினைக்கலாம் தானே? அப்பிடிச் செய்வாங்களா?

இல்லை. தனிநாடு வேணும் எண்டுதான் அடம் பிடிப்பாங்கள். தனிநாடு ஒரு நாளும் கிடைக்கப் போகிறேல்லை. நீங்கள் குடுக்கிற பணத்தால ஆயுதமும் அழிவும்தான் மிச்சமாகும். கடைசியில ஈழத்தில எவ்வளவு தமிழர் மிஞ்சி இருப்பினம் எண்டது கேள்விக் குறியா வரும்." என்றான் சிவா.

"நீ சொல்லுகிறதிலையும் விஷயம் இருக்குது. அப்படி எங்கடை சனங்கள் நலிஞ்சு போகிறதுக்கு உள்ள ஒரு தனிநாடு கிடைக்க வேணும். அதுதான் எல்லாற்றை ஆசையும், கனவும். அதையே பெடியள் ஒரே பிடியா பிடிச்சுக் கொண்டு நிக்கிறாங்கள்." என்றார் "TS".

"தனிநாடு எண்டுகிறது ஒரு அழகான, ஆர்வமான, உணர்ச்சியைத் துண்டுகிற, வெறியான, கண்மூடித்தனமான கற்பனை. அதைக் குறிக்கோளாய் வைச்சுப் போராடினால் எங்கடை இனம் அழிகிறதை யாராலும் தடுக்க ஏலாது. இந்தியா தந்த உரிமையை விட இலங்கையில எங்களுக்கு அதிகமா யாரும் உரிமை தரப் போகிறது இல்லை. என்னைப் பொறுத்த வரையில இந்தியாவோடை மோதலை உண்டு பண்ணிப் பெடியள் சொந்த இனத்துக்கு மாபெரும் கெடுதல் உண்டு பண்ணிப் போட்டாங்கள். காலம் போகப் போக அதுகின்ரை விளைவு தெரியும். இந்தியாவை மீறி இலங்கை அரசு எங்கைதான் போக நினைச்சாலும் கடைசியா அங்க போய்த்தான் அவை சரணடைய வேண்டி வரும். ஆக மொத்தத்தில அவங்களைப் பகைக்காமல் அவங்களால வந்த உரிமையை வைச்சுக் கொண்டு மேல என்ன செய்யலாம் எண்டு யோசிச்சு இருக்க வேணும். அப்ப இந்த அழிவு, இனி வரப்போகிற அழிவுகளைத் தடுக்கிறதோடை எங்கடை இனமும் ஈழத்தில நிலிவுறாமல் பார்த்து இருக்கலாம். இப்ப அந்தக் கோச்சியும் போயிட்டுது. இனி என்ன வரப் போகுது? என்ன நடக்கப் போகுது எண்டதை காலம்தான் சொல்ல வேணும்." என்றான் சிவா.

"இவ்வளவத்தையும் செய்தவங்கள் இதை எல்லாம் யோசிக்காமல் செய்வாங்களா? ஏதாவது பிளான் இருக்கும். சில வேளை அது எங்களுக்கு விளங்காமல் இருக்கலாம். ஏதாவது ஒரு நல்ல முடிவு வரும் எண்டு நான்

நினைக்கிறன். அதுதான் எல்லாருக்கும் நல்லது." என்றார் "TS".

"திரும்பவும் சொல்கிறன் அண்ணை. நீங்கள் களத்தில நீண்ட காலம் நிற்காததால உங்களால இப்படி நம்ப முடியுது. ஏதாவது ஒரு நல்ல முடிவு வந்தா எல்லாருக்கும் விமோசனம்தான். வந்த முடிவையே புறங் கையால தட்டி விட்டு இருக்குது. இனி எங்களுக்கு ஒரு நல்ல முடிவு வரும் எண்டு எப்பிடி எங்களைப் போன்றவையால சமாதானம் அடைய முடியும் சொல்லுங்க பார்ப்பம்?" என்றான் சிவா.

"நான் என்ன சொல்லுகிறது சிவா. எல்லாம் எங்கடை இனத்தின்ர சாபம். நாங்களும் எத்தினை தரம் இதைக் கதைப்பம்? இல்லாட்டி எல்லாரும் ஒற்றுமையா இருந்து போராடி இருப்பாங்கள் தானே? இப்ப இருக்கிறவனுக்கு எண்டாலும் உதவி செய்ய வேணும் எண்டுகிறது எங்கடை கடமை எண்டு நினைக்கிறன். அதுதான் என்னால ஆனது. அதுவும் செய்யாட்டா, அவங்களும் போராடாமல் விட்டால் என்ன முடிவு எண்டு எனக்குத் தெரியாது." என்றார் "TS".

சிவாவின் அலைபேசி சிணுங்கியது. சிவா தொடர்ந்தும் அந்த நோக்கியாவே வைத்து இருந்தான். அவனது முதலாளி கதைத்தார். சிறிது நேரத்தில் சம்பாசனையை முடித்துக் கொண்டு "TS"சைப் பார்த்தான்.

"எங்கடை முதலாளி உள்ளங்கை அளவில சின்னதாப் போன் ஒண்டு அவுட்டு வைச்சிருக்கிறார். அதை மடக்கி மடக்கி அவர் விளையாடிக் கொண்டு திரிவார். அப்பிடி ஒண்டு வாங்க வேணும் எண்டு எனக்கும் ஆசை. சம்பளம் வரவிட்டி எப்பிடி ஆவது அதை அவுட்டா நல்லது. இதுக்கு இப்ப பட்டறியும் சரியாய் நிக்குது இல்லை." என்றான் சிவா.

"ஓம் சிவா... இதுகின்ரை பட்டறியும் அப்பிடிதான். இதுகளுக்கு பற்றி ஒரு பெரிய பிரச்சனையாகத்தான் இருக்குது. நம்பிக் கொண்டு போக ஏலாது. இப்ப சின்னப் போன்கள் வருகுது என்ன?" என்றார் "TS".

"ஓம்... அண்ணை. மொந்ரோலாவில, நோக்கியாவில அப்பிடிச் சின்னனா வருகுது. அது பட்டறியும் நிண்டு பிடிக்கும் எண்டு மூனா சொன்னார்." என்றான் சிவா.

"நீ அப்பிடி ஏதும் வாங்கப் போனாச் சொல்லு... நானும் வாறன்... பார்த்து ஒண்டு வாங்க வேணும்." என்றார் "TS".

# 8 திசையில்லாப் பயணம்

தமிழர்கள் சந்திரனில் காலடி வைத்தது போல நோர்வேக்கு திசை மாறி விமானம் விமானமாக வந்து இறங்கிய காலத்தில் இந்தியன் இராணுவம் இலங்கைக்குள் வலுக்கட்டாயமாக இறங்கியது. அது ஜேயார் ஜேவர்த்தனேவைத் தவிர மற்றவர்களின் அரசியல் வங்குரோத்துக் காலம் என்பது அப்பட்டமான உண்மை. அதைத் தமிழ்த் தரப்பு முறையாகப் பயன்படுத்தாது சின்னத்தனமாய் சிந்தித்துத் தமது இனத்திற்கே துரோகம் இளைத்தது என்று துணிந்து சொல்வதற்கு யாருக்கும் மனதில் ஒரு போதும் சத்தியம் கிடையாது. அப்படி யாரும் சொன்னால் அவர்கள் தமிழர்களின் துரோகிகளாகி அதற்கான அவர்களது கறுத்தப் பட்டியலில் அடங்கி விடுவார்கள். பின்பு நாடு வேண்டாம், சுற்றம் வேண்டாம், நண்பர்கள் வேண்டாம் என்கின்ற முடிவோடு தனிமையையும், பயத்தையும் ஏற்று வாழ்வு நடத்த வேண்டும். அதற்குத் தயங்கியதால் மௌனிகள் ஆனவர்களின் சனத்தொகை அதிகரித்தது. மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி என்கின்ற பழமொழி உண்டு. பலரின் மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி என்பதாய் எடுத்துக் கொண்டவர்களின் பாதை மேலும் மேலும் திருத்த முடியாத கோணலாய் போய்க்கொண்டு இருந்தது.

மீண்டும் தொடக்கத்துக்கு வரவேண்டிய கட்டாயத்தில் இந்தக் கதையைச் சிவா நினைத்துப் பார்த்தான். அவன் சொல்ல வந்தது என்ன என்றால், நோர்வேக்குத் தமிழர்கள் வந்து இறங்கிய காலத்தில் இலங்கையில் சமாதானம் ஏற்படுத்துவதாய் இந்திய இராணுவம் புகுந்தது. இலங்கையில் சமாதானம் உண்டாகிவிட்டால் நோர்வே போன்ற ஐரோப்பிய நாடுகள் அகதிகளைத் திருப்பி அனுப்பித் தங்கள் செல்வச் செழிப்பிற்குப் பங்கம் வராது பாதுகாத்துக் கொள்ளும் என்கின்ற எண்ணம் அகதிகளாக வந்த ஈழத்தமிழரிடம் இருந்தது. அப்படி நாடு திரும்ப வேண்டி வந்தால் இலங்கையில் இருந்து இங்கு வருவதற்குச் செலவு செய்த பணத்தையாவது உழைத்துக் கொண்டு நாட்டிற்குத் திரும்ப வேண்டும் என்கின்ற

எண்ணம் அவர்களுக்கு இருந்தது. அதற்காக எங்கு வேலைக் கிடைத்தாலும் செய்து பணத்தைச் சம்பாதிக்க வேண்டும் என்கின்ற எண்ணத்தில் தமிழர்கள் தவண்டை அடிக்கும் போது பல மீன் தொழிற்சாலைகளில் வேலைக்கு ஆள் தேவைப்பட்டது. அந்தத் தொழிற்சாலைகள் நோர்வேயின் தலை போன்ற பின்மார்க் மாநிலத்தில் உருசிய எல்லைக்குப் பக்கத்தில் இருந்தன. இருந்தும் தமிழர்கள் பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதற்காகச் சந்திர மண்டலத்தில் இருக்கும் பனிக் குகைக்குள் போவது போல அங்கே கூட்டம் கூட்டமாகச் சென்று, பல சிற்றூர்களில் குடியேறி, மீன் தொழிற்சாலைகளில் வேலை செய்தார்கள்.

தமிழர்கள் பணத்திற்காக எந்த உரிமை பற்றியும் கவலை இன்றி எப்போதும் வேலை செய்யத் தயாராக இருந்தமையால் பூரித்துப் போன மீன் தொழிற்சாலை முதலாளிகள் அவர்களைத் தங்கள் தத்துப் பிள்ளைகளாக்கி அங்கேயே குடியமரும் வசதிகள் செய்து கொடுத்தார்கள். ஐநா சபை செலவு செய்யக் கொடுக்கும் பணத்தை எடுத்து வங்கியில் வட்டிக்குப் போட்டுக் கொள்ளலாம் என்று உணர்ந்த மாநகரசபைகள் தமிழரை வாவா என்று அழைத்து மீன் தொழிற்சாலைகளில் சேர்த்து விட்டார்கள். இவ்வாறு தமிழர்கள் தங்களுக்குத் தேவையான பணத்தைச் சம்பாதிக்க, மீன் தொழிற்சாலை முதலாளிகள் முன் எப்போதும் இல்லாத இலாபம் பெற, அகதிகளைச் சாட்டி வடக்கின் மாநகரசபைகள் கொழுக்கத், தமிழர்கள் அங்கு அரசியல்வாதிகளின் விருப்போடும், சுதேசிகளின் சொல்ல முடியாத வெறுப்போடும், பல்கிப் பெருகத் தொடங்கினர். அங்கே சாதி வெள்ளாளரும், கோவியரும், கரையாரும், மற்றும் உதிரிச் சாதிகளான தச்சர், திமிலர், வண்ணார் போன்றவர்களும் சாதிகள் இல்லையடி பாப்பா என்பதை நிரூபிப்பது போல, உயிர் மீன்களை துடிக்கத் துடிக்க கொலை செய்து, மதுரையில் மறந்துவிட்டு வந்த தமது மீன்கொடியை இங்கு மனதில் ஏற்றிப் பண மாதாவிற்குப் பணிவிடையாக தங்களது உயிர், ஆவி, உழைப்பு என்பனவற்றை ஒட்டுமொத்தமாக ஒப்படைத்தனர்.

பாரதி கண்ட கனவுச் சமுதாயம் ஒன்றை உருவாக்கி ஒன்றோடு ஒன்று கலந்தாலும், சாதி வெள்ளாளர் மீனைக்

குழையக் குழைய அழைந்து தொழில் செய்தாலும், தங்களின் சாதி மகிமையையும், திமிரையும் மறக்க முடியாது தனிமையில் தாங்கள் மட்டும் கூடும் போது இரகசியமாக வெறுப்பைக் கொட்டித்தள்ளி, பொது நிகழ்வில் தாங்கள் எதுவும் பாராத உத்தமராக சற்றும் பிசகாது நடிப்பர். அங்கு தங்களைப் பாரதியின் கனவு நாயகர்களாகக் காட்டிக் கொள்வதில், அதனால் கைதட்டு வாங்குவதில் வெற்றி காண்பதாய் அவர்கள் நினைத்தாலும், பெரும்பான்மையாக இருந்த கரையாருக்கும், கோவியருக்கும் எப்போதும் இவர்கள் மேல் அவ நம்பிக்கை தொடர்ந்தது. அத்தோடு தங்கள் சாதியே இன்று மறச் சாதியாக மாறித் தமிழரின் மானத்தைக் காப்பதால், வெள்ளாளரை இனி ஒரு மேல் சாதியாக எடுத்துக் கொள்ள முடியாது என்கின்ற தீர்மானத்தோடு, அவர்களையும் தங்கள் சாதி போல் அல்லது தங்களைவிட அவர்கள் ஒன்றும் உயர்ந்தவர்கள் இல்லை என்பதாக அவர்கள் பிறிதாக ஒரு கனவு கண்டனர்.

சாதி பற்றிக் கதைப்பது தேசியத்திற்குத் துரோகம். அந்தத் துரோகத்தைச் செய்து தனிமைப்பட விரும்பாத கனவான்கள் சாதியைவிடத் தேசியத்தால் தங்களுக்கு என்ன பதவிகள் கிடைக்கும் அல்லது எதைச் சுருட்டலாம் என்பதில் தங்கள் யாழ்ப்பாணியத்தை நிரூபித்தனர். சாதி வேரை அறுப்பது அவர்கள் திட்டம் அல்ல... அதைத் தற்காலிகமாக மறைப்பதில் அதிக கவனம் செலுத்தினர்.

இப்படியாக அங்கே தமிழர்கள் பல்கிப் பெருகி ஒரு கிராமத்தின் விகிதாசாரத்தையே மாற்றி அமைக்கும் அளவுக்கு நிலைமை மாறும் போது பாறன்ஸ் கடலில் மீன்கள் இந்த அநியாயத்தைப் பார்க்க முடியாது மனித எல்லைகளை மதிக்காது, மனிதர்களிடம் இருந்து தப்பித்துக் கொள்ள, அவை மனிதர்கள் புகமுடியாத ஆலம் மலைகளின் கீழ் பதுங்கிக் கொள்ள, மீனிற்குத் தட்டுப்பாடு ஏற்பட்டது. மீனிற்குத் தட்டுப்பாடு ஏற்பட்டதால் பஞ்சப் படியில் பல தமிழரும் சீவிக்க வேண்டி வந்தது. பஞ்சப் படியில் சீவித்தாலும் அலைபேசியும் தேசியமும் அவர்களிடம் தாராளமாய் இருந்ததால் அவர்கள் வடக்கில் இருந்து வருவதற்குத் தயாராகாது பாரன்ஸ் கடலில் ஆலம் மலைகளுக்குக் கீழ் பதுங்கிய மீன்கள் மீண்டும்

தங்களைத் தேடி வரும் என்றும், தாங்கள் விரைவாகக் கத்தியைத் தீட்டிப் பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளலாம் என்றும் நம்பிக், காலை நிலத்தில் வைக்காத கொக்குகள் போலக் காத்து நின்றார்கள்.

இந்தக் கூட்டத்தில் தேசியத்தைக் கண்மூடித்தனமாகத் தமது வேதம் ஆக்கியவர்களைவிட மாற்று இயக்கத்து உறுப்பினர்கள் தேசியத்தை விரும்பினாலும், கண்மூடித்தனமான வன்முறையை அல்லது அராஜகத்தை விரும்புவது இல்லை என்பதோடு, அன்று அவர்களைக் களத்தில் இருந்து விரட்டித் தனி உரிமை பெற்றுத், தமிழருக்காகப் போராடுவதாய் கூறிய இயக்கத்தைக் கடுமையாக எதிர்ப்பதோடு, அந்த எதிர்ப்பைக் காட்டுவதற்கு எதுவும் செய்யத் தயாராக இருந்தார்கள். தமிழர்கள் எங்கே சென்றாலும் அன்னை திரேசாக்களாகச் சேவை செய்வதாக போலி அமைப்புகளைத் தோற்றுவித்து, அரச பணத்தை அழகாக அட்டைகள் போல் உறிஞ்சி எடுப்பார்கள். பின்பு அந்தப் பணத்தை எடுத்து மறைமுகமாக இயக்கத்திற்கு அனுப்புவதைக் கண்டு பிடித்த மாற்று இயக்க அதிர்ப்தியாளர்கள் தங்கள் பெயரால் அராஜக இயக்கத்திற்குப் பணம் போகக் கூடாது என்று எதிர்த்துப் போராடி, எந்தப் பிரயோசனமும் இல்லாத காரணத்தால், பிறிதொரு தமிழ்ச்சங்கத்தை உருவாக்கிச் சேர, சோழ, பாண்டியர் என்கின்ற தமிழ் வரலாற்றை உலகத்தின் வடதுருவத்திலும் நிலை நாட்டி, தமிழரின் வரலாற்றை மேலும் மெருகேற்றினர். அத்தால் ஈழத்தமிழர்கள் ஆண்ட தேசம் வடதுருவத்தில் இருந்து தென் துருவம் என்பதாக ஆங்கிலேயரையும் மீறி அண்மையில் விஸ்தீரணம் ஆகிற்று.

இப்படியாக எல்லையற்ற கற்பனை இராட்சியங்கள் நடந்தாலும், இடைக்கிடையே தங்கள் இராட்சியத்தில் இருப்பவர்களே முதுகில் குத்துகிறார்கள் என்பதை உணர்ந்த ஒரு சிலர், இந்த இராட்சியம் சரிவராது என்று தெற்கே இருக்கும் வேற்று இராட்சியத்திற்குப் புறப்பட்டார்கள். அத்தால் வடதுருவத்தில் வாழ்ந்த தமிழர்களின் இடப்பேர்வு விநாயகரின் சுழியோடு மங்களகரமாக தெற்கு நோக்கி ஆரம்பமானது.

*

அருளின் ஊரைச் சார்ந்தவன் சந்திரன். பெசைமில் இருந்து விமானத்தில் வடக்கின் மீன் வசந்தத்தை தேடிச் சென்றவன். வடக்கில் அவன் ஒழுங்காக வேலை செய்தது கிடையாது. வேலை செய்வதும் படிப்பதுமாகக் காலத்தைப் போக்கினான். அவனைப் பொறுத்தவரையில் காலத்தைப் பயன்படுத்தினான். அவனது பழைய வரலாறு மற்றைய இளைஞர்களைப் போன்றதே. தமிழ் நாட்டிற்குச் சென்றால் ஆப்பிளும் பாலும் மூக்கு முட்டத் தந்து, தடவிக் கொடுத்து, பஞ்சு மெத்தையில் படுக்க வைத்து விடுதலை இராணுவம் ஆக்கி விடுவார்கள் என்கின்ற அழகான கற்பனையை யாரோ உண்மை போன்று கதை கட்ட, அதை நம்பி ஊர்மிளாந்திகளாய் போய், இந்தியா இல்லாவிட்டால் மீண்டும் இல்லம் என்று அடம்பிடித்து, பாக்குநீரிணையைப் பயத்தில் ஆனால் படகோட்டியின் அபாரத் துணிவோடு கடந்து, தமிழ்நாட்டின் கடல் மண்ணில் முதல் காலடி எடுத்து வைத்து, தற்காலிகமாகச் சுதந்திரத்தை அனுபவித்த போது, இயக்கத் தோழர்களின் வன்முறை எப்படி இருக்கும் என்கின்ற புதிய பாடம் அறிமுகமாகி, என்ன காரணத்திற்காய் இந்த இயக்கம் தோன்றியது, என்ன காரணத்திற்காய் அந்த இயக்கம் ஆட்டம் கண்டு வலுவிழந்து அழிந்து போனது என்பதை அறிய முன்பு, அது தன்னைத் தானே இந்தியாவில் கலைத்துக் கொள்ளும் காலம் வந்த போது, உயிர் தப்பியதே தலைவரின் கருணை என்று எண்ணி, அந்த இயக்கத்தை விட்டு விலகி, கொழும்பு, மண்ணடி பணப் பரிமாற்றம் மூலம் பணத்தை எடுத்து, முகவரிடம் கொடுத்து, காவல் நாய்கள் போல ஒவ்வொரு நாளும் அங்கே சென்று நாவில் எச்சில் ஊற்றும் நாய் போலக் காத்திருந்து, அது பலனளிக்காத போது வள் என்று கோரமாகக் குரைத்து, அந்தக் குரைப்பில் இது இயக்க நாய் என்கின்ற உண்மை தெரிந்து, பயத்தில் வெளிநாட்டிற்கு அனுப்பி, அதில் நோர்வே வந்து, வந்த பணத்தைப் பிடிப்பதற்காய் வடக்கிற்குச் சென்று, படிப்பதும் வேலை செய்வதுமாய் காலம் தள்ளினாலும், ஆட்சியில் இருந்த இயக்கத்தை அராஜக வாதிகள் என்கின்ற தமது இயக்கத்தின் மாறாக் கொள்கையில் வலுவாகத் திளைத்து, மூர்க்கமாக அதை எதிர்த்து, புற முதுகில் குத்தியதால் தனித்து, இனி அங்கிருப்பது தனக்கு

நிம்மதியைத் தராது என்பதோடு தனது புதுப் பாரியாருக்கு ஒஸ்லோவையே அதிகம் பிடிக்கும் என்கின்ற காரணத்தாலும், சந்திரன் வடக்கின் வசந்தத்தை விட்டுத் தெற்கு நோக்கிப் பயணமானவர்களில் ஒருவன் ஆனான். அத்தால் அருள் வீட்டில் அவன் இன்று பிரசன்னமானான்.

சந்திரனுக்கு மீன் தொழிற்சாலையில் கிழமைக்கு இரண்டு நாட்கள் அல்லது மூன்று நாட்கள் மட்டுமே வேலை. மீதி அரசிடம் இருந்து கிடைக்கும் படியில் வாழ்க்கை ஓடியது. இருந்தும் வருச வருமானத்தைக் காட்டிக் கடனை எடுத்து, வீட்டை ஒஸ்லோவில் வாங்கிக் கொண்டு, வடக்கில் இருந்து தெற்கே வருவது என்கின்ற எண்ணத்தில், வடக்கில் இருந்தபடியே தெற்கில் வீடு வாங்கச் சந்திரப் பிரசன்னம் தெற்கில் திட்டம் இட்டு நடந்தது.

சந்திரனின் கண்மூடித்தனமான மாஜி இயக்கத்தின் மீது இருந்த விசுவாசமும், தற்போது போராடும் இயக்கத்தின் மீது இருக்கும் வெறுப்பும், அவனைத் தனிமைப் படுத்தியது மட்டும் அல்லாது அந்த இயக்கத்திற்கு விசுவாசமானவர்களிடம் பகையையும் உண்டு பண்ணியது. அவர்களும் தன்னைப் போல் இயக்க விசுவாசத்தால் தனக்கு ஏதும் தீங்கு செய்து விடுவார்களோ என்கின்ற பயம் அவனை வடக்கின் வசந்தத்தை விட்டு தெற்கு நோக்கி ஓட வைத்தது. சந்திரனுக்கு எதிரானவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஒரு சாதியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் இயக்கத்திலோ, ஈழ விடுதலையிலோ நேரடியாகப் பங்கு எடுக்காது, உழைப்பதற்காக நாட்டைவிட்டு ஓடி வந்தவர்கள் என்பது அவன் துணிவு. அவர்கள் சந்திரனைத் தாக்கித் தாங்கள் குற்றச் செயல் ஒன்றில் பிடிபடும் அளவிற்குச் சுயநலத்தை விட்டுப் பொது நலத்தில் இறங்க மாட்டார்கள் என்பதைச் சந்திரன் விளங்கிக் கொள்ளாது, தடுதாலிப்பட்டவனாக நோர்வேயின் தலை நகரான ஒஸ்லோவிற்கு வீடு பார்க்க வந்து இருந்தான்.

சந்திரனோடு அதிகம் பிரச்சனை உருவாகுவதற்கு தெற்கில் இருந்து கொடுக்கப்படும் அறிவுரையின்படி வடக்கில் வீடுவீடாகத் தெண்டலுக்குச் சென்றவர்களின் பயமுறுத்தல் சந்திரனைப் போன்ற மாற்று இயக்கத்தினரை கொதி கொள்ள வைத்தது ஒரு முக்கிய காரணம்

ஆகியது. சந்திரன் "என்ரை வீட்டுப் பக்கம் வந்து பாருங்கோ அப்ப தெரியும்." என்று தொழிற்சாலையில் நின்று கத்த, "இவருக்கு இருட்டடி போட்டால்தான் மற்றவையும் அடங்குவினம்." என்று எதிர்க் குரல் வர, சந்திரனைச் சார்ந்தவர்கள் மௌனிகளாக, தனக்கு இருட்டடி விழுந்து விடுமோ என்கின்ற பயம் அவனை முதல் முறை ஆட்கொண்டதும் உண்மை என்பதை அவன் மட்டுமே அறிவான். அப்படி இருந்தும் துணிந்து நின்று சிலரோடு தானும் காசு கொடுக்க மறுத்ததோடு, இரண்டாவது தமிழ்ச் சங்கத்தையும் தொடங்கி வைத்த பின்பு, தொடர்ந்தும் இதற்குள் இருந்து அல்லாடுவது புத்தியில்லை என்பதான எண்ணம் அவனுக்கு மேலும் மேலோங்கியது. அத்தோடு தமிழர்கள் தெற்கு நோக்கிப் புறப்படத் தொடங்கினால் எல்லோரும் ஒட்டு மொத்தமாகப் புறப்படுவார்கள் என்றும் அவன் அறிவுக்கு எட்டியதால், அதற்கு முன்புதான் முந்திக் கொள்வோம் என்கின்ற சுயநலம் உந்த, சந்திரன் தனது திட்டத்தைச் செயற்படுத்தினான்.

அருளுக்கு வேலை இருந்தாலும் மாலை நேரங்களில் சந்திரனை வீடு பார்ப்பதற்கு அழைத்துச் சென்றான். சந்திரன் வீடு வாங்க வந்த நேரம் நல்ல நேரம் என்றுதான் சொல்ல வேண்டும். ஒஸ்லோவில் வீட்டின் விலை பாதாளத்திற்கு விழுந்து, மீண்டும் ஏறத் தொடங்கிய காலம். இருந்தாலும் பல வீடுகள் விற்க முடியாமல் இழுபட்ட வண்ணம் இருந்தன. விற்க முடியாமல் இழுபட்ட வீடு ஒன்றைக் கஸ்ல என்கின்ற இடத்தில் வாங்க வேண்டும் என்று சந்திரன் முடிவு செய்தான். பின்பு அதற்கான படிவத்தில் அதன் சந்தை விலையைவிட ஒரு இலட்சத்தைக் குறைத்து விண்ணப்பித்தான். அந்த விலைக்கு வீட்டின் சொந்தக்காரி தரமுடியாது என்று அடம்பிடித்து ஐம்பது ஆயிரம் கூட்டித்தந்தால் மட்டுமே தருவேன் என்கின்ற முடிவு கூறிய பின்பு, சந்திரன் ஐந்து இலட்சத்திற்கு அந்த வீட்டை வாங்கினான்.

சந்திரனுக்கு அருளின் உதவி தொடர்ந்தும் தேவைப்பட்டது. வீடு வாங்கியதோடு அந்தப் படலம் முடியவில்லை. அதற்கான தளபாடங்கள் வாங்க வேண்டியும் இருந்தது. வடக்கில் அவர்கள் வாங்கிய

தளபாடங்கள் இருந்தாலும் அவற்றை இங்கே கொண்டு வருவதற்குக் கொடுக்கும் பணத்தைவிட அவற்றை விற்றுவிட்டு இங்கே புதிதாக வாங்குவது இலாபம் என்று அவன் எண்ணினான். அத்தால் முக்கியமான தளபாடங்களை வாங்குவதற்கு அருளும் துணைக்குச் சென்றான். சில வேளைகளில் சொரூபனும் அவனுக்குத் துணையாகச் சென்றான். ஒரு நாள் "TS"சும் அவனைக் கூட்டிச் சென்றார்.

போராட்டத்தைப் பற்றிய "TS"சின் கருத்தை ஒரு நாள் அருள் சந்திரனுக்குக் கூறிய போது அவன் அதிர்ந்து போனான். அவன் "TS" தங்களுக்கு எதிரான கருத்தோடு இருப்பார் என்று நினைத்து இருக்கவில்லை. தெரிந்து இருந்தால் அவரிடம் தான் உதவி பெற்றிருக்க மாட்டேன் என்று அருளிடம் கூறினான். அருள் அதற்குத் தங்களோடு "TS" அப்படிப் பழகுவது இல்லை என்றும், சிலர் இந்த விடயங்களைச் சொந்த விஷயமாக எடுத்தக் கொண்டு உறவை முறித்தாலும் "TS"சோ, அல்லது தாங்களோ அதை அப்படி எடுத்துக் கொள்ளவில்லை என்று விளக்கினான்.

அருள் தனது பக்கம் என்பது விளங்கியும் அருள் சொல்வதைச் சந்திரனால் முழுமையாக நம்ப முடியவில்லை. போகப் போக புரிந்து கொள்ளலாம் என்று சமாதானம் அடைந்தான்.

சந்திரனுக்கு ஒஸ்லோத் தமிழர்களைப் பார்க்கப் பரிதாபமாகவும் பயமாகவும் இருந்தது. வடக்கில் மீன் தொழிற்சாலையில் தமிழர்கள் வேலை செய்தார்கள் என்பதை ஈழத்தமிழர்களின் சாதிக் கண்களால் பார்த்தால் அது ஒரு கடை நிலை இழி தொழில் ஆகும். நோர்வேச் சமுதாயத்தில் வடக்கர்கள் என்கின்ற ஒரு நையாண்டி இருந்தாலும், அந்தத் தொழிலை தற்போதைய இளைஞர்கள் விரும்பிச் செய்யாவிட்டாலும், அதுவும் ஒரு உன்னதமான தொழிலாக பொதுவாகக் கணிக்கப் படுகிறது. இங்கும் வடக்கர் என்றால் மீன்பிடிகாரர் என்கின்ற நையாண்டி ஒளிந்து இருப்பது முதலில் சந்திரனுக்கும் ஆச்சரியமாக இருந்தது. அது எந்த அளவிற்கு மற்றைய மனிதரை இழிவுபடுத்துகிறது என்பது தெரியாது. சாதி வெறியாக, அவமானமாகப்

பாவிப்பதைவிட, அதை இவர்கள் பகிடியாகவே பாவிக்கிறார்கள் என்பது பொதுவான நம்பிக்கை. தமிழரின் பார்வையில் வடக்கில் ஒரு விரும்பத் தகாத தொழிலைப் பணத்திற்காக செய்து வந்தது ஒருவித அசௌகரியத்தைச் சந்திரனுக்கு அந்தத் தொழிலைப் பற்றிக் கதைக்கும் போது உண்டு பண்ணுகிறது. ஊரில் இருந்து சந்திரனுக்கு தொலைபேசி வரும் போது என்ன வேலை செய்கிறாய் என்கின்ற கேள்வியும் உடன் பிறக்கும். அப்போது அவன் மீன் தொழிற்சாலையில் வேலை செய்கிறேன் என்று ஒத்துக் கொள்வது இல்லை. தான் ஒரு தொழிற்சாலையில் வேலை செய்வதாகச் சொல்லி அந்தக் கதைக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவான். யாராவது விடுத்து விடுத்துக் கேட்டால்தான் கார்த் தொழிற்சாலையில் வேலை செய்வதாகப் புளுகி இருக்கிறான். ஐரோப்பா என்றால் எங்கும் தொழிற்சாலை என்கின்ற எண்ணம் அவர்களுக்கு. அவனுக்குத் திருமணம் பேசும் போது கார்த் தொழிற்சாலையில் வேலை செய்வதாகச் சொல்லி இருக்கிறார்கள். மனைவி இங்கு வந்து பார்த்துவிட்டுச் சில நாட்கள் உண்ணாமல், கதைக்காமல் விரதம் இருந்து, பின்பு அந்த அகிம்சைப் போராட்டத்தில் அர்த்தம் இல்லை என்பதை விளங்கிக் கொண்டு, அதே கோபத்தில் கலவி செய்த அருமையான கதை ஒன்று உண்டு.

அப்படியாக வடக்கில் இருக்கும் போது தெற்கில் அனேகமானோர் கழுவல் வேலை செய்வதைப் பார்த்த சந்திரனுக்குப் பயமாக இருந்தது. ஒரு சிலர் மாத்திரம்தான் வேற்று வேலைகள் செய்தார்கள். சிலர் பொதுப் போக்குவரத்துச் சாரதிகளாகப் பணிபுரிந்தார்கள். விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரே அலுவலகங்களில் வேலை செய்தார்கள். இந்தியாவில், சில்லியில், அல்லது ஈரானில் இருந்து வந்தவர்கள் தமிழர்களைப் போன்று கழுவல் வேலை செய்வது இல்லை என்றே சொல்ல வேண்டும். அவர்களில் அனேகர் படித்தார்கள். படித்தவர்கள் நல்ல வேலைகளில் இருந்தார்கள்.

தமிழர்களில் எல்லோரும் சோடை போகவில்லை என்பதும் சந்திரனுக்கு விளங்கியது. ஒரு சிலர் வியாபாரம் தொடங்கி நிறையவே சம்பாதித்தார்கள். அப்படியான தொழில் நல்ல தொழில் என்றாலும் தன்னிடம் அதற்கான

முதல் இல்லை என்பது சந்திரனுக்கு வருத்தமாக இருந்தது.

அங்கிருந்து இங்கு வந்து தானும் கழுவல் வேலைதான் செய்ய வேண்டுமா என்கின்ற கேள்வி எழுந்தது. அங்கு இருந்து இங்கு வந்து முதலில் வேலை இல்லை என்று பதிந்தால் ஏதாவது படிப்பதற்கு விடுவார்கள். அப்போது கழுவல் இல்லாத வேலையாக ஒன்றைத் தெரிவு செய்து படிக்க வேண்டும் என்று சந்திரன் எண்ணிக் கொண்டான்.

இப்படியாகச் சந்திரன் வடக்கின் வசந்தத்தை விட்டு இங்கு வந்து ஒஸ்லோ மாநகரின் புதுமைகளை அறிந்து, அங்கு ஒரு வீட்டிற்கும் சொந்தக்காரன் ஆகி, அந்த நகரத்தை நேரம் கிடைத்த போது எல்லாம் அளந்து திரிந்துவிட்டு, இனி அடுத்த கட்டத்திற்கு நகர வேண்டியதுதான் என்கின்ற முடிவுக்கு வந்தவனாய் வடக்கு நோக்கிப் பயணித்தான். அத்தோடு வடக்குத் தமிழர்களின் தெற்கு நோக்கிய படையெடுப்பு ஆரம்பமானது.

அது வடக்கின் சில நகரங்களில் வீடுகளின் மதிப்பைச் செல்லாக் காசாக்கி விற்க முடியாது பெரும் நஸ்ரத்தில் பலரைத் தெண்டாட விட்டது. சிலர் வீடுகளை விற்க முடியாது விட்டது விட்டபடியே தெற்கு நோக்கிப் படை எடுத்தனர். அத்தால் அங்கு வீட்டில் முதலீடு செய்த பணத்தை நஸ்ரக் கணக்கில் எழுதிக் கொள்ளும் காலம் தொடர்ந்தது.

# 9 பல்லுக் கொழுக்கட்டை

கால மாற்றத்தின் வசப்பட்டு சூரியன் முகத்தைத் திருப்பிக் கொள்ள, சூரிய திசை மாறியதால் குளிர் மெல்ல எட்டித் தழுவி விளையாடும் காலம் குதித்து வந்து கும்மியடிக்க… பசுமை தன் மேனியில் எழுதப்படும் முதுமையை எண்ணி நடுநடுங்க… அதையே குளிரின் வன்புணர்வாய் எண்ணிப் பதை பதைக்க, புள்ளினமும், புரிந்தவர்களும் அந்தத் திசையில் பயணிக்க… கொங்கைகள் திமிர்த்து ஆடும் கன்னியாக… ஆலம் குளிரை அலாஸ்காவில் இருந்து பருவகாலம் அள்ளி வந்து… ஆண் ஆதிக்கத்திற்கே அறைகூவலாய் ஆதவனை விரட்டி அடித்து… தன் ஆதிக்கம் நிறுவி… ஆலம் குளிரின் தழுவல் மோகத்தில் உரசலாகி... அதன் உரசலில் தோல் வெடிக்கும் காலம் பின்னால் வரும் என்பதை அது விளையாட்டாகச் சொல்லிச் செல்லும் இயற்கையின் கலை அம்சம் நிறைந்த மாதம் அது. ஆப்பிள், பியர் தொடக்கம் பல வகை சிறிய பழங்களும், ஸ்ரோபரியும் விளைந்து, விளைவிப்பவனையும் வாங்கி உண்பவனையும் மகிழ்வித்து… வரும் குளிர் காலத்திற்கு உங்களைத் தயார் செய்து கொள்ளுங்கள் என்று மேலதிக சத்து வழங்கி... இயற்கை தன் பணியில் இன்னும் இன்னும் அற்புதங்களை நடத்திய வண்ணமே இருக்கிறது என்பது விளங்கியது.

சந்ததி பெருக்குதல் என்னும் இயற்கையின் மீற முடியாக் கட்டளையை ஏற்று எம் முன்னோர் எம்மைப் தம் இச்சையில் படைக்க… நாங்கள் அந்த இயற்கையின் வலையில் விழுந்து எங்கள் இச்சையில் எமது வாரிசைப் படைக்க… அவர்களும் வருங்காலத்தில் அதில் அமிழ்ந்து அதன் தொடரை இடையறாது கடைப்பிடிக்க, யாருக்காக யாரும் பிறப்பதில்லை என்பதை விளங்கியும் விளங்காமலும், மனித இனம் பல்லாயிரம் ஆண்டுகளாக அவனியில் பவனி வர… அவர்களே உருவாக்கிய கலாச்சாரங்கள், கொண்டாட்டங்கள், அவர்கள் மேல் சவாரி செய்கிறது. அது சுமையற்ற சுகமாய் சிலரால் சுகமான

சுமையாய் சிலரால், இம்சையான சுமையாய் சிலரால் என்று உணரப்பட்டாலும், அதைப் பிரிந்து போக முடியாது பணியும் எங்கள் தமிழ் இனத்தின் விருத்தி, நோர்வே நாட்டின் ஒஸ்லோ மாநகரத்தில் நன்கே விருத்தி கண்டது. அது பலருக்கும் வருமானத்தை உண்டு பண்ணியது. பலருக்குச் செலவை உண்டுபண்ணியது.

பிறந்தது தொடக்கம் இறக்கும் வரைக்கும் சடங்காற் பிணைக்கப்பட்ட சமுதாயத்தின் வாரிசுகளான தமிழர்கள். அவர்களின் ஒரு பகுதியான ஒஸ்லோ வாசிகள். தங்கள் இருப்பை எப்போதும் காட்ட வேண்டும் என்கின்ற அடங்கா வெறியோடு, சமுதாயத்தின் கட்டாயம் உந்தலாக, அவர்களின் முழு முயற்சி அதில். இத்தால் இருந்தால், எழுந்தால், நின்றால், தும்மினால் என்று கொண்டாடும் சிலரைப் போல் அல்லாத பலரும் தேவையை ஒட்டி விசிறித் தள்ளிச் சடங்குகளை நடத்தி மகிழ்வார். பின்பு கடன் தொகையை எண்ணி கிரகணத்தில் அகப்பட்ட சந்திரனாகக் கவலை கொள்வார்கள்.

சந்திரன் தன் இருப்பை மற்றவர்களுக்குக் காட்டிக் கொள்ள வேண்டும் என்று பதறி அடிப்பவன் அல்ல... வடக்கில் படித்த பாடம் தெற்கில் அவனை இல்லறத்தில் துறவறம் பூண வைத்தது. இருந்தும் சில சடங்குகளை லதாவின் இரசனைக்கு ஏற்ப விட்டுக் கொடுத்துச் செய்வது விலக்க முடியாத விதி விலக்கு ஆகியது. அத்தால் சந்திரனின் ஏக புத்திரனான அருணிற்கு முன்வாய் மேல் முரசில் இரட்சதரர்களின் கொம்பின் நுண்ணிய பருமனில் முளைத்துத் துருத்திய பற்களைக் கண்டு புளகாங்கிதம் அடைந்த லதாவின் மாற்ற முடியாத முடிவின்படி, பயறு, தேங்காய், சர்க்கரை, அரிசி மா போன்ற அரிய பதார்த்தங்களை ஒஸ்லோவில் உள்ள பிரபலமான தமிழ் கடையில், அதன் உண்மையான பெறுமதியின் இரண்டு மடங்கு பணத்தைப் பார்த்தும் பாராமலும் கொடுத்து, கொள்முதல் செய்து, லதாவிடம் அதை அர்ப்பணித்து, தனது கடனைச் செய்து முடித்த திருப்தியோடு... மற்றும் வேலைகள் எசமானியை மட்டுமே சாரும் என்பதாகச் சோபாவில் இருந்து "ரீவி திறி" என்னும் அலைவரிசையில் மறு காட்சியாகப் போய் கொண்டு இருந்த "பிக்பிறதர்"

என்னும் அந்தரங்கத்தை அரங்கில் காட்டும் நிகழ்ச்சியை இரசித்துக் கொண்டு இருந்தான்.

சாப்பாடு சமைக்க முடியாது என்று திட்டவட்டமாய் லதா கூறியதால் அதற்குக் கடையில் சந்திரன் ஒழுங்கு செய்து இருந்தான். இருந்தாலும் கொழுக்கட்டை கடையில் வாங்க முடியாத கட்டத்தில் அவிப்பதற்குத் தனது அருமைத் தோழியான சொரூபாவை அழைத்து இருந்தாள். கொழுக்கட்டை விஷயத்தில் சந்திரனை நம்பித் தனிமையில் அல்லாட முடியாது என்பதோடு சொரூபா நின்றால் மற்றைய தேவைகளுக்கும் அவள் சுறு சுறுப்பாய் உதவுவாள் என்கின்ற எண்ணம் லதாவிடம் இருந்தது. சமையல் அறையில் கதைத்துக் கதைத்து இருவரும் பல்லுக் கொழுக்கட்டை அவித்தார்கள். அந்தக் கொழுக்கட்டைகளுக்குப் பல்லு வைப்பதற்காகத் தேங்காய் சொட்டைச் சிறிது சிறிதாக அரிந்து பல்லுப் போலச் செய்து வைத்திருந்தார்கள். பின்பு மாவைப் பிடித்து உள்ளுடன் வைத்துக் கொழுக்கட்டை பிடித்து அதில் பல்லைச் செருகி பௌத்திரமாக ஆவியில் அவித்து அவித்து ஆற வைத்தார்கள்.

வீட்டில் மனைவி இல்லாத வெறுமையில் பிள்ளையையும் கூட்டிக் கொண்டு அருள் சந்திரன் வீட்டிற்கு வந்தான். அருளின் அழைப்பு மணி ஒலித்ததும் சந்திரன் "பிக்பிறதரில்" இருந்த அலைவரிசையை வேறு அலைவரிசைக்கு மாற்றிவிட்டு நல்ல பிள்ளையாகச் சென்று கதவைத் திறந்தான். அருள் உள்ளே வந்ததும்,

"அருள் வந்திருக்கிறார்." என்று சமையல் அறையைப் பார்த்துக் கத்தி விட்டு அருளைப் பார்த்து அசடு வழிந்தான். இருவரும் சோபாவில் சென்று அமர அருளின் மகள் தாயைத் தேடிச் சமையலறைக்குச் சென்றாள்.

"நொஸ்க் கடையளில மலிவா போடேக்க சாமான் வாங்கி வைச்சாச் சாப்பாட்டுச் செலவில நியாயமா மிச்சம் பிடிக்கலாம். ஆனா... இந்தத் தமிழ்ச் சாப்பாட்டில மலிவு விற்பனையும் வாறதில்லை. விலையும் இறங்கிறேல்லை. இப்பிடி வித்தாங்கள் எண்டாத் தமிழ் மரக்கறிய விட்டிட்டு இங்கிலீஸ் மரக்கறிக்கு மாற வேண்டியதுதான்." என்றான் சந்திரன்.

"தமிழ் மரக்கறி இங்கிலீஸ் மரக்கறி எண்டு எல்லாம் இப்ப யார் பார்க்கினம்? ரேஸ்ற்றா சமைச்சா எது எண்டாலும் சாப்பிடலாம். முருங்கைக்காய், வாழைப் பொத்தி மாதிரிச் சில சாமான்கள் எப்பிடியும் அவங்களிட்டைத்தான் வாங்க வேண்டி இருக்குது. மற்றதுகளை வேணும் எண்டா வியட்நாம் கடையிலும் வாங்கலாம். அவங்கள் மலிவா விக்கிறாங்கள்." என்றான் அருள்.

"உண்மைதான். ஆனா... எல்லாத் தமிழ் சாமான்களும் அவங்களிட்டை எடுக்க முடியாது. எப்பிடியும் இவங்களிட்டைத்தான் போக வேணும்." என்று சந்திரன் கூறவும் அழைப்பு மணி ஒலிக்கவும் சரியாக இருந்தது. சந்திரன் எழுந்து சென்றான். சொல்லி வைத்தது போல் பலரும் படையாகக் கோலுக்குள் வந்தார்கள். அதில் "TS" குடும்பம், சிவா குடும்பம், நிமலன், சண்முகன், றூபன், சொரூபன் என எல்லோரும் வந்ததில் சோபாவில் இடப் பற்றாக் குறை வந்துவிட ஏற்கனவே எடுத்து வைத்திருந்த கதிரைகளைக் கொண்டு வந்து சந்திரன் போட்டான்.

"பிறகு... நிமலன் உன்ரை வாழ்க்கை எப்பிடிப் போகுது? எங்க இப்ப வேலை செய்கிறா?" என்றான் சண்முகன்.

"யுனிஸ்துாரபிறாண்டில வேலை செய்கிறன். பருவாய் இல்லைப் போகுது எண்டுதான் சொல்ல விருப்பம்." என்றான் நிமலன்.

"என்னடா நீ இப்படிச் சொல்லுகிறாய்? நீ படிச்சு வேலை செய்கிறது கெட்டித்தனம்தான். உங்க நிறைய எஞ்சினியருக்குப் படிச்சவையும் கழுவுகிற வேலைதான் செய்கினம். உனக்கு அதிஸ்ரம் எண்டு சொல்ல வேணும்." என்றான் சண்முகன்.

"உண்மைதான். அதோடை எங்களுக்கு எக்ஸ்பீரியன்ஸ் வாற மாதிரி நாங்களும் ஏதாவது புறஜெக்ற்றை எடுத்துச் செய்து, அதை ஆதாரமாய் காட்ட வேணும். அப்ப ஓரளவுக்கு வேலை தருவாங்கள்." என்றான் நிமலன்.

"அவங்கள் பொதுவாப் பெயரைப் பார்த்த உடனேயே அப்பிளிக்கேசனைத் துாக்கிக் கீழ போட்டிடுவாங்களாம். சில சனம் நுாற்றுக்கணக்கா அப்பிளை பண்ணிப் பார்த்திட்டு அலுத்துப் போய்த்தானே கழுவல் வேலை

செய்து கொண்டு திரியுதுகள். சிலர் பெயரை மாத்தி வேலைக்கு உள்ள புகுந்தும் இருக்கினம். எண்டாலும் எங்கடை தமிழ்ச்சனம் பெயரை மாத்தி வேலைக்கு உள்ள சேருகிற அளவில இல்லை." என்றான் சண்முகன்.

"அது சரி... நீ தானே கடை வைச்சு இருக்கிறாய். உனக்கு ஏன் உவ்வளவுக்கு கொந்தோர் வேலை பற்றின கரிசனை?" என்றான் சிவா.

"இல்லைச் சிவா. எனக்கு உதிலை என்ன அக்கறை. ஆனா... என்ரை கடைக்கு வந்து ஒப்பாரி வைக்கிறவை இருக்கினம். ஒவ்வொரு இன்ரவீக்குப் போயிட்டும் வந்து ஒப்புச் சொல்லிப் போட்டுப் போகிறவை இருக்கினம். வேலை எடுக்கிறது எண்டா யாராவது உள்ளுக்க இருக்க வேணும். கதைச்சுச் சேர்த்துவிட வேணும். மற்றது எல்லாம் சும்மா இங்கையும் கண்துடைப்பே. அதுதான் இங்கையும் நடக்குது எண்டது உண்மை. அப்பிடித்தான் இப்பிடியான வேலைக்கு முயற்சி செய்கிறவை என்னோடை கதைப்பினம். அதில உண்மை இருக்குது எண்டு எனக்கும் தெரியும். ஆனா... எல்லாரும் அப்பிடி இல்லை எண்டதையும் ஞாபகம் வைச்சு இருக்க வேணும்." என்றான் சண்முகன்.

"அதை யார் பொய் எண்டு சொல்ல முடியும்? பலருக்கும் உந்த அனுபவம் இருக்கும். கொந்தோர் வேலை என்ன எல்லா வேலையிலும் உதுதான் கதை. சில இடங்களில திறமையானவங்களுக்கு நேர்மையான முறையில வேலையும் கிடைச்சு இருக்குது. வேலைக்குத் திறமை மாத்திரம் இல்லை, சில வேளை அதிஸ்ரமும் வேணும்." என்றார் "TS".

"வேலை இல்லாட்டியும் இங்க காசு தருவாங்கள். அது ஒரு வசதிதானே?" என்றான் சண்முகன்.

"அதை எடுத்து என்ன நாக்கா வழிக்கிறது?" என்றான் சிவா.

"ஒவ்வொரு பெயரா வைச்சு வைச்சு நாட்டுப் பிரச்சனை நீண்டு கொண்டு போகிறதைப் பார்த்தா அருணின்ரை பேரப்பிள்ளையும் இந்த நாட்டிலதான் இருப்பான் எண்டதில எந்தச் சந்தேகமும் இல்லை." என்றான் அருள். கதை

திசை மாறியது. ஈழத் தமிழர்களால் திரும்பத் திரும்ப அலுக்காமல் இந்தப் பிரச்சனை கதைக்கப்படுவது பற்றி மற்றவர்களால் விளங்கிக் கொள்ள முடியாது. ஏன் என்றால் ஈழத் தமிழர்களின் சொந்த வலி அவர்களுக்கு மட்டுமே இதயத்தை அடிக்க விடாது அழுத்துவது விளங்கும். மற்றவர்களுக்கு அது உதட்டில் இருந்து உதிரும் சொற்களே என்கின்ற எண்ணம் அருளிடம் இருந்தது.

"நாட்டில பிரச்சனை தீர்ந்தாலும் அருணின்ரை பேரன் இங்கதான் இருப்பான். வெளிநாட்டை வாறது அனேகமாக ஒற்றை வழிப் பாதை மாதிரி. வந்தவை பொதுவாத் திரும்பிப் போனதாகச் சரித்திரம் இல்லை. அப்படி யாராவது போனா அவனுக்கு ஏதோ ஒரு பயித்தியமாய் இருக்கும்." என்றான் சிவா.

"யாருக்குப் பயித்தியம் இல்லைச் சிவா. எல்லாரும் ஏதோ ஒண்டில பயித்தியமாய் இருப்பினம். தன்னுடைய பயித்தியத்தை மற்றைய பயித்தியங்களிட்டை இருந்து மறைக்கிறதில தங்கடை சுயத்தைத் திரிபுபடுத்திக் காட்டுகிற வித்தை இருக்குது. ஆகப் பயித்தியங்களிட்டைப் பயித்தியங்கள் பயித்தியம் பற்றிய அறிவு இல்லாமல் பழகுகிறம். அந்தப் பயித்தியங்களில சிலரைப் பெரிய மனிசரா நினைக்கிறம். சிலரை அதுக்கு மாறா நினைப்பம். கடைசி வரையும் தங்கடை பயித்தியத்தை மறைக்கத் தெரிந்தவர்கள் பயித்தியங்களாலேயே பாராட்டு பெறுவார்கள். தங்களை இடையில வெளிச்சம் போட்டுக் காட்டுகிறவையும் இருப்பினம். வெளிநாட்டிற்கு வந்து பிறகு நாட்டிற்குத் திரும்பிப் போகக் கூடாது எண்டு நினைக்கிற எங்களிட்டைப் பணப் பயித்தியம். சொகுசான வாழ்விற்கான பித்தம் அது. அதுக்காக ஊரில கிடைக்கக்கூடிய அற்புதமான வாழ்வைப் பலியாக் கொடுக்கிறம்." என்றார் "TS" திடீரெனப் பெற்ற ஞானத்தோடு.

""TS" அண்ணை சொல்லுகிற குழப்பலும் உண்மை எண்டாலும் தமிழர் வித்தியாசமாகவே இருப்பம். யூதர்கள் நாடு கிடைச்ச உடன தங்கடை நாட்டில போய் குடியேறின மாதிரி நாங்கள் போய்க் குடியேற மாட்டம்.

நாங்கள் வெளிநாடு போக வேணும் எண்டு பிரச்சனை தொடங்கினதா? இல்லப் பிரச்சனை தொடங்கினதால வெளிநாடு வந்தமா எண்டுகிறதையே எங்கடை வெளிநாட்டு மோகம் இப்ப கேள்வி ஆக்கி இருக்குது.' என்றான் சிவா.

'பிரச்சனை முடிஞ்சதும் நாங்கள் போயிடுவம். கனபேர் அப்பிடித்தான் கதைக்கினம்." என்றான் றூபன்.

"சந்திரன் சூரியன் ஆகலாம். மேற்கில் சூரியன் புதிதாக உதிக்கலாம். மேற்கு உலகிற்கு வந்தவங்கள் கீழைத் தேசத்திற்கு திரும்பிப் போவது என்றும் கிடையாது. அதில மாற்றம் வந்தாத்தான் றூபன் உன்னுடைய ஆரூடம் சரியாய் இருக்கும். யூதரோடை எங்களை, தமிழ்நாட்டுத் தமிழரை ஒரு நாளும் ஒப்பிடக் கூடாது. அவங்களுக்கும் எங்களுக்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்குது. ஒரு இனம் எப்பிடி இருக்கக் கூடாது எண்டு எடுத்துக் கொள்ள வேணும் எண்டா அது தமிழ் இனமாகத்தான் இருக்கும். வீரமாய் தொடங்கி மான ரோசம் அற்ற மலட்டு இனமாய் முடங்கிக் கிடக்கிறது தமிழ் இனம் மட்டும்தான்." என்றான் சிவா வெறுப்பாக.

"தமிழ்நாட்டில் தமிழைக் கொல்வது தெரியாது தமிழைக் கொல்லும் ஒரு தமிழ் இனம். ஈழத்தில ஒற்றுமை இல்லாமல் சுய நலத்தோடை அவசரப் புத்தியில அழிகிற ஒரு தமிழினம். ஒட்டுமொத்தமாய் பார்த்தால் இனம் அழிந்தாலும் சுயநலம் வாழ்ந்தால் போதும் என்கின்ற ஆன்ம சுத்தியில்லாத ஒரு இனம் நாங்கள். இப்படி இருக்கிற இனத்துக்கு எப்பிடி ஒரு நல்ல எதிர் காலம் வரும்?" என்றான் அருள்.

"என்ன எல்லாரும் இண்டைக்கு எங்கடை இனத்தில வெறுப்பாய் இருக்கிறியள்?" என்றாள் புவனலோசினி.

"அவை எப்ப இனத்தில பற்றாய் இருந்தவை இண்டைக்கு வெறுப்பாய் இருக்கிறதுக்கு? இருந்திருந்தால் ஏன் நாங்கள் இப்பிடி அழிகிறம்?" என்றாள் மனோகரி.

"பற்று இருந்து என்ன பற்று இல்லாமல் என்ன? ஆயுதம் யாற்றை கையில பலமாய் இருக்குதோ அவை தானே இறைவர்கள். மற்றவையின்ரை விதியை நிர்ணயிக்கிறதும் அவை தானே? எங்கடை விதியை, எங்கடை நாட்டின்ரை

விதியை ஒட்டுமொத்தமாய் அவையிட்டைத் தானே ஒப்படைச்சு இருக்கிறம். இனி கண்காணாத கடவுள்தான் எங்களைக் காப்பத்த வேணும் எண்டா? கடவுள்தான் எங்கடை இனத்தைக் காப்பாத்த வேணும் எண்டு நான் சொல்ல இல்லை... தந்தை செல்வா சொன்னவராம். அவர் சொன்னதை இன்னும் நூற்றுக் கணக்கான வருசத்துக்குச் சொல்லிக் கொண்டு இருக்கலாம். அதில மாற்றம் வந்தா அதிசயம்தான்." என்றான் இதுவரை அமைதியாக இருந்த நிமலன்.

"கவலைப்படாதேங்கோ. எங்கடை இனத்திற்கு ஒரு தனி நாடு கிடைக்கும். பெடியள் இப்ப அப்பிடித்தானே அடிக்கிறாங்கள். அவங்கடை கை வரவர ஓங்கிக் கொண்டுதானே போகுது. வவுனதீவில அடிக்கத் தொடங்கிப் பெடியளிட்டை எல்லாத்தையும் இப்ப குடுத்திட்டினம் தானே? இப்படியே நிறைய வெற்றி வரும் எண்டு நான் நம்புகிறன். ஏ நயினும் தொடங்கி இருக்கினம். வவுனதீவு மாதிரிதான் இதுவும் முடியும். கொஞ்சம் கொஞ்சமா இடத்தைப் பிடிச்சு நாங்களும் யூதர் மாதிரி நாட்டைக் கட்டி எழுப்புவம். நாங்கள் போராடாட்டியும் பருவாய் இல்லை. போராடுறவங்களில நம்பிக்கையா இருக்க வேணும். எங்களால தமிழருக்கு ஒரு நாடு உருவானால் சரி. இல்லாட்டி உலகத்தில தமிழினம் மற்ற இனங்களுக்க காலப் போக்கில கரைஞ்சு போயிடும். தமிழ்நாடு எண்ட பெயர் விலாசம் மாதிரி மாத்திரம் இருக்கலாம்." என்றான் றூபன்.

"நாங்கள் யூதர் இல்லை. யூதர் நல்ல உதாரணமும் இல்லை. எல்லாச் சந்தர்ப்பங்களையும் இழந்து இராவணன் மாதிரி களத்தில நிக்கிறம். நீண்ட காலத்தில இன்று போய் நாளைவா என்று சொல்லுகிற நிலை வந்தால்? காற்றுள்ள போது தூற்றிக்கொள் எண்டுகிறதை வம்புக்குத் தட்டிக் கழிச்சு இருக்கிறம். மதியூகத்தையும் மந்திர ஆலோசனைகளையும் நடைமுறைப் படுத்துகிறதைப் பொறுத்து இருந்துதான் பார்க்க வேணும். வெற்றி வந்ததும் வீடியோவைக் காட்டிப் பிரச்சாரம் செய்கிறதும், காசு சேர்க்கிறதும், அதை ஆயுதம் ஆக்கித் தொடர்ந்தும் அடிபட்டு அழிவை உண்டு பண்ணுகிறதும் என்னத்தில போய் முடியும்? வன்முறையை பாவிக்கிறது பிரச்சனையை

ஒரு முடிவுக்குக் கொண்டு வாரத்துக்கு. பிரச்சனையை ஒரு முடிவுக்குக் கொண்டு வாரத்துக்கு விருப்பமே இல்லாமல் வன்முறையை மட்டும் பாவிச்சுக் கொண்டு இருந்தால் அதுக்கு என்ன அர்த்தம்? எனக்கு விளங்க இல்லை. "TS" அண்ணை உங்களுக்கு விளங்குதா?" என்றான் சிவா.

"நாங்கள் சிந்திக்கிற அளவுக்கு அவங்கள் சிந்திக்க மாட்டாங்களே? அவங்கள் நிச்சயமாச் சிந்திப்பாங்கள். நல்ல முடிவு வரும் சிவா... பொறுமையா இருக்கோணும்." என்றார் "TS".

"அந்தச் சிந்திப்பு, அரசியல் ஆட்டம், அதிகார வேட்கை எல்லாம் எங்களுக்கு நல்ல நேரடி அனுபவம். இருந்தும் உங்கடை நம்பிக்கை நிறைவேறினால் எல்லாருக்கும் சந்தோஷம்தான்." என்றான் சிவா.

இடையில் சந்திரன் எழுந்து சென்று அருணைப் பிடித்து, அவனது கடும் ஆட்சேபத்திற்கு மதிப்பு அளிக்காது, நீராட்டி, உடுப்பு மாற்றிக் கோலிற்கு தூக்கி வந்தான். அதைப் பார்த்த சிவா,

"ஆ… கதாநாயகன் வந்திட்டார்." என்றான். இவ்வளவு நேரமும் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் இப்போது தாங்களும் அருணைச் சுற்றி அவனை விடுப்பு கேட்பதும் நோண்டுவதுமாய் ஆக்கினை செய்தார்கள். எல்லோரும் தன்னை ஆக்கினை செய்வதாக உணர்ந்த அருண் சிணுங்கத் தொடங்கினான். மனோகரி அவனைத் தூக்கிக் கொண்டு சமையல் அறைக்குச் சென்றாள். கொழுக்கட்டை தயார் என்றால் அலுவலை முடிக்கலாம் தானே என்கின்ற எண்ணம் அவளிடம்.

சிறிது நேரத்தில் பெண்களும் அருணும் சமையல் அறையில் இருந்து வெளியே வந்தார்கள். சந்திரன் மேசைக்குக் கம்பளம் விரித்து, சுத்தமான வெள்ளைத் துணி அதற்கு மேல் விரித்து இருந்தான். அதைவிட இன்னும் ஒரு வெள்ளைத் துணி மேசையில் இருந்தது. தனது வீடியோக் கமராவையும், ஸ்ரில் கமராவையும் றூபனிடமும், நிமலனிடமும் கொடுத்தான். என்ன நடக்கிறது என்பதை ஆவணப்படுத்துவது முக்கியமாகக் கருதப்படும் காலம் இது. அப்பா அம்மா செய்யாததை எல்லாம் தாங்கள் செய்ததாகப் பிள்ளைகளுக்குக் காட்ட

வேண்டும் என்கின்ற அவதி. அப்போது மனிதர்கள் இருந்தால் காட்டலாம்.

அருணை லதா மேசையில் வைத்துப் பிடித்துக் கொள்ள மனோ அவருக்கு முக்காடு போடுவது போல வெள்ளைத் துணியால் போர்க்கக் கொழுக்கட்டையை அவன்மேல் அபிசேகமாக்க, அது உருண்டு வெள்ளைத் துணியில் சரணாகியது. அதை மீண்டும் கொண்டு வந்த எவர்சில்வர் பாத்திரத்தில் பொறுக்கி அடுக்கினார்கள். அருணுக்கு சிறு துண்டுக் கொழுக்கட்டையைப் பிய்த்து ஊட்ட அவன் அதை அருவருப்போடு துப்பி விட்டான். போற்றில் சாப்பாட்டின் உருசியைவிட அவனுக்கு எதுவும் வித்தியாசமாகப் பிடிக்காது என்று லதா அதற்கு விளக்கம் கொடுத்தாள். அதற்காகக் கொழுக்கட்டையை அரைத்தா கொடுக்க முடியும் என்று சிவா கேட்டான்.

# 10 நகரத்தின் ஆபத்து

வேலை முடிந்து வீட்டிற்குச் சரிஸ்கா வந்தபோது அந்த அலைபேசி அழைப்புச் சொரூபாவிடம் இருந்து வந்தது. சொரூபாவிடம் இருந்து அலைபேசி அழைப்பு வந்தால் அது ஏதும் சாப்பாட்டு விஷயமாக இருக்கும் என்பது சரிஸ்காவின் ஊகம். சொரூபா புவனலோசினிக்கு அலைபேசி எடுத்துச் சாப்பாட்டு விஷயங்கள் பற்றி அலசிவிட்டு அருளில் அதைப் பரிசோதிப்பது அனைவருக்கும் தெரிந்த விஷயம். இன்றும் அப்படியே ஏதோ பரிசோதனையாக இருக்க வேண்டும். பாவம் அருள் அண்ணா மாட்டிக் கொண்டார் என்கின்ற இரக்கத்தோடு சரிஸ்கா அலைபேசியை எடுத்தாள்.

சரிஸ்காவின் ஊகம் பிழைத்துப் போய்விட்டது. அடுத்த முனையில் குரல் சங்கீதமாய் வரவில்லை. உடைந்த அழு குரலாக பதற்றத்தோடு வந்தது. சரிஸ்கா இதை எதிர்பார்க்கவில்லை. அவள் அதைக் கேட்டு அதிர்ந்து போனாள். பின்பு தன்னைச் சமாளித்துக் கொண்டு "என்ன அக்கா? என்ன நடந்தது? ஏன் அழுகிறியள்? அழாமல் விஷயத்தைச் சொல்லுங்கோ." என்று அவசரப்பட்டாள். மறு முனையில் சொரூபா தொடர்ந்தும் அழுவது கேட்டது. சரிஸ்காவிற்கு அது பெரும் சங்கடமாய் இருந்தது. என்ன செய்வது என்பது விளங்காமல் திகைத்துப் போய் அலைபேசியைக் காதில் வைத்த வண்ணம் பொறுமையாக நின்றாள். சிறிது நேரத்தில் தனது அழுகையைக் கைவிட்ட சொரூபா,

"அவர் காலமை வேலைக்குப் போகேக்க அக்சிடன் ஆகீட்டுது. அவரை உலவோல் கொஸ்பிற்றல்ல வைச்சிருக்கினம். அப்பா அம்மா வந்தால் உடன விஷயத்தைச் சொல்லுங்க சரிஸ்கா. எனக்கு ஒரே பயமாயும் பதட்டமாயும் இருக்குது. தயவு செய்து எனக்குப் போன் எடுக்கச் சொல்லுங்க... நான் இங்க கொஸ்பிற்றலில நிக்கிறன். நான் போன் அடிச்சுச் சொல்லுகிறன். நீ போய் வாணகாகனில அகிலாவை எடுத்தருவியா?" என்றாள்.

"பிரச்சனை இல்லை அக்கா. நீங்கள் வாணகாகனுக்கு போன் பண்ணுங்கோ. நான் போய் கூட்டிக் கொண்டு

வாறன். அவள் இங்க இரவு தங்கட்டும். நாங்கள் அவளை வைச்சிருக்கிறம். நீங்கள் பதட்டப் படாமல் இருங்கோ. அப்பாவுக்கும், அம்மாவுக்கும் போன் பண்ணிச் சொல்லுகிறன். இயலும் எண்டால் அகலிகாவையும் கூட்டிக் கொண்டு கொஸ்பிற்றல் வாறம்." என்றாள் சரிஸ்கா.

"அவர் இருக்கிற நிலையில அவள் பார்க்கிறது சரியோ தெரியாது. எதுக்கும் கூட்டிக் கொண்டு வாங்கோ." என்று கூறிவிட்டுச் சொரூபா அலைபேசியைத் துண்டித்துக் கொண்டாள்.

அருள் அண்ணா இப்படி மாட்டிக் கொள்வார் என்று சரிஸ்கா எதிர்பார்க்கவில்லை. யாரது கொண்டாட்டத்திற்குச் சரிஸ்கா போகாவிட்டாலும் இதற்குப் போக வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. அருள் அண்ணாவுக்கு ஏன் இப்படி நடக்க வேண்டும் என்று அவளுக்கு விளங்கவில்லை. தனக்கே இப்படிக் கவலையாக இருக்கிறது என்றால் சொரூபா அக்கா எவ்வளவு துடித்துப் போயிருப்பாள் என்பதை சரிஸ்காவால் கற்பனை செய்ய முடியவில்லை.

சரிஸ்காவிற்குக் கைகால் விறைத்தது போன்று இருந்தது. அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று சிறிது நேரம் விளங்கவில்லை. அதனால் அவள் என்ன செய்வது என்பது விளங்காது சோபாவில் திகைத்துப் போய் இருந்தாள். பின்பு சிறிது சிறிதாகச் சுயத்தைப் பெற்ற சரிஸ்கா அவசரமாக அப்பாவை அலைபேசியில் அழைத்து விபரத்தைச் சொன்னாள். அப்பா அதைக் கேட்டு அதிர்ந்து போனதை அவளால் உணர முடிந்தது. தான் விரைவாக வருவதாய் சரிஸ்காவிடம் அவர் கூறினார்.

சரிஸ்கா அவசரமாகப் புறப்பட்டு குழந்தைகள் பராமரிப்பு நிலையத்திற்குச் சென்றாள். அகலிகாவை அழைத்து வந்தால் அப்பாவுடன் தானும் வைத்தியசாலைக்குச் சென்று அருள் அண்ணாவைப் பார்த்து வரலாம் என்று எண்ணினாள். சரிஸ்காவிற்குச் சொரூபாவின் நினைவு மீண்டும் வந்தது. அவளை நினைக்கப் பாவமாய் இருந்தது.

அருளின் கார் அடிபட்ட செய்தி ஊர் எல்லாம் பரவிவிட்டாலும் அன்று உடனடியாகப் பலராலும் வைத்தியசாலைக்கு வர முடியவில்லை. அவரவர் வேலை

அவரவருக்கு. அதுவே ஐரோப்பாவில் உயிரினும் முக்கியமாக இருக்கிறது. நாளை சமாளித்துச் செல்வோம் என்று பலரும் அன்று வரவில்லை. புவனலோசினிக்குச் சமைப்பதற்கு நேரம் இருக்கவில்லை. வீட்டிற்கு வரும் போது "TS"சை இரண்டு கொத்துரொட்டி கடையில் வாங்கிவரச் சொல்லி இருந்தாள். சொரூபா சாப்பிடாமல் இருப்பாள். கொடுத்து விட்டு வருவோம். நாளைக்கு வேண்டும் என்றால் சமைத்துக் கொண்டு செல்லலாம் என்பது அவளது எண்ணம்.

அவசரமாகச் சாப்பிட்டு அகலிகாவுக்கும் சாப்பாடு கொடுத்து வெளிக்கிட ஐந்து மணியாகிவிட்டது. அதற்கு மேல் தாமதிக்க முடியாத அவசரத்தில் வைத்தியசாலைக்குப் புறப்பட்டனர். சரிஸ்காவும் புறப்பட்டு வந்ததைப் பார்த்த புவனலோசினியின் முகம் மழைக் காலத்து முகில்கள் தொலைந்து திடீரெனத் தோன்றிய ஆதவனாய் பிரகாசித்தது. "TS"சும் அதை எதிர் பார்த்து இருக்கவில்லை. என்றாலும் அதை அவர் காட்டிக் கொள்ளவும் விரும்பவில்லை.

காரை நிறுத்திவிட்டுச் சண்முகன் ‘கிவி’ கடையருகில் நிற்பதாய் கூறியதால் ‘கிவி’ கடைக்கு எல்லோரும் நடந்து சென்றார்கள். அங்கே சண்முகனும், ரூபனும் மலரும் நின்றார்கள். சரிஸ்காவைக் காண்பது அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. சண்முகன் அதை மனதிற்குள் வைத்துக் கொள்ளவும் விரும்பவில்லை.

"அட சரிஸ்காவும் வாறியே? ம்... இண்டைக்கு மழை பெய்தாலும் பெய்யும்." என்றான்.

"மழை பெய்யாது சினோத்தான் இங்க கொட்டும். சும்மா இருக்கிறியளா சண்முகம் அண்ணை. அங்க அருள் அண்ணை அடிபட்டுக் கிடக்கிறார்... நீங்கள் பொழுது போக்கிற்கு வெதர் சொல்லிக் கொண்டு நிக்கிறியள்?" என்றாள் சரிஸ்கா.

"சரிஸ்கா... நீயா இந்தப் போடு போடுகிறாய்? நீ அமைதியான பிள்ளை எண்டு நினைச்சன்." என்றான் சண்முகன்.

"அமைதியான பிள்ளை எண்டா நீங்கள் விடுகிற நக்கல்களை எல்லாம் கேட்டுக் கொண்டு இருக்க வேணுமா? அதெல்லாம் எங்களுக்குச் சரி வராது." என்றாள் சரிஸ்கா.

"நொஸ்க் மாட்டின்ரை பாலைக் குடிச்சாலே துணிஞ்சு பேசத்தான் சொல்லும். நீ பேசுகிறதும் நோர்வே தந்த தயிரியம்தான். உண்மையாகவே நீ இப்பிடிப் பேசுகிறதுதான் எங்களுக்குப் பிடிக்கும் சரிஸ்கா. இந்தச் சரிஸ்காவையே பார்க்க வேணும் எண்டு நான் கன காலம் வெயிற் பண்ணிக் கொண்டு இருந்தன் மகளே." என்றான் சண்முகன்.

"TS"சும் இப்படிப் பேசும் சரிஸ்காவைப் பார்க்கக் காத்திருந்தார். அவருக்கும் அது புளகாங்கிதமாக இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாது அமுசடக்கமாக நின்றார்.

"சரி நாங்கள் சரிஸ்காவோடை பிறகு ஆறுதலாச் சண்டை பிடிப்பம். இப்ப அருள் அண்ணையைப் போய் பார்ப்பமே?" என்றான் றூபன்.

"அட கொஞ்சம் பொறு. ஒரு சின்ன விசயம் கதைச்சுப் போட்டுப் போவம். அந்த ‘உலக வர்த்தகமையத்துக்குள்ள’ வைச்ச குண்டில உலகமே ஆடிப் போய் இருக்குது. சிறிலங்காவுக்கு அதால சரியான பொருளாதார வீழ்ச்சி வருமாம். பெடியள் நல்ல வேலைதான் செய்து இருக்கிறாங்கள். இப்பிடி நாலு இடத்தில ஒழுங்கா வைச்சால்தான் அவங்கள் திருந்துவாங்கள். இல்லாட்டி தொடர்ந்தும் வாலாட்டிக் கொண்டுதான் இருப்பாங்கள்." என்றான் சண்முகன்.

"ஓம்... நல்ல அடிதான். இப்படிக் கொழும்பில செய்வாங்கள் எண்டு நான் எதிர்பார்க்க இல்லை. அம்மா நல்லா ஆடிப் போனா. பெடியளிட்டையே இப்பிடித் தோத்துப் போனா... இனி அதை நிவர்த்தி செய்ய அயல் நாடுகளின்ரை ஆசீர்வாதத்திற்கு நாயா அலைவா. அலையட்டும். அதுக்கு இடையில பெடியள் அடிச்சு அடிச்சுக் கொஞ்சம் கொஞ்சமா இடங்களைப் பிடிக்கட்டும்." என்றான் றூபன்.

"உங்களுக்கு விளங்குது இல்லை றூபன் அண்ணா. கொழும்பில குண்டு வைச்சதால சிங்களவர் மேல அனுதாபமாயும் எங்களை ரெரோறிஸ்ற் போலவும் இவங்கள் பார்க்கிறாங்கள். அது இவங்களோடை கதைக்கேக்க, பழகேக்க தெரியும். இவங்கள் குண்டு வைக்கிறது... அதால அப்பாவிச் சனங்கள் சாகிறது மாதிரியான வேலையை எல்லாம் நியாயமான போராட்டமாய் ஒரு நாளும் ஏற்றுக் கொள்ள மாட்டாங்கள். ஆதரவும் தரமாட்டாங்கள். இவங்களைப் பொறுத்தமட்டில கொழும்பில நடந்தது பயங்கரவாதத் தாக்குதல் மட்டும்தான். பாதிக்கப்பட்டது சிங்கள அப்பாவிப் பொதுமக்கள். அதால அவங்களுக்கு நிறைய அனுதாபம். அதுவும் படத்தைப் போட்டுப் போட்டுக் காட்ட தமிழர் எண்டாக் கொலைகாரர் எண்டுதான் நினைப்பாங்கள்." என்றாள் சரிஸ்கா.

"நீ சொல்லுகிறதைச் சரி எண்டே வைச்சுக் கொள். ஆனா... எங்கடை சனத்தைக் கொல்லேக்க இவங்கள் யாராவது மறந்தும் வாய் திறக்கிறவங்களா எண்டும் யோசிக்க வேணும். இது எல்லாம் மேற்குலக அரசியல். பிள்ளையையும் கிள்ளி தொட்டிலையும் ஆட்டுவாங்கள். இலங்கை அரசை எப்பவாவது கண்டிக்கிறாங்களா? இல்லையே? அரசு எந்தப் பயங்கரத்தைச் செய்தாலும் பேசாமல் இருக்கிற இவங்களுக்கு நாங்கள் ஏதாவது சின்னனாச் செய்தாலும் கண்ணுக்க குத்துது." என்றான் றூபன்.

"நாட்டில பயங்கரவாதமே முதல்ல அரசிட்ட இருந்துதான் வந்தது எண்டு எல்லாருக்கும் நல்லாத் தெரியும். அதை மற்றைய அரசுகளும் கண்டு கொள்ளாமல் இருந்திச்சினம். ஏன் எண்டா அவை எல்லாம் ஒரே வர்க்கம். ஆனா... அரச பயங்கரவாதத்திற்கு எதிராக ஏதாவது செய்தால் அவைய உடனடியாகப் பயங்கரவாதியள் எண்டு முத்திரை குத்திப் போடுவாங்கள். அதுதான் பெடியளுக்கு இப்ப நடக்குது. யார் போராடினாலும் அதுதான் நடக்கும். அது தவிர்க்க முடியாது. அதைப் பார்த்தால் நாங்கள் போராட முடியாது. போராடாமல் இருந்தால் எங்களைப் பூண்டோடை அவங்கள் அழிச்சுப் போடுவாங்கள்." என்றான் சண்முகன்.

"அப்பாவிச் சனங்கள் சாகிற மாதிரித் தாக்குதல் நடத்துகிறது எங்கடை நியாயமான போராட்டத்தை நலிவுறப் பண்ணும். கொழும்புத் தாக்குதல் நீண்ட காலத்தில நல்ல பலாபலனைத் தராது. சிங்கள அரசு இதைவிட அதிகமாத் தமிழரைக் கொல்லுது. அதை உலகு தெரிஞ்சு கொள்ளாமல் கெட்டித்தனமாய் அரசு மூடி மறைக்குது. அதுக்கு உலக மேடியாக்களும் நெஞ்சுரம் இல்லாமல் துணை போகுதுகள்." என்றார் "TS". அவருக்கு நிறையச் சொல்ல வேண்டும் போல் இருந்தது. அதற்கு இடையில் புவனலோசினி,

"நேரம் ஆகுது... அருளைப் போய் பார்ப்பமே?" என்றாள்.

"ஓம்... ஓம்... அதைச் செய்வம் முதல்ல." என்ற வண்ணம் "TS" முன்னே நடக்க அவர் பின்னே மற்றவர்கள் நடந்தார்கள்.

இரண்டு நோயாளிகள் தங்கும் அறைக்குள்தான் இவர்களுக்கும் இடம் கொடுத்து இருந்தார்கள். இருந்தும் மற்றைய கட்டில் வெறுமையாக இருந்ததால் அறை முழுவதும் இவர்களுக்கு என்பது போல ஒரு தோற்றம். ஒஸ்லோவில் பிரசித்தியான அரச வைத்தியசாலைகளில் இதுவும் ஒன்று. ஐரோப்பிய தராதரத்தோடு இருந்தாலும் காலத்தின் சுவடுகள் கட்டடத்திலும் தளபாடங்களிலும் அழியாத அதன் வடுக்கள் பதிந்த முகத்தைக் காட்டியது. மாலை உணவு எடுத்து வந்து அருளின் தலைமாட்டில் இருந்த மேசையில் வைக்கப்பட்டு இருந்தது. அருள் இவர்களைக் கண்டதும் கண்ணைத் திறக்க முயன்றான். அவனால் கண்ணை முழுமையாகத் திறக்க முடியவில்லை. கண்ணாடித் துகள்கள் முகம், கை, கால் என்று எல்லா இடமும் வஞ்சகம் இல்லாது வாஞ்சையோடு பதம் பார்த்து இருப்பதாய் தோன்றியது. பல இடங்களில் கண்ணாடி கிழித்த காயங்களுக்கு ஒட்டுத் தையல் போடப்பட்டு இருந்தது. இது சில காயங்களுக்கு இளைப் போடும் தற்போதைய முறை. தசையைக் குத்தி இழுக்கும் வருத்தம் இல்லாது இலகுவாகச் செய்துவிட முடியும். ஆனால் எல்லாக் காயங்களுக்கும் பொருந்தாது. வலது கண் இமைக்கு மேல் பல ஒட்டுக்கள் அடுக்காக ஒட்டப்பட்டு இருந்தன. கைகளிலும் ஒட்டுப் போட்டு இருந்தார்கள். தோழ் மூட்டிலும் ஒரு பெரிய கட்டுப் போட்டு

இருந்தது. மொத்தத்தில் அருளின் மேனி வெள்ளை ஒட்டுப் போட்ட பழைய சைக்கிள் ரீயூப்பாகக் காட்சி அழித்தது. அதைவிட முகத்தின் கோலத்தை கண்ணாடித் துகள்கள் அகோரம் ஆக்கியதைப் பார்க்க "TS"சிற்குத் தலை சுற்றியது.

மூச்சை இழுத்து விடும் இயக்கம் நின்று விட்டால் மனித வாழ்வு மரணித்ததாகக் கூறப்படுகிறது. மூளையின் இயக்கத்தின் முற்றுப் புள்ளி மனித வாழ்வின் மரணம் என்கிறது விஞ்ஞானம். மூளையின் சாவை ஊனக் கண்ணால் பார்க்க முடியாது. மூச்சு அடங்குவதை, நாடி நலிந்து, குறைந்து ஒடுங்கி இல்லாது போவதை உணர்ந்து கொள்ள முடியும். குழந்தை பிறந்ததும் அழுவது போல அந்த மாயமும் சிலருக்கு நடக்கும். அந்த நாடி நிற்பதற்குக் கணங்கள் போதுமானது. மனித வாழ்வு முடிவதற்கு யுகங்கள் இல்லைக் கணங்களே போதும் என்கின்ற உண்மை பலருக்கு உறைப்பது இல்லை. மனிதனாய் இவ்வுலகில் நடப்பவன் பிணமாய் வீழுவதற்குக் கணங்கள் மட்டுமே தேவை. யார் பிணமாக விழுவார்கள், எப்படி அவர்கள் விழுவார்கள், எப்போது அவர்கள் விழுவார்கள் என்பது யாருக்கும் தெரியாத கணத்தில், அது எமக்கு நேராது என்கின்ற நினைப்பில் இறுமாந்து இருக்கும் கணத்தில், அது நடக்கும் என்பதை அறியாத மனிதப் பிண்டங்கள். உடலும் அதன் வாழ்வும் ஆத்மா குடியிருக்கும் இயந்திரமாக, அதன் இயக்கம் இவ்வுலகில் நடக்கிறது என்பது ஆண்டவனின் விளக்கம். ஆத்மா அதை விட்டு நீங்கும் போது அது பஞ்ச பூதத்தோடு சேரவேண்டிய பிண்டம். மாற்ற முடியாது, அதில் மாற்றம் இல்லாது சேருகிறது. இது மயக்கம் தெளிந்தால் விளங்கும் என்பதாக ஒரு கணம் "TS" சிந்தித்தார்.

இவர்களைக் கண்டதும் சொரூபா அவ்வளவு நேரமும் அடக்கி வைத்திருந்த துன்பம் எல்லாம் மேலிட விக்கி விக்கி அழத் தொடங்கினாள். அம்மா என்ற வண்ணம் ஓடிச் சென்று தாயைக் கட்டிப் பிடித்தாள் அகலிகா. அம்மா அழுவதைப் பார்த்துத் தானும் அழத் தொடங்கினாள். இதைப் பார்த்த புவனலோசினி இருவரையும் எட்டித் தன்னோடு அணைத்துக் கொண்டாள்.

அருள் கட்டிலைச் சாய்ந்து இருக்கும் நிலைக்குச் சரி செய்தான். அவன் முகம் வேதனையால் கோணிற்று.

கட்டிலில் கிடப்பது அப்பாதானா என்கின்ற சந்தேகத்தில் பார்த்துக் கடைசியாக அப்பா என்பதை முடிவு செய்த பின்பு அகலிகா அப்பாவைக் காட்டிக் காட்டி தேம்பித் தேம்பி அழுதாள். அவளைத் தாயும் புவனலோசினியும் நீண்ட நேரமாகச் சமாதானம் செய்ய வேண்டி இருந்தது.

கண் இமைகளில் கண்ணாடித் துகள்கள் ஏறி வீங்கியதில் அவனால் கண்களைத் திறக்க முடியவில்லை. சிறிதாகத் திறந்த கீற்றில் அவனால் ஆட்களை அடையாளம் காண முடிந்தது. அவனது இமைகளுக்கு எண்ணெய் போன்ற வெள்ளையான களிம்பு பூசி இருந்தார்கள்.

"என்ன நடந்தது அருள்?" என்றார் "TS".

"நான் ஒழுங்காகத்தான் வீக்கப்பிளித்தில (வாகனம் மற்றைய வாகனத்திற்காய் விட்டுக் கொடுத்து நிற்க வேண்டிய இடம்.) நிண்டனான். அவன்தான் நிக்காமல் கொண்டு வந்து அடிச்சுப் போட்டான். பொலிஸ் உடனேயே வந்திட்டுது. தலைக்கு வந்தது தலைப்பாவோடை போன மாதிரிச் சிற்றிக்கு உள்ள அடிபட்டது. இதே மோட்டார் வையெண்டா (நெடுஞ்சாலை) கூட்டித்தான் அள்ளி இருக்க வேணும்." என்றான் அருள்.

"உண்மைதான். காலமேலை காரில போகிறது எண்டா வலு அவதானமாய் இருக்க வேணும். அவசரத்தில கொண்டு வந்து சாத்திப் போடுவாங்கள்." என்றார் "TS".

"அது உண்மை அண்ணை. சில சனம் இன்சூரன்ஸ் எடுக்கிறதுக்குப் பிளான் பண்ணிப் பழைய காரரையும் கொண்டு வந்து மோதுவாங்கள். நான் இப்பிடி நடக்கும் எண்டு கனவிலும் நினைக்கேல்லை." என்றான் அருள்.

"தெரிஞ்சு இருந்தா நீ போய் மாட்டுப்படுவியே? இதுதான் விபத்து. உனக்குத் தெரியாமல் ஆபத்தில மாட்டுப் படுகிறதுதான் விபத்து. உன்ரை காலம் அப்பிடி இருந்து இருக்குது... கெடு காலம் மாட்டுப் பட்டிட்டாய்." என்றார் "TS".

"உண்மைதான் அண்ணை. இவ்வளவில தப்பிச்சதே பெரிய விஷயம். கண்ணாடி சிதறி வந்த காயங்கள் எண்டதால

இரண்டு நாள்ள வீட்டை போகலாம் எண்டு நினைக்கிறன்." என்றான் அருள்.

"அப்பிடித்தான் தெரியுது. றவுண்ட் வரேக்க டொக்ரரிட்டை கேட்டுப்பார்." என்றார் "TS".

தொடர்ந்தும் இவர்கள் கதைத்துக் கொண்டு இருக்கத் தாதி வந்து ஒரு முறை எட்டிப் பார்த்துவிட்டுச் சென்றாள். அவள் எதுவும் சொல்லா விட்டாலும் நேரமாகி விட்டது என்பதை எல்லோரும் விளங்கிக் கொண்டார்கள். மீண்டும் விக்கத் தொடங்கிய சொரூபாவைச் சமாதானம் செய்துவிட்டு எல்லோரும் புறப்பட்டு வெளியே வந்தார்கள்.

"ஏதோ அதிஸ்ரம் அருளுக்கு இருந்து இருக்குது. கெட்டதிலும் நல்ல காலம்." என்றான் சண்முகன்.

"ம்." என்றார் "TS". பின்பு தங்களது காரை நோக்கி நடந்தார்கள்.

# 11 நிமலன் வீட்டுத் திருவிழா

நிமலனின் கூத்தை முழுமையாகச் சொல்லாது சுகந்திக்கு நிமலனைக் கலியாணம் செய்து வைத்தார்கள். சில பெண்களுக்கு ஆண்களின் நடத்தை பற்றி மோப்பம் பிடிப்பதற்கு அதிக காலம் செல்வது இல்லை. அன்று ஒரு பிறந்த நாளிற்குப் போய்விட்டு வந்த போது நிமலனுக்கு நல்ல ஏற்றம். அந்த ஏற்றத்தில் மாஜிக் காதலியை நினைத்துத் தன்னைக் கட்டுப்படுத்த முடியாது அவளுக்குக் கடுப்பு ஏற்றிய நிகழ்வாக அது முடிந்தது. அவள் துருவிய போது நிமலன் அழுகிய பழைய காதற் கதையை கக்க வேண்டியது ஆகிற்று. நொண்டியோ, முடமோ, கூனோ, குருடோ பெண்கள் தனது ஆண் துணையை மற்றவர்களுக்காக எப்போதும், எதற்காகவும் விட்டுக் கொடுக்க விரும்பாத பிறவிகள். தனது ஆண்துணை வேறு ஒரு பெண்ணோடு இருந்தான் என்பதை அறிவது அவளிற்கு வாழ்க்கையில் கிடைக்கக்கூடாத சாபம். அந்தச் சாபம் கிடைத்தால் சாதுக்களும் நல்ல பாம்பாக நான்கு முழம் எழும்பிப் பாயும் மூர்க்கம் உண்டாகும். இரண்டு மூன்று நாட்கள் சுகந்தி வீட்டை நரகமாக்கினாலும் அந்த நரகம் தன்னை நிரந்தர நரகத்தில் தள்ளிவிடும் என்பதை விளங்கிக் கொண்டு சுதாகரிக்க எண்ணிக் கொண்டாள். அவள் தன்னை மன்னித்து விட்டாள் என்று அவன் எண்ணினான். காலமும் நிமலனின் கனிவும் அவளிடம் இருந்து அவனுக்கு மன்னிப்பை வழங்கியதாக அவன் அதை மறந்தே போய்விட்டான். மன்னிப்பு வழங்கியது உண்மையோ இல்லையோ ஆணுக்கும் பெண்ணுக்குமான தேவையில் நிமலனுக்கு ஒரு மகவைக் காலம் வழங்கியது.

இன்று அந்த மகவிற்கு அவர்களது குடியிருப்பில் இருக்கும் சிறிய மண்டபத்தில் பிறந்தநாள் கொண்டாட்டம். ஒழுங்கையின் முகப்பிலும் மண்டபத்தின் வாசலிலும் பல வர்ண பலூன்கள் கட்டிப் பாதை காட்டப்பட்டு இருந்தது. நிமலனின் நண்பர்கள் அனேகருக்கு அந்த மண்டபம் இருக்கும் இடம் தெரிந்தாலும் சுதேசப் பிள்ளைகள் சிலர் வருவார்கள் என்பதால் அந்த அடையாளம் அத்தியாவசியம் ஆகிற்று.

வாழையடி வாழையாக வழக்கில் இருப்பதைக் கேள்வி கேட்காது நாம் கொண்டாடுகிறோம். அந்தப் பரமாத்மாவும் அப்படியே தன்னை வரித்துக் கொள்ளச் சொல்கிறான். அதைவிடக் கேவலமாக நாம் இடையில் புகுந்த சிலவற்றை எங்களுடையதாகத் தத்து எடுத்துப் பெருமிதமாகக் கொண்டாடுகிறோம். பழுத்த திராவிடங்களும் பச்சைக் குழந்தைகளும் கேள்வி இல்லாது கொளுத்தி அணைத்துக் குதுகலிக்கின்றன. அதுவும் ஐரோப்பிய நாடுகளில் குழந்தைக்கு அறிவு தெரிந்தது தொடக்கம் தனது பிறந்த நாள் எப்போது வரும் என்று காத்திருக்கும் வேட்கை. அன்றைக்கு அந்த நாட்டிற்கே பிரதமராகும் குதுகலம் அவர்களுக்கு வந்து விடும். நிமலனின் வாரிசிற்கும் அதே குதுகலம் இன்று. குழந்தைகளின் குதூகலத்தைச் சாட்டி பெரியவர்களின் போத்தல் கூத்தும் உண்டு. இருந்தும் இன்று சிவா குடும்பம், அருள் குடும்பம், சொரூபன் குடும்பம் ஆகியவர்கள் மட்டும் நேரத்திற்கு வந்து இருந்தார்கள். அத்தோடு பலூனைப் பார்த்தும் விலாசத்தைப் பார்த்தும் வந்த சில நோர்வே சிறுவர்களும் அங்கே புதினம் பார்த்துக் கொண்டு இருந்தார்கள். இதை அமைதியாகக் கவனித்த சிவாவால் இனியும் அமைதியாக இருக்க முடியாது என்கின்ற நரக வேதனை மேலிட,

"தேவிக் குட்டி இங்க வாங்க. நீ பிறந்த நாள் சரி இல்லை." என்றான்.

"நைய்... மின் புஸ்டாக் ஆர் வெஸ்த பூஸ்டாக்." "எனது பிறந்த நாள்தான் சிறந்த பிறந்த நாள்." என்று ரோசத்தோடு தேவிக் குட்டி கத்தினாள். அவளுக்குச் சிவா மீது கோபம். அறியாமையும், அதி மேதாவித்தனத்தையும் விளங்கிக் கொள்ளாவிட்டால் அது கோபத்தையும், வெறுப்பையும் உற்பத்தி ஆக்கி விடுகிறது. தன்மொழி குழந்தைக்கு விளங்கவில்லை என்பதை விளங்கிக் கொண்ட சிவாவின் சிரிப்பு காத்துப் போன பலூனாக அடங்கியது.

"நான் சும்மா தேவிக் குட்டி... பிள்ளையின்ரை பிறந்த நாள்தான் உலகத்திலேயே பெஸ்ற் பிறந்த நாள்." என்று சிவா வழிய... அதை ஏற்றுக் கொண்ட தேவி தனது நோர்வே நண்பர்களுக்குப் பௌவுசு காட்டச் சென்றாள்.

நோர்வேப் பிள்ளைகளைப் பிறந்த நாளிற்கு அழைத்தால் நேரத்திற்குக் கேக் வெட்டிப் பிள்ளையின் பிறந்த நாளை முடித்த பின்பு ஆறுதலாகப் பெரியவர்களின் பிறந்த நாளைக் கொண்டாட வேண்டும் என்பது நிமலனின் புரிதல். அவர்களைப் பார்த்துக் கொண்டு நின்றால் நோர்வேப் பிள்ளைகள் புறப்பட்டுச் சென்று விடுவார்கள் என்பது நிமலனுக்கு விளங்கும். அவன் கேக்கை வெட்டுவதற்கான ஆயுத்தங்களில் ஈடுபட்டான்.

பீப்பி ஓசையும் கப்பி பேத்டே பாட்டும் இசைக்கப்பட்டு மெழுகுவர்த்தியைப் பிள்ளைக்குப் பதிலாக அப்பா தம் கட்டி ஊதி அணைக்கப் பிள்ளை கத்தியைக் கடுமையாக வீசிக் கேக்கின் உள்ளே இறக்கினாள். அத்தால் தேவியின் பிறந்த நாள் கொண்டாட்டம் குதுகலமாக ஆரம்பமாகியது. எல்லோரும் ஆரவாரமாய் கை தட்டி மகிழ்ந்தார்கள். பின்பு கேக், குளிர்பானம், பொல்சர், கோப்பி என்பன வழங்கப்பட்டன. அதன் பின்பு சங்கீதக் கதிரையை யாழ்ப்பாணத்தில் இருந்து பௌத்திரமாகக் கொண்டு வந்ததாய் நிமலனின் ஏற்பாட்டில் பிள்ளைகளை ஓட விட்டு அரசியல் போல ஒரு கதிரைக்கு இரண்டுபேர் அடிபட்டு, அதுவும் முடிவிற்கு வந்தது. சிறிது நேரத்தில் நோர்வே பிள்ளைகள் தங்கள் பணி முடிந்து விட்டதாகப் புறப்பட்டுச் சென்றார்கள்.

அவர்கள் சென்ற சிறிது நேரத்தில் சரிஸ்காவைத் தவிர்த்த "TS" குடும்பம் பிரசன்னமானது. "TS"சைச் சிவா பார்த்தான். அவர் களைத்துப் போய் இருந்தார். கவலையாக இருந்தார். சிவாவிற்கு தன்னுடைய குறணியைத் தொடங்குவதா விடுவதா என்கின்ற அல்லாடல். சொறிந்து சுகம் கண்டால் சிரங்கு என்று கை விடுமா என்கின்ற அவஸ்தையில் சிவா. அமைதி, அமைதி என்று அவன் தன்னைத் தானே ஆறுதல் படுத்திக் கொண்டான். எப்படி என்றாலும் அவர் வாய் திறப்பார். அப்போது போட்டுத் தாக்குவோம் என்று காத்து இருந்தான். பொறியில் அகப்பட்ட எலி போல "TS",

"சரியான சனம். கொத்து ரொட்டிக்கு கீவ்வுல நிண்டே களைச்சுப் போனம். பார்க்க இது என்னடா பிச்சை எடுப்பு எண்டு கவலையாவும் இருக்குது. அதே நேரம் அது

பெருமையாகவும் இருக்குது. எங்களுக்கும் ஒரு நாடு வரும் எண்ட நம்பிக்கை வருகுது." என்றார் "TS".

"அப்பிடியே "TS" அண்ணை?" என்றான் சிவா.

"தெரியாமல்தான் சிவா கேட்கிறாயா? சிவாவுக்கு எப்பவும் பகிடிதான்." என்றார் "TS".

"அப்பிடி இல்லை அண்ணை. நீங்கள் அங்க தமிழ் கலாச்சாரக் காவலர்களுக்குப் பிறந்த நாள் கொண்டாடிட்டு வாறியள். நாங்கள் இங்க தேவிக் குட்டிக்கு கொண்டாடுகிறம். தெரியாமல் செய்கிறது தப்பு, தெரிஞ்சு செய்கிறது...?" என்றான் சிவா வில்லங்கத்தை உருவாக்க.

"சும்மா இருங்க அப்பா. அவை களைச்சுப் போய் வந்து இருக்கினம். வேறை ஏதும் விஷயத்தைப் பற்றிக் கதையுங்க." என்றாள் மனோகரி.

"நீ இதுக்க தலையிடாத மனோ. அது எனக்கும் "TS" அண்ணைக்கும் உள்ள புரிந்துணர்வு. நாங்கள் எப்பவும் எங்கையும் அதைப் பற்றிக் கதைப்பம். மற்றவை மாதிரி அதைப் பகையா எடுத்துக் கொண்டு நாங்கள் முறைச்சதும் கிடையாது. இனி முறைக்கப் போகிறதும் கிடையாது. எனக்காக அவர் மாறவும் இல்லை. அவருக்காக நான் மாறப் போகிறதும் இல்லை. இருந்தும் எதையும் மனம் விட்டுக் கதைக்க எங்களால முடியும்." என்றான் சிவா.

"என்னவோ செய்யுங்கோ." என்று மனோகரி அதில் இருந்து விலகிக் கொண்டாள்.

"'வள்ள கோவினுக்கு' மைக்கல் ஜெக்சன் வரேக்க எவ்வளவு சனம் வந்து இருக்குமோ அப்பிடித்தான் இண்டைக்குத் தமிழ் தலைகளின்ரை காட்சி. இந்த ஒற்றுமை இருந்தா எங்களை யாராலும் அசைக்க ஏலாது." என்றார் "TS".

"வராத சனத்தை ஒரு கோலில விட்டிட்டு பார்த்தாலும் அப்பிடிதான் தெரியும்." என்றான் சிவா.

"உந்த மனிசனைத் திருத்த ஏலாது." என்றாள் மனோகரி மீண்டும்.

"சிவா நீ சொல்லுகிற மாதிரி அதே அளவு சனம் இல்லாட்டியும் ஒரு கால்வாசி சனம் எண்டாலும் வெளியில நிக்கத்தான் செய்யுது. எல்லாரும் ஒரு நாளைக்கு ஒற்றுமை ஆகிற காலம் வரும்." என்றார் "TS".

"அதுக்கு இங்க ஒரு சின்ன விஷயம்தான் செய்ய வேணும். ஆனா... அதைச் செய்கிற பெருந்தன்மை கிடையாது. தமிழருக்கு விடிவும் கிடையாது." என்று கைகளை ஆப்பிள் பிடுங்குவது போல் ஆட்டினான் சிவா. அவன் அந்தக் கணத்தில் உணர்ச்சி சுழலுக்குள் அகப்பட்டதான தோற்றம். பழைய வடுக்களின் ஆறாத இரணம் அவன் முகத்தில் கரு நாகங்களாக, கருந் தோலில்கூடத் தெரியும் விஷமாகப் பரவிய தோற்றம். சிவாவின் அந்தத் தோற்றம் நிமலனுக்குப் பிடிக்கவில்லை. இது கலகலப்பாய் இருப்பதற்கான நாள். தனது பிள்ளையின் பிறந்த நாள். அவன் அந்த சம்பாசனையின் திசையைத் திருப்ப எண்ணினான்.

"சிவா அடிப்பமே?" என்றான் நிமலன்.

"நக்கிற நாய்க்குச் செக்கென்ன சிவலிங்கம் என்ன. அது சரி என்ன வைச்சு இருக்கிறாய்?" என்றான் சிவா.

"பியர் இருக்குது... பிளக்லேபலும் இருக்குது... பெம்பிளையளுக்கு வேணும் எண்டா வயினும் இருக்குது." என்றான் நிமலன்.

"இப்ப நிமலனும் தொடங்கிறார் போல.." என்றாள் புவனலோசினி.

"ஏனக்கா? தமிழ் பெம்பிளையள் வயின் அடிக்கிறவை தானே?" என்றான் நிமலன்.

"நாங்கள் அதைக் குடிச்சதை எப்பவாவது நீ பார்த்து இருக்கிறியா?" என்றாள் புவனலோசினி.

"நீங்கள் மறைவாக் குடிச்சா எங்களுக்கு என்ன எண்டு தெரியும்." என்றான் நிமலன்.

"தாங்கள் எல்லாம் செய்வினம். பெம்பிளையள் ஒண்டும் செய்யக் கூடாது. அதுதான் இவற்றை நினைப்பு. அவர் செய்த மாதிரி நான் செய்து இருந்தா என்னோடை இப்ப வாழ்ந்து இருப்பாரா?" என்று கேட்ட வண்ணம் தேநீர்

வழங்கினாள் சுகந்தி. அவளின் கோபம் நிமலனை நடுங்க வைத்தது.

"அதை விடு சுகந்தி. அதையும் கடந்ததுதான் உங்கடை வாழ்க்கை. அதில இனிக் குழப்பம் இருக்கக் கூடாது. அது சரி... இங்லாந்தில, சிங்கப்பூரில, கனடாவில பெம்பிளையளும் குடிக்கிறது பரவலா இருக்குது தானே? நோர்வேயில இப்ப இருக்கிற பெம்பிளையள் வயின் அடிக்கிறது பரவலா நடக்கிறது இல்லை. இனி வாற பெட்டையள் என்ன செய்வாளவை எண்டு எங்களுக்குத் தெரியாது. அந்தத் திசையிலதான் வளர்ச்சி இருக்கும் எண்டதை யாரும் மாத்த இயலாது." என்றார் "TS".

"அப்ப "TS" அண்ணை பெம்பிளையள் வயின் அடிக்கலாமா இல்லையா?" என்ற வண்ணம் ஒரு மிடறு பிளக்லேபலை இழுத்தான் சிவா.

அப்போதுதான் றூபன் குடும்பமும், சண்முகன் குடும்பமும் உள்ளே வந்தனர். அவர்கள் களைத்துப் போய் இருந்தனர்.

# 12 வளர்ச்சிக் கோர்மோன்

"TS" வேலை முடிந்து வீட்டிற்குச் செல்வதற்காகச் சுரங்கரதத்தில் ஏறினார். அது வெள்ளி இரவு எழு மணி இருக்கும். வெள்ளி இரவு ஐரோப்பியரின் திருவிழா. மற்றைய நாட்களில் வேலையால் வரும் போது அங்கொன்றும் இங்கொன்றுமாய் ஆட்கள் நிற்பார்கள். இன்று இரு பால் இளைஞர்களும் ஒன்றாக... அதில் சிலர் மதுவினால் நிதானம் தவறியவர்களாக... நிதானமானவர்களும் நிதானமற்றவர்களும் உற்சாகமாக உரத்துச் சிரித்துக் கதைத்து துக்கத்தில் பறி போகும் இவ்வுலகைத் தூக்கி நிறுத்திய தோற்றத்தை உண்டு பண்ணி, தங்கள் பிரசன்னத்தைப் பல வண்ணங்கள் ஆக்கினர். வேலை முடிந்து வீடு செல்லும் பல வயதினர்... சோம்பல் உடலில் சுமையாக ரதத்தில் சவாரி செய்யும் பயணிகள். அதில் சிலர் அவர்களின் அட்டகாசத்தைப் பார்த்து இரசிக்கச் சிலர் வெறுத்து மனதில் புகைய, சுரங்கரதம் இரும்புத் தடத்தில் பனியில் சறுக்கும் வீரனைப் போல தரிப்புகளைப் பின் தள்ளி தன் பயணத்தைத் தொடர்ந்தது. "TS"சின் கண்கள் அங்குள்ள பயணிகளை மேய்ந்தது. அதுவும் இளைஞர்களை அவர் கூர்ந்து கவனித்தார். இந்த இளைஞர்களுக்கும் தான் இளைஞனாய் இருந்த காலத்திற்கும் இடையில் பெரும் புரட்சிகள் ஏற்பட்டுவிட்டதாய் அவருக்குத் தோன்றியது. அன்று தாங்கள் இருந்த உருவத்திற்கும், இன்று இவர்கள் இருக்கும் உருவத்திற்கும் நிறையவே வித்தியாசம் இருப்பது அவருக்கு அப்பட்டமாய் தெரிந்தது. சுதேசிகளின் பிள்ளைகள் மட்டுமல்ல நோர்வேயில் பிறக்கும் அனைத்துக் குழந்தைகளும் அதற்கு விதிவிலக்கு இல்லை என்பது விளங்கியது. மில்லியன் வருசங்களாக எப்படி இருக்க வேண்டும் என்கின்ற தகவலைத் தாங்கி வந்த நிறமூகூர்த்தங்களில் திடீர் மாற்றம் ஏதும் ஏற்படவில்லை. மனித மூளையால் மனித இனத்திலேயே மாற்றம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாதவாறு வியாபாரத்தில் மனித இருப்பே விற்கப்படுவதாய் அவருக்கு இன்று தோன்றியது.

மில்லியன் ஆண்டுகளாய் இயற்கை செய்ய விரும்பாததை மனிதன் எப்படிச் செய்தான் என்பது அவருக்கு இப்போது விளங்கியது. அதிக உற்பத்தி, அதிக வருமானம் என்னும் தொழில் மயமாக்கலில் நச்சு மருந்துகள், கோர்மோன்களை உபயோகித்துப் புற்று நோய் தொடக்கம் பல வகையான நோய்களை உற்பத்தி செய்து, அதைத் தீர்த்து வைக்க பாரிய மருத்துவத் தொழில் பேட்டைகளை உருவாக்கினார்கள். அந்த மருந்துகள் தந்த பலனில் மனிதன் மட்டும் அல்ல தாவர விவசாயப் பொருட்களின் உற்பத்தியும் அதிகரித்தது. அடுத்ததாக மனிதன் விலங்குகளைப் பற்றிச் சிந்தித்தான். விலங்குகளின் வளர்ச்சியை இயற்கையில் கோர்மோன்கள்தான் நிச்சயிக்கிறது என்பதைக் கண்டு பிடித்த மனிதன் அதை விலங்கு உற்பத்தியில் பாவித்து அதிக மச்ச, மாமிச உணவை உற்பத்தி செய்ததோடு அதனால் கொள்ளை இலாபமும் பெற்றான்.

உழைப்பின் சிறு பகுதி வருமானத்திலேயே தாராளமாக உண்ணக் கூடிய ஐரோப்பியப் பொருளாதாரம். இருந்தும் அவர்களின் உணவில் கோர்மோன்களின் கலப்பின் உக்கிரம். இந்தக் கலப்பால் எந்தப் பின்விளைவும் வராது என்று விற்பனைக்காகப் பொய் உரைத்தாலும் அது மனித இனத்தின் உருவத்தை, வளர்ச்சியை மாற்றத் தொடங்கி விட்டது. அப்பா அம்மாவைவிட உயரத்தில் குறைவாக இருந்த பதின்நான்கு வயது ஈழத்துச் சிறுவனும் அப்பா அம்மாவைவிட அரை அடி நெடுத்து நிற்கும் நோர்வேயில் பிறந்த தமிழ்ச் சிறுவனும் அவர் கண்முன்னே தோன்றி மறைந்தார்கள்.

"TS"சின் கண்கள் சுரங்கரதப் பெட்டியில் இருந்தவர்களைத் துருவித் துருவிப் பார்த்தது. குழந்தைகளின் இந்த உருவ நெடுப்பிற்கும் தோற்றத்திற்கும் யார் காரணம் என்பது அவருக்கு விளங்கியது. உழைப்போடு ஒப்பிடும் போது சாப்பாட்டிற்கு அதிக வீதமான உழைப்பை இங்கே செலவு செய்ய வேண்டிய அவசியம் இல்லை. சுதேசிகளுக்கு அது ஒரு பொருட்டாகவே இருக்காது. மற்றவர்களுக்கும் இங்கு அது ஒரு பொருட்டாகப் படுவது இல்லை. தேவைக்கு மேலதிகமாக உணவு கிடைக்கிறது. அந்த உணவில் தேவைக்கு அதிகமாகவே வளர்ப்புக் கோர்மோன்கள்

கலக்கப்பட்டு இருக்கின்றன. அதன் வேலை அந்த மிருகத்தைக் கொன்றவுடன் முடிந்து விடும் என்று கூறினாலும் அது முடிந்தது போல அதை உண்பவர்களைப் பார்க்கத் தெரியவில்லை. அதை உண்ணும் மனிதர்களிலும் அது தன் வேலையைச் செய்வதாக "TS"சிற்குத் தோன்றியது. வளர்ச்சி முடிந்த பருவத்தில் இந்த நாட்டிற்கு வந்தவர்களுக்குக் கிடைக்கும் அதீத உணவால் உடம்பு வைத்தது. அது பின்னாளில் பல உபாதைகளுக்குக் காரணமானது. குழந்தைப் பருவத்தில் வந்தவர்களுக்கு அல்லது இங்கே பிறந்தவர்களுக்கு அது வேறுவிதமாக வேலை செய்கிறது. அத்தால் முந்திய பரம்பரையைவிட இந்தப் பரம்பரையின் வளர்ச்சி "TS"சைப் பிரமிக்க வைத்தது.

கோர்மோன்களின் ஊக்குவிப்பு ஒரு புறம் நவீன தொழில்நுட்பத்தால் குவிந்து கிடக்கும் தொலைக்காட்சி, கணினி, அலைபேசி, விளையாட்டு உபகரணங்கள் என்பனவற்றால் உடல் நோகாது வீட்டிற்கு உள்ளேயே முடங்கிக் கிடந்து, தங்களது சக்தியைச் செலவு செய்யாது, உடம்பை வளர்த்துக் கொள்ளும் முதியவர்களும், இளையவர்களுமாகப் பல தேசங்களில். அவர்கள் தாங்க முடியாத பழுவைத் தாங்கும் முண்டங்களாகத், தங்கள் உடல் மேல் ஏற்றிய சுமையோடு, மேற்கு உலக மக்களும், வளர்முக நாட்டு மக்களும், மாமிச மலையாக மாறுவதை வேடிக்கை பார்க்கும் பன்னாட்டு வியாபார நிறுவனங்களும் அரசுகளும்.

"TS" மீண்டும் சுரங்கரதப் பெட்டியை ஊன்றிக் கவனித்தார். உள்ளே இருந்த இளைஞர்களில் ஒரு சிலரே அந்த வயதிற்கு ஏற்ப உயரத்திலும் உருவத்திலும் இருந்தார்கள். மற்றவர்கள் ஒன்றில் கொக்காக அல்லது குண்டோதரனாகவோ சகமனிதனின் கவனிப்பிற்கு உட்பட்ட மனிதர்களாகத் தெரிந்தார்கள்.

இந்தக் காட்சி அவரது மனதில் கிலேசத்தை உண்டு பண்ணியது. அவர் அந்த நினைவுகளோடு தனது நிறுத்தம் வந்துவிடச் சுரங்கரதத்தில் இருந்து இறங்கினார். சிறிய ஏற்றத்தில் ஒரு நான்கு நிமிட நடை. அதன் பின்பு வெந்நீரில் ஒரு குளிப்பு. பின்பு அப்பாடா என்று சோபாவில் இருந்தால் அதுதான் பூலோகத்துச் சொர்க்கமாகத்

தெரியும். இந்தப் பூலோகத்து சொர்க்கம்தான் பல மனித வாழ்வை நரகம் ஆக்குகிறது. கிலோக்களும் வருத்தங்களும் அவர்களைப் பூலோகத்திலேயே தண்டனைக்குத் தயார் செய்து விடுகின்றன.

"TS" அதை எண்ணிய வண்ணம் நடந்ததில் சட்டென்று ஏற்றம் கழிந்து போய்விட வீட்டிற்கு வந்து சேர்ந்துவிட்டார். இனிக் குளிரில் இருந்து விடுதலை என்கின்ற நிம்மதி அவருக்கு. வேலையில் இருந்து விடுதலை. ஓய்வு. அதிகாரம் உள்ள ஆண். மூன்று நபர்கள் கொண்ட ஆட்சியின் முதல்வர் ஆகிய சுதந்திரம். புவனலோசினி கடைப்பிடிக்கும் கலாச்சார அனுஷ்டானத்தில் ஆணுக்கு இருக்கும் வசதி அதிகம். அதிகம் அலட்டிக் கொள்ளாமல் அந்த வசதியை அனுபவிக்கும் "TS"சின் சுயநல அமுசடக்கம். சுயநலத்தின் பின்பே பொது நலம் என்கின்ற மனித மிருகத்தின் இயற்கை. உரிமைகள், சட்டங்கள் என்று கதைத்து உள் வீட்டிற்குள் வீணாக இரகளைகளை அவர் உருவாக்க விரும்பவில்லை. வெளியில் பார்ப்பதை வெளியிலேயே விட்டுவிட்டு வரும் புவனலோசினியின் வெகுளித்தனம் ஒரு வகையில் அவருக்கு மிகவும் பிடிக்கும். அது கொடையா அல்லது பாமரத்தில் பற்றறுத்த நிலையா என்பது அவருக்கு விளங்கவில்லை.

"TS" வீட்டிற்குள் வந்து உடைகளைக் களைந்து சாறத்தைக் கட்டிக்கொண்டார். அவருக்காக வெந்நீர்க் குளிப்புக் காத்திருக்கிறது. புவனலோசினி ஏற்கனவே வேலையால் வந்தாகிற்று. ஏதோ சமையல் அலுவல்கள் நடப்பதான வாசனையும் சத்தமும். கதவு திறக்கும் சத்தம் கேட்டு வெளியே வந்தாள். "TS"சைக் கண்டதும் ஓ மன்னவனே என்கின்ற புன்சிரிப்பு. என்றும் மாறாத அன்பின் இழையோடல் அதில். கை கோர்த்துக் கட்டிப் பிடித்துத் தெருவில் நின்று முத்தமிடுவது அல்ல இந்த அன்பின் முகவரி. என்றும் அந்தப் புன்சிரிப்பில் கல்வெட்டாக உறைந்து போன உறுதியான அன்பு இது. புவனலோசினி வெளியே வந்ததில் ஏதோ விஷயம் இருக்கிறது என்பதை "TS" விளங்கிக் கொண்டார். புவனலோசினி தானாகச் சொல்லுவாள் என்பது "TS"சிற்குத் தெரியும். அவர் என்ன என்பது போல அவளைப் பார்த்தார்.

"தாமோதரனும் மாலினியும் வருகினமாம் அப்பா. பெடியள் வாறாங்களோ தெரியாது. அவங்கள் இப்ப பெரிய ஆட்களாய் இருப்பாங்கள். இடியப்பம் சாப்பிடுவாங்கள் தானே? எதுக்கும் கை காவலா பொல்சரும் வாங்கி வந்தனான்." என்றாள் புவனலோசினி.

"சரி நான் அப்ப கெதியாக் குளிச்சிட்டு வாறன். குளிக்க முதல் வந்தால் அதுவும் பிழைச்சுப்போம்." என்று கூறிவிட்டு "TS" அவசரமாகக் குளியல் அறைக்குள் தாவிக் கதவைச் சாத்திக் கொண்டார். புவனலோசினி தனது சமையலைக் கவனிக்கச் சென்று விட்டாள். சரிஸ்கா வழமை போலத் தனது அறைக்குள் இருக்கும் மடிக்கணினியில் சொறிந்து கொண்டு இருந்தாள். அந்தக் கணினி பழசாகி விட்டதாகவும் புதிதாகத்தான் ஒன்று வாங்கப் போவதாயும் "TS"சிடம் அவள் கூறி இருந்தாள். அதற்கு நிமலனோடு போனால் பார்த்து வாங்கலாம் என்றும் அவனை ஒரு நாள் கூட்டி வந்தால் கீழே இருக்கும் கடையில் வாங்கிவிடலாம் என்றும் "TS" கூறி இருந்தார்.

குளியல் அறைக்குள் தாவிய "TS" வெந்நீரைத் திறந்துவிட்டு, அதன் சுகத்தை அனுபவித்த வண்ணமே இப்பொழுது எதற்குத் தாமோதரனின் திடீர் பயணம் இங்கு என்கின்ற அலசலில் இறங்கினார். தாமோதரன் கண்மூடித் தனமான விசுவாசி. குருட்டுத் தனமான அந்த விசுவாசத்தால் மாற்றுக் கருத்துக் கொண்டவர்கள் மீது வெறுப்புற்றார். அத்தால் அவரது நட்பு வட்டம் "TS"சின் நட்பு வட்டத்தில் இருந்து வித்தியாசமாகி விட்டது. "TS"சுடனும் மற்றும் ஆதரவாளர்களோடும் நட்பை வைத்திருந்த தாமோதரன் மற்றவர்களோடு உறவைக் கிட்டத்தட்ட துண்டித்துக் கொண்டார். மாலினியால் அவரை மீறி எதுவும் செய்ய முடியாது. என்றாலும் தாமோதரன் செய்வது சரியில்லை என்கின்ற எண்ணம் அவளிடம் உண்டு. அவள் தனியே அருள் மற்றும் சிவாவைப் போன்றவர்களைக் கண்டால் நன்றாகக் கதைப்பாள். இருந்தும் வீட்டிற்கு வரச் சொல்லி கேட்பது இல்லை. வீட்டிற்கு அழைத்தால் அது தாமோதரனுக்கும் தனக்கும் இடையில் பெரும் யுத்தமாக வெடிக்கும் என்பது அவளுக்குத் தெரியும். நண்பர்களா அல்லது குடும்பமா

என்று வந்த போது அவள் ஊரோடு ஒத்தோடு என்பதாகக் குடும்பத்தையே முதன்மைப் படுத்தினாள்.

இப்பொழுது எதற்காகத் தாமோதரன் குடும்பம் வருகிறார்கள் என்பது "TS"சிற்குத் தெரியவில்லை. மாலை நேரங்களில் வந்தால் இருந்து, கதைத்து, சாப்பிட்டுச் செல்வதற்கு நிறைய நேரம் பிடிக்கும். நாளைக்கு வேலை இல்லை என்பதால் எவ்வளவு நேரம் முழிப்பிருக்க வேண்டும் என்பதற்கு ஒரு கட்டுப்பாடு இன்று இருக்காது.

அதி தீவிரமான எதிர்ப்போ அல்லது அதி தீவிரமான ஆதரிப்போ நன்மைக்கு வழி வகுக்காது என்கின்ற எண்ணம் "TS"சிடம் இப்போது இடைக்கிடை எழுவது உண்டு. இருந்தும் எதிர்ப்பவர்கள் மட்டும் அதைக் கைவிட வேண்டும் என்று அவர் விரும்புவது உண்டு. அதே வேளை அதி தீவிர ஆதரவு மாற்றுக் கருத்தாளர்களை துாண்டி விடுவது போல் அமையக் கூடாது என்பதும் அவருடைய விருப்பம். அந்த இரண்டு விருப்பங்களுமே எந்தக் கணத்திலும் நிறைவேறாது என்கின்ற நிதர்சனமும் அவருக்குத் தெரியும். அந்த நிதர்சனம் விளங்கும் போதெல்லாம் அவருக்குச் சோர்வும் கவலையுமாக இருக்கும். இன்று தாமோதரன் வருகிறார் என்ற போது "TS"சை அப்படியான ஒரு உணர்வே ஆட்கொண்டு இருந்தது.

தாமோதரனுக்கு விட்டுக் கொடுத்துச் சமரசம் செய்யத் தெரியாது. அரசியலின் பாதாள இரகசியம் முழுமையாக விளங்காது. எதையாவது நம்பிவிட்டால் அழுங்குப் பிடியாக தொங்குவதை மாற்றவும் இயலாது. அவரது அழுங்குப்பிடி "TS"சின் நண்பர்கள் வட்டத்திற்கு உள்ளேயே இரண்டு குழுக்களை மறை முகமாகத் தோற்றுவித்து இருந்தது. அந்த மறை முகத்தைக் கண்டு கொள்ளாது பலர் பழகினாலும் சிலர் அதற்குள் மாட்டுப்படுவதும் அவருக்குத் தெரியும். எப்படி இந்தச் சிக்கலைத் தீர்த்து வைக்கலாம் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. இந்தச் சிக்கல் தீர்ந்தால்தான் தனது நட்பு வட்டம் தொடர்ந்தும் நீடிக்கும் என்பது அவருக்கு விளங்கியது.

இன்று எதற்குத் தாமோதரன் வருகிறார் என்கின்ற விடை தெரியாத கேள்வி தலையைக் குடைய குளியல் அறையில் இருந்து படுக்கை அறைக்கு மாறிய "TS" ஆடைகளை மாற்றிக் கொண்டு வந்து சோபாவில் அமர்ந்தார். அவர் சோபாவிற்கு வந்துவிட்டார் என்பதை அறிந்த புவனலோசினி ஆவி பறக்கப் பால் தேநீர் கொண்டு வந்து சோபா மேசையில் வைத்தாள். வரப்போகின்றவர்களுக்காக அவள் சமைத்துக் கஸ்ரப் படுவது அவள் மேல் "TS"சிற்கு ஒருவித பரிவை உண்டு பண்ணியது. சமையலில் தான் செய்வதற்கு எதுவும் இருக்காது என்றாலும் ஆறுதலுக்காக அதைப் பற்றி ஒரு வார்த்தை கேட்க வேண்டும் என்று நினைத்தார்.

"என்ன சமைக்கிறாய்? புட்டா?" என்றார் "TS".

"இல்லை அப்பா... அப்பதானே சொன்னன் இடியப்பம் எண்டு." என்றாள் புவனலோசினி.

"இவ்வளவு பெயருக்கும் இடியப்பம் பிளிகிறியா? புட்டு அவிச்சு இருக்கலாம்." என்றார் "TS".

"மா பதமாய் வந்து இருக்குது. அதெல்லாம் பிரச்சனை இல்லை. இனி வைச்சு எடுக்கிறதுதான் வேலை. அது நான் செய்வன்." என்றாள் புவனலோசினி.

"கறி என்ன வைக்கப் போகிறாய்?" என்றார் "TS".

"பண்டிப் பாரை வாங்கி வந்தன். அதைச் சின்னனா அரிஞ்சு வைச்சு இருக்கிறன். அதோடை ஒரு சொதியும் வைச்சு, முட்டையும் பொரிச்சு, சம்பலும் அரைக்கப் போகிறன்." என்றாள் புவனலோசினி. பண்டிப் பாரை என்பது பண்டி இறைச்சியை வெள்ளரிக்காய் போல எலும்பு இல்லாது புறத்தோல் துண்டு ஒன்றுடன் வலை போன்ற நூலால் பொதி செய்யப்பட்டு இருக்கும். பார்ப்பதற்குச் சிவப்பு நிறப் பாண் போலத் தோற்றம் தரும். அதைச் சுற்றிக் கட்டி இருக்கும் வலையை அகற்றி விட்டு இறைச்சியைச் சிறு துண்டுகளாக வெட்டுவது மிகவும் சுலபம். போரனையில் வைத்து எடுத்தால் பாண் துண்டு போல அதை வெட்டிச் சாப்பிடும் வசதிக்கு ஏற்ப அது பொதி செய்யப்பட்டு இருக்கும். எலும்போடு மாரடிக்க வேண்டிய தேவை இதில் இல்லை. பண்டியில் இருக்கம்

கொழுப்பை நீக்கி விட்டுச் சமைத்தால் பண்டி இறைச்சி மிகவும் ஆரோக்கியமான இறைச்சி என்பது இவர்களது கண்டு பிடிப்பு. புவனலோசினிக்குக் கோழி சமைக்கப் பஞ்சியாய் இருந்தால் பன்றி வாங்கி வருவாள். பறவை இறைச்சிதான் உடம்பிற்கு நல்லது என்பது பொதுவான அவிப்பிராயம். அதுவும் இப்போது மாறிக் கொண்டு வருகிறது. சில நாடுகளில் கோழியை வாங்கும் போது அவர்கள் சிறு துண்டுகளாக வெட்டிக் கொடுப்பார்கள். நோர்வேயில் கோழியின் கால்கள் தனியாக வாங்கலாம். அல்லது கோழியின் நெஞ்சுப் பகுதியும் வாங்கலாம். அதைவிட முழுக் கோழியாக எலும்புகளோடு வாங்குவது மலிவு என்பதால் தமிழரின் தெரிவும் அது ஆகவே இருக்கும். முழுக் கோழி என்றால் தோல் எலும்பு என்று அதை வெட்டி எடுப்பது ஒரு சிறிய போராட்டம் ஆகும். போர் முடிந்து அது வேகும் மணம் வந்தால் வயிற்றில் அமிலம் அருவியாகச் சொரியும். கொண்டு வந்து சாப்பாட்டைக் கொட்டு என்று அது ஆர்ப்பரிக்கும்.

"ஏதும் உதவி வேணுமே புவனா?" என்று அன்பு பொழிந்தார் "TS". புவனலோசினி பதில் சொல்லவில்லை. ஒரு சிரிப்புக் காட்டிவிட்டு உள்ளே சென்றாள். தலை போகும் அவசரம் அல்லது தன்னால் இயலாது என்றால்தான் புவனலோசினி "TS"சைச் சமையல் அறைப் பக்கம் அண்ட விடுவாள். அல்லது உதவி வேண்டுமா என்று கேட்டால் அந்தச் சிரிப்புதான். அதற்கு என்ன அர்த்தம் என்று ஒரு நாள் "TS" வாய் விட்டுக் கேட்டார். "ஒன்றும் இல்லை அப்பா." என்று புவனலோசினி மழுப்பிவிட்டாள், என்றாலும் அதற்குள் புதைந்து கிடக்கும் அர்த்தம் விளங்காத தவிப்பு "TS"சிடம் எப்போதும் உண்டு. எழுந்து சென்று சமையல் அறையில் புவனலோசினி உடன் கதைத்து அதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்று நினைத்தார். அதனால் எழுந்தார். அவர் எழுந்தாலும் இன்று நாள் சரி இல்லை என்பது போல வாசல் மணி ஒலித்தது. யார் என்று கேட்க எதிர்பார்த்தது போல "நான் தாமோதரன்." என்று குரல் வந்தது. வெளிக் கதவைத் திறந்துவிட்டு அவர்கள் வரும் வரையும் கதவோடு காத்து நின்றார்.

மாலினியும் தாமோதரனும் மட்டுமே வந்தார்கள். பிள்ளைகள் அவர்கள் உடன் வரவில்லை. தாமோதரன் சற்று இளைத்தது போலவும், மாலினியின் வதனம் வாட்டம் கண்டதாகவும் "TS"சிற்குத் தோன்றியது. இது தனது மனப்பிரமையோ என்கின்ற எண்ணம் ஒரு கணம் அவருக்கு உண்டாகியது. பின்பு அவர்களிடம் இருந்து மேலங்கியை வாங்கிக் கொளுவிவிட்டு அவர்களை உள்ளே வரச் சொன்னார். வழமைக்கு மாறான அமைதியோடு வந்து சோபாவில் அவர்கள் அமர்ந்தார்கள்.

"TS" சோபாவில் வந்து அமர்ந்ததும்,

"என்ன அக்கா சமையல்ல மும்மரமா இருக்கிறா போல? நான் ஒருக்காப் பார்த்துக் கொண்டு வாறன்." என்று கூறியவாறு மாலினி எழுந்தாள்.

"இப்ப வந்திடுவா. அதுக்கை போய் நீங்களும் சமையல் வாசம் உடுப்பில ஏத்தப் போகிறியளே? ஏதோ கதைக்க எண்டு வந்து இருக்கிறியள். அதைக் கதைப்பமே?" என்று "TS" மாலினியின் நழுவலுக்குத் தடை போட்டார். அந்த தடையை வெறுத்தாலும் வேறு வழி இன்றி மாலினி சோபாவில் அதே இடத்தைவிட்டு நகர முடியாத அவஸ்தையோடு ஓட நினைத்த காலை உறைய விட்டு இருந்தாள். அவளுக்குத் தாங்கள் கதைக்க வந்த விடயத்தைக் கதைப்பதே பிடிக்கவில்லை. கதைக்காமல் மனதிற்குள் வைத்துப் புழுங்கவும் முடியாது எனத் தோன்றியது. கதைத்தால் நகைப்பாக எடுத்துக் கொள்வார்களா அல்லது அதையும் நடைமுறையாக எடுத்துக் கொள்வார்களா என்பதும் அவளுக்குத் தெரியவில்லை. "TS" அதை நகைப்பாக எடுத்துக் கொள்ளமாட்டார் என்பது அவள் எண்ணமாக இருந்தாலும் தங்களின் கஸ்ரத்தை, சொந்தப் பல்லின் ஊத்தையை, குற்றி மற்றவர்களுக்குக் காட்டுவது போலச் செய்வதில் அவளுக்குச் சங்கடமாய் இருந்தது.

"சொல்லும் தாமோதரன்... வாழ்க்கை எப்பிடிப் போகுது?" என்றார் "TS". அவர் அதற்கு இப்படி ஒரு பதில் வரும் என்று எதிர்பார்க்கவில்லை.

"வாழ்க்கை நாசமாப் போச்சுது." என்றார் தாமோதரன். அவர் உணர்ச்சிவசப் பட்டிருந்தார். கவலை அவர் கரு

வதனத்தை மேலும் சட்டிக் கறுப்பு ஆக்கிற்று. கண்கள் இரண்டும் இரத்தச் சிவப்பாய் பளபளத்தன. இப்படியான தாமோதரனின் கோர முகத்தை "TS" முதன் முதல் இன்றுதான் கண்டார். என்ன நடந்தது? எதற்கு இந்த அக்கினி ஆவேசம் என்பது அவருக்கு விளங்கவில்லை.

"என்னத்துக்கு இப்பிடிக் கோவப்பட்டு மனதை விடுகிறீங்க தாமோதரன்? என்ன நடந்தது? யாரோடும் பிரச்சனையே?" என்றார் "TS".

"யாரோடும் பிரச்சனை எண்டாக் கவலைப்படுகிற மனிசனே நான்?" என்றார் தாமோதரன்.

"அப்ப மாலினியோடை பிரச்சனையே?" என்றார் "TS".

"அதுவும் பருவாய் இல்லை. தொல்லை தீருது எண்டு விட்டிட்டு இருக்கலாம்." என்றார் தாமோதரன்.

"அது தெரிஞ்ச விஷயம்தானே? இப்ப எல்லாம் தொல்லை ஆகத்தான் தெரியும்." என்றாள் மாலினி. அவள் கண்களில் கோபம் மின்னலாய் வெட்டியது. கண்ணீர் அதைத் தொடர்ந்து கட்டில்லாது கொட்டியது.

"அது சரி நீங்கள் இரண்டு பேரும் பிறகு சண்டை பிடியுங்க... இப்ப சொல்ல வந்த விஷயத்துக்கு வாருங்கோ." என்றார் "TS".

"எல்லாம் என்ரை பெடியளாலதான். நான் என்ன செய்கிறது? நாங்கள் இன்னும் தமிழராய் வாழப் பார்க்கிறம். அவங்கள் அதை எல்லாம் மதிக்கிற மாதிரித் தெரிய இல்லை. தமிழ் படிக்கக் கஸ்ரமாய் இருந்திச்சுது. தமிழ் பேசக் கஸ்ரமாய் இருந்திச்சுது. தமிழராய் இருக்கிறதே அவங்களுக்குக் கஸ்ரமாய் இருக்குதுங்கோ. பெட்டையளைக் கூட்டிக் கொண்டு வீட்டை வாறாங்கள். பெட்டையளோடை அவளவையின்ரை வீட்டில போய் நிக்கிறாங்கள். கேட்டா இது உங்கடை பிஸ்னெஸ் இல்லை எண்டுகிறாங்களுங்கோ. நான் என்ன செய்யட்டும்? ஓங்கி நாலு அறை அறையத்தான் மனம் வருகுதுங்கோ. அப்பிடி அறைஞ்சா பிறகு என்ன வில்லங்கம் வரும் எண்டு உங்களுக்குத் தெரியும்தானே? எப்ப வீட்டில நிப்பாங்கள் எப்ப நிக்க மாட்டாங்கள் எண்டது எல்லாம் எங்களுக்குத் தெரியாது. அது ரெண்டும் நொஸ்க் பெட்டையள்.

அதுகளுக்குத் தாய் தகப்பனின்ரை எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. இவைக்கு அங்க போனா மாப்பிள்ளையள் மாதிரி மரியாதை. பெரிய மனிசரிட்டைக் கதைக்கிற மாதிரித்தான் கதையள் எல்லாம். எனக்கு அவளவை வீட்டை வந்தா பத்திக் கொண்டுதான் வரும். நான் ஏதும் செய்யப் போய் இவங்கள் தெறிச்சுப் போவாங்களோ எண்டு பயம். உண்மையில ஏற்கனவே தெறிச்சுத்தான் போனாங்கள்... இனி எங்கையாவது பறந்து போவாங்களோ எண்டு பயமா இருக்குதுங்கோ. ஊராய் இருந்தால் என்னைப் பற்றி தெரிஞ்சு இருக்கும்." என்றார் தாமோதரன்.

தாமோதரன் இயக்க வேலைகளில் மிகவும் அக்கறையாக இருப்பது "TS"சிற்குத் தெரியும். மாலினியே பிள்ளைகளுடன் வேலை இல்லாத போது நேரத்தைச் செலவு செய்வாள். அவளிற்குத் தெரிந்த நொஸ்க் அவள் பிள்ளைகளோடு ஒப்பிடும் போது மிகவும் சொற்பமானது. அதை அவர்கள் தங்களுக்குச் சாதகமாக எடுத்துக் கொள்கிறார்கள். அதைச் சாதகமாய் எடுத்துக் கொண்டார்கள் என்றுகூட ஒரு வகையில் சொல்ல முடியாது. இதுதான் இங்கு வழமை. அந்த வழமையை ஏற்றுக் கொள்ள முடியாத எங்கள் வளையா நம்பிக்கை… கலாச்சாரம்… கௌரவம்... அப்படிக் குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டுவதைப் பல தமிழர்கள் இன்னும் விடவில்லை. அது சிறையல்ல தங்கள் சொர்க்கம் என்று அவர்கள் நம்புகிறார்கள். வாரிசாய் தோன்றியவர்கள் அதை நம்பத் தயாராக இல்லை. எங்களுக்குப் பிறப்பவர்கள் எங்களைப் போல் வாழ வேண்டும் என்றோ, எங்களோடே வாழ வேண்டும் என்றோ எந்தக் கட்டாயமும் இந்த நாட்டில் இல்லை. எங்கள் மாறாத நினைப்பின் காலை வாரிவிட்டுப் போவதற்கு அவர்கள் தயாராக இருக்கிறார்கள். அதற்காகத் தாய் தகப்பனின் சொல்லை கேட்டு நடக்கும் பிள்ளைகளே இல்லை என்றும் இல்லை. அது வளர்ப்பையும் பிள்ளைகளின் மனதையும் பொறுத்தது. வாழ்க்கை என்பதே விபத்துக்களின் கோர்வை. அக்கறை எடுத்தால் சில வேண்டாத இணைப்பையும், இழப்பையும் தவிர்த்துக் கொள்ளலாம். அதற்காக விபத்துக்களின் கோர்வையால் பின்னப்படும் வாழ்க்கையை மனிதனால் முற்றுமாக மாற்றிவிட முடியாது. அப்படி முடிந்திருந்தால் வாழ்வில் எந்தச் சுவாரசியமும்

இருந்து இருக்காது. இவ்வாறாக "TS"சின் எண்ணச் சுழல் அலை மோத அவர் பேசாது இருந்தார். அதைப் பார்த்த,

"என்ன எங்கடை பெடியளின்ரை சீர்கேட்டைக் கேட்டு உங்களுக்கு வாயடைச்சுப் போட்டுது போல இருக்குது?" என்று தாமோதரன் கேட்டார்.

"இங்க வளர்ந்த பிள்ளையளை நீ இப்படிச் செய்ய வேணும் அப்பிடிச் செய்ய வேணும் எண்டு கட்டாயப்படுத்த முடியாது. அது சட்டத்திற்கோ, தார்மீகத்திற்கோ ஏற்றது இல்லை. எங்கடை கலாச்சாரத்தை கெட்டியாப் பிடிச்சா நாங்கள்தான் எங்கடை பிள்ளையளின்ரை தலை எழுத்தை நிர்ணயிக்க வேணும் எண்டு நினைப்பம். மனசுக்கு உள்ள நாங்கள் அப்பிடித்தான் நினைக்கிறம். நினைச்சாக்கூட அதை நடைமுறைப் படுத்தக் கூடாது. இங்க பிறந்து வளர்ந்தவனுக்கு நாங்கள் அப்பிடி நினைக்கிறதே ஒரு வலோக்காரமான விஷயமாகத் தெரியும். பதினெட்டு வயதானால் முழுமையாகத் தன்னுடைய வாழ்வைத்தான் நிர்ணயிச்சுக் கொள்ளுகிற நாடு இது. அதுக்கு முதலே பல விஷயங்களை அவங்கள் மட்டுமே முடிவு செய்வாங்கள். இந்த நாட்டில தொடர்ந்து வாழ்கிறது எண்டா நாங்கள் இலங்கையில இருந்த மாதிரி இங்க இருக்க முடியாது. நாங்கள் எப்பிடியோ நீண்ட காலம் இங்க வாழப் போகிறம் எண்டது உறுதி ஆகீட்டுது. இந்தியன் ஆமி இறங்கின உடன பிரச்சனை தீரும் எண்டு எதிர் பார்த்தம். இப்ப அது பொய்யாகி இனி எப்ப தீரும் எண்டே தெரியாமல் போச்சுது. பிரச்சனை தீர்ந்தாலும் முழுமையான அமைதி நாட்டில வாறது எண்டா அது வேறை ஒரு கதை. வயது வந்த பிறகு இவங்கள் எல்லாம் நாட்டுக்குத் திரும்பி வரப் போகிறது இல்லை. அவங்களுக்கு இதுவே தாய் நாடாகிப் போயிடும். இப்ப நாங்கள்தான் மாற வேணும். இல்லாட்டி அவங்கள் எங்களை விட்டு விலகிப் போயிடுவாங்கள் என்கிற உண்மை ஒண்டு இருக்குது. நீங்கள் இனிக் கோவப் படாமல் சமாளிக்கிறதுதான் புத்தி. எங்களுக்கு கிடைக்காத சுதந்திரம் அவங்களுக்குக் கிடைச்சு இருக்குது எண்டு நாங்கள் திருப்திப் பட்டுக் கொள்ளலாம். எல்லாத்தையும் விரோதமாய் எடுத்துக் கொள்ளாமல்

நன்மை ஆகவும் எடுத்துக் கொள்ளலாம் தானே?" என்றார் "TS".

"நீங்கள் தத்துவம் கதைக்கிறீங்கள். நடைமுறையில என்ரை பிள்ளையே என்னை மதிக்குது இல்லை எண்டுகிற வேதனை குடையுதுங்கோ. ஒரே அவமானமாய் இருக்குது. பிள்ளையள் சொல்லுக் கேளாமல் போகிறது மதிப்பு மரியாதை எல்லாம் கைவிட்டுப் போகிறதான பதை பதைப்பா இருக்குது. சமுதாயத்தால எங்களை மட்டும் தூக்கி எறிஞ்ச மாதிரியான ஒரு அவமானம் வந்து என்னை அழுத்துதுங்கோ. ஒண்டில் அவங்கள் என்ரை சொல்லுக் கேட்க வேணும். இல்லாட்டி நாங்கள் அவங்களை விட்டிட்டு எங்கை ஆவது தூர தேசம் போக வேணும் போல இருக்குதுங்கோ. நிம்மதி இல்லாமல் மனசு வலிக்குதுங்கோ?" என்றார் தாமோதரன்.

"நாங்கள் யோசிக்கிறதுக்கும் அவங்கள் யோசிக்கிறதுக்கும் நிறைய வித்தியாசம் இருக்குது. நாங்கள் சின்னப் பிள்ளையளா இருக்கேக்க எங்களுக்கு நியாயமானது எங்கடை அம்மா அப்பாவுக்கு ஏற்றுக் கொள்ள முடியாது இருந்தது போல இதுவும். இப்ப அவங்களுக்கு நியாயமாய் படுகிறது எங்களுக்கு அநியாயமாகப் படுகுது. அப்பா அம்மாவுக்காக நாங்கள் அப்ப விட்டுக் குடுத்தம். இப்பவும் நாங்கள் பிள்ளைகளுக்காக விட்டுக் குடுக்க வேண்டி இருக்குது. ஆனா... ஒண்டை மாத்திரம் நல்லா யோசிக்க வேணும். இது யாருடைய வாழ்க்கை எண்டது பற்றினதில தெளிவாக இருக்க வேணும்? அந்த வாழ்க்கையை யார் வாழப் போகினம்? அவங்கடை சொந்த வாழ்க்கையை முடிவு செய்கிற சுதந்திரத்தை நாங்கள் எடுத்துக் கொள்ளுகிறது நியாயமா? எண்டும் வடிவா யோசிக்க வேணும்." என்றார் "TS".

"நானும் அப்பிடித்தான் நினைச்சன். விட்டுப் பிடிக்காமல் முரண்டினால் ஒண்டும் இல்லாமல் போயிடும் எண்டுகிறது விளங்குது. இவர்தான் தன்னுடைய மானத்தில கை வைச்ச மாதிரி இருக்குது எண்டு அந்தரிக்கிறார். இவரைக் கொஞ்சம் அமைதியா இருக்கச் சொல்லுங்கோ." என்றாள் மாலினி.

"ச்... இது எல்லாருக்கும் வருகிற கோவம். ஆனா... அதுகின்ரை கட்டளைப்படி நாங்கள் ஆடேலுமோ? இல்லை. பிள்ளைகளுக்கும் தாய் தகப்பனுக்குமான உறவு பயப் படுகிற மாதிரி ஒரு நாளும் இருக்கக் கூடாது. அப்பிடி இருந்தால் அது நிலைக்காது. அதீத பாசம் வைச்சாலும் கண்மூடித்தனமாய் இருக்கச் சொல்லும். நல்லது கெட்டது பற்றின அவிப்பிராயம் துணிவாச் சொல்லுகிற நட்போடை இருக்கிறதுதான் நல்லது. அதுவும் அவர்களுடைய எல்லைக்கு உள்ள போகாமல் நிண்டு கொள்ளப் பழக வேணும்." என்றார் "TS".

"ம்." என்ற தாமோதரன் யோசனையில் ஆழ்ந்தார். "TS" அந்தக் கதையை மாற்ற விரும்பினார்.

"பொர்ணவூக்கு ஒரு இரவில மூடு விழா செய்து அந்த இரவே கார்டமூவனில விமானம் பறக்கத் தொடங்கீட்டுது. எப்பிடிச் செய்தவங்களோ எண்டு நினைக்க மலைப்பாய் இருக்குது. சில விஷயங்களை ஐரோப்பியர் செய்கிறது தொழில்நுட்ப முன்னேற்றத்தின்ரை மகிமையைக் காட்டுகிற மாதிரி இருக்கும்." என்றார் "TS".

"ஓ இனி வெளி நாட்டுக்குப் போகிறது எண்டாக் கன தூரம் போக வேணும்." என்றாள் மாலினி.

"இவங்கள் சில விஷயங்களை வெகு நுட்பமாய் பார்ப்பாங்கள். சத்தம் எண்டு ஒரே பிடியா நிண்டு ஒரு எயாப்போட்டையே எடுப்பிச்சுப் போட்டாங்கள்." என்றார் தாமோதரன்.

"சத்தம் மாத்திரம் இல்லை. சனத்தின்ரை போக்குவரத்தும் அதிகரிச்சிட்டுது. இனிச் சமாளிக்க முடியாது. அதுதான் புத்தியா மாத்தி இருக்குது. அதில ஒரு நன்மை. இனி அந்தப் பக்கம் சத்தம் இருக்காது." என்றார் "TS".

"அருள் குடும்பம் வந்தவையே? பார்த்துக் கனநாள் ஆகீட்டுது." என்றாள் மாலினி.

"இப்ப எங்க அவைக்கு நேரம்? அவை இப்ப ஒரே விசி. கிழமை நாளில வேலை. சனிக்கிழமை தமிழ் பள்ளிக்கூடம். ஞாயிற்றுக் கிழமையும் வேத்டே, கலை நிகழ்ச்சி எண்டு ஓடுவினம். இல்லாட்டி படம் போடுவாங்கள். அதுவும் இல்லாட்டி வீடியோக் கொப்பி

எடுத்து வருவினம். மொத்தத்தில ஆட்களை ஆட்கள் சந்திச்சுக் கதைக்கிற நேரம் சுருங்கிக் கொண்டே போகுது. பணத்தை மையமா வைச்ச ஐரோப்பிய வாழ்க்கை இப்பிடித்தான் இருக்கும்." என்றார் "TS".

"அதைவிட அண்ணை ஒருத்தரை ஒருத்தர் பார்த்து, போட்டிக்கு நேர காலம் இல்லாமல் உழைக்கிறவையும் இருக்கினம். இரண்டு வேலை மூண்டு வேலை எண்டு செய்கிறதில மற்றது ஒண்டுக்கும் நேரம் கிடைக்கிறதே இல்லை." என்றாள் மாலினி.

"ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு பயித்தியம். அவரவர் விரும்பின பயித்தியமா இருக்கிறதுக்குச் சுதந்திரம் உள்ள நாடு. எப்படித் தாங்கள் இருக்க வேணும் எண்டதைச் சுயமா முடிவு செய்யலாம். அதுதான் இந்த நாட்டின்ரை நடைமுறை." என்றார் "TS".

"ம்... விளங்குது. ம்... சரி உந்தப் பிரச்சனையை விட்டாலும் நாட்டுப் பிரச்சனையும் அப்பிடியும் இப்பிடியுமாப் போகுது. தலதா மாளிகையில நடந்ததுக்குப் பிறகு தெற்காலை ஒண்டும் பெரிசா நடக்க இல்லை." என்று ஆதங்கப்பட்டார் தாமோதரன்.

"என்னவோ செய்யிறாங்கள். இங்க இப்ப அனுதாபத்துக்குப் பதிலா கண்டு கொள்ளாமல் இருக்கிறாங்கள். இதைவிட மோசமாகாமல் இருக்க வேணும்." என்றார் "TS". அவர் முகத்தில் எப்போதும் இல்லாத சோகத்தின் அப்பல்.

"இவங்கள் சப்போட் பண்ணினால் என்ன, பண்ணாட்டி என்ன, புலியளை யாராலும் உசுப்ப ஏலாது. பயப்பிடாதேங்க... எங்களுக்குத் தமிழீழம் நிச்சயம் கிடைக்கும்." என்றார் தாமோதரன். அது இனிக் கிடைத்தும் என்ன பயன் என்பதாக "TS"சிற்கு ஏனோ தோன்றியது. அவர் மேற்கொண்டு அதைப் பற்றிப் பேச விரும்பவில்லை.

அத்தால் அங்கு திடீர் அமைதி உண்டாகியது. சமையல் அறையில் அலுவல்களை முடித்துவிட்டு வந்த புவனலோசினி,

"சாப்பிடுவமே?" என்றாள்.

"இவ்வளவு நேரமும் வெளிய வராமல் உந்த அலுவலே நடந்தது. நாங்கள் உங்களுக்கு மட்டும் சமைக்கிறியள் எண்டு இருந்தம். உங்களுக்கு இது தேவையில்லாத சிரமம்." என்றாள் மாலினி.

"அதிலை ஒண்டும் சிரமம் இல்லை. சாப்பாடு குடுக்கிறது எப்பவும் சந்தோஷமான விஷயம் எனக்கு எண்டு உங்களுக்குத் தெரியும் தானே?" என்றாள் புவனலோசினி.

"அப்ப எழும்புங்க சாப்பிடுவம்." என்றார் "TS". அதை அடுத்து எல்லோரும் எழுந்து கைகழுவச் சென்றார்கள்.

# 13 திருநாளைப் போவார்கள்

சர்வ ஈஸ்வரனான சிவபெருமான். முற்றும் அறிந்த முழு முதற் கடவுள். சிதம்பரம் அந்தச் சைவ மூர்த்திக்கு உரிய புண்ணிய ஸ்தலம். கடவுள் அருள் பெறுவதற்கு அவா இருந்தும் நந்தனார் குலத்தை எண்ணிக் கோயிலுக்குள் நுழைய அஞ்சுகிறார். பிறந்த குலத்திற்கேற்ப வழிபடுங்கள் என்கிறார்கள் சில சுயநல வேதாந்திகள். இல்லை வேதாந்தம் தெளிவித்து இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்த சிவனும் அப்படித்தான் சொன்னானா? சிவன் பிரபஞ்சத்தைப் படைக்காது மனிதன் சிவனைப் படைத்திருந்தால் மனிதன் எதைச் சொல்வானோ அதையே சிவனும் சொல்வான் என்பதை நிரூபித்தார்களா?

பயணம் போவதா? விடுவதா? போக முடியுமா? இல்லையா? என்கின்ற தடுமாற்றத்தில் கழியும் நாட்கள். குலம் தடுக்க, மனம் உந்த, அவரின் தடுமாற்றத்தின் தொடர்ச்சி. அத்தால் அவருக்கு உண்டான பெயர் அது. இறுதியாகப் போகிறார். அந்தணர் உலகத்தின் வேத ஒலியையும், வேள்விப் புகையையும் கண்டு அச்சம் கொள்கிறார். சிவன் கனவில் தோன்றி குல தோஷம் நீங்க அக்கினி ஸ்ஞானம் செய் என்கிறான். நீயே தோஷம் உள்ள குலம் உண்டு என்கிறாயா சிவபெருமானே? மெஞ்ஞானம் மிகுதிக் கதையைச் சொல்லும். விஞ்ஞானம் மிகுதிக் கதையை ஏற்காது. அக்கினிக்குள் புகுந்தவன் கரிக்கட்டையாய் அல்லது சாம்பலாய் வருவது இவ்வுலக ஞானம். இரண்டும் இரண்டும் நான்குதான். இரண்டும் இரண்டும் நாலே இல்லை என்பது அவர் ஞானம். இரண்டும் இரண்டும் இரண்டு ஆகலாம் என்பதும் உண்மை. மெஞ்ஞானம் சொல்லியபடி அவர் அரணைக் கண்டார். பின்பு கரைந்தார்.

முக்கண்ணா... தீ ஆனவன் நீ. தீயில் இருந்து காத்த கடவுளும் நீ அல்லவா? பின்பு ஏன் மனிதப் பிறப்பில் தோஷம் உண்டு என்று சொன்னாய்? உன் படைப்பையும் மனித வெறி காவு கொண்டதா? அதன் புனிதத்தைக்

கரைத்து தோஷத்தை நஞ்சாய் கடைந்து எடுத்து விட்டதா? அதனால் நீ கல்லாய் சமைந்தாயா?

*

அருளும் சொரூபாவும் அன்று அர்த்த நாதீஸ்வரரான நினைவு நாள். அன்னியோன்னியமாக இருக்கும் அல்லது இருப்பதாகக் காட்டிக் கொள்ள விரும்பும் கணவன் மனைவி அதையும் கொண்டாடாமல் விடுவது இல்லை. ஊரில் எதை எல்லாம் கொண்டாடாமல் தவிர்க்க முடியும் என்று பார்த்த பொருளாதாரம். இங்கு அது தலை கீழாக மாறியதால் இப்போது எதை எல்லாம் கொண்டாடலாம் என்று பார்க்கும் காலம் இது. அருள் இதற்குப் பின்னடித்தாலும் சொரூபா இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்க மாட்டாள். காதலித்துக் கலியாணம் செய்பவர்கள் ஒரு வகை. கலியாணம் செய்த பின்பு காதலிப்பவர்கள் இன்னொரு வகை. சொரூபா இரண்டாவது வகையாக. அருள் மேல் உள்ள உறவால் மையல் கொண்டு அவனைக் கண்ணாளனாக எண்ணி உருகுபவள். அவளுக்கு இந்தக் கொண்டாட்டம் பெரிய வேலை இல்லை. சமையல் சாப்பாடு வீட்டில் இல்லை. பலகாரமும் கேக்கும் அவளது பொறுப்பாகியது. புவனலோசினியின் துணையோடு அதைச் செய்து முடித்து விட்டாள். பொரித்த சாப்பாடு அதிகமாகத் தேவையில்லை என்றும் அதனால் கொலஸ்ரோல் ஏறிவிடும் என்றும் சிற்றுண்டி வகைகளின் விரிவு படுத்தலைத் தடைசெய்யும் சமாதானமும் சொல்லிக் கொண்டாள். அவள் சமாதானத்திலும் உண்மை இருப்பதாகத் தற்போது ஊடகங்கள் கதறுகின்றன.

திருமண நாளை நினைவுகூரும் போது உறவின் முதன் நாள் நடந்ததை நினைத்து சந்தோஷப் படலாம். அந்த முதன் நாள் ஒருவருக்கும் வாழ்வில் திரும்பி வந்து விடுவது இல்லை. அது ஒரு முறை முகம் காட்டி அண்ட வெளியில் மறைந்தால் மறைந்ததுதான். அந்த நினைவுகள் மாத்திரம் மனிதன் பிரபஞ்சத்தின் எந்த மூலைக்குச் சென்றாலும் அவனை இடை விடாது தொடரும். அதனால் அந்தக் கணங்களை அனுபவிப்பதற்கு என்றே ஒரு சடங்கைத் தமிழர்கள் கண்டு பிடித்தார்களோ என்னவோ? அந்த முதன் நாளில் அந்தக் கணங்களில் ஏற்படும் அலாதியான, திகிலான, இன்பமான, பதட்டமான,

எதிர்பார்ப்பான கணங்கள் மீண்டும் தலைகாட்டாவிட்டாலும் இருவருக்கும் இடையில் இருக்கும் அன்பு மட்டும் மலை போல வளரும். அது வளர்ந்திருக்கும் தருணத்தின் பாசப் பிணைப்பு வேறு விதமானது. அங்கே திகிலுக்கு இடம் இருக்காது. பதட்டம் இருக்காது. ஒருவரைப் பற்றி மற்றவருக்கு நன்கு தெரிந்து இருக்கும். பயத்திற்குப் பதில் நட்பிருக்கும். இந்த வளர்ச்சிகூட எல்லோரிடமும் இருக்க வேண்டும் என்று இல்லை. புறநடையாகப் போகும் பல சோடிகளும் உண்டு. அது விபத்துக்களின் கோர்வையில், அமீனோ அமிலத்தின் சேர்க்கையில் என்பது போல அமைந்து விடுவதும் உண்டு.

அருளின் வாழ்வு சொரூபாவோடு அன்பு மயமாக அமைதியாகக் கழிந்தது. ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவில் ஏற்படும் விரிசல் அவன் வாழ்வில் தீண்டியது இல்லை. தமிழராகப் பிறந்தவர்கள் பலர் மாட்டிக் கொண்டு முழிக்கும் வேறு ஒரு பிரச்சனைக்குள் அருளும் மாட்டிக் கொண்டான். அவன் அதை யாரிடமும் இதுவரை சொல்லியதே இல்லை. உதவி என்றே அவன் அதை முதலில் நினைத்தான். அது பின்பு உபத்திரபம் ஆனதாய் தவித்தான்.

*

விருந்தினரை ஒரு மணி போல் மத்தியானச் சாப்பாட்டிற்கு வருமாறு அருள் அழைத்து இருந்தான். சாப்பாட்டை இரண்டு மணிக்குக் கொண்டு வருமாறு கடைக்காரனிடம் சொல்லியும் வைத்திருந்தான். குறித்த நேரத்திற்கு நிகழ்ச்சியைத் தொடங்கும் பாவத்தைத் தமிழர்கள் நிச்சயமாகச் செய்வது இல்லை. தனது விருந்தினர்களில் பலர் அப்படித்தான் என்பது அருளுக்கு ஐயம் தெளிவுறத் தெரியும். அதைப் போல விருந்தினருக்கும் ஒரு மணி என்று சொன்னால் இரண்டு மணிக்குத்தான் சாப்பாடு வரும் என்பதும் தெரியும். மொத்தத்தில் ஏமாற்றுவதாய் ஏமாறுவது எங்கள் இயல்பாகி விட்டது. இல்லை மனித இயல்பாகி விட்டது என்றே சொல்லலாம்.

அருள் கூறியிருந்த நேரத்திற்கு அரை மணித்தியாலம் பிந்திப் புவனலோசினியும் "TS"சும் வந்தாலும் அவர்களே எல்லாருக்கும் முந்தி வந்த விருந்தாளிகள். அப்போது சொரூபா கண்ணுக்கு மை தீட்ட அருள் குளித்துக்

கொண்டு நின்றான். அருள் நிர்வாணமாய் நின்று குளிக்கும் போது உள்ளளே போவது பற்றிச் சொரூபாவிற்கு இப்போது எந்தக் கூச்சமும் கிடையாது. ஆரம்பத்தில் அவள் குளிப்பதற்கு அந்தரப்பட்டு, அரைக் கட்டுக் கட்டி, அவஸ்தைப்பட்டு, அதுவே இப்போது சுகமான குளியல் என்கின்ற உண்மை அனுபவத்தில் விளங்கி விட்டது. அருள் குளிக்கும் போது கதவைத் திறந்து கொண்டு வரும் சொரூபாவிற்கு அகலிகாவும் திடீரெனத் தன் பின்னால் வந்து விடுவாளோ என்பது மட்டுமே பயம். அவள் தொலைக்காட்சி பார்க்கத் தொடங்கினால் லேசாக எழுந்து வரமாட்டாள் என்பது சொரூபாவிற்கு இப்போது துணிவைக் கொடுத்து இருந்தது.

சொரூபாவின் மை தீட்டல் முடியும் முன்பே வாசல் மணி அடித்து விட்டது. அவசர அவசரமாய் மையைக் கோடாய் இமை விளிம்பில் இழுத்துவிட்டு, அதே அவசரத்தில் கதவடிக்கு ஓடி, அழைப்பை எடுத்து, யார் என்பதைக் கேட்டுவிட்டு வெளிக் கதவைத் திறந்த பின்பு, அவர்களின் வருகைக்காகக் கதவோடு காத்து நின்றாள். யாரோ வருகிறார்கள் என்பதை அறிந்த அகலிகாவும் அங்கே விடுப்புப் பார்க்க வந்தாள்.

"TS"சும் புவனலோசினியும் மேலே வந்தார்கள். மேலங்கியைக் கழற்றிக் கொழுவிய வண்ணம்,

"நிறைய ஆட்கள் வந்து இருப்பினம் எண்டு நினைச்சுக் கொண்டு வந்தா இங்க ஒருத்தரையும் காணேல்லை." என்றாள் புவனலோசினி.

"அக்கா உங்களுக்கு ஒண்டும் தெரியாத மாதிரிக் கதைக்கக் கூடாது. அது ஒரு மணிக்கு எண்டா இரண்டு மணிக்குத்தான் வரத் தொடங்குவினம். நீங்கள் வெள்ளன வந்திட்டீங்க. கொஞ்ச நேரம் இருந்து பாருங்க நான் சொல்லுகிறது சரியா இல்லையா எண்டு தெரியும்." என்றாள் சொரூபா.

"நானும் இதைத்தான் சொரூபா இவருக்குச் சொன்னான். இவர் எங்க கேட்டாத் தானே? எப்பவும் பிந்திப் போகிறது எண்டு இண்டைக்கு பதட்டத்தில இழுத்துக் கொண்டு வந்திட்டார். எங்க... அருளைக் காணேல்லை. குளிக்கிற சத்தம் மட்டும் கேட்குது." என்றாள் புவனலோசினி.

"ஓம் அக்கா... அவர் குளிக்கிறார். இப்ப வந்திடுவார்." என்றாள் சொரூபா.

"நானும் என்னை மாற்றிக் கொள்ளும் காலம் வந்தாகி விட்டது." என்றார் "TS".

"இப்பவாவது அந்த ஞானம் வந்திச்சுதே? இனி எனக்கு விடிவு காலம்தான்." என்றாள் புவனலோசினி.

சொரூபா தேநீர் தயாரிப்பதற்காகச் சமையல் அறைக்குச் சென்றாள். அகலிகா அலங்காரமற்று அரை அம்மணமாக இருப்பதைக் கண்ட புவனலோசினி எழுந்து தானும் சமையல் அறைக்குச் செல்ல "TS" தொலைக்காட்சியை இயக்கி ஒவ்வொரு அலைவரிசையாக மோப்பம் பிடித்தார். சமையல் அறைக்குள் வந்த புவனலோசினியைக் கண்ட சொரூபா,

"என்னக்கா... இங்க வந்திட்டியள்?" என்றாள்.

"ஏன் வரக்கூடாதே? நீ போய் அகலிகாவை வெளிக்கிடுத்து சொரூபா. நான் ரீ போட்டு வைக்கிறன். இனி ஆட்கள் வரவரக் குடுக்கத் தானே வேணும்? சீனியையும் ரின் பாலையும் எடுத்துத் தந்திட்டுப் போ. பிளேன்ரீயும் வேணுமே?" என்றாள் புவனலோசினி.

"ஒரு கொஞ்சம் போட்டு வையுங்க அக்கா. யாரும் கேட்டாலும் கேட்பினம்." என்றாள் சொரூபா.

புவனலோசினி தேநீர் தயாரித்து முடியும் போது அருள் வெளிக்கிட்டு வந்து சமையல் அறையை எட்டிப் பார்த்தான். பின்பு,

"என்னக்கா உங்களை இப்பவே அடுக்களைக்க விட்டிட்டாள் போல இருக்குது." என்றான்.

"இல்லை அருள்... அவ அகலிகாவை வெளிக்கிடுத்துகிறா. நான் ரீ போட்டு முடிஞ்சுது. இப்ப வாறன். "TS" அண்ணா கோலுக்க தனியா இருக்கிறார்." என்றாள். அருள் உடனே கோலிற்குச் சென்றான்.

"உங்களை வெயிற் பண்ண வைச்சதுக்குச் சொறி அண்ணை. நாங்கள் இந்த விஷயத்தில தமிழராவே இருக்கிறம்." என்றான் அருள்.

"நான் இந்த விஷயத்தில இண்டைக்குப் பிழைவிட்டு உங்களுக்கு எல்லாம் சிரமம் தந்ததுக்கு நீங்கள்தான் என்னை மன்னிக்க வேணும்." என்றார் "TS".

"அண்ணை தண்டனை தரலாம். அதுக்கு தூக்கிலேயே ஏத்தக் கூடாது." என்றான் அருள். இருவரும் சிரித்துக் கொண்டார்கள்.

சிறிது நேரத்தில் ஒவ்வொருவராக வரத் தொடங்கினார்கள். சாப்பாட்டைக் கருத்தில் வைத்துக் கொண்டு தேநீர் மாத்திரமே கொடுக்கப் பட்டது. தேநீர் குடித்தால் உடனே சாப்பிட முடியாது என்பதால் சாப்பாட்டை இன்னும் அரை மணித்தியாலம் தள்ளி மூன்று மணிக்குக் கொண்டு வருமாறு கடைக்காரருக்கு கூறியாகிற்று. அப்போது குடித்த தேநீரும் சமித்து துடிக்கும் பசி மீண்டும் வந்து விடும் என்பது அருளின் கணிப்பு. சொரூபாவின் கடுமையான எதிர்ப்பால் குடிவகை எதுவும் பாவிப்பதில்லை என்கின்ற முடிவில் அருளுக்கு ஏக வருத்தம். இருந்தாலும் குடும்ப அமைதி கருதி அவன் அதை சகித்துக் கொண்டான்.

சண்முகன் வந்து சோபாவில் இருந்தவுடன் "TS"சைப் பார்த்து,

"அண்ணை தெரியுமே? கிளிநொச்சியைப் பெடியள் பிடிச்சிட்டாங்கள் எல்லாமே? ஆயிரக் கணக்கில ஆமி செத்துப் போச்சுதாம். இப்பிடியே பிடிச்சாங்கள் எண்டா எங்கடை கனவு கிட்டடியில ஒரு நாளைக்கு நனவு ஆகீடும்." என்றான் சண்முகன். அப்போது மனோகரியோடும், சுகனோடும் உள்ளே வந்த சிவா அதைக் கேட்டுவிட்டான். அவனுக்குத் தன் கருத்தைச் சொல்லாது இருந்தால் தலை சுக்கு நீறாக வெடித்து விடும் என்கின்ற பாண்டு பெற்ற சாபத்தைப் போன்ற அவஸ்தை. சிவா உள்ளே வருவதைப் பார்த்துவிட்டுச் சண்முகனின் செய்திக்கு மாற்றுக் கருத்துச் சொல்வதை "TS" உட்பட அனைவரும் தாமதப் படுத்தினார்கள். சண்முகன் உள்ளே வந்தான்.

"கிளிநொச்சியைப் பிடிச்சதுக்குப் போத்தில் உடைச்சுக் கொண்டாடத்தான் வேணும். பெரியதொரு இராணுவ வெற்றி இது அண்ணை. கொரில்லாக்கள் மரபு ரீதியான இராணுவமாய் மாறியதின் பரிணாமம். ஆயிரக் கணக்கில

இலங்கை இராணுவத்தை இழக்கிறது சிங்கள அரசுக்குப் பெரும் தலை இடிதான். அது சிங்கள மக்களிட்டை இழந்த இராணுவத்தைப் பற்றி எப்பிடிச் சமாதானம் செய்யும் எண்டது பெரும் கேள்விதான். அதே வேளை நாங்கள் வெற்றி பெற்றாலும் இரண்டு பிழை செய்து இருக்கிறம்." என்று சிவா தொடங்க,

"சிவா இவ்வளவு நேரமும் அத்தி பூத்தாப் போல ஒழுங்காகத்தானே கதைச்சாய்? பிறகு ஏன் உனக்கு உந்தக் குறை சொல்லுகிற புத்தி திரும்ப வருகுது?" என்றான் சண்முகன்.

"சண்முகா உன் முகத்தை ஒரு முகமாக்கி நான் என்ன சொல்ல வாறன் எண்டுகிறதைக் கவனமாய் கேட்டிட்டு உன்னுடைய பதிலைச் சொல்லு... நான் என்ன சொல்ல வாறன் எண்டால், இலங்கை அரசு எப்பிடி ஒரு மரபு ரீதியான இராணுவத்தை வைச்சு இருக்குதோ அப்பிடியே பெடியளும் ஒரு மரபு ரீதியான இராணுவத்தை உருவாக்கி இருக்கினம். தங்களுடைய கொரில்லாப் போராட்டத்தை மாற்றி மரபு ரீதியான இராணுவப் போராட்டமா அமைச்சு இருக்கினம். கொரில்லாப் போராட்டத்தின் மூலம் வெற்றி அடைகிறதுக்கு ஆயுத பலம், ஆட் பலம் அதிகம் தேவை இல்லை. எவ்வளவு நீண்ட காலத்திற்கு அரசின் செயற்பாட்டிற்கு அது தொல்லையாக இருக்குது எண்டதுதான் முக்கியம். மரபு ரீதியான இராணுவமாய் மாறினால் அதுக்கு ஆட் பலமும், ஆயுத பலமும் மிகவும் முக்கியம். அது இரண்டுமே எவ்வளவு காலம் மல்லுக்கட்டலாம் எண்டுகிறதை நிர்ணயிக்கும். இந்த இரண்டில ஏதாவது ஒண்டில தொய்வு ஏற்பட்டால் கடதாசியில கட்டின வீடு மாதிரி எங்கடை போராட்டம் புஸ்வானம் ஆகும். அது பல சந்தர்ப்பத்தில நடக்கலாம். பெடியளுக்கு வாற ஆயுதத்தை தடுக்கிறதால அவங்களை ஆயுத பலம் இல்லாத இராணுவமாய் மாற்றலாம். அதைச் செய்கிறதுக்கு இலங்கை அரசு மும்மரமாய் முயற்சி செய்யும். அல்லது இலங்கை அரசு அதி நவீன ஆயுதத்தை இன்னும் அதிகமாக் கொள்வனவு செய்து தன்னுடைய ஆயுத பலத்தைப் பன்மடங்கு ஆக்கலாம். போராட்டத்திற்கு வெளிநாட்டுப் பணம் இருந்தாலும் போராட்டத்திற்கான ஆட்களின் வலு எப்பவும் பெடியள்

பக்கம் பிரச்சனை ஆகத்தான் இருக்கும். அதை இந்த மரபு ரீதியான இராணுவ மாற்றம் ஆபத்தான ஒரு கட்டத்திற்கு இட்டுச் செல்லலாம். சண்முகா, இண்டைக்கு நாங்கள் போத்தில் உடைச்சுக் கிளிநொச்சி வெற்றியைக் கொண்டாடலாம். சிங்கள அரசும் அதே மாதிரிக் கொண்டாட வேணும் எண்டுதான் முயற்சி செய்வாங்கள். மரபு ரீதியான இராணுவத்தை வளப்படுத்துகிற வசதி பெடியளை விட அரசுக்கு அதிகமாகவே இருக்கும். பெடியள் தாக்குதலை எதிர்கொள்ளுகிறது எப்ப எண்டுகிறதுதான் இப்ப கேள்வி. அப்ப பெடியளுக்கு அரசைவிட வலு இருக்க வேணும். அதிலதான் இராணுவ வெற்றி தோல்வி தங்கி இருக்கும். அதால எங்களுக்கு இப்ப வந்த வெற்றி மாதிரிப் படு தோல்விகளும் திடீரென வரலாம். அதுக்கு முக்கியமா இந்த மரபு ரீதியான இராணுவ மாற்றம் ஒரு காரணமாய் அமையும்." என்றான் சிவா.

"சும்மா இரு சிவா. நீ எப்பதான் அவங்கள் செய்கிறதைச் சரி எண்டு சொல்லி இருக்கிறாய்? இது தமிழற்ற வெற்றி. இதையே உன்னால ஏற்றுக் கொள்ள முடியாட்டி நீ என்ன மனிசன் சிவா? நீ பேசாமல் கட்டுரை எழுதிக் குடுத்தி எண்டா உந்தப் புலிக்கு எதிரான நெற்றில போடுவாங்கள்." என்றான் சண்முகன். அவனால் சிவா இப்போதும் குறை சொல்வதைத் தாங்க முடியவில்லை. தோல்வி வரும் போது குறை சொல்லுகிறார்கள் என்றால் வெற்றி வந்த போதும் குறை சொல்வார்களா என்கின்ற எண்ணம் அவனைக் கொதி கொள்ள வைத்தது.

"நிறைய நெற்றில வியாபாரத்திற்காய் ஆதரவாய் புளுகித் தள்ளுகினம். அதையே சனங்களும் உண்மை எண்டு நம்புதுகள். உண்மை என்ன எண்டா சண்முகா... நான் அந்தரத்தில இதைச் சொல்ல இல்லை. இல்லாட்டிப் பேப்பரில பிழைப்புக்காகப் பொய்யை மெய் எண்டு பக்கம் பக்கமா உழுத்துப் போன வரலாற்றைக் காட்டி எழுதுகிறதோ, பேசித் திரிகிறதோ என்னுடைய எண்ணம் இல்லை. எனக்குத் தெரிஞ்ச சிற்றறிவுக்கு உட்பட்ட இராணுவ ஞானம் இது. இராணுவத்தைப் பொறுத்தவரை தாக்குதலை வெற்றியாகச் செய்கிறதுக்கான சந்தர்ப்பம் அதிகம். ஆனா... ஒரு இடத்தை நிரந்தரமாய் பாதுகாக்கிற

வேலை சரியான கஸ்ரம். பெடியள் இடத்தைப் பிடிச்சுக் கொண்டு போகிறதால தாக்குதல் செய்கிற சுகமான கட்டத்தில இருந்து கடினமான பாதுகாப்பு எண்டுகிற அந்தக் காரியத்துக்கு உள்ள காலடி எடுத்து வைச்சிருக்கினம். இது ஒரு சூதாட்டம் மாதிரி. வெற்றி ஆகினால் உச்சம்தான். தோல்வி ஆகினால் தமிழற்ற இருப்பே கேள்விக்குறி ஆகும். இரண்டுக்கும் இடையில ஏதாவது பேச்சுவார்த்தையில பிரச்சனையைத் தீர்த்தால் எங்களுக்கும் அரசியல் சாணக்கியம் தெரியும் எண்டு காட்டலாம். இதுக்கு எல்லாம் காலம்தான் பதில் சொல்ல வேணும். எனக்கு இதைக் கதைக்கிறதுக்கு எந்த நுணுக்கமான ஞானமும் கிடையாது. சும்மா மனசில தோன்றினதைச் சொல்லுகிறன். அவ்வளவுதான். இந்தியாவை எதிர்த்துக் கொண்டு நிரந்தரமாக ஒரு தேசத்தை தனித்து நின்று பாதுகாப்பது நடக்கிற விசயமாக எனக்குத் தெரிய இல்லை." என்றான் சிவா.

"அங்க இருக்கிற சனம் இப்பவும் வெளிநாட்டை வர வேணும் எண்டு தானே நிக்குதுகள். என்ரை ஒண்டுவிட்ட தம்பி ஒருத்தன்தான் வெளிநாட்டை வரவேணும் எண்டு வீட்டில ஆக்கினைக் கட்டி சின்னம்மா என்னை எடுக்கச் சொல்லிச் சத்தியாக்கிரகம் இருந்து, சரி அவனை எடுக்கிறன் எண்டு சொன்னதுக்காக எனக்கு ஒரு தொகை செலவு. இன்னும் அவன் வந்த பாடு இல்லை. போகிற ஏயாப்போட் எல்லாம் அவன்ரை மூஞ்சையைப் பார்த்த உடனேயே கள்ளன் எண்டு பிடிச்சுப் போடுவாங்கள் போல இருக்குது. திரும்பவும் போய் நிண்டு கொண்டு காசு எண்டுவான். காசு என்ன இங்க மரத்திலையா காய்க்குது? காய்க்காட்டியும் காய்க்கிறது ஆகத்தான் அவங்கள் நினைக்கிறாங்கள். சட்டவிரோதமாய் சம்பாதிக்கிறவங்கள் சிலர் கொண்டுபோய் அங்க விசுக்கிற விசுக்கில எல்லாரும் அப்பிடித்தான் சம்பாதிக்கிறாங்கள் எண்டும் சிலர் கஞ்சனா இருக்கிறதாலதான் காசு தாராங்கள் இல்லை எண்டும் ஒரு அவிப்பிராயம் அங்க இருக்குது. எங்களால சட்டவிரோதமாய் சம்பாதிக்க முடியாது. எங்களால அவங்கள் நினைக்கிற மாதிரிக் காசை விசுக்கவும் முடியாது. எவ்வளவு உதவி செய்தாலும் கடைசியில நாங்கள் கெட்ட பெயர் கேட்கிறதுதான் மிச்சம். அதோடை சனம் இப்பிடி ஓடினால் போராட்டம்

என்ன வாகும். அதே வேளை அதைச் சொல்லுகிறதுக்கு எங்களுக்கு என்ன தார்மீக பலம் இருக்குது எண்டும் யோசிக்க வேணும்?" என்றான் அருள்.

"அனுப்பிறன், அனுப்பிறன் எண்டு காசைப் பறிக்கிறதுக்கும், ஏமாத்துகிறத்துக்கும் ஏகப்பட்ட ஏயென்சிமார். அவங்கள் என்ன உழைப்பு உழைக்கிறாங்கள்? அப்பிடி வாற காச என்ன செலவு செய்கிறாங்கள். வெளிநாட்டை வரவேணும் எண்டதுக்காகக் கேட்ட காசைக் குடுக்கச் சனம் றெடியா இருக்குது. அப்பிடிக் குடுக்கிறதுக்கு ஒண்டில் நகையை அல்லது சொத்தை விக்குங்கள். இல்லாட்டி வெளிநாட்டில இருக்கிறவையிட்ட கேட்குங்கள். அதிஸ்ரம் உள்ளவன் ஒரு தரத்தில வந்திடுவான். சறுக்க வெளிக்கிட்டா அவன் செலவழிக்கிறதை இங்க வந்து சம்பாதிக்கவே அவற்றை அரை ஆயுள் முடிஞ்சு போயிடும். வெளிநாட்டை வரப் போகிறன் எண்டு கேட்கேக்கையே கட்டன் றையிற்ரா கதைச்சிட வேணும். இல்லாட்டி அருள் அண்ணை மாதிரி குடுத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். உந்தக் காசோடை தெற்கில ஒரு பெட்டிக் கடை போட்டு இருந்தா இண்டைக்கு அவர் நாலு பேருக்கு வேலை குடுக்கிற முதலாளி ஆகி இருக்கலாம். என்ன செய்கிறது? மற்றவையைப் பார்த்துப் பார்த்து அங்க இருக்கிற சனங்கள் வெளிநாட்டுப் பயித்தியம் பிடிச்சு அலையுதுகள்." என்றான் நிமலன்.

"ஓம் நிமலன்... உந்த வெளிநாட்டுப் பயணம் எண்டுகிறது திருநாளைப் போவார் மாதிரியே. அது இண்டைக்குப் போகிறன் நாளைக்குப் போகிறன் எண்டு இழுபடும். ஏஜென்சி அதுக்கு இதுக்கு எண்டு காசு கறந்து சுதி பண்ணுகிறதில குறியா இருப்பான். அதுவும் போய் இடையில திரும்பி வந்தால் காசு இளக்காமல் அலுவல் நடக்காது. ஒரு பெரிய முதலைப் பாவிக்கத் தெரியாமல் யாரோ எவனோ கொள்ளை அடிக்க விடுகிற மாதிரி இருக்குது. நாங்களே ரிக்கெற்றை எடுத்துக் கொண்டு வாறது எண்டா ஒரு கொஞ்சக் காசுதான் முடியும். ஆனா... பாஸ்போட் அலுவல்தான் கஸ்ரம். அவங்கள் அதைச் செய்கிறதுக்கு இப்பிடி அறுக்கிறாங்கள். இந்தப் பிரச்சனை எப்ப தீருமோ தெரிய இல்லை. இவ்வளவத்தையும்

செலவழிச்சுப் போட்டு திரும்பிப் போய் நாட்டில நில் எண்டாலும் அவன் கேட்கப் போகிறது இல்லை." என்றான் அருள்.

"நாட்டை விட்டு வெளியேறி வெளிநாட்டை ஓடி வாறதும், குடும்பமும், உறவுகளும் மட்டும் நல்லாய் இருக்க வேணும் எண்டு அவைய இங்க எடுக்கிறதும் எங்கடை சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளுகிற காரியம். எங்கடை சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளேக்க அங்க ஒரு இனமே யுத்தத்தில கரைஞ்சு போகுது எண்டு யாரும் கவலைப்படுகிறது இல்லை. சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ள வெளிநாட்டுக்கு வந்த நாங்கள் சும்மாய் இருக்க இல்லை. வெளிநாட்டில இருந்து பணத்தை அனுப்பி சுதந்திரத்தை வாங்கலாம் எண்டுகிற ஒரு திமிரான கற்பனை எங்களுக்கு. அதால பெருமையாகக் காசு அனுப்புகிறம். சில வேளை அதையும் சிலர் அழுது அழுது குடுக்கிறம். அது எப்பிடியோ ஆயுதம் ஆகுது. ஆயுதம் அங்க வேகமாக உயிரைக் குடிக்குது. அதுவும் தமிழர் அழிஞ்சு போகிறது பல மடங்காய் இருக்குது. கலவரத்தில நூறு, இரு நூறு இல்லாட்டி ஆகக் கூடினது ஆயிரம் சனம் எண்டு அழிஞ்சது உண்மை. இப்ப பல ஆயிரம் கணக்கு இல்லாது அழியுது. இது இலச்சக் கணக்கான மனித அழிவுகளோடும் அதைவிட இலச்சக் கணக்கான மனிதர்களின் வெளியேற்றத்தோடும் என்ன மாதிரியான ஒரு முடிவில போய் நிக்கப் போகுது எண்டு தெரியாது? இந்தியாவிட்ட ஒரு திட்டம் இருக்கும். இலங்கையிட்டை வேறை ஒரு திட்டம் இருக்கும். எங்களிட்டை ஒரு கற்பனை இருக்குது. ஆனா... உலகமயமாக்கலில எந்த அரசியல் எப்பிடித் திரும்பும் எண்டு யாருக்குத் தெரியும்? அது எங்களுக்கு எப்பிடியான முடிவைக் கொண்டு வரும் எண்டு யாருக்குத் தெரியும்? ஆயுத முனையிலைதான் அதிகாரம் பிறக்குது எண்டு அறப் படிச்சவை சொல்லுகினம். உண்மைதான்... பெரிசு பெரிசா ஆயுதம் வைச்சு இருக்கிறவங்களின்ரை முனையிலதான் பெரிசு பெரிசா அதிகாரம் தொங்குது." என்றான் சிவா.

சிவா கூறியதைக் கேட்டுச் சொரூபா சிரித்துக் கொண்டு எழுந்து போனாள். "TS"சும், அருளும், நிமலனும் சேர்ந்து

சிரித்தார்கள். அதைப் பார்த்த சண்முகனுக்குக் கோபம் வந்தது. சிவாவிற்கு எட்டிக் கன்னத்தைப் பொத்தி அறைய வேண்டும் போல் மனதிற்குள் ஆத்திரம் பொங்கிற்று. சிகிச்சைக்குப் பின்பும் சண்முகனுக்குக் கோபம் வந்தாலும் தன்னைக் கட்டுப்படுத்தப் பழகி வைத்து இருந்தான். அது அவனுக்கு இப்போது கை கொடுத்தது. தனக்காகவா சொல்கிறான்? அவன் பொதுவான விடயத்தைப் பற்றித் தானே கதைக்கிறான் என்று சமாதானம் அடைந்தான்.

"எல்லாரும் சந்தோஷமாய் இருக்கக் கூடிய இடத்தில பெடியளைப் பற்றிக் கதைக்காமல் இருக்கிறதுதான் நல்லது. சிலருக்கு எப்பிடி எண்டாலும் அவங்களில குறை கண்டு பிடிச்சாத்தான் நிம்மதி. "TS" அண்ணை நீங்கள்தான் இதுக்கு ஒரு கட்டுப்பாடு கொண்டுவர வேணும். பலருக்குப் பல விதமான கருத்து உள்ள ஒரு இடத்தில அவங்களைப் பற்றி நாங்கள் கதைக்காமல் இருக்கப் பார்ப்பம். இல்லாட்டித் தாமோதரன் அண்ணை மாதிரி ஒவ்வொருத்தராய் ஒவ்வொரு திக்கிலதான் போக வேண்டி வரும். நான் சொல்லுகிறது சரியா?" என்றான் ரூபன்.

"சிவா நீ என்ன சொல்லுகிறாய்?" என்றார் "TS" அதற்குத்தான் பதில் அளிக்காது.

"குளத்தோடை கோவிச்சுக் கொண்டு அது கழுவாமல் இருக்கிறது எண்டு சொல்லுவினம். அப்பிடி இருக்குது இது. நான் கதைக்கிறது யாற்றையும் தனிப்பட்ட விஷயம் பற்றினதா? இல்லை. நான் கதைக்கிறது அப்பிடி இருக்க அதை ஏன் உங்கடை சொந்த விஷயம் போல எடுத்துக் கொண்டு கோவிக்கிறியள்? நாலு விஷயத்தையும் கோவப் படாமல் கதைக்கத் தெரியாமல் மனிசருக்கு இடையில என்ன அபிவிருத்தி இருக்கும்? அப்பிடியான மனிசர்கள் சிந்திக்கவே தேவை இல்லையே? நான் வாற இடத்தில என்ரை மனசுக்குச் சரி எண்டு படுகிறதைக் கதைப்பன். நீங்கள் உங்கடை மனசுக்குச் சரி எண்டுகிறதை கதையுங்கோ. என்ரை பேச்சுச் சுதந்திரத்திற்குத் தடை போடுகிற மாதிரியான சூழ்நிலையில என்னால சஞ்சரிக்க ஏலாது. அதுக்கு நான் அடங்கவும் மாட்டன். நாங்கள் நாலையும் பேசுகிற அபிவிருத்தி உள்ள மனிசராய் இருப்பமா இல்லாட்டி யாரோ பேசுகிறதை மட்டும் கேட்கிற

சுயமாச் சிந்திக்கத் தெரியாத முட்டாள்களாய் இருப்பமோ? என்னால நிச்சயமாய் முழுமுட்டாளாய் இருக்க முடியாது." என்றான் சிவா.

"நோர்வேக்காரனிட்டை இருந்து படிச்சுக் கொள்ள வேண்டிய விஷயம் இது. இங்க இருந்து கொண்டு நாங்கள் மற்றவையின்ரை பேச்சுச் சுதந்திரத்தில தலையிடுகிறது நல்ல வளர்ச்சி இல்லை. பொறுமையும் சகிப்புத் தன்மையும் வேணும். அதோடை எந்த விஷயத்தையும் தனிப்பட்ட விஷயமா எடுத்துக் கொள்ளாமல் இருக்கப் பழக வேணும்." என்றார் "TS".

"நீங்களும் இப்ப கட்சி மாறீட்டியள் போல இருக்குது?" என்றான் சண்முகன்.

"அது உன்னுடைய கருத்து. நான் கட்சி மாற இல்லை. இது என்னுடைய கருத்து. அவரவர் கருத்திற்கான சுதந்திரம் அவரவருக்கு." என்றார் "TS".

"ஐயோ... எல்லாரும் தத்துவமாக் கொட்டுகிறியள். நாங்கள் சாப்பிடுவமே... பசிக்குது." என்றான் நிமலன். கவனம் சாப்பாட்டில் திரும்பியது.

பசி இங்கே தற்காலிகச் சமரசத்தை உண்டு பண்ணியது. காலம் என்னும் சூறாவளிக்குள் அகப்பட்ட மனிதப் பிண்டங்களின் விதி... அது நினைவுகளில் கோட்டை கட்ட அசுர வேகத்தில் காட்டாறாய் காலம் அள்ளிக் கொண்டு போகும் கோரம். எதுவும் நிரந்தரம் இல்லை என்பதே நிரந்தரம் என்பதை அறியாது கூத்தாடும் மனித ஜென்மங்கள். அதன் வயிற்றுப் பசி. அதற்காக அது படும் நித்த அவஸ்தை. அதைத் தீர்த்துக் கொண்டால் சிலருக்கு ஏற்படும் ஞானப் பசி. அதன் தேடல். வரம்புகள் கட்டிக் கொண்ட சமுதாயத்தின் வரம்புகளை உடைக்க நினைக்கும் ஆர்வம் அதில் சிலருக்கு. எல்லாம் இந்தப் பிரபஞ்சத்தில் தெளிக்கப்பட்ட தூசுத் துகள்களாகத் தோன்றுவதும் மறைவதும் தெரியாது தங்கள் ஆயுளை முடித்துக் கொள்ள... பேர் ஓசையோடு உருவான பிரபஞ்சம் மாத்திரம் கடவுளின் கற்பனைக்கு எட்டாத எல்லைகள் அற்ற விஸ்தீரணத்தை எட்டிக் கொண்டு இருக்கிறது.

# 14 சரிஸ்காவின் சன்னியாசம்

வானம் திறந்து மென்மையான மல்லிகைப் பூக்களை வாரி இறைத்து வாழ்த்தியதாகப் பூமி மீது வெண் பனி அடர்த்தியாக பரவிப் படர்ந்தது. அது பொடி செய்து போடப்பட்ட வெள்ளி வைரங்களாக குளிரில் இடைக்கிடையே அங்கங்கே மின்னின. பனி கொட்டும் சடங்கிற்காகப் பூமியை மேகப் போர்வை மூடி முக்காடு போட்டுக் கொண்டது. அத்தால் குளிர் சற்றுக் குறைந்து இருந்தாலும் முந்தைய நாள் வானத்தை விட்டு இறங்கிய குளிரின் தாக்கத்தை மறவாத "TS" மொத்தமான மேலங்கியை வேலைக்கு அணிந்து சென்று இருந்தார். அந்த மேலங்கியின் மொத்தத்திற்குச் சிறிய பொருட்களை அதற்குள் வைத்தால் அதைத் தேடிப் பிடிப்பது பெரும் அவஸ்தை. அங்கும் இங்கும் அமர்த்திப் பார்த்து ஓ இங்குதான் இருக்கிறது எனக் கண்டு பிடிக்க வேண்டும். அத்தோடு காலம் முதுமையை இயற்கையின் விதியாக எழுதிச் செல்லும் தயவு துளியும் அற்ற செயலால், "TS"சிற்கு இப்போது இருந்து இருந்து விட்டு, தான் எங்கே எதை வைத்தேன் என்கின்ற தடுமாற்றம் உண்டாகி விடுகிறது. அப்போது எல்லாம் புவனலோசினி பணி ஆள் ஆகி அவரது பிரச்சனையைத் தீர்த்து வைப்பாள். அப்படிப் புவனலோசினி பணிவிடை செய்யும் போது பெண்களை வயது குறைந்தவர்களாகத் திருமணம் செய்து வைப்பதற்கு இதுவும் ஒரு காரணமோ என்கின்ற குருட்டு எண்ணம் அவருக்குத் தோன்றி மறையும்.

இன்று "TS" வேலையால் வந்து விட்டாலும் புவனலோசினி இன்னும் வேலையால் வரவில்லை. "TS" குளித்து விட்டுப் புவனலோசினி வந்த பின்பு சாப்பிடலாம் என்று சோபாவில் இருந்து உலகத்தையே தான் தாங்கும் பொறுப்போடு செய்தி என்னும் அன்றைய நாள் அவரின் போதையைப் பார்த்தார். அப்போது அருளுக்கு அலைபேசி பண்ண மறந்தது கண்ணாடித் துண்டில் பட்டுத் தெறிக்கும் சூரியக் கதிராக அவரது நினைவில் மின்னிற்று. அருளை அலைபேசியில் அழைத்துப் பேச வேண்டும் என்று நினைத்தவருக்குத் தனது அலைபேசியை எங்கே வைத்தேன் என்று ஞாபகம் வரவில்லை. அலைபேசியைக்

காணவில்லை என்றதுமே "TS"சிற்கு வியர்க்கத் தொடங்கி விட்டது. எங்கே என்று பல இடமும் தேடினார். எங்கும் அது இருப்பதாகத் தெரியவில்லை. கடைசியாக மேலங்கியையும் மேலோட்டமாகத் தேடிப் பார்த்தார். அதற்கு நிறையவே சட்டைப் பைகள் இருந்தன. "TS" கடைசியாக வைத்திருக்கும் அலைபேசி இப்போது உள்ள அலைபேசியிலேயே மிகவும் சிறிதான ஒரு அலைபேசி. அவசரத்தில் பொறுமை இழந்து பதற்றத்தோடு இரண்டு பக்க சட்டைப் பைகளையும் தேடிவிட்டு அதற்குள் இல்லை என்று முடிவு செய்து கொண்டார். அந்த முடிவு அவரது தடுதாளியை இன்னும் அதிகம் ஆக்கியது.

எங்கும் காணாது எங்கோ பதங்கம் ஆகிப் போய்விட்ட அலைபேசியை எண்ணி அவருக்குப் பித்து தலைக்கு ஏறியது. புவனலோசினி நின்றால் எங்காவது முகர்ந்து பிடித்து அதை எடுத்துக் கொண்டு வந்து இருப்பாள். அவள் இல்லாத கணங்கள் அவரைத் தண்டிக்கும் யுகங்கள் என்பதாய் மாறி இருப்பது அப்போது அவருக்கு விளங்கியது.

அலைபேசியை எப்போதும் கொண்டு திரிவதற்கு வசதியாகச் சின்னதாகப் பார்த்து வாங்கும் போது அது தொலைந்தால் தேடுவதில் சிரமம் இருக்கும் என்பது மண்டையில் உறைக்கவில்லை. அது உறைக்கும் போது அலைபேசி பதங்கம் ஆகிப் போனதாய் எங்கும் காணமுடியாத அவர் அந்தரம்.

புவனலோசினி வரும் வரையும் அலைபேசி இல்லாது காத்துக் கொண்டு இருக்கும் பொறுமை அற்றவராக நீண்ட பற்களைப் பாவித்துத் திண்மமான பொருட்களை அறுக்கும் எலி உண்டாக்கும் சத்தத்தை உண்டு பண்ணிய வண்ணம் கோலில், வாசலில் என்பதாக அவரின் கண்ணுக்குப் பட்ட இடத்தில் இருந்த பொருட்கள் எல்லாம் அரக்கப்பட்டு, அதனால் அவை அகதிகள் ஆக்கப்பட்டன. அந்தச் செயலால் ஏற்பட்ட சத்தமும், குழப்பமும் இதுவரையும் அறைக்குள் இருந்த சரிஸ்காவை வெளியே இழுத்து வந்தது. சரிஸ்கா கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். அவளுக்கு அப்பாவின் இந்த அட்டகாசம் எரிச்சலைத் தந்தாலும் அவரின் பதட்டத்தைப் பார்க்கச் சிரிப்பு அதையும் தாண்டி வந்தது. தான் சிரித்து

அப்பாவின் கோபத்தை இன்னும் அதிகமாக்க விரும்பாத அவள் தனது சிரிப்பைப் பல்லால் கடித்து இறுக்கி உள்ளே தள்ளிய வண்ணம்,

"என்னப்பா அட்டகாசம் செய்கிறியள்? ஒரே சத்தமா இருக்குது?" என்றாள்.

"என்ரை மொபீலைக் காணேல்லை சரிஸ்கா. நீயும் ஒருக்கா என்னோடை தேடு." என்றார் "TS".

"சின்னனா வேண்டாதேங்க... கொஞ்சம் பெரிசா வேண்டுங்கோ... எண்டு நான் அப்பவே உங்களுக்குச் சொன்னான் எல்லே? நீங்கள் எங்க கேட்டியள் அப்பா. ஜெக்கெற்றை வடிவாப் பாத்திட்டியளா?" என்றாள் சரிஸ்கா.

"பாத்திட்டன்... ஒரு இடமும் காணேல்லை. அவன் அருளுக்கு இப்ப போன் பண்ண வேணும்." என்று பதறியடித்தார் "TS".

"கொஞ்சம் பொறுங்க அப்பா." என்று கூறிய வண்ணம் சரிஸ்கா தனது அறைக்குள் மீண்டும் சென்றாள். திடீரென அவரது அலைபேசி உயிர் பெற்றுத் தான் உயிருடன் இருப்பதை உறுதிப்படுத்தியது. அந்த இருப்புக் குரல் அவரது மேலங்கிக்கு உள்ளே இருந்து வந்தது. "TS" மேலங்கியை நோக்கி ஓடினார். ஒலி வரும் திசையை வைத்து கையை விட்டுத் துழாவி அலைபேசியை எடுத்தார்.

"பாத்தியளே உங்கடை ஜெக்கெற்றுக்கை வைச்சுக் கொண்டே நீங்கள் அட்டகாசம் செய்கிறியள்?" என்றாள் சரிஸ்கா.

"அவசரத்தில கோட்டை விட்டிட்டன். ச்... உன்ர மெபைலில்ல இருந்து அடிச்சுப் பார்க்கலாம் எண்ட புத்திகூட எனக்கு வரேல்லை. வரவர மூளை மங்கித்தான் போகுது." என்றார் "TS" கவலையோடு.

"TS" இதைச் சொல்லிக் கொண்டு நிற்கும் போதே கதவைத் திறந்து கொண்டு புவனலோசினி உள்ளே வந்தாள். அவள் களைத்துப் போய் இருந்தாள். என்றாலும்

வீட்டிற்குள் வந்துவிட்ட சந்தோஷத்தில் அவள் முகம் பூரித்தது.
சரிஸ்கா தனது பழைய மடிக்கணினியை விற்றுவிட்டுத் தற்போது வந்த
"Intel Pentium CPU" கொண்ட "IBM" மேசைக் கணினி ஒன்றை வாங்கி இருந்ததோடு அதற்கு இணையத் தொடர்பும் ஏற்படுத்தி வைத்து இருந்தாள். பொதுவாகவே அவள் அறையில் இருந்து மென் பொருள் தயாரிப்பது அல்லது இணையத்தில் உலா வருவது என்பதைச் செய்வதில் அவள் காலம் கழியும். எப்போதாவது சில வேளைகளில் வந்து கோலில் இருந்து தொலைக்காட்சி பார்ப்பாள். அப்போது புவனலோசினி ஏதாவது தனது சுதந்திரத்தில் கை வைப்பது போலக் கதைத்தால் அவள் எழுந்து மீண்டும் அறைக்குச் சென்று விடுவாள். புவனலோசினிக்குச் சரிஸ்காவில் குறை சொல்வதற்கு அதற்கு உடன்படாத காரணத்தைத் தவிர வேறு எதுவும் இருப்பது இல்லை. அதைப் பற்றிக் கதைப்பதையோ, கேட்பதையோ அவள் கணப் பொழுதும் விரும்புவது இல்லை. அம்மா கோணலாகக் கதைக்கத் தொடங்குகிறாள் என்றால் எதிர்த்து நியாயம் சொல்லுவதில் பிரயோசனம் இல்லை என்பதும், அதனால் கடைசியில் அம்மாவின் கண்ணீர் ஊற்றைத் தண்ணீர் ஊற்றாகப் பார்க்க வேண்டும் என்பதும் அவளுக்குத் தெரியும். அத்தால் அவள் வருமுன் காப்போம் என்பதாகத் தனது அறைக்குள் புகுந்து கொள்வாள்.
புவனலோசினி உள்ளே செல்லச் சரிஸ்கா தொலைக்காட்சி பார்க்கக் கோலிற்கு வந்தாள். இன்று ஆவது அம்மா வந்து மகளை அறைக்குள் அனுப்பாது இருக்க வேண்டும் என்று எண்ணிய வண்ணம் "Remote control"யை எடுக்க, "என்னிட்டைத் தாங்க அப்பா." என்று சரிஸ்கா அதைப் பறித்துக் கொண்டாள். அத்தால் உடுக்கை இழந்தவன் கை போல மகள் எந்த அலைவரிசையில் விடப் போகிறாளோ என்கின்ற எதிர்பார்ப்போடு அவளைப் பார்த்தார். அவள் அதை நோர்வேயின் தேசிய அலைவரிசையில் விட்டாள். அதில் எல்லை கடந்த மருத்துவர்களையும், அவர்கள் செய்யும் சேவையையும் பற்றிப் போய்க் கொண்டு இருந்தது. எந்தப் பிரதி உபகாரமும் பாராது ஆபத்தான இடங்களைத் தேடிச்

சென்று அவர்கள் செய்யும் உதவி மகத்தானது என "TS"சிற்குத் தோன்றியது. நமக்காக வாழ்வதை விட்டுப் பிறருக்காக பாசாங்கு செய்யாமல் உள்ளத் தூய்மையோடு வாழ்வது பெருமைப்பட வேண்டிய மகா தவம். அதைச் சிலரால் மட்டுமே செய்ய முடிகிறது. பலரும் மற்றவர்களுக்காய் வாழ்வதாய் வேஷம் போடுவதால், வெட்கம் அற்று விளம்பரம் செய்வதால் உண்மையாகச் சக மனிதருக்காய் எரியும் தழல்கூடக் கொள்ளி வால் பேய்களாகச் சிதைந்து தெரியும் சில சந்தர்ப்பங்கள். பொது நிதியைச் சுருட்டுவதற்காக போதுச் சேவை செய்யும் எத்தினையோ அமைப்புகள். அதை ஆர்வத்தோடு நடத்தும் ஆசை அடங்கா மனிதர்கள். தமிழரிடமும் இதற்குப் பஞ்சம் இல்லை என்பது "TS"சிற்கு நன்கு தெரியும். எல்லாவற்றையும் கணக்குப் பார்த்து எச்சில் கையால் காகம் கலைக்க விரும்பாத மனிதர்களுக்கு மத்தியில் எதையும் எதிர் பாராது உயிரைப் பணயம் வைத்துச் செய்யும் சேவை "TS"சின் நெஞ்சை உருக்கியது.

எங்கள் நாட்டில் இப்படியான தேவைகள் அதிகம் இருக்கிறது. இருந்தும் அங்கே செய்யப்படும் உதவியில்கூட அரசியல் நடக்கும் கோரத்தால் மூச்சு விடமுடியாது அவதிப்படும் மக்களின் வேதனைத் தொடர்கிறது. "TS" கொடுக்கும் பணம் எப்படிப் போகும் என்பது அவருக்குத் தெரியும். தான் உண்மையான அர்ப்பணிப்பைச் செய்ய வேண்டும் என்றால் தானே நாட்டிற்குச் சென்று சரீர, பொருளாதார உதவி செய்ய வேண்டும். அதற்கான மகா தியாகமாக மனைவி பிள்ளையை உதறும் தயிரியம் வர வேண்டும். அது நடந்தாலும் அங்குள்ள அரசியலையும் வன்முறையையும் நிதானமாக யாராலும் தாண்ட முடியாத இக்கட்டு.

அவ்விடத்தில் நிகழ்ச்சியைப் பார்ப்பதில் ஏற்பட்டிருந்த மௌனத்தின் கனம். "TS"சின் மனது மாத்திரம் எங்கோ தொலைந்த கணம். புவனலோசினி அடுக்களைக்குள் புகுந்துவிட்ட சத்தம். "TS"சின் மனம் கொதித்துக் கொதித்து எங்கெங்கோ தாவியது. இருந்தும் ஏற்கனவே கொடுத்த விலை போதும் என்கின்ற சமாதானம் அதற்கு முடிவுரை வைக்க முயன்றது.

சரிஸ்கா தொலைக்காட்சி நிகழ்ச்சியை மிகவும் ஆவலாகப் பார்த்துக் கொண்டு இருந்தாள். அவளின் மருத்துவ உலகச் சஞ்சரிப்பு "TS"சிற்கு முழுமையாக விளங்குவது இல்லை. மற்றைய மருத்துவர்கள் செய்யும் பணி அவளுக்கு ஆர்வத்தைத் தூண்டுவதாக இருந்திருக்க வேண்டும். அதுதான் இந்த நிகழ்ச்சியைப் பார்க்கிறாளா அல்லது தற்செயலாக இந்த நிகழ்ச்சி அவள் அலைவரிசை பிடிக்கும் போது வந்ததா என்பது "TS"சிற்குத் தெரியவில்லை. குறித்த நேரத்திற்கு வந்து அலைவரிசையை மாற்றியதைப் பார்த்தால் அவள் அறிந்து கொண்டே வந்திருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. நிகழ்ச்சி முடிந்தது. புவனலோசினி மூவருக்கும் பால் தேநீர் தயாரித்துக் கொண்டு வந்தாள். தேநீரைக் குடித்து இன்னும் சிறிது நேரம் தொலைக்காட்சியைப் பார்த்த பின்பு சாப்பாடு கொண்டு வருவாள். அல்லது தமிழ்ப்படம் பார்த்தால் அதை இடையில் நிறுத்தி வைத்துவிட்டுச் சாப்பாடு எடுத்து வருவாள். "TS" படத்தை இடையில் நிறுத்தி வைப்பதற்கு எதுவும் சொல்வது இல்லை. கஸ்ரத்தை அனுபவிப்பவளுக்கு அந்தச் சுதந்திரமாவது இருக்க வேண்டும் என்பது அவருடைய அவிப்பிராயம்.

சரிஸ்கா ஏதோ கடுமையாக யோசிப்பதாய் "TS"சிற்குத் தோன்றியது. அந்த யோசனையில் இருந்து வெளிவர முடியாதவளாய் இயந்திரம் போலத் தேநீரை வாங்கிப் பருகத் தொடங்கியதை "TS" கவனித்தார். எதைப் பற்றி அவள் யோசிக்கிறாள் என்பது அவருக்கு விளங்கவில்லை. பார்த்த படத்தைப் பற்றியதாக இருக்கலாம் என்று எண்ணிக் கொண்டார். எல்லோரது கவனத்தையும் திருப்புவதற்கான நிகழ்ச்சியைத் தேடும் ஆர்வத்தில் "Remote control"லை அவர் கையில் எடுத்தார்.

"அப்பா உதைக் கொஞ்சம் மேசையில வையுங்க. நான் ஒரு முக்கியமான விஷயம் கதைக்க வேணும்." என்றாள் சரிஸ்கா. ஏதோ சாதாரண விஷயம் சொல்வதற்கான பீடிகை என்பதான நினைப்பு "TS"சிற்கு. புவனலோசினிக்கு சரிஸ்காவில் ஏற்கனவே பயம் இருந்தது. அவளது இந்தப் பீடிகையிலும் சற்றுப் பயம் வந்தது. என்ன சொல்லப் போகிறாள் என்கின்ற குழப்பம் அவளுக்கு மேலிட்டது.

இருவரும் சரிஸ்காவைப் பார்த்தார்கள். சரிஸ்கா தலைகுனிந்து ஏதோ யோசித்தாள். அவளது அந்த யோசனையையும், அதனால் தாண்ட வேண்டிய கணங்களின் அவஸ்தையையும் பொறுக்க முடியாத "TS",

"என்ன விஷயம் சொல்லு சரிஸ்கா?" என்றார்.

""அப்பா லேகர் ஊத்தன் கிறன்சர் - எல்லையில்லாத மருத்துவர்கள்" அதில நான் சேர்ந்து எத்தியோப்பியாவுக்கு வாற மாதம் போகப் போகிறன். இது ஒரு ஆறு மாத ஒப்பந்தம். இது பிடிச்சுக் கொண்டா திரும்பவும் நீண்ட கால ஒப்பந்தத்தில போய் சேவை செய்ய நினைச்சு இருக்கிறன்." என்றாள் சரிஸ்கா. புவனலோசினி அதைக் கேட்டு இரண்டு கைகளாலும் முகத்தைப் பொத்தி அதை மடியில் புதைத்து விம்மி விம்மி விசும்பினாள். அதைப் பார்த்த சரிஸ்கா கோபமாக,

"இதுக்குத்தான் அம்மா இருக்கேக்க இந்த விஷயத்தைச் சொல்லக் கூடாது எண்டு யோசிச்ச நான். பாவம் அவவும் தெரிஞ்சு கொள்ளட்டும் எண்டா இப்பிடி ஒப்பாரி வைக்கிறா?" என்றாள் சரிஸ்கா கோபமாக.

"அப்பிடி இல்லை சரிஸ்கா... அவவுடைய உணர்ச்சியை அவ தனக்குத் தெரிஞ்ச வழியில தீர்த்துக் கொள்ளுகிறா. அது அவவுடைய சுதந்திரம். நீ எப்பிடி வேறை ஒரு நாட்டுக்குப் போக வேணும் எண்டு முடிவு எடுத்து இருக்கிறியோ அப்படி அவ தன்னுடைய உணர்ச்சியை எப்பிடி வெளிப்படுத்துகிறது எண்டு முடிவு எடுக்கிற உரிமை அவவுக்கு இருக்குது. சரி அதை விடு... இப்பிடி நாடோடியா இவங்கள் திரிவாங்கள்... அவங்கள் அப்பிடித் திரிஞ்சாலும் யாரும் எதுவும் சொல்ல மாட்டினம். ஆனா... எங்கடை தமிழ் ஆட்கள் அப்பிடி இல்லை. ஒரு மாதிரிப் பார்ப்பினம்." என்றார் "TS".

"ஏனப்பா நாடு... நாடு... எண்டு உதவி செய்ய ஓடுகிற உங்களுக்கே நாட்டில நடக்கிறது தெரியாதா? அங்க இப்ப யார் போராடுகினம்? அவை என்ன அடுப்படிக்க இருந்தா போராடுகினம்? சனம் கதைக்கப் போகுது எண்டு அவை எல்லாம் பயப்பிடுகினமே?" என்றாள் சரிஸ்கா.

"அவை பயப்பிடாமல் இருக்கலாம். துணிஞ்சு இப்ப போராடலாம். அப்பிடியே எங்கடை சமுதாயம் மாறினதாய் இருந்திட்டா எல்லாருக்கும் நல்லதுதான். எங்களுக்கு நாடு கிடைச்சா அந்த நாட்டில சில வேளை அவைக்குப் பங்கம் இருக்காது. அது நடவாமல் போராட்டத்திற்கு ஒரு முடிவு வந்தால் அப்ப அவை எல்லாம் திரும்பி ஊருக்குப் போக முடியாது. சொந்த வீட்டையே போக முடியாது. அரைவாசிச் சனம் ஓடிப் போனவளவை எண்டு வீட்டுக்க சேர்க்கவே மாட்டினம். தத்துவம், வீர வசனம் வாய்க்கு வந்த மாதிரித் தனக்குப் பாதிப்பு இல்லை எண்டாப் பேசலாம். அது எல்லாம் வாழ்க்கை ஆகிடாது. நடைமுறை வாழ்க்கை எண்டுகிறது வலிமேல் வலியான அனுபவத்தைக் கொண்டு வரும். சக மனிதர்களின் ஒவ்வொரு பார்வையும், ஒவ்வொரு சொல்லும் கூரான ஈட்டியாய் பாயும். துடிப்பும் வேதனையும் தொடர்கதை ஆகும். நீ போகிறதை நான் வேண்டாம் எண்டு சொல்ல முடியாது. நோர்வேயில வாழ்ந்து கொண்டும் அடுப்படிக்க இரு எண்டு சொல்லுகிற அப்பாவும் நான் இல்லை. ஆனா... நீ நினைக்கிறது மாதிரி வாழ்க்கை இல்லை எண்டுகிற பயம் எனக்கு இருக்குது. அதே நேரம் அம்மா உன்னைப் பற்றிக் கவலைப்படுகிற சுதந்திரமும் அவவுக்கு இருக்குது எண்டதையும் நீ மறுக்கக் கூடாது. உன்ரை முடிவில நான் தலையிட இல்லை. நீ செய்யப் போகிறது மகத்தான பணி. நல்லாய் செய்திட்டு வா. இதையே நீ ஏன் எதியோப்பியா போய் செய்ய வேணும்? இலங்கையில போய் செய்ய முடியாதா?" என்று "TS" தனது ஆதங்கத்தைக் கேட்டார்.

"நான் இலங்கைத் தமிழரோடு தொடர்புடையதால அது வீண் சிக்கலாகும் எண்டு அவிப்பிராயப் படுகினம். எங்கை எண்டாலும் சேவை தானே? அதுக்கு உள்ள தேவை இல்லாத அரசியல் சிக்கல்களை கொண்டு வந்து எனக்கும் அமைப்புக்கும் சங்கடத்தை ஏற்படுத்தக் கூடாது இல்லையா அப்பா? அதுதான் இலங்கை எங்கடை தெரிவில வரேல்லை." என்றாள் சரிஸ்கா. "TS"சிற்குச் சரிஸ்கா சொல்வது சரி என்றே பட்டது. பிரச்சனையான இடங்களில் வேலை செய்வதே சிக்கலானது. அத்தோடு ஒரு பக்கம் சார்ந்தவளாக இருப்பாளோ என்கின்ற சந்தேகத்தோடு பார்க்கப்படும் சூழ்நிலையில் பயந்து

பயந்து ஆபத்திற்கு இடையில் வேலை செய்ய முடியாது என்பது அவருக்கு விளங்கியது.

"நீ சொல்லுகிறதும் சரிதான்." என்றார் "TS".

புவனலோசினி முகத்தில் இருந்து கையை எடுத்துக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து இருந்தாள். அவள் கோபமாய் இருப்பது அக்கினிச் சுவாசத்தாலும் அவள் தோற்றத்தாலும் "TS"சிற்கு நன்கு விளங்கியது. அதேவேளை அவள் கோபத்தால் எதுவும் மாறப் போவது இல்லை என்பதும் அவருக்கு நன்கு விளங்கியது. சரிஸ்கா எடுத்த முடிவை மாற்ற முடியாது என்கின்ற போது கத்தி ஆர்ப்பாட்டம் செய்து சக்தியை வீணாக்குவதில் என்ன பிரயோசனம் இருக்கிறது என்கின்ற கேள்வி அவரிடம் எழுந்தது. புவனலோசினி பாசத்தால் புத்தியை இழந்து, இதை ஏற்றுக் கொள்ள முடியாது தவிப்பாள். தாய்ப்பாசம் அறிவுக்குத் திரை போட அவளால் கொதிப்பைக் குமுறலாகத்தான் வெளிப்படுத்த முடியும். அவர் எண்ணியது போலவே,

"இவள் இப்பிடிப் போனா நாளைக்கு ஒரு விசேஷம் ஒண்டும் இவளுக்கு நடக்கிறது இல்லையே? நீங்களும் சேர்ந்து ஒத்துப் பாடுகிறியள்." என்றாள் புவனலோசினி கோபத்தோடு. அவள் கண்கள் சிறிய இலந்தைப் பழமாகச் சிவந்து போய் பேயின் கண் போலச் சுழன்றன.

"விசேஷம் நடக்க வேணும் எண்டா அது ஏற்கனவே நடந்து இருக்கும். அவளிட்டை ஏதோ ஒரு தீர்மானம் இருக்குது. ஒரு தீர்க்கமான தீர்மானம் எடுக்கிற அளவுக்கு எங்களைவிட அவளுக்குக் கல்வி அறிவு, மூளைத் திறன் எல்லாம் நிறையவே இருக்குது. அந்தப் பொறுப்பை நான் அவளிட்டை விட்ட மாதிரி நீயும் விட்டிட்டுப் பேசாமல் அமைதியாய் இருக்கப்பார்." என்றார் "TS".

"எங்கடை வம்சமே விருத்தி இல்லாமல் போகப் போகுது. நீங்கள் இன்னும் தத்துவம் பேசிக் கொண்டு இருக்கிறீங்கள்."

"அப்ப அவளை அறையிக்க பூட்டி வைச்சு பாகிஸ்தான்காரர் மாதிரி கட்டாயக் கலியாணம் செய்து குடுப்பமே?" என்றார் "TS" மென் சிரிப்போடு. சரிஸ்கா

அதைக் கேட்டுச் சிரித்தாள். சரிஸ்கா சிரித்ததில் புவனலோசினி தன் இயலாமையை உணர்ந்து இன்னும் சூடானாள்.

"ஊரில எண்டா அப்பிடிதான் செய்து இருப்பன்." என்றாள் புவனலோசினி கோபத்தோடு.

"அது நரகத்தை அவளுக்குப் பரிசாகக் குடுத்த மாதிரி இருந்து இருக்கும்." என்றார் "TS".

"எனக்கும் அதே அசிங்கம்தான் நடந்திச்சுது." என்றாள் புவனலோசினி. 'அட... கடவுளே! எங்களுக்கு ஏன் இந்தக் கொடுமை?' அவள் பெரிதாகவே கத்தி அழுதாள். "TS"க்கே சிறிது குழப்பம் உண்டாகியது. பின்பு அவள் எதைச் சொல்கிறாள் என்பது விளங்கியது. அங்கே அழுத்திய சோகத்தில் பயமுறுத்தும் அமைதி அரக்கனாக அதிகாரம் பண்ணினான். அந்த அவல அமைதியைக் கலைக்கும் துணிவு இல்லாதவராக "TS" அங்கு அமைதியாக இருந்தார். சரிஸ்கா விரல்கள் தொலைந்து போய்விட்டதா என்கின்ற அவதானத்தோடு அதைக் கவனமாக எண்ணினாள். புவனலோசினி தன்னால் எதுவும் செய்ய முடியாது என்பதை விளங்கியவளாய் திடீரெனக் கண்களை மீண்டும் புறக் கையால் துடைத்தாள். சரிஸ்காவை நிமிர்ந்து பார்த்து,

"ஆபிரிக்காவுக்குப் போனா எயிட்ஸ் வராதே?" என்று கேட்டாள்.

"ஐயோ எயிட்ஸ்... அம்மா.... அம்மா?" என்று கூறிச் சரிஸ்கா நிலைமையை மறந்து விழுந்து விழுந்து சிரித்தாள். "TS" தனக்கு வந்த சிரிப்பை வன்முறையாக இம்முறை வதம் செய்தார். புவனலோசினியை மீண்டும் சங்கடத்தில் தள்ள அவர் விரும்பவில்லை.

"நான் சொல்லுகிறது எல்லாம் இந்தப் பெட்டைக்குப் பகிடிதான்." என்றாள் தோல்வியோடு புவனலோசினி.

"எயிட்ஸ் ஒண்டும் சும்மா தொத்தாது புவனா. வருத்தங்கள் பற்றி நீ கொடுக்கிற விளக்கத்தை நினைச்சு அவள் அடக்க முடியாமல் சிரிக்கிறாள். நீ ஏன் தேவை இல்லாததுக்கு எல்லாம் கவலைப் படுகிறாய்? பாசம் அறிவை மறைக்கக் கூடாது புவனா." என்று சொல்லிக்

கொண்டே "TS" "Remote control"லைக் கையில் எடுத்தார். அதைப் பார்த்த சரிஸ்கா எழுந்து தனது அறைக்குச் சென்றாள். சரிஸ்கா போனதும்,

"பல்லைத் தோண்டி இரத்தம் பறந்தாத் தொத்தாதே?" என்று விஞ்ஞானி ஆகிய நினைப்பில் மடக்கினாள் புவனலோசினி.

"நீ இப்ப கேட்டது நியாயமான சந்தேகம்தான். அது புண்ணில நேரடியா இரத்தம் படவேணும். அதுக்கு எல்லாம் சரிஸ்காவிற்கு சந்தர்ப்பம் வாறது லொத்தர் விழுகிற மாதிரி. நீ தேவை இல்லாமல் கவலைப்படாத." என்றார் "TS".

"அவள் இல்லாமல் நாங்கள் எப்பிடி அப்பா தனிய இருக்க முடியும்?" என்றாள் நாதம் மாறிய குழலாய் புவனலோசினி. அவள் முகத்தைப் பயமும் ஏக்கமும் கருமுகில் தரை இறங்கியதாய் இருட்டாக்கியது.

"இந்த உலகம் எதுக்காகவும், யாருக்காகவும் உறைஞ்சு போகாது எண்டது உண்மை எண்டா நாங்களும் சமாளிப்பம். பயப்பிடாத... உனக்கு நான் எண்டாலும் இருக்கிறன் தானே? அதோடை அவள் கொஞ்சக் காலத்தில திரும்பி வந்திடுவாள். இங்கத்தே நோனா வாழ்க்கை அங்க வாழ முடியாது. பார்ப்பம் எவ்வளவு காலம் அங்க இவ தாக்குப் பிடிக்கிறா எண்டு." என்றார் "TS".

# 15 இறக்கை முளைத்த கிளிகள்

இரண்டாவது ஆயிரம் வருடங்களின் முடிவு வருவதை இட்டுப் பல ஆரூடங்கள் பேய் கதை போல நிலவின. பணத்தை இறைத்துக் கணினிகளுக்குப் புதிதாய் காலம் பற்றிப் பாடம் கற்பிக்க வேண்டியது காலத்தை உணராத மனிதக் கணிப்பின் காலத்தின் கட்டாயமாகப் பல சீர்திருத்தங்கள் நடந்தன. கணினிகளை உருவாக்கும் போது என்ன நினைத்து இருந்தார்களோ தெரியவில்லை. கணினியைவிட வேறு தொழில் நுட்பம் வந்து இதன் வேலையை ஏற்றுக் கொள்ளும் என்று நினைத்து இருக்கலாம். அல்லது இப்போதைய பிரச்சனையைத் தீர்த்துக் கொள்ளுவோம் என்கின்ற அவசரத்தில் தொலை நோக்கைத் தொலைத்து இருக்கலாம். கணினிகள் சாகா வரம் பெற்று மனித இனத்தைத் தனது பிடிக்குள் கொண்டு வந்த உண்மை போகப் போக விளங்கியது. அவசரத்தில் எழுதப்பட்ட மென்பொருட்கள் ஆயிரம் வருட முடிவை விளங்கிக் கொள்ள முடியாது திணறப் போவது பற்றிய பெரும் கிலி உலகத்தை ஆட்டிப்படைத்தது. அந்தக் கிலியை வெல்ல வேண்டும் என்பதற்காகப் பல பில்லியன் டொலர்கள் செலவு செய்யப்பட்டன. அந்த முன்னெச்சரிக்கையில் இரண்டாயிரம் ஆண்டு ஆங்கில புது வருடப்பிறப்பு உலகம் எங்கும் ஆர்ப்பாட்டமாய் அவஸ்தைகள் இன்றிக் கழிந்திற்று.

"TS"சிற்கு அம்முறை வந்த ஆங்கிலப் புத்தாண்டு இனிக்கவே இல்லை. சரிஸ்காவின் நினைவு அவரைக் கறையானாக அரித்தது. அவள் சிறிது காலத்தில் திரும்பி வந்து விடுவாள் என்கின்ற மெத்தனம் அவரிடம் முதலில் இருந்தது. இருந்தும் அவள் தொடர்ந்தும் தாக்குப் பிடிப்பதைப் பார்க்கும் போது அவருக்குப் பயமாகிப் போயிற்று. தான் அழுது "TS"சைக் கவலை கொள்ள வைப்பதில் பிரயோசனம் இல்லை என்பதை விளங்கிக் கொண்ட புவனலோசினி அடிக்கடி தனிமையில் மனதுக்குள் அழுது கொள்வாள்.

தனிமையின் அவஸ்தையைத் தீர்த்துக் கொள்ளும் ஆதங்கத்தோடு அவர்கள் இப்போது தாங்கள் ஓய்வாக இருக்கும் நேரத்தில் மற்றவர்களின் வீட்டிற்குச் சென்று அரட்டை அடிப்பதில் காலத்தைக் கழிப்பார்கள். அரட்டை என்று அரசியல் கதைத்தால் அது வில்லங்கத்தில் முடிந்து போய்விடும் என்கின்ற எச்சரிக்கை "TS"சிடம் இருந்தது. அரசியல் என்று வரும் போது ஒன்றில் மௌனமாய் இருக்க வேண்டும் இல்லாவிட்டால் மௌனமாக எல்லாருக்கும் தலையை ஆட்டிக் குழப்பிவிட்டு வர வேண்டும். "TS" முதலாவது முறையைக் கையாண்டார். ஊரில் போராளிகளின் கை ஓங்கி இருப்பது "TS"சிற்குச் சந்தோஷம் தரும் விடையம். அதுவும் ஆனையிறவை அடித்துப் பிரட்டி அவங்கள் செய்த சாதனை அவரைக் குளிர வைத்தது. இராணுவத்தின் பாதை திறப்பு படு தோல்வியில் முடிந்ததும் சுப செய்தியாகவே விளங்கியது. இருந்தும் இந்தியாவைப் பகைத்துக் கொண்டதும், உலக நாடுகளின் அனுதாபத்தில் இருந்து அந்நியப்பட்டு நிற்பதும் அவருக்கு மனக் கிலேசத்தை உண்டு பண்ணி இருந்தது. வரும் காலத்தில் இதன் விளைவு எப்படி அமையுமோ என்கின்ற பயம் அவரிடம் இருந்தது. ஏற்கனவே சில நாடுகளின் வெறுப்பிற்கும், இந்தியாவின் கடுப்பிற்கும் உட்பட்ட போராட்டம் இந்த வெற்றிகளால் தூக்கி நிரந்தரமாக நிறுத்தப்படுமா என்பது அவருக்கு விளங்கவில்லை. எது எப்படி என்றாலும் இன்று அவர்களைத் தவிர உண்மையாகப் போராடுபவர்கள் யாரும் இல்லை என்பதும், அவர்களுக்கே தனது ஆதரவைக் கொடுக்க வேண்டும் என்பதும் அவருடைய அசைக்க முடியாத மலை போன்ற கருத்து. அவர்களைப் பற்றிப் பலர் கூடி இருக்கும் இடங்களில் "TS" ஒரு போதும் இடக்கு முடக்காகக் கதைப்பது இல்லை. அப்படிக் கதைத்தால் அதைப் பலராலும் விளங்கிக் கொள்ள முடியாது என்பது அவருடைய எண்ணம். அதே நேரத்தில் மாற்றுக் கருத்து உள்ளவர்கள் அதைத் தங்களுக்குச் சாதகம் ஆக்கிக் கொள்வார்கள் என்கின்ற பயமும் அவரிடம் இருந்தது.

சரிஸ்கா இல்லாது "TS" குடும்பம் தனிமையில் இருப்பதை அறிந்து கொண்டு பலரும் தங்களிடம் வந்து அவர்களை அளவளாவிச் செல்லுமாறு "TS"ஐ அழைப்பது உண்டு.

"TS"சும் புவனலோசினியும் இயலுமானவரை மறுக்காமல் சென்று வருவதும் உண்டு. சரிஸ்கா போன கவலையில் "TS" இந்த முறை கோடைக்கால விடுமுறைக்கும் ஒரு இடமும் செல்லவில்லை. தாமோதரனும் மாலினியும் இம்முறை ஒஸ்லோவிலேயே நின்றார்கள்.

*

வெளியே ஊசிக் குளிர் ஒளிந்து கொள்ள வெப்பக் காற்றின் திமிரான ஆட்சி. ஈழத்தில் நிற்பது போன்று வெப்பத்தின் இதம் மீறும் தழுவல். இருவரும் தங்கள் சின்னத் திருப்பதியில் இருந்து இறங்கிக் கீழே சென்றார்கள். தெருவில் போக்குவரத்து முட்டி வழியவில்லை. அரைப்பகுதி ஓஸ்லோ வாசிகள் வெளிநாட்டிற்குப் பயணமாகி இருப்பார்கள். நிற்பவர்களும் கடற்கரை அல்லது ஏரிகள் தேடிச் சென்று இருப்பார்கள். அதைவிடப் பலர் சிறிது தள்ளி இருக்கும் சோபியன்வர்க் பூங்காவில் படுத்துச் சூரியக் கதிர்களால் தங்களைக் கருக்கிப் பாணின் நிறத்திற்கு மாற்றும் முயற்சியில் கடுமையாக சூரியனைப் பார்த்துத் தவம் செய்வார்கள். சிலர் பிள்ளைகளோடு வந்து அவர்களுக்கு இறைச்சி வாட்டிச் சாப்பாடு கொடுத்துத் தாங்களும் உண்டு மகிழ்வார்கள்.

"TS"சும் புவனலோசினியும் கீழே வந்து தாமோதரன் வீட்டிற்குச் செல்லும் பாதையில் சென்றார்கள். அப்படிச் செல்லும் போது சோபியன்வர்க் பூங்கா அவர்களின் கண்ணில் பட்டது. "TS" நினைத்ததைவிட அங்கு சனம் அதிகமாக இருந்தனர். பலர் இறைச்சி வாட்டுவதில் அக்கறை செலுத்தினார்கள். சூரிய வெப்பம் இன்னும் குறையாததால் பலரும் படுத்து இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. ஆண்களை விடவும் பெண்களுக்கு இப்படி உடம்பின் நிறத்தை மாற்றிக் கொள்வதில் அதி அக்கறை என்பது "TS"சின் எண்ணம். பெண்கள் மலர்களைப் போல. அவர்களை வண்டுகள் நாடி வரும் என்றாலும் அதிக மகரந்தத்தைக் கொண்டு வரும், கொண்டு செல்லும், வண்டுகளின் பார்வைக்காக அவர்கள் தங்கள் கவற்சியைக் காட்டிக் கொள்ளத் தவறுவது இல்லை என்பதாக "TS"சிற்குத் தோன்றியது. அதனால் தங்கள் உடம்பைப் பற்றி, தங்கள் கவர்ச்சியைப் பற்றி அதிக

அக்கறை பெண்களிடம் இருக்கிறது என்று "TS" எண்ணிய வண்ணம் நடந்தார்.

"ஸ்தாத் ஓயில்" எரிபொருள் நிலையத்தைத் தாண்டிச் செல்லும் போது "Tram" ஒன்று அவர்களைத் தாண்டிச் சென்றது. அதில் பல மனிதர்கள் பயணித்தார்கள். இந்த அருமையான வெப்பக் காலநிலையைப் புறக்கணித்து தமது பணிகளை செய்ய வேண்டிய கட்டாயத்தில் பல மனிதர்கள் இருப்பதை அது "TS"சிற்கு ஞாபகப்படுத்தியது. அப்படி அவர்கள் இயங்குவதாலே மட்டும் கோடைக்காலம் என்றாலும் நாடும் சமுதாயமும் சுமுகமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது என்று அவர் எண்ணிக் கொண்டார்.

*

தாமோதரன் வீட்டிற்குச் செல்ல முதலே தாமோதரனின் குரல் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். தாமோதரன் இறைச்சி வாட்டுவதற்கு நெருப்பு மூட்டிக் கொண்டு நின்றார். மாலினியும் சாப்பாட்டுப் பொருட்களை மேசையில் வைத்துவிட்டு இவர்களைப் பார்த்துச் சிரித்தாள். பயணத்தின் பாதை சுருங்கிய மகிழ்ச்சியோடு புவனலோசினியும் "TS"சும் அவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றார்கள்.

தாமோதரன் சிறிது முன்பாக நெருப்பு மூட்டியதால் மண்ணெண்ணெய் நாற்றமும் புகையுமாக அங்கே இருந்தது. பின்பு நெருப்பு நன்கு பற்றிக் கொள்ள நாற்றம் மாத்திரம் நின்றது. அதுவும் சாதுவாகப் பின்பு தணிந்தது. மாலினி பழ இரசத்தை கடதாசிக் குவளைகளில் வார்த்து "TS"சிடமும் புவனலோசினியிடமும் கொடுத்தாள். இருவரும் அதை வாங்கிக் கொண்டார்கள்.

"என்ன "TS" அண்ணை இப்ப நாட்டில பெரிசா ஒண்டும் நடக்குது இல்லை. கொஞ்சம் அமைதியாய் இருக்கினம்?" என்றார் தாமோதரன்.

"காசும் ஆயுதமும் இருந்தால் சரியே? ஒவ்வொரு தாக்குதல்லையும் எவ்வளவு உயிர் இழப்புக்கள் வந்து இருக்கும்? அதை ஈடுகட்டுகிறதுக்கும் புதிசாத் திட்டம் போடுகிறதுக்கும் நாள் பிடிக்கும் தானே? ஏதாவது ஒரு

முடிவு வரும் வரைக்கும் தாக்குதல் ஓயாத அலைகள் மாதிரித் தொடரத்தான் செய்யும்." என்றார் "TS".

தாமோதரனோடு இருந்தால் சுதந்திரமாகக் கதைக்கலாம். அவருக்குப் போராளிகளைப் பற்றி ஆதரவாய் கதைத்தால் போதும். ஏன் எதற்கு என்கின்ற குடையல் இருக்காது. ஆதரவாய் கதைக்காவிட்டால் மட்டுமே அவரிடம் குமுறல் எழும்பும். "TS" எப்போதும் போராளிகளுக்கு ஆதரவாய் கதைத்தாலும் அவரிடம் சில கேள்விகள் உண்டு. அதை எல்லாம் தாமோதரனோடு அல்லது சிவா, அருளோடு கதைக்க முடியாது. அப்படிக் கதைத்தால் அவரவர் தங்களுக்குப் பொருத்தமான சாடிக்குள் போட்டுப் பார்த்து தன்னைச் சங்கடத்தில் மாட்டி விடுவார்கள் என்பது "TS"சின் கணிப்பு. தாமோதரனோடு கதைக்கும் போது போராளிகளைப் பற்றி "TS" உயர்வாக நினைத்து வைத்திருக்கும் பகுதியை மட்டும் அவுட்டு விடுவார். அவரும் அதை மறுத்துத் தர்க்கம் செய்யாது அமோக ஆதரவு தருவார். அத்தால் பொழுதும் நச்சரிப்பு இல்லாமல் இதமாகக் கழியும்.

"நீங்கள் சொல்லுகிறதும் உண்மைதான் அண்ணை. ஆனா... அவங்களுக்கு இங்க இருக்கிறவங்கள் எல்லாரும் சேர்ந்து நல்லா உதவி செய்தால் அவங்களும் செய்கிறதை பெரிய அளவில செய்வாங்களுங்கோ. அது இங்க சில சொறியன்களுக்கு விளங்குது இல்லையிங்கோ. அவங்களுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்கிறதும் காசு குடுக்காமல் விடுகிறதுமாய் போராட்டத்தையே கொச்சைப் படுத்துகிறாங்களுங்கோ." என்றார் தாமோதரன்.

"உண்மைதான். எல்லாரும் ஒரே அணியில நிண்டாப் போராட்டம் இன்னும் உத்வேகமாய் இருந்து இருக்கும். அதுக்கு என்ன செய்கிறது. ஐஞ்சு விரலும் ஒரே மாதிரி இருக்க முடியுமே? எல்லா இடத்திலும் இதேதான் கதை. இந்தியச் சுதந்திரப் போராட்டத்திலேயே எத்தினை மார்க்கம்? பல மாற்றுக் கருத்து இருந்திச்சுது. அது எங்களுக்கு மட்டும் விதிவிலக்கா அமையுமே? அதைவிட எங்களுக்க ஆரம்பத்திலேயே பல இயக்கம். அதை எல்லாம் அடக்கப் போய் அவங்கடை வெறுப்பு மலையா வளர்ந்து நிக்குது. அந்த இயக்கத்தில இருந்தவங்கள் கணிசமாய் இங்க இருக்கிறது போராட்டத்திற்கு உதவியா

இருக்கப் போகிறது இல்லை. அவங்கள் எதிர்க்கிறதுக்கும் நாங்கள் ஒண்டும் செய்ய முடியாது. அப்பிடிச் செய்யப் போனா எங்கடை சுதந்திரமான பணிகளும் இங்க தடைப்படச் சந்தர்ப்பம் வரலாம். இப்ப ஆதரவாய் இருக்கிற நாங்கள்தான் இன்னும் என்ன உதவி எல்லாம் செய்யலாமோ அதை எல்லாம் செய்ய வேணும்." என்றார் "TS".

"நீங்கள் சொல்லுகிறது உண்மைதான். ஆனா... இவங்கள் எல்லாம் நாடு கிடைச்சால் அங்க வரமாட்டினமே? அப்ப இவை எல்லாம் முன்னுக்கு நிற்பினம் தானேங்கோ? அங்க வைச்சுப் பிடிக்க வேணும் இவைய." என்றார் தாமோதரன்.

"நாடு வந்த பிறகு அவையப் பிடிச்சு வைச்சு யாருக்கு என்ன வரப் போகுது? தொடர்ந்தும் காசு பறிக்கிறதே இதுகின்ரை நோக்கம்?" என்றாள் இடக்காக மாலினி.

"ம்... பிடிச்சு இப்ப கட்டாததை எல்லா கறக்க வேணும். அப்பதான் எல்லாரும் நாட்டுக்குச் செய்கிறது சம பங்காய் இருக்கும்." என்றார் தாமோதரன். அவருக்கு மாலினி அந்தக் கேள்வியைக் கேட்டதை இட்டுச் சாதுவாக எரிச்சல். அதை "TS"சிற்கு முன்பு அவர் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. "TS" அரசியலை நிறுத்திவிட்டுத் தாமோதரனின் குடும்ப விடயம் பற்றிக் கதைக்க எண்ணினார். தாமோதரனின் விவாதத்திற்கு எதிராகத் தங்களைப் போராடக் கூடாது என்று தடுத்து நாட்டைவிட்டுக் கலைத்தவர்கள், சுயமாகப் போராடி விடுதலையை வாங்கட்டும் என்று மாற்று இயக்கத்தார் கருதுவது பற்றி எல்லாம் "TS" தாமோதரனிடம் கதைக்க விரும்பவில்லை. அவரவருக்கு அவரவர் நியாயம் சரியாக இருக்கும். இப்படியான விடை இல்லாத கேள்விகளுக்குள் தலையை நுழைக்காது தாமோதரனின் குடும்பம் பற்றிக் கேள்விப்பட்டதில் அவர் கவனம் திரும்பியது. இந்த விஷயத்தைத் தாமோதரன் றூபனிடம் சொல்லிக் கவலைப்பட்டு இருக்கிறார். றூபன் அதைச் சொன்னதில் இருந்து அதைப் பற்றிக் கேட்டு அறிய வேண்டும் என்கின்ற நினைப்பு அவரிடம். அதைச் சொல்வதற்குத் தானோ இன்று தங்கள் வீட்டிற்கு வருமாறு அழைத்தார் என்கின்ற சந்தேகமும் அவரிடம் இருந்தது. அதை

நேரடியாக தனக்குத் தெரியும் என்று காட்டிக் கொள்ளவும் "TS"சிற்குச் சங்கடமாய் இருந்தது. இருந்தாலும் அவர் மெதுவாகக் கதையைத் தொடங்கினார்.

"என்ன தாமோதரன்... உங்கடை பாடுகள் எல்லாம் எப்பிடிப் போகுது?" என்றார் "TS".

"அதைப் பற்றிக் கதைக்க வேணும் எண்டுதான் உங்களைக் கூப்பிட்டதே. வந்த உடனேயே எங்கடை ஒப்பாரியை ஏன் தொடங்குவான் எண்டு வேறை கதைகளைக் கதைச்சன்." என்றார் தாமோதரன். தாமோதரன் இடைக்கிடை மட்டுமே ம்ங்கோ என்பது வழமை. அவரது இடத்தைச் சார்ந்த பலர் அவரைவிட அதை அதிகமாகப் பாவிப்பார்கள். இன்று தாமோதரனின் கதையில் அந்த ம்ங்கோ இன்னும் அதிகமாகக் குறைந்து இருந்ததாக "TS"சிற்குத் தோன்றியது. மொழியின் தனித்தன்மை அந்தந்த இடங்களை விட்டு இடம் பெயரும் போது வீரியம் இழந்து விடுகிறதோ என்கின்ற எண்ணம் "TS"சிற்கு ஏற்பட்டது. தாமோதரனின் நிலையும் அதற்கு ஏதுவாகவே இருக்கிறது. அவரைப் போன்று கதைப்பவர்களோடு அவர் கதைப்பதற்கான சந்தர்ப்பம் குறைவாக உள்ளதும் உண்மை. அதே வேளை ம்ங்கோ போடாத தன்னைப் போன்றவர்கள் உடன் மட்டும் அவர் அதிகம் கதைக்க வேண்டி இருக்கிறது. மாலினி அவரது இடத்தைச் சார்ந்தவளாக இருந்தும் ஏதோ காரணத்தால் அவள் கிட்டத்தட்ட ம்ங்கோ போடுவதே இல்லை. மொத்தத்தில் தாமோதரனின் தனித்தன்மையான தமிழ் வலுவிழப்பதாய் "TS"சிற்குத் தோன்றியது.

"அப்பிடியே? என்ன விஷயம் எண்டு சொல்லும் தாமோதரன்." என்றார் "TS".

"நீங்கள் கேள்விப்பட்டு இருப்பியள். கேள்விப்படேல்லையா?" என்று தாமோதரன் "TS"சைச் சங்கடப் படுத்தும் கேள்வியைச் சங்கடப் படுத்துவதை உணர முடியாதவராய் கேட்டார்.

"ஓ றூபன் சாதுவாய் சொன்னவன். எனக்கு அது சரியாய் விளங்க இல்லை. நீங்கதான் என்ன நடந்தது? இப்ப

எதுக்கு அதைப் பிரச்சனையாகப் பார்க்கிறீங்கள் எண்டு சொல்ல வேணும்." என்றார் "TS".

"உங்களுக்குப் பிரச்சனையைச் சொல்லுகிறதிலேயே ஒரு பிரச்சனை இருக்குதுங்கோ. நீங்கள் எப்பவும் அவங்கடை பக்கமே நிற்பியள். அவங்கள் இங்க வளர்ந்தவங்கள். இந்த நாட்டுக்காரன் எண்டு நீங்கள் சமாதானம் சொல்லுவியள். என்னைப் பொறுத்த வரையில நான் எப்பவும் ஈழத்தமிழனாகத்தான் இருப்பன். என்ரை பிள்ளைகளும் அப்பிடி இருக்க வேணும் எண்டதுதான் என்னுடைய விருப்பம். ஆனா... அவங்கள் அப்பன், ஆத்தையை மதிக்காத தறுதலையளா நடக்க நினைக்கிறாங்களுங்கோ." என்றார் தாமோதரன். அவருக்குக் கோபத்தில் கைகள் நடுங்குவதை அவர் இறைச்சிப் பாத்திரத்தை எடுத்த போது "TS"சால் கவனிக்க முடிந்தது. நெருப்புக் குறைந்து செந்தணல் விழுந்ததால் இனி இறைச்சியை வாட்டலாம் என்கின்ற முடிவோடு தாமோதரன் இறைச்சிப் பாத்திரத்தை கையில் எடுத்து இருந்தார்.

"பதட்டப்படாமல் விஷயத்தைச் சொல்லும் தாமோதரன். நடைமுறை பற்றிச் சொல்லுகிறதிலை பிழை இருக்குது எண்டு நான் நினைக்க இல்லை. இங்கத்தே சட்டம் தெரியும் தானே? எந்த விதமான வன்முறைக்கோ அடக்கு முறைக்கோ இங்க இடம் இல்லை. அதுகளைப் பாவிச்சா பிள்ளைகளை இழக்க வேண்டி வரும் எண்டதும் உங்களுக்குத் தெரியும். அப்பிடி இழந்தவை கனபேர் தெருவில நிண்டு இப்ப ஆர்ப்பாட்டம் செய்கிறதையும் பார்த்து இருப்பியள். இழந்த பிறகு அதுக்கு அலைகிறதிலை பிரியோசனம் இல்லை. அதோடை எப்பவும் நாங்கள் எங்கடை நிலையில இருந்துதான் சிந்திக்கிறம். அது பிழையான விஷயம். அப்பிடிச் சிந்திச்சா எங்களால முழுமையாகப் பிரச்சனையை விளங்கிக் கொள்ள முடியாது. நாங்கள் அவங்களா மாறி, அவங்கடை இடத்தில இருந்து சிந்திச்சு பார்க்க வேணும். அப்ப அவங்கள் நினைக்கிறது நியாயம் எண்டு விளங்கும்." என்றார் "TS".

தாமோதரன் இறைச்சியை வாட்டத் தொடங்க, கரி தன்னுள் தாங்கி வைத்திருந்த வெப்பத்தைத்

தாரைவார்ப்பதாக, உஸ் என்ற வண்ணம் புகையையும் மணத்தையும் உண்டாக்கிய அதே வேகத்தில், காற்றில் தாவி, மனிதர்களின் நாசியை வந்து அடைந்தது. தாமோதரனுக்கு "இவரோடை கதைச்சா இப்பிடிதான் புத்திமதி சொல்லுவார். ஆனா... இவரை விட்டா உருப்படியா புத்திமதி சொல்லக் கூடிய ஆள் யார் எண்டு தேடுகிறது?" என்பதான மனக் குழப்பம் ஏற்பட்டது. எப்படி என்றாலும் "TS" நன்கு யோசித்தே கதைப்பார். அவர் சொல்லை மீறிச் செய்வது நிச்சயம் சிக்கலில் மாட்டலாம். அப்படியான சிக்கல் விழுந்தால் அது அதிகம் பாதிப்பாகி விடும். எதற்கும் பொறுமையாக அவரிடம் புத்திமதி கேட்பதே உகந்தது என்று தாமோதரன் தனது மனதைச் சாந்திப் படுத்தினார். பின்பு மெதுவாக கதைக்கத் தொடங்கினார்.

"நரேசும், குணேசும் என்ரை சொல்லைக் கேட்கிறாங்கள் இல்லை. மாலினி சொன்னாலும் அதே கதைதான். தாங்கள் நினைச்சதைச் செய்வம் எண்டு அடம் பிடிக்கிறாங்கள். சமருக்கு இந்தியா போய் வருவம் எண்டு நான் பிளான் பண்ணி இருந்தன். அவங்கள் தங்கடை வேறை இரண்டு பிறண்டுகளோடை, அவையின்ரை பெம்பிளைப் பிறண்டுகளையும் சேர்த்துக் கொண்டு எல்லாருமாகச் சேர்ந்து தாயிலாந்து போகிறம் எண்டு வெளிக்கிட்டாங்கள். எனக்குச் சரியான கோபம். அதால நிறைய வாக்குவாதம். உங்கடை விருப்பத்திற்குப் போனா இங்க திரும்பி வரக் கூடாது எண்டு வேறை வெருட்டினன். இங்க வர விடாட்டி எங்களுக்கு லோன் எடுத்துப் படிக்கத் தெரியும். தங்கிறத்துக்கும் இடம் இருக்குது எண்டிட்டுப் போயிட்டாங்கள். நாங்கள் எவ்வளவு கஸ்ரப்படுகிறம்? நாங்கள் இவங்களைப் பார்க்கிறதோடை நாட்டுக்கும் உதவி செய்ய வேணும். அதுக்காக இரவு பகலா வேலை செய்ய வேணும். இப்பிடி எவ்வளவு கஸ்ரப்படுகிறம் எண்டதைக் கொஞ்சமும் யோசிக்காமல் எடுத்தெறிஞ்சு பேசுதுகள். தங்கடை விருப்பத்திற்கு கட்டு மீறிப் போகுதுகளுங்கோ. கேட்டா கோபம் வருகுது. தாங்கள் நினைச்சதைத்தான் செய்வமாம்." என்று ஒரு பாட்டம் பாடி முடித்தார் தாமோதரன்.

"தோழுக்கு மிஞ்சினாத் தோழன் எண்டு ஊரிலேயே சொல்லுவினம். அங்கயே அப்பிடி எண்டா இங்க அதைவிட அவங்கடை விருப்பமே முன்னுக்கு இருக்க வேணும். நாங்கள் புத்திமதி மட்டும் சொல்லலாம். அதைவிட வேறை ஒண்டும் செய்ய முடியாது. அவங்களை நாங்கள் வழிநடத்துகிற காலம் இப்ப கை நழுவி கனகாலம் ஆகீட்டுது. இப்ப பகைக்காமல் எதை ஆவதும் சொல்லலாம். அதை ஏற்றுக் கொள்ளுகிறதும் விடுகிறதும் அவங்கடை விருப்பம். அதை இனி நாங்கள் மாற்ற முடியாது. கவலைப்படாதேங்க தாமோதரன். அவங்கள் தங்கடை சோடிகளோடை தானே போய் இருக்கிறாங்கள். குடிச்சு, ஆடி, ஐரோப்பிய வாழ்க்கையை வாழுவாங்கள். தனியப் போனா அதைவிட மோசமாக்கூட நடக்கச் சந்தர்ப்பம் இருக்கும். அதுக்கு இது ஒரு கட்டுப்பாடு மாதிரி எண்டு வைச்சுக் கொள்ளுவமே. எங்களால எவ்வளவு அடையாளத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும் எண்டுகிறது ஆளுக்கு ஆள் மாறுபடும். ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு விஷயம் முக்கியமாகப்படும். அதுக்கு ஏத்த மாதிரித்தான் அவை எப்பிடி வாழப் போகினம் எண்டது முடிவாகும். உங்கடை பெடியள் தாங்கள் இப்பிடித்தான் வாழுவம் எண்டு முடிவு செய்து இருக்கிறாங்கள். அதை இங்க வன்முறையால மாற்ற முடியாது. அப்பிடி மாற்றவும் நினைக்கக் கூடாது. ஏலும் எண்டா தன்மையாக் கதைச்சுப் பாருங்க. ஏற்றுக் கொண்டா என்ன இல்லாட்டி என்ன நட்பாய் இருக்கப் பாருங்க. எல்லாத்தையும் விட உங்களுக்குப் பிள்ளையள் தேவை எண்டது முக்கியம். அதுக்காகப் பலதையும் தியாகம் செய்ய வேண்டி வந்தால் செய்யத்தான் வேணும். இதைப் பெரிசா எடுத்துக் கொண்டு முரண்டு பிடிச்சா எதுவும் செய்ய முடியாது. பெரிசு படுத்தாமல் தன்மையாப் பொறுத்துப் போகிறது புத்தி. என்ரை அறிவுக்குச் சரி எண்டு பட்டதைச் சொல்லி இருக்கிறன். இதுக்கு மேல நீங்கள் யோசிச்சுச் செய்யுங்கோ. சரிஸ்காவும் வெளிக்கிட்டுப் போயிட்டாள். நாங்கள் என்ன செய்ய முடியும்? விளங்கிக் கொண்டு ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்." என்றார் "TS".

"சரிஸ்காவோடை இவங்களை ஒப்பிடுகிறதா அண்ணை. அவள் சேவை செய்யப் போய் இருக்கிறாள். இதுகளை

மாதிரி ஆட்டம் போடவே அவள் போய் இருக்கிறாள்? அவள் பிள்ளை அண்ணை. இதுகள் தறதலையள்." என்றார் தாமோதரன். அவர் இதைக் கூறிய வண்ணம் இறைச்சியைப் புரட்டி போட்டார். எண்ணெய் உருகி ஒழுகியதால் நெருப்பு மேலே எழுந்தது. அது தொடர்ந்தும் எரிவதைத் தடுப்பதற்கு இறைச்சியை ஓரங்களில் ஒதுக்கி விட்டார்.

"விடுங்க தாமோதரன். அவங்கள் தங்கடை உலகத்தை இப்பிடிப் பார்க்கிறாங்கள். சரிஸ்கா வேறை மாதிரிப் பார்க்கிறாள். மொத்தத்தில அவங்கடை பார்வை எங்களை விட வித்தியாசமானது. அதை நாங்கள் கட்டுப்படுத்த முடியாது எண்டது மட்டும் உண்மை. அதைக் கட்டுப்படுத்தவும் தேவை இல்லை எண்டு நான் நினைக்கிறன். ஒரு வகையில அதுதான் இங்கத்தே வாழ்க்கை." என்றார் "TS".

"உண்மை அண்ணை... அவங்கள் நினைக்கிறதை மட்டும் செய்வாங்கள். நாங்கள் என்ன கூத்தாடியும் பிரயோசனம் இல்லை. ஊரில அப்பு எண்டா நாங்கள் எப்பிடி நடுங்கி இருப்பம். இவங்கள்? எல்லாம் காலமும் இடமும்... கட்டுப்பாடே இல்லாமல் போச்சுது." என்றார் தாமோதரன்.

"இது அவங்கடை யுகம். அவங்கடை இடம். அவங்கடை வாழ்க்கை. எப்பவும் அவங்களுக்குத் துணையாய் இருந்து புத்திமதி சொல்ல வேணும். அதை செய்யாமல் விடக் கூடாது." என்றார் "TS".

"அவங்கள் எங்க கேட்கிறாங்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும் எண்ட மாதிரித் தங்கடை பாட்டுக்கு எல்லே போகிறாங்களுங்கோ." என்றார் தாமோதரன்.

"அவங்கள் கேட்கிறாங்களோ இல்லையோ நாங்கள் சொல்லுகிறது எங்கடை கடமை." என்றார் "TS".

"நீங்கள் சொல்லுகிறது உண்மைதான். ஆனால் எல்லா நேரமும் அதைப் பாத்துக் கொண்டு இருக்க முடியாது." என்றார் தாமோதரன்.

மாலினி வெந்த இறைச்சியை எடுத்து மரக்கறிச் "Salad", உருளைக்கிழங்குச் "Salad" என்பனவற்றை வைத்துப் பரிமாறத் தொடங்கினாள்.

# 16 விதியின் வலிய கரங்கள்

சரிஸ்கா தனது வனவாசம் முடித்துக் கொண்டு நாடு திரும்பி விட்டாள். அவள் நாடு திரும்பினாலும் பட்டத்து இராணியாக முடி சூடிக் கொள்ளுமாறு யாருக்கும் கேட்கும் துணிவு துளியும் இல்லை. அப்படிக் கேட்பது இல்லை என்று "TS" நினைத்து இருந்தார். அப்படிக் கேட்க வேண்டும் என்று புவனலோசினிக்குத் தோன்றினாலும், தான் முடிசூட்டு விழாவைப் பற்றிக் கதைக்கப் போய் அவள் காடேகி விட்டால் என்கின்ற பயத்தில் தனது அவாவின் வாலை நன்கு சுருட்டிக் கட்டி அதன் மேல் அவதானமாகக் குந்தி இருந்து கொண்டாள். அத்தால் நாடு சந்தோஷக் குதியாட்டம் போடாவிட்டாலும் சோகம் களைக் கட்டாது காலம் அமைதியாக நகர்ந்தது.

வனவாசம் முடித்து வந்த சரிஸ்காவைப் பார்க்க வேண்டும் என்று ஏற்கனவே ஒரு முறை அலைபேசியில் கேட்ட போது சரிஸ்கா மேலதிக வேலையில் இருந்தாள். இரண்டாவது முறையாகத் தொடர்பு கொண்டு கேட்ட போது சரிஸ்காவே அலைபேசியில் பேசினாள். அதற்கு அமைய அவளுக்கு இன்று மேலதிக வேலை இல்லை. வேலையால் சற்று முன்பாகவே வந்து குளித்துச் சாப்பிட்டு விட்டு "வபல் காக்கா" செய்வதற்கான ஏற்பாட்டையும் கவனித்தாள். பின்பு தனது கணினியில் ஏதோ சொறிந்து கொண்டு இருந்தாள். கெலேனாவுக்கு வபல்லோடு கோப்பியும் வழங்கி அளவளாவிக் கொள்ளலாம் என்பது அவள் எண்ணம். அம்மா வந்தால் வேறு ஏதாவது தமிழ்ப் பலகாரங்களும் கொண்டு வந்து வைப்பா என்பது அவள் ஊகம். அம்மா வேலையால் வருவதற்கு முதல் கெலேனா வந்து விடுவார். அவர் எவ்வளவு நேரம் கதைத்துக் கொண்டு இருப்பாரோ தெரியவில்லை. நிச்சயம் எதியோப்பியாவைப் பற்றி அறிந்து கொள்ள ஆவலாய் இருப்பார் என்று சரிஸ்காவிற்குத் தோன்றியது.

சிறிது நேரத்தில் அப்பா வருவதைச் சரிஸ்கா கவனித்தாள். அவர் வழமை போல வந்ததும் குளிப்பதற்குக் குளியல் அறைக்குச் சென்று விட்டார்.

அவர் குளியல் அறைக்குள் சென்ற சற்று நேரத்தில் வெளிக் கதவின் அழைப்பு மணி ஒலித்தது. சரிஸ்கா ஓடி வந்து அதை எடுத்தாள். அதில் கெலேனா பேசினார். அவருக்காகக் கதவைத் திறந்துவிட்டு வீட்டுக் கதவோடு சரிஸ்கா நின்று கொண்டாள். இரண்டு நிமிடத்தில் வீட்டின் கதவின் முன்பு கெலேனா தோன்ற அவர் அழைப்பு மணியை மீண்டும் அழுத்தும் சந்தர்ப்பம் கொடுக்காது கதவைச் சரிஸ்கா திறந்தாள். அப்படிக் கதவைத் திறந்ததிற்காய் ஆச்சரியத்தைக் காட்டியதோடு, "நீ நன்றாகவே இருக்கிறாய்." என்று கூறிச் சரிஸ்காவை கட்டித் தழுவினார். சரிஸ்காவும் அவரைக் கட்டித் தழுவினாள். பின்பு கதவைப் பூட்டிவிட்டு கெலேனாவை அழைத்துச் சென்று சோபாவில் இருக்க வைத்தாள். கெலேனாவால் புதினம் அறியும் ஆவலை அடக்கி வைத்து இருக்க முடியவில்லை. அவர் நேரடியாகவே விஷயத்தில் இறங்கினார். சரிஸ்காவும் அலுக்காது எதியோப்பியாவில் ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டு இருக்கும் போது "TS" குளித்துவிட்டு வந்தார். "TS" வந்ததும், தான் எழுந்து கோப்பி தயாரித்து வருவதாக சரிஸ்கா சமையல் அறைக்குச் சென்றாள். அந்த இடைவேளையில்,

"நான் ஒன்று கேட்கலாமா?" என்றார்.

"தாராளமாய் கேளுங்கள்." என்றார் "TS". கேட்கப் போகும் விஷயம் தெரிந்து இருந்தால் தனக்கு அலுவல் இருக்கிறது என்று அந்த இடத்தை விட்டே நகர்ந்து இருப்பார். ஒன்றில் பேராசை அல்லது அசட்டுத்தனம் ஆபத்துக்களில் மாட்டி வைத்து விடுகிறது. "TS"சின் அசட்டுத்தனம் அவருக்கு முதலில் விளங்கவில்லை.

"எதற்காக இவள் கலியாணம் செய்து கொள்ளவில்லை? ஆண் நண்பர்களாவது இவளுக்கு இருக்கிறார்களா?" என்றார் கெலேனா.

"அதைப் பற்றி ஏனோ அவள் கதைக்க விரும்புவது இல்லை. நானும் அவளை வற்புறுத்த விரும்பவில்லை. சில வேளைகளில் அம்மாவும் மகளும் சண்டை பிடித்துக் கொள்வார்கள். அவை வெறும் இரைச்சலாக இருந்தனவே தவிர எந்தவித பிரயோசனத்தையும் தரவில்லை. இதற்கு

மேல் அவள் சுதந்திரத்தில் தலையிடுவது அழகில்லை என்று நான் ஒதுங்கிக் கொண்டேன்." என்றார் "TS".

"நீங்கள் சொல்வது மிகவும் சரியே. என்றாலும் சொந்தப் பிள்ளை சந்தோஷமாக, குடும்பமாக வாழ்ந்தால் பெற்றோருக்கு மிகவும் உவப்பாக இருக்கும். இல்லாவிட்டால் அது பெரும் கவலையாக அரிக்கும். மற்றவர்களுக்குக் கிடைக்கும் சந்தோஷம் எங்களுக்குக் கிடைக்க இல்லையே என்று ஏக்கமாக இருக்கும். நீங்களும் அப்படியே கவலைப் படுவீர்கள். என்ன செய்ய முடியும்? பிள்ளை என்றாலும் பதினெட்டு வயதானால் அவள் மற்றைய மனிதர் போல் மாறி அந்நியமாகி விடுகிறாள். மற்றைய மனிதர்கள் மேல் எங்கள் ஆசைகளைத் திணிக்க முடியாது என்பது உண்மை." என்றார் கெலேனா.

"சில வேளைகளில் இருப்பதை வைத்துத் திருப்திப்பட்டுக் கொள்வது மட்டுமே நிம்மதியைத் தரும் என்பதை நான் உணருகிறேன். ஆகாயத்தில் பறப்பதற்கு மனிதன் படைக்கப்படவில்லை. அதற்கு ஆசைப்பட்டால் நிம்மதியும் அமைதியும் எங்களை விட்டு விலகிவிடும். அது இல்லாது அவதிப் படுவதிலும் இருப்பதை வைத்து திருப்திப் படுவது மேன்மையாக எனக்குத் தோன்றுகிறது." என்றார் "TS".

"நீங்கள் சொல்வது உண்மையே. அதில் நீங்கள் தெளிவாகவே இருக்கிறீர்கள். அதே வேளை நம்பிக்கையைக் கைவிடாதீர்கள்." என்றார் கெலேனா.

"ம்… நம்பிக்கை முக்கியமே." என்றார் "TS". அவர் மனது அவரை இரகசியமாக நோண்டியது. நீ சொல்வது உண்மைதானா என்று அது மெதுவாகக் கேட்டது. அதைப் பற்றிச் சிந்திக்க முடியாத அளவிற்கு வாபல் கேக்கினதும் கோப்பியினதும் வாசம் அலையாக வந்தது. அது புகைந்த பசியைச் சுவாலை விட்டு எரிய வைத்தது. சரிஸ்காவின் சமையல் எப்போது மேசைக்கு வரும் என்கின்ற தவுனம் விஸ்வரூபத்தை வயிற்றுக்குள் காட்டி நெளிய வைத்தது. "TS" நெளிந்த போது புவனலோசினி கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தாள். கெலேனாவைக் கண்டதும் காய் சொல்லி விட்டுத் தங்களது படுக்கை அறைக்குள் புகுந்தாள். மற்றைய நேரங்களில் என்றால் சிறிது

நேரத்தில் புவனலோசினி சாப்பாட்டுடன் கோலுக்கு வந்து விடுவாள். இன்று அதற்குச் சந்தர்ப்பம் வாய்க்காது என்கின்ற போது சரிஸ்காவின் சமையலையே நம்ப வேண்டி இருந்தது. சரிஸ்கா பல வேளைகளில் அளந்து அமிர்தம் போலவே சமைப்பாள். அப்படி அவள் செய்தால் "TS"சின் அவஸ்தை கெலேனா போகும் வரை தொடர்கதை ஆகும்.

சரிஸ்கா முதலில் வபல் தட்டுடன் வந்தாள். அதனுடன் சேர்த்துச் சாப்பிடுவதற்கு மண் நிறமான பால்க்கட்டி, ஜாம், வெண்ணெய் ஆகியன கொண்டு வந்தாள். மண் நிறமான பால்க்கட்டி ஆட்டுப் பாலில் நோர்வேயில் செய்யப்படும் ஒரு விசேடமான பால்க்கட்டி. மண் நிறத்தில் இருக்கும் இந்தப் பால்க்கட்டி வெக்கைக்கு மற்றைய பால்க்கட்டியைப் போல உருகி மென்மை ஆகும். மற்றைய பால்க்கட்டிக்கு சுவைக்காக உப்புச் சேர்த்தால் இதற்கு மட்டும் சீனி சேர்த்து இருப்பார்கள். அதைச் சூடாக இருக்கும் வபல் கேக்கில் வைத்துச் சாப்பிட்டால் அமிர்தமாய் தித்திக்கும். அத்தோடு வெண்ணெய், ஸ்ரோபறி ஜாம், றொம்ம எனப்படும் கொழுப்புத் தயிர் என்பனவும் சுவை கூட்டும். சரிஸ்கா குவளைகள், தட்டுக்கள் என்பன வற்றை எடுத்து வந்து மேசையில் வைத்துவிட்டு,

"எடுத்துக் கொள்ளுங்கள்." என்று கெலேனாவைப் பார்த்துக் கூறிவிட்டுக் கோப்பியை எடுத்துவரச் சமையல் அறைக்குச் சென்றாள். கெலேனா ஒரு வபலை எடுத்து அதில் ஒரு பாதிக்கு வெட்டிய மண் நிறமான பால்க்கட்டியையும், மற்றைய பாதிக்கு வெண்ணெய் உடன் ஜாமையும் வைத்து மடித்து வைத்துவிட்டு, மண் நிறமான பால்க்கட்டி வைத்த துண்டில் ஒரு கடி கடித்துச் சுவைத்தார். "TS" ஒரு முழு வபல் கேக்கிற்கே மண் நிறமான பால்க்கட்டி வைத்துக் கடித்தார். சரிஸ்கா கோப்பி உடன் வர புவனலோசினியும் அங்கு வந்து சேர்ந்தாள். எல்லோருமாக இருந்து வபல் சாப்பிட்டார்கள். அப்போது அந்த அலைபேசி அழைப்பு வந்தது. "TS" தனது குட்டி அலைபேசியை எடுத்துச் சென்று கதைத்தார். அவர் கதைத்த தொனியில் புவனலோசினியும், சரிஸ்காவும் அமைதியாகினர். உலவோல் என்கின்ற சொல் யாருக்கோ

ஆபத்தாக என்னவோ நடந்து விட்டது என்பதைக் கட்டியம் கூறுவதாய் அமைந்தது. "TS" கதைத்து முடித்த பின்பு அவர்களிடம் திரும்பி வந்தார். கெலேனா இன்னும் நிறையச் சரிஸ்கா உடன் கதைப்பதற்கு ஆவலாய் இருந்தார். அந்த ஆவல் நிறைவேறாது என்பது தமிழ் விளங்கிய பெண்களுக்கு தெளிவாகிற்று. "TS" கோலிற்குள் வந்ததும் கெலேனாவைப் பார்த்து,

"என்னுடைய நண்பனின் மகனுக்குக் கடுமையான வருத்தமாம். நாங்கள் உல்லவோல் மருத்துவமனைக்குச் சென்று அவனைப் பார்த்து வரவேண்டும். சிறிது நேரத்தில் நாங்கள் அதற்காக புறப்பட வேண்டி இருக்கிறது. நீங்கள் எங்களை மன்னித்துக் கொள்ள வேண்டும்." என்று கூறினார்.

"பருவாய் இல்லை. நான் இன்னொரு நாளைக்கு வருகிறேன். எனக்கும் வேறு ஒரு அலுவல் இருக்கிறது." என்றார் கெலேனா.

"என்னையும் மன்னிக்க வேண்டும் கெலேனா. நானும் அப்பா, அம்மாவோடு போய் பார்த்து வந்தால் நல்லது என்று நினைக்கிறேன். மீண்டும் என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும்." என்றாள் சரிஸ்கா.

"எனக்கு நிலமை விளங்குகிறது. என்னிடம் நீங்கள் மன்னிப்புக் கேட்கத் தேவை இல்லை. நீங்கள் தாராளமாகப் போய் பார்த்து வாருங்கள். வபல் காக்காவிற்கும் கோப்பிக்கும் நன்றி. சரிஸ்கா மிகவும் நன்றாகச் செய்து இருக்கிறாய். நல்ல சுவையாக இருக்கிறது." என்று ஒரு புகழ் மாலை சரிஸ்காவிற்குச் சூட்டி விட்டு கெலேனா புறப்பட்டுச் சென்றார்.

"TS" அதன் பின்பு அவசர அவசரமாகச் சாப்பிட்டு முடிக்க எல்லோரும் புறப்பட்டு உலவோல் மருத்துவமனைக்குச் சென்றார்கள்.

*

காரில் புறப்பட்ட பின்பே தாமோதரனுக்குத் தாங்கள் பார்க்க வருவதைப் பற்றி "TS" அலைபேசியில் தொடர்பு கொண்டு கூறினார். "எங்களையே வெளியாலதான் விட்டு இருக்கிறாங்கள். நீங்கள் வந்தும் அவனைப் பார்க்க

முடியாது." என்று தாமோதரன் கூறினார். "உங்களையாவது வந்து சந்திக்கிறம்." என்று கூறிய "TS" வழமை போல அவர்களுக்குச் சாப்பாடு வாங்க முதலில் குரண்லாண்டிற்குச் சென்றார். ஆஸ்பத்திரிச் சாப்பாடு அனேகருக்கு ஒத்துக் கொள்வது இல்லை. ஏதாவது உறைப்பாகச் சாப்பிட்டால் மட்டுமே பத்தியப்படும் என்பது "TS"சிற்குத் தெரியும். அதுவும் தாமோதரன் சாப்பாட்டில் உறைப்பைத் தூக்கலாக விரும்புபவர். அவருக்கு நொஸ்க் சாப்பாடு உறைப்பு இல்லாது சாப்பிடுவது என்றால் முழி பிதுங்கும் என்பது "TS"சிற்குத் தெரியும்.

வைத்தியசாலையில் அவர்களைக் கண்டதும் நால்வரும் பேச்சு இழந்து சிலைகளாக நின்றார்கள். இழவு விழுந்ததாக அவர்கள் முகங்கள் தொங்கின. மாலினி நிறைய அழுது இருக்க வேண்டும். தலை முடியை வாராது அள்ளிக் கட்டி இருந்தாள். முகத்தைக் கவனிக்க நேரம் இல்லாது சொண்டுகள் கறுத்து வெடித்துக் கிடந்தன. எல்லாமே போன பின்பு நான் இருந்து என்ன என்கின்ற தோற்றம் அதுவாகியது. தாமோதரனும் தன்னைப் பற்றிக் கவலை இல்லாது விசரனைப் போன்று நின்றார். இவர்களைக் கண்டதும் சிரிப்பதாக நினைத்துக் கவலையை அடக்க முடியாது அழவே தொடங்கி விட்டார். அதைப் பார்த்த மாலினி அவசரமாகத் தாமோதரனைத் தன்னோடு அணைத்துக் கொண்டாள். "TS" அருகே செல்ல முயற்சிக்க அருகே வர வேண்டாம் என்று சைகை காட்டினாள். "TS"சிற்கு அது ஏன் என்பது முதல் விளங்கவில்லை. ஆனால் அவள் சைகையை மதித்து அங்கேயே நின்று கொண்டார். அவர் பின்னே புவனலோசினியும், சரிஸ்காவும் நின்று கொண்டார்கள்.

அவளது வெள்ளை முகம் குங்கும நிறத்தில் சிவந்து இருந்தது. அது இரத்தம் சொட்டுகிறதோ என்கின்ற பதட்டத்தை உண்டு பண்ணும் கோலம். அத்தினை நரம்புகளிலும் கவலை இரத்தமாக முறுக்கிப் பாய்ந்து... வெடித்து... சோகமாக... நெஞ்சை அறுக்கும் சோகமாக... ஏற்கனவே நன்கு அழுது இருக்க வேண்டும். இப்போது அவள் கைகளால் தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் ஒரு கதிரையில் இருந்தாள். அவள் ஆரோக்கியமாய்

இருப்பது பலருக்கும் நிம்மதியைத் தந்து இருந்தது. அல்லது அவளே முதலில் அகப்பட்டு இருக்க வேண்டும். இப்போது அவளுக்குத் தடுப்பு மருந்து கொடுத்து இருப்பார்கள். இனி அவளுக்கு ஆபத்து இருக்காது.

குணேஸ் யோசித்துக் கொண்டு இருந்தான். "TS" குடும்பத்தை ஒரு முறை பார்த்துச் சிரித்து விட்டு மீண்டும் ஆழ்ந்த யோசனையில் அவன் உறைந்து போய் விட்டான். அவனுக்கு அருகே சென்று ஆறுதல் சொல்ல வேண்டும் என்று சரிஸ்கா நினைத்தாள். அத்தோடு அவளுக்கு அவனது வருத்தம் பற்றி ஒரு ஊகம் தோன்றி இருந்தது. மாலினி சைகை காட்டியதை எண்ணிய அவள் அந்த எண்ணத்தைக் கைவிட்டாள். அவனுக்கு அப்படி என்ன வருத்தமாய் இருக்கும் என்கின்ற கேள்விக்கு மருத்துவராய் ஒரு திடமான முடிவுக்கு அவளால் விரைவாக வர முடிந்தது. இருந்தும் அப்படி எதுவும் இருக்கக் கூடாது என்று பிரார்த்தித்தாள்.

அவன் மயக்கத்திலேயே தொடர்ந்தும் இருந்ததால் அவனை அவசரச் சிகிச்சைப் பிரிவில் வைத்து இருந்தார்கள். அங்கு உள்ளே போக முடியாது. இவர்களுக்கும் தடுப்பூசி போட்டு இருக்கிறார்கள் என்று கூறிய மாலினி எதற்கும் எட்ட நின்று கதைப்பதே நல்லது என்று கூறினாள். எச்சில் துமிள்களால் பரவும் அபாயம் உள்ளது என்றும், அதிகம் பெரியவர்களைத் தாக்குவது இல்லை என்றும், என்றாலும் தாக்காது என்பதற்கு எந்த உத்தரவாதமும் கிடையாது என்றும் தான் கேள்விப் பட்டதைக் கூறினாள்.

சரிஸ்கா றிசப்சனுக்குச் சென்றாள். அங்கு நின்ற தாதியுடன் கதைத்து விபரம் அறிந்து கொண்டாள். தாதி சொல்லியவை அவளிற்கு வேதனை தந்தது. இருந்தும் எல்லாம் நல்லதாக முடியும் என்கின்ற நம்பிக்கை அவளிடம் இருந்தது. நம்பிக்கையே வாழ்க்கை என்பதை அவள் இப்போது நம்ப முயற்சித்தாள். சிறிது நேரத்தில் தாமோதரன் ஒரு கதிரையில் வந்து இருந்தார். அவர் தன்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டார். மாலினி மெதுவாகக் கதைக்கத் தொடங்கினாள்.

"தலையிக்க இடிக்குது, காய்ச்சல் காயுது எண்டிட்டுப் போய் அறையிக்க படுத்தவன். நாங்கள் இப்பிடிப் பெரிய

கோதாரியா இருக்கும் எண்டு யோசிக்க இல்லை. இனி நாங்கள் அறையிக்க போனாலும் பாம்புகள் மாதிரிச் சீறுவாங்கள். அது அவையின்ரை தனி இராச்சியம் மாதிரி. அப்பா அம்மாவுக்குக்கூட அங்க தயவு தாட்சண்ணியம் கிடையாது. அவளும் அண்டைக்கு எண்டு வரேல்லை. அதால தனியப் படுத்து இருந்தவன். குழப்ப வேண்டாம் எண்டு நாங்களும் விட்டிட்டம். காலமை சாப்பாட்டுக்கும் எழும்ப இல்லை எண்ட பிறகுதான் அவன் பேசினாலும் பருவாய் இல்லை எண்டு நான் போய் பார்க்க மயக்கமாய் கிடந்தான். உடன அம்புலன்ஸ்சிற்கு அடிச்சம். அவங்கள் வந்து பார்த்திட்டு அவசரமா இங்க கொண்டு வந்து சேர்த்துப் போட்டாங்கள். அம்புலன்சிறக வைச்சே மருந்து ஏத்தினவங்கள். ஆனா... அவன் முளிக்க இல்லை. பிறகு டொக்ரர்மார் செக் பண்ணிப் போட்டு யானகின்னவெத்தென்னல்ச (மூளைக்காய்ச்சல்) எண்டு..." மாலினி அதற்கு மேல் சொல்ல முடியாமல் விக்கி விக்கி அழுதாள்.

மிகவும் ஆபத்தான நோய்களில் ஒன்றே இந்த மூளைக்காய்ச்சல். ஆபத்திலும் ஆபத்தாய் இருப்பது அது வருவதைக் கண்டு பிடிக்க முடியாமல் இருப்பதே. சாதாரண காய்ச்சல் என்று அசண்டையாக இருக்க அது உள்ளே மனித இயக்கத்தின் உயிர் நாடியான நரம்பு மண்டலத்தையே மேய்ந்து விடும். அந்த மேய்ச்சல் என்பது மின்னல் வேகத்தில் நடக்கும். ஆரம்பத்தில் கவனிக்கத் தவறும் பட்சத்தில் அல்லது என்ன வருத்தம் என்று தெளிவில்லாது குழப்பத்தோடு வைத்தியம் செய்கையில் அதன் மின்னல் மேய்ச்சலால் மயக்கத்திற்கு அல்ல கோமாவிற்குக் கொண்டு சென்று விடும்.

மாலினி அழுவதைப் பார்த்த புவனலோசினிக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. கிட்டே போக முடியாது. அவளே கிட்டே வர வேண்டாம் என்று சொல்லி விட்டாள். அவளுக்கு இது எப்படித் தொற்றும் என்பது தெரியாது. ஆனால் எதற்கு வில்லங்கம் என்றும் தோன்றியது. மாலினி நிலைமையை உணர்ந்தவளாக வாயைப் பொத்திக் கொண்டு அழுது அவஸ்தைப் பட்டாள். மற்றவர்களுக்குத் தொந்தரவாய் இருக்கக் கூடாது என்பதை அவள் அந்த நேரத்திலும் கடைப்பிடித்தது "TS"சிற்கு வியப்பாக

இருந்தது. தன்னால் இப்படியான சோகத்திலும் அதைப் பற்றி எண்ண முடியுமா என்று அவருக்குத் தெரியவில்லை.

திரும்பி வந்த சரிஸ்கா குணேசிடம் ஏதோ துருவித் துருவிக் கேட்டாள். அவள் அவன் அருகே செல்லவில்லை. சற்று தூரத்தில் அவன் நோக்கும் திசையை நோக்கிச் சமாந்தரம் ஆக நின்று கதைத்தாள். "TS"சிற்கு ஏதாவது கதைத்தால் தங்களைச் சூழ்ந்த அமைதியின் மூச்சு முட்டல் அடங்கும் என்பதாய் பட்டது. அவர்களை மேலும் பயப்படுத்துவதாய் அது இருக்கக் கூடாது என்றும் எண்ணினார். அவர்களுக்குச் சமாதானம் சொல்லுவதாய் அமைய வேண்டும் என்பதற்கு முக்கியம் கொடுத்து அவர் மெதுவாகக் கதைக்கத் தொடங்கினார். மாலினியும் தற்போது விசும்பலை நிறுத்திக் கொண்டது அதற்கு வசதியாக இருந்தது.

"நீங்கள் பயப்பிடாதேங்கோ. இவங்கள் கெட்டிக்காரர். எல்லா வசதியும் இங்க இருக்குது. என்ன வருத்தம் எண்டாலும் இவங்கள் மாத்திப் போடுவாங்கள். இந்த வருத்தம் இடைக்கிடை றுஸ்சிற்கு (உயர்தரம் படித்து முடியும்போது நடக்கும் கொண்டாட்டம்) போகேக்க தொத்துகிறது தானே?. அனேகமா மாத்திப் போடுவாங்கள். நீங்கள் தேவை இல்லாமல் கவலைப் படாதேங்கோ." என்றார் "TS". அந்த நேரங்களில் இந்த வருத்தத்தால் சில மாணவர்கள் இறந்து போவதும் உண்டு என்பதும் அவருக்குத் தெரியும். அந்த உண்மைகளை எல்லாம் சொல்லித் தாமோதரன் குடும்பத்தை நடுங்க வைக்கும் எண்ணம் "TS"சிடம் இருக்கவில்லை. சரிஸ்கா குணேசோடு கதைத்து விட்டு மீண்டும் வரவேற்பறைக்குச் சென்றாள். அவளின் அந்தப் பதட்டம் "TS"சிற்குச் சற்றுத் தடுமாற்றத்தை ஏற்படுத்தியது. மெதுவாக அவளைக் கூட்டிக் கொண்டு செல்வதே தற்போது இவர்களுக்குச் செய்யும் உதவியாக இருக்கும் என்று தோன்றியது.

புவனலோசினி சாப்பாட்டு பையை மாலினியிடம் கொடுத்தாள்.

"எங்களுக்கு எதுக்குச் சாப்பாடு? எங்களால சாப்பிட முடியாது." என்றாள் அவள். அவள் மீண்டும் அழுது

விடுவாளோ என்கின்ற பயமாக புவனலோசினிக்கு இருந்தது. அப்படி எதுவும் நடக்கவில்லை.

"கொஞ்சமாச் சாப்பிட்டுப் பாருங்க. குணேஸ் எங்கடை வீட்டை வரட்டும்." என்றாள் புவனலோசினி.

"ஐயோ… இவ்வளவு சாப்பாடு ஏன்? நாங்கள் இவ்வளவையும் சாப்பிடமாட்டம். அவன் எழும்பிச் சாப்பிட்டாலே மிஞ்சும்... அநியாயம். சரி சரிஸ்காவுக்குக் காலமை வேலை இருக்கும்... நீங்கள் வெளிக்கிடுங்க... நாளைக்கு நாங்களும் ஒவ்வொருத்தராய் வீட்டை போய் வர வேணும்." என்றாள் மாலினி.

"அவ கொத்து ரொட்டி சாப்பிடுவாவே?" என்று புவனலோசினி கேட்டாள்.

"ஓ... லில்லியானா? இல்லை. அவளுக்கு இந்த உறைப்புச் சரிவராது. அவள் கொஞ்ச நேரத்தில தங்கடை வீட்டை போயிடுவாள்." என்றாள் மாலினி.

*

சிறிது நேரத்தில் "TS" குடும்பம் தங்களது வாகனத்திற்கு உள்ளே அடைக்கலம் ஆகினர். குணேஸ் இவர்களோடு வருவதற்கு மறுத்துவிட்டான். இதுவரையும் கேட்க வேண்டும் என்கின்ற அவா இருந்தும் கேட்க முடியாத சூழ்நிலையில் அதை அடக்கி வைத்திருந்த "TS" சரிஸ்காவைப் பார்த்து,

"அதென்ன அந்த அவதியில றிசப்சனுக்குத் திரும்பத் திரும்ப ஓடித் திரிஞ்சனி?" என்று கேட்டார்.

"உங்களுக்கு விஷயம் விளங்கேல்லை அப்பா. இவை நல்லாய் கவனிக்காமல் விட்டிட்டினம். அது ஒரு குறிப்பிட்ட நேரத்துக்குப் பிறகு காய்ச்சல் காய்கிறதையே நிப்பாட்டிப் போடும். தப்புகிறதே கஸ்ரம். தப்பினாலும் பழைய நிலைமைக்கு வருவானா எண்டது ஐமிச்சம்." என்றாள் சரிஸ்கா.

"என்ன?" "TS"சும் மாலினியும் ஒரே நேரத்தில் அதிர்ந்தார்கள்.

"முதல்ல அவளவை சொல்ல இல்லை. சொல்லவும் மாட்டாளவை தானே? நான் பிறகு என்னவா வேலை செய்கிறன் எண்டதைச் சொல்லி அறிமுகம் செய்து கொண்டு கதைக்க அந்த நேர்ஸ் அப்பிடித்தான் சொன்னாள். அவளின்ரை கையில றிப்போட் இருந்தது. எல்லாம் செய்து பார்த்தாச்சாம். இனிக் கடவுள் சித்தம் எண்டுகிறாள்." என்றாள் சரிஸ்கா.

"இது என்ன இழவு... சும்மா இருந்த பெடியைக் காவு குடுக்கப் போகினமே?" என்றாள் புவனலோசினி.

"விதி அப்பிடி இருந்தால் யாரால என்ன செய்ய முடியும்? மனிசன்ர மதியால வெல்ல முடியாட்டி அதை விதி எண்டு தானே சொல்ல வேணும். இல்லாட்டித் தனக்கு வருத்தம் எண்ட உடனேயே அவன் வந்து இருக்கலாம் தானே? ம்... யாருக்கும் இப்படி ஒரு இக்கட்டு வரக்கூடாது. ஆனாலும் வருகுது. அது எப்ப யாருக்கு வரும் எண்டும் யாருக்கும் தெரியாது." என்று கூறினாலும் "TS"சிற்கு மிகவும் கவலையாக இருந்தது. சிறுவனாய் இருந்தது தொடக்கம் பிள்ளைகளைப் போல நினைத்துப் பழகி வந்தவர்கள். அவர்களில் ஒருவனுக்கு இப்படியான வருத்தம் என்பதை அவரால் இப்போதும் முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியாமல் இருந்தது. இருந்தும் எதையும் தன்னால் மாற்ற முடியாது என்பதை அவர் தெளிவாக உணர்ந்து கொண்டார்.

"அந்த வருத்தம்தான் எண்டு தெரிஞ்சு இருந்தா அவை ஆஸ்பத்திரிக்கு அப்பவே வந்து இருப்பினம். அதிலதான் அவை ஏமாந்து போயிட்டினம்." என்றாள் சரிஸ்கா.

"ஏதோ துர்க்கை அம்மன் அதுகளுக்கு நல்லதைச் செய்யட்டும். நாங்கள் என்ன செய்ய முடியும்? அந்தக் கடவுள்தான் கண்ணைத் திறக்க வேணும்." என்றார் "TS".

"மனிதனால் முடியாத போது கடவுள். கடவுளும் முடியாது என்றால் விதி இல்லையா அப்பா?" என்றாள் சரிஸ்கா.

"எதை ஆவது நம்பத் தானே வேணும் சரிஸ்கா. எனக்கு இருக்கிற சின்ன மூளைக்கு அகப்படாத அறிவை நான் இறைவனாய் பார்க்கிறன். எதையுமே அறிய முடியாத என்னிடம் எல்லாமே எவனால் படைக்கப் பட்டது எண்டு

கேட்டா எனக்கு இறைவன்தான் தெரிந்த ஒரே பதில்." என்றார் "TS".

"எங்களுக்கு மேல ஒரு சக்தி இருக்குது. அது கடவுள் எண்டு எங்களுக்கு நல்லாய் தெரியும். ஆபத்தில சிலருக்கு உயிர் பிச்சை அவரால கிடைக்கும். சிலரை ஏதோ காரணத்திற்காய் சம்காரம் செய்வார். அது அவை அவையின்ரை ஊழ்வினையைப் பொறுத்தது. அதுதான் விதி. கடவுளே எழுதின விதியை அவரே எப்பிடி மாற்றுவார்? மாறுகிறது அதிசயமாக நடக்கும்." என்றாள் புவனலோசினி.

"எங்கடை ஊழ்வினை மாதிரி...? பிறகு எதுக்குக் கடவுள் எல்லாம்?" என்றாள் சரிஸ்கா. அதில் கோபம் அனலாகப் பறந்தது. அந்த அனலில் உண்டான அமைதி வீட்டிற்கு வந்தும் கலையாது கனமாக அவர்களை அழுத்தியது.

*

எல்லா ஆரூடங்களும் இறைவனின் கை எழுத்தே விதி என்கின்ற உண்மை போல பிழைத்துப் போயின. அல்லது இயற்கைக்குச் சவால் விடும் மனிதனை இயற்கை என்றும் வென்று கொண்டே இருக்கிறது என்பதாய் முடிந்துவிட்டது. வாழ்க்கை என்பது நாளை எப்படி இருக்கும் என்பது பற்றி மனிதனால் அறிந்து கொள்ள முடியாத கடவுளின் படைப்பின் முக்கிய இரகசியம். நாளை பற்றி இன்றே அறிந்து இருந்தால் இந்த உலகத்தில் எத்தினை நபர்கள் நிம்மதியாக இருப்பார்கள் என்பது விடை இல்லாத கேள்வி ஆகும். குழந்தைகளின் உயிரை விதியும், காலனும் சூறையாடும் பொழுது மிகவும் கொடுமையாக அமைந்து விடுகிறது. பெற்றோரின் கதறலை, கவலையை எந்த சக மனிதனாலும் தாங்க முடிவது இல்லை. நூறு வயது தாண்டியும் வாழும் மனிதர்கள் இருக்கப் பிஞ்சுகளை பறிக்கும் கொடும் நோய்களை, காலனின் பாசக் கயிற்றால் ஏற்படும் விபரீத விளையாட்டை, விதியின் வாழ்வைப் பறிக்கும் சதியை, அது ஏற்படுத்தும் மனித வேதனையை நினைக்க "TS"சிற்கு வெறுப்பாக இருந்தது. அன்று சரிஸ்கா அப்படிச் சொன்னாலும் "TS"சிற்கு அவன் பிழைத்து விடுவான் என்கின்ற நம்பிக்கை இருந்தது. நோர்வேயில் செய்யப்படும் வயித்தியத்தைக் குறை

சொல்ல முடியாது. அதுவும் உல்லவோல், றிக்ஸ் கொஸ்பிற்றல், றாடியம் கொஸ்பிற்றல் போன்ற பெரிய மருத்துவமனையில் நடக்கும் சிகிச்சையை எழுந்த மானத்திற்குக் குறை சொல்ல முடியாத அளவுக்கு அங்கு மிகவும் திறமையான வைத்தியர்களும் வேலை செய்கிறார்கள். மிகவும் கடுமையான நிலையில் உள்ள நோயாளிகளையும் அவர்கள் பிழைக்க வைத்து விடுவார்கள். அப்படியே இவன் விஷயத்திலும் நடக்கும் என்கின்ற நம்பிக்கை "TS" சிடம் இருந்தது. இருந்தும் பிழைகள் இல்லாத மருத்துவம் இல்லை. இறப்புக் காணாத மருத்துவமனைகள் இல்லை. பிழைத்து விடுவான் என்கின்ற அவரின் அந்த நம்பிக்கை தவிடு பொடி ஆனதில் அன்று அவர் மனம் சோர்ந்து போனார்.

அன்று அலைபேசியில் மாலினி அழுது அழுது சொன்னதை அவரால் கேட்கவே முடியவில்லை. மயக்கம் தலையை அமர்த்தியதான உணர்வு. உடல் முழுவதும் ஒரு முறை குளிராக வியர்த்தது. இந்த அவஸ்தை அதிசயமாகவே வரும். ஏன் அந்தச் செய்தியைக் கேட்டவுடன் அது வந்தது என்பது பற்றி அவருக்கு எதுவும் விளங்கவில்லை. சின்னப் பிள்ளைகளாக அவர்களைப் பார்த்ததில் இருந்து அவர்களையும் தனது பிள்ளைகள் போலவே "TS" எண்ணி இருந்தார். அதன் பாதிப்பாய் இருக்க வேண்டும் என்று அவர் பின்பு எண்ணிக் கொண்டார். மாலினியை அவரால் சமாதானப் படுத்த முடியவில்லை. தன்னையே அவரால் இயக்க முடியவில்லை. அவர் சோபாவில் இருந்த வண்ணம் என்ன செய்வது என்று முழிக்க மறு முனையில் மாலினி கதறினாள். அதைப் பார்த்த புவனலோசினி அலைபேசியைப் பிடுங்கி,

"அழாத மாலினி... நாங்கள் அங்க இப்ப வாறம்." என்று கூறிவிட்டு அலைபேசியைத் துண்டித்தாள்.

"என்னப்பா நீங்கள் ஒரு மாதிரி இருக்கிறியள்? ஏன் முகம் இப்படி வெளிறிக் கிடக்குது?" என்று கேட்ட வண்ணம் நெற்றியில் கையை வைத்துப் பார்த்து விட்டுப்,

"பேயைக் கண்டு பயந்த மாதிரி ஏன் உடம்பு இப்பிடிக் குளிருது உங்களுக்கு? ஏதும் தொடர்ந்து செய்யுதே

அப்பா? அம்புலன்சிற்கு அடிக்கவே?" என்று புவனலோசினி தடுதாளிப் பட்டாள்.

"நீ ஒருத்தி சும்மா எதுக்கு எடுத்தாலும் தடுதாளிப் படுகிறாய். அது இப்ப நோமலுக்கு வந்திடும். நீ குடிக்க ஒரு கோப்பி வைச்சா." என்று கூறிவிட்டு சோபாவில் நன்கு சாய்ந்து இருந்தார்.

சோபாவில் சாய்ந்து இருந்தாலும் "TS"சிற்கு மருத்துவ மனையில் எப்படித் தாமோதரனையும் மாலினியையும் சமாதானப் படுத்த முடியும் என்கின்ற யோசனையாக இருந்தது. அவர்களைச் சமாதானப் படுத்த முடியுமா என்கின்ற மலைப்பும் உண்டாகியது. எது எப்படியாய் இருந்தாலும் அங்கு உடனே செல்ல வேண்டும். இயலும் ஆனவரைச் சமாதானம் செய்து விட்டு மற்றைய அலுவல்களைப் பார்க்க வேண்டும். தாமோதரனின் ஊர்க்காரர்களும் இங்கே பலர் இருக்கிறார்கள். அவனோடு நெருக்கமாகப் பழகுபவர்களும் உண்டு. அவர்களும் அங்கு வருவார்கள். அலுவல்களைப் பகிர்ந்து பார்ப்பார்கள். ஒஸ்லோவில் இருக்கும் வானொலிக்கும், வேறு பத்திரிகைகளுக்கும் அறிவிப்புக் கொடுக்க வேண்டும். இணையத்திற்கும் கொடுப்பதா இல்லையா என்பது பற்றியும் தாமோதரனிடம் கேட்க வேண்டும் என்பதாக அவருக்குச் சிந்தனை தறிகெட்டு ஓடியது.

சிறிது நேரத்தில் புவனலோசினி வெளிக்கிட்டு வர அவரது சிந்தனை இடை அறுந்தது. இருவரும் மருத்துவமனைக்குச் சென்றார்கள். அங்கு யாரையும் பார்க்க விடவில்லை. தாமோதரனையும் மாலினியையும் வாடகைக் காரில் வீட்டிற்கு அனுப்பி வைத்துவிட்டுார்கள். மிகுதி அவர்கள் வீட்டிலும் மருத்துவ மனையில் இருந்த தேவாலயத்திலும் நடந்தது.

*

ஒரு கிழமையின் பின்பு 'ஒஸ்திர ஆக்கர்' சவக்காலையில் உள்ள தேவாலயத்திற்கு சவ அடக்கத்திற்காய் "TS" குடும்பம் சென்று இருந்தனர். மனித உடலங்களின் அடக்கங்கள்கூட பொருளாதாரக் கணக்கிற்குத் தப்பாத வாழ்வில் சிக்கிய அல்லது சிறைப்பட்ட உலகம் இது. செலவுகள் பற்றித் தாமோதரனிடமோ அல்லது

மாலினியிடமோ கதைக்க முடியாது. அவர்கள் அதைக் கதைக்கும் மனநிலையில் இல்லை. மாலினி மார்பில் அடித்து அடித்து நெஞ்சுருகக் கதறி அழுவதைப் பார்க்கும் பொழுது எல்லாம் அந்த அடி தனது இதயத்தில் பட்டது போன்று "TS"சிற்கு வலித்தது. மாலினியின் ஊனை உருக்கும் கவலை அவர் வரித்துக் கொண்ட பாசத்தைத் தூசு ஆக்கியது.

ஒஸ்லோவில் தமிழர்களின் இறப்பு என்பது ஆரம்பக் காலம் ஆதலால் ஐயர் பிடிக்கவோ இந்து முறைப்படி இறுதிக் கிரிகைகள் செய்யவோ வசதிகள் இருக்கவில்லை. பொருட்கள் ஓரளவு வாங்கக் கூடியதாய் இருந்தும் ஐயரைப் பிடிக்க முடியவில்லை. லண்டனில் இருந்து வரும் ஐயருக்கு நிறையச் சாவீடுகள் லண்டனிலேயே இருந்ததால் அவர் வர மறுத்து விட்டார். வேறு ஒரு ஐயர் ஒஸ்லோவில் இருந்தாலும் அவர் சாச் சடங்கிற்குச் செல்வது இல்லை என்று மறுத்துவிட்டார். அது தங்களுடைய கோத்திரத்திற்கு ஏற்புடையது இல்லை என்பது அவர் கருத்து. ஊரைப் போல் எல்லாவிதமான பிராமணர்களும் நோர்வேக்கு வராத காலம் அது. இறுதியில் அடக்கத்திற்கான மாற்று வழி பார்க்க வேண்டியது ஆகிற்று.

கிறிஸ்தவப் பாதிரியாரைக் கொண்டு அடக்கம் செய்து, ஒரு இடத்தில் தாட்டு விட்டால் தங்களுக்கு ஞாபகம் அல்லது கவலை வரும் போது எல்லாம் அங்கே சென்று தரிசித்து வரலாம் என்று தாமோதரன் அவிப்பிராயப் படவே அப்படியே ஒழுங்கு செய்யப்பட்டது. இளம் பிள்ளை என்கின்ற அனுதாபத்தில் பலர் வந்தார்கள். வாழும்வரை ஏன் என்று கேட்காதவரும் வாழ்வு முடிந்த பின் ஐம்பூதத்தில் கரையும் மிச்சத்தைப் பார்த்து மார்பில் அடிப்பது எங்கள் கலாச்சார விழுமியத்தில் ஒன்றாகிப் போனதால் வந்த சனத்திற்கும் குறைவு இருக்கவில்லை. வந்தவர்களில் பலரை "TS" இதற்கு முன்பு எங்கும் கண்டதும் இல்லை. அறிமுகம் இல்லாத பல முகங்களின் அறிமுகத்தில் அவர் திணறினார்.

லில்லியான் வழியால் பல நோர்வேஜியர்களும் அந்த அடக்கத்திற்கு வந்து இருந்தார்கள். அவர்கள் மிகவும் நீற்றாகக் கறுப்பு மேலங்கிகளுடனும், பெண்கள் பல

விதமான கறுப்பு உடைகளுடனும் காட்சி தந்தார்கள். லில்லியான் முகத்திற்குத் திரையிட்டு வந்திருந்தாள். அந்தத் திரையையும் மீறி அவள் முகம் குங்குமமாய் சிவந்து இருப்பது அவருக்குத் தெரிந்தது. அவள் மனதில் எப்படியான கவலை இருக்கும் என்பதை விவரிக்கும் முட்டாள்தனத்தில் "TS" இறங்காவிட்டாலும் அவரைக் கவலை வாட்டி எடுத்தது.

ஒரு மனிதனின் இழப்பு தனி மனிதர்களை மட்டும் சார்ந்தது அல்ல. அது சமுதாயத்தின் இழப்பு ஆகிறது என்பதை "TS" உணர்ந்தார். அவன் சமுதாயத்திற்கு வேண்டப்பட்டவனாய் இருந்தானோ இல்லையோ அவனது இழப்புச் சிறு காலத்திற்கு ஆவது ஏதோ ஒரு வெற்றிடத்தை உண்டு பண்ணி விடுகிறது. நாம் அன்றாடம் வெறுப்போடு பார்க்கும் ஒரு நபரைக்கூட அவர் இறந்ததும் பார்க்க முடியாவிட்டால் ஏதோ ஒரு ஏக்கம் மனதில் விரியும். மனித மிருகத்தின் இயல்பாய் அது இருக்கிறது. அதற்கு எதிரான குணமும் மனித மிருகத்திடம் இல்லை என்று சொல்ல முடியாது. பகையும் யுத்தமும் வரும் போது அதன் கோரப் பற்கள் துருத்தும். அது மனிதனின் மறுபக்கமாக எப்போதும் இருந்தாலும் மறைக்கப்படும் பகுதியாகும். மறைக்கப் பட்டாலும் மறைக்க முடியாத பகுதி ஆகும்.

வெள்ளைப் பனி உருகி அதன் பிடி தளர்ந்து போகக் கறுத்த வயிரமாகப் பூமி பனியைச் சில இடங்களில் தின்று திமிர்த்து எழுந்து வந்தது. காற்றையும் மனிதப் பார்வையையும் தடுத்து சுவராக நிற்கும் புகாரின் அடர்த்தி. கனத்த உள்ளங்களை இயற்கை கண்டதால் தானும் அதைப் பெற்ற தோற்றம். வந்தவர்கள் கதிரைகளில் இருந்தார்கள். அப்படி இருந்தவர்கள், எப்படி நடந்தது? என்ன நடந்தது? என்கின்ற செய்தி அறியும் குசுகுசுப்பில்...

ஆண்கள் தனியே சுடலைக்குப் போவது என்கின்ற வழமையை இங்கே கடைப்பிடிக்க முடிவது இல்லை. ஆண்கள், பெண்கள் என்று இரு பாலாரும் கிறிஸ்தவ முறைக்கு அமையத் தேவாலயத்திற்கு வந்து இருந்தார்கள். வீட்டில் சாவீடு செய்யும் கலாச்சாரம் இந்த நாட்டில் இல்லை. அப்படிச் செய்யவும் முடியாத வசதியற்ற வீடும் காலநிலையும். வீட்டிற்குப் பிரேதத்தை

எடுத்துச் சென்று, பந்தல் போட்டு, பாடை கட்டி, சடங்கு செய்து, பறை மேளத்தோடு ஊர்வலம் போய், அடக்கம் செய்து பழக்கப்பட்டவர்கள் நாங்கள். இங்கு மருத்துவ மனையில் அல்லது முதியோர் இல்லத்தில் இருந்து அடக்கத்திற்கு உதவும் நிறுவனம் எடுத்துச் சென்று அலங்கரிப்பார்கள். பின்பு குறிப்பிட்ட தேவாலயத்திற்குக் கொண்டு வருவார்கள். அங்கே கிரிகைகள் முடிந்ததும் புதைக்கப்பட வேண்டிய இடத்தில் புதைத்து விடுவார்கள். அடக்கத்திற்கு வருபவர்கள் உணவு உண்டு, கவலை பரிமாறிச் செல்வார்கள்.

தமிழர்கள் தங்கள் முறைப்படி முழுமையாக அதை இங்கு இப்போது செய்ய முடியாது. அதேவேளை அவர்கள் முழுமையாக மாறிவிடவும் முடியாது. அவர்கள் அல்லாட்டம் ஒரு வகை இழுபாடாகத் தொடர்ந்தது.

கிரிகைகள் முடிந்ததும் அடக்கத்திற்கு உதவும் நிறுவனம் புதைப்பதற்குப் பெட்டியைப் பொறுப்பு ஏற்று மூடும் சமயத்தில் மாலினி உட்படப் பலர் நெஞ்சில் அடித்து அழுததைப் பார்த்து நோர்வேஜியர்கள் விறைத்துப் போய் நின்றார்கள். அவர்கள் இப்படி அழுது ஆர்ப்பாட்டம் செய்வது இல்லை. மார்பில் அடித்து அழாத சாவீடுகள் எங்களவரிடம் இருப்பதும் இல்லை. கவலை அழுகுரலாக அங்கே தொடர்ந்தும் ஓங்கி ஒலித்தது. பலருக்கும் அதனால் நெஞ்சம் பதறியது. இருந்தும் காரியம் காலம் தப்பாது நடந்து முடிந்தது.

# 17 திருந்தாப் பார்வை

இறப்பு ஒரு இழப்பான நினைவை உண்டு பண்ணிச் சென்றாலும் அதற்காக இந்த உலகில் எதுவும் நிரந்தரமாக ஸ்தம்பித்து விடுவது இல்லை. அது கட்டிலில் பகிர்ந்த உறவாய் இருந்தால் என்ன முலைப் பால் உண்ட உறவாய் இருந்தால் என்ன? இறப்புத் தவிர்க்க முடியாத இந்தக் கூட்டிற்கான முற்றுப் புள்ளியாகும். முற்றுப் புள்ளி எப்போது வரும் என்பது தெரியாத மனித வாழ்வின் அடங்காக் கற்பனை ஓட்டம். அது பலருக்கும் விளங்கினாலும் தங்களின் நெருங்கியவர்களுக்கு ஏற்படும் போது ஞானம் மறந்து ஏற்க முடியாத சோகத்தில் மிதப்பது மனித இயல்பு. அந்தச் சோகம் மனதின் அடியில் ஆறாப் புண்ணாக நீண்டகாலம் மனைந்து கிடக்கலாம். அதற்காக அவன் அன்றாட இயல்பு வாழ்க்கையை இழந்துவிட முடியாது. அப்படி இழந்து விட்டால் பயித்தியம் என்று சொல்லி அதற்கு வைத்தியம் செய்யத் தொடங்கி விடுவார்கள்.

கவலையில் தாமோதரனும் சிறிது காலம் ஒன்றிலும் அக்கறை காட்டாது ஒதுங்கி இருந்தார். அவரது அந்த விரதம் நீண்ட காலம் நீடிக்கவில்லை. மீண்டும் காசு சேர்க்கும் கோஸ்ரி உடன் சேர்ந்து வீடு வீடாகக் காசு சேர்க்கத் திரிந்தார். கவலையை மறக்க அது நல்ல வழி என்பது அவர் கருத்து. "TS"சிற்கும் அதில் மட்டும் உடன்பாடு உண்டு. ஆனால் காசு சேர்ப்பதில் ஈடுபடுவதே ஞாபகத்தை மறக்கடிக்கும் வித்தையா என்பதில் அவருக்குக் கடுமையான சந்தேகம் இருந்தது. காசு சேர்ப்பது தான, தர்ம உணர்வோடு எப்போதும் சாத்வீகமாய் நடப்பது இல்லை. ஆதரவாய் இருந்தாற்கூட காசு கொடுக்க வேண்டும் என்றால் பலருக்கும் கை ஏகுவது இல்லை. அதில் இருந்து தப்பிக்கப் பல செப்படி வித்தைகளும் காண்பிக்கப் படும். அப்படியான இடங்களில் தாமோதரன் கதைக்கத் தெரியாமல் கதைத்து பிரச்சனைப் பட்டதாக "TS" கேள்விப்பட்டு இருந்தார். அமைதி

அவருக்கு அங்கே கிடைத்ததா என்பது பற்றி அவருக்குத் தெரியாது. இருந்தும் அவர் அதைப் பற்றி அவரோடு கதைப்பது இல்லை. அது தன்னை தேவை இல்லாத ஒரு தளத்திற்கு இழுத்துச் செல்லும் என்பது அவருடைய எண்ணம். இலங்கையில் தவிர்க்க முடியாமல் வன்முறையை ஒரு ஆயுதமாகக் கையில் எடுத்துக் கொண்டார்கள். அதற்காக இலங்கை போல் தமிழர்கள் வாழும் இடம் எங்கும் அதன் அச்சுறுத்தல் இருக்க வேண்டும் என்பதை "TS"சால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. இது பற்றி எல்லாம் யாருடனும் கதைக்க முடியாது. கதைத்தால் பிழையான ஆளாகப் பார்க்கப்படும். அல்லது சிவா போலத் துரோகிகள் என்று முத்திரை குத்தப்பட்டுப் பட்டியலில் சேர்க்கப்படும். உதவி செய்யலாம். ஆதரவாய் இருக்கலாம். ஆனால் கண்ணை மூடிக் கொண்டு எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கின்ற அளவுக்குத் தலை இல்லாத முண்டமாய் "TS"சால் உலாவ முடியவில்லை. அதற்காக மனதில் இருப்பதையும் வெளியே கொட்டவும் முடியவில்லை. எது எப்படி இருந்தாலும் தமிழருக்காக இப்போது களத்தில் நிற்பது அவர்கள் மட்டுமே என்பதிலும் "TS"சிற்கு எள்ளளவும் சந்தேகம் இருந்தது இல்லை. இந்த எண்ணங்கள் அவருக்குக் கத்திமேல் நடப்பதான எண்ணத்தைத் தரும். அப்போது மௌனம் கனகராசி என்பதாக நினைத்துக் கொள்வார். அதில் ஒருவித அமைதி காண்பார்.

*

நேற்றுத் தொழிலாளர் தினம் வழமை போல் ஒஸ்லோவில் நடந்தது. அதே போல "TS"சும் அந்த ஊர்வலத்திற்குச் சென்று வந்தார். நிறையச் சிவப்பு மஞ்சள் கடல் போலக் கொடிகளும் தமிழரின் ஆவேசத் தலைகளும். இருந்தாலும் ஆட்களைவிடக் கொடிகளே இப்போது அதிகம் என்பது "TS"சின் எண்ணம். தலைவரின் படங்களும், இயக்கத்தின் கொடியும் எங்கும் வியாபித்து விண்ணை மறைத்தன. ஒவ்வொரு முறையும் வரும் அதே தமிழர்கள் மட்டுமே நேற்றும் வந்திருந்தார்கள். போராட்டத்தைப் போல அவர்களிலும் எந்த மாற்றமும் இல்லை. இன்னும் விசுவாசமாகக் கொடியும் படமும் தாங்கும் ஊர்வலமாக

மட்டும் அது அமைந்து இருந்தது. ‘பீ எல் ஓ’ ஊர்வலம் நடத்தினால் பலஸ்தீனத்து மக்கள் மட்டும் அல்லாது பல நோர்வே மக்களும் ஊர்வலத்தில் சேர்ந்து போவார்கள். அதற்கு என்று ஒரு குழுவே நோர்வேயில் இருக்கிறது. அவர்களுக்குக் கிடைத்த செல்வாக்கோ இரக்கமோ தமிழர்களின் போராட்டத்திற்குக் கிடைக்கவில்லை. அங்கும் சில இயக்கங்கள் வன்முறையில் மட்டுமே காதல் கொண்டவை. இருந்தும் எங்களுக்கு குறிப்பாக அரசியல் ஆதாயமற்ற ஆதரவு இல்லை. நாங்கள் ஐரோப்பாவிற்கு அறிமுகமான விதம் அப்படியாக இருக்க வேண்டும். தமிழர்களின் ஊர்வலம் தமிழர்களால்... அதுவும் இயக்க விசுவாசிகள் என்று காட்டிக் கொள்பவர்களை மட்டும் கொண்டதான ஓரின ஊர்வலமாக நடந்து வந்திருக்கிறது. அந்தப் போக்கில் எந்த நெகிழ்வையோ மாற்றத்தையோ "TS"சால் இப்போதும் காண முடியவில்லை.

"TS"சிற்குக் கையில் வைத்து இருந்த கொடியே இப்போது அதிகமாகக் கனப்பதாய் தோன்றியது. அதைவிட மனதில் விளைந்த கேள்விகளோ மலைகளைப் போலக் கனத்தன. ஒரு காத்திரமற்ற, வளர்ச்சி அற்ற, தொலை நோக்கு அற்ற, சம்பிரதாயமான, சடங்கான ஊர்வலமாய் இது மாறி விட்டதாய் அவருக்குத் தோன்றியது. இதற்காக மெனெக்கெட்டு வருவதில் ஏதாவது பிரயோசனம் இருக்கிறதா என்று ஒரு கணம் எண்ணத் தோன்றியது. மறு கணம் எது எப்படி நடந்தாலும் என்னால் முடிந்ததை நான் செய்தாக வேண்டும் என்கின்ற எண்ணம் அவருக்கு எழுந்தது. ஊர்வலத்தில் கால்கள் நடை பயின்றன. ஊர்வலத்தைப் பார்ப்பவர்கள் கண்களில் விடுப்புப் பார்க்கும் ஆர்வத்தைத் தவிர எங்கள் விடுதலைப் போராட்டத்தை பற்றிய விபரம் அறியும் ஆவல் இருப்பதாய் "TS"சிற்குத் தோன்றவில்லை. தோன்றுகிறதோ தோன்ற வில்லையோ அவர் தான் செய்யும் கடமையைக் கைவிடுவது இல்லை என்று சபதம் எடுத்து இருந்தார்.

அன்றைய ஊர்வலத்தில் நடந்து களைத்து அவர்களிடம் இருந்து பிழைத்து "TS" வீட்டிற்கு வந்து சேர்ந்தார். புவனலோசினி சில முறை ஊர்வலத்திற்குப் போய் விட்டுப் பின்பு போவதற்கு மறுத்து விட்டாள். அவள் போவதற்கு மறுத்தாலும் அதில் ஒரு நன்மை இருந்தது. ஊர்வலம்

முடிந்து வரும் போது நல்ல கோழி இறைச்சிக் கறியும் சுடு சோறும் தயாராக இருக்கும். குளிருக்குள் நின்று விறைத்து வருபவனுக்கு உடனேயே சுடச்சுட தேநீரும் சாப்பாடும் கிடைக்கும். சில வேளை ஏதாவது கேக் செய்து வைத்திருப்பாள். ஒருவர் என்றாலும் நாட்டுக்கான பணியைச் செய்தால் போதும் என்று "TS" சமாதானம் ஆவார்.

"TS" சுடச் சுடக் கிடைத்த விருந்து ஓம்பலை அனுபவிக்க அக மகிழ்வோடு வந்து சோபாவில் குந்தி, ஏதாவது அலை வரிசையில் தங்கள் ஊர்வலத்தை ஒரு மின்னல் கீற்று போல யாராவது காட்டுகிறார்களா என்று "Remote control"லின் கட்டைகளை அவசரமாக அழுத்தினார். கட்டைகள் அதனால் மௌனமாக உடல் நசிந்து அழுதன. அலைவரிசைகள் மாறி மாறி மின்னின. காட்சிகள் அவசரமாய் வந்து போயின. பப்படம் நொறுங்கியதாய் அவர் கனவும் நொறுங்கிற்று. அதனால் ஏன் இவர்கள் பாராமுகமாய் இருக்கிறார்கள் என்று நோர்வே ஊடகங்கள் மீது வெறுப்பும் கோபமும் வந்தது. காகம் இருக்கப் பனம் பழம் விழுவது இல்லை. "TS"சின் கோபத்தால் யாருக்கும் சாபம் கிடைக்கப் போவதும் இல்லை. அவர் கோபம் அவருக்குள் அடக்கம் ஆவது அதன் தவிர்க்க முடியாத விதி ஆகியது. அதன் பின்பு எங்களிலும் பிழை இருக்கிறது என்பதான எண்ணம் அவரிடம் எழுந்தது. அதையும் யாரிடமும் சொல்ல முடியாது என்பதும் விளங்கியது. அது விசுவாசத்திற்கும் நம்பிக்கைக்கும் எதிரானது. ஓம் போட்டு ஒற்றுமையாகப் போராட வேண்டும் என்பதை "TS" இடைக்கிடை நம்பினார். இடைக்கிடை நம்புவது போல் நடிப்பதாக உணர்ந்தார். நம்பிக்கைக்கும் நடிப்பிற்குமான வீதம் காலத்தின் போக்கில் தலை கீழாகிறதோ என்கின்ற பயமும் உண்டாகியது. எது எப்படி என்றாலும் இப்போது களத்தில் நிற்பவர்களுக்கே தன் ஆதரவு என்பதில் இன்றும் இனியும் என்றும் மாற்றம் இல்லை என்பது அவர் மாற்றம் மட்டுமே மாறாதது என்கின்ற விதிக்கு எதிரான முடிவு. இப்போது களத்தில் நிற்பவனுக்கு ஆதரவு கொடுக்காது யாருக்கு ஆதரவு கொடுப்பது என்கின்ற கேள்வியும் அவரிடம் எழும். களத்தில் நிற்பவனுக்கு, போட்டியில் கலந்து கொள்கிறவனுக்கு ஆதரவு கொடுப்பது

ஓடும் குதிரை மேல் காசு கட்டிவிட்டு அது வெற்றி பெறவேண்டும் என்று தொண்டை கிழியக் கத்துவதற்கு ஒப்பானது அல்லவா? வெற்றி பெற்றுப் பணம் சம்பாதிப்பதா அல்லது பஞ்சமா பாதகம் செய்வதாய் மனச்சாட்சிக்கு அஞ்சுவதா? பந்தயம் கட்டத் தொடங்கியவர்களால் பாவ புண்ணியம் பார்க்க முடியாது. அப்படிப் பார்த்தாலும் தங்கள் வெற்றிக்குச் சாதகமானது எல்லாம் புண்ணியம் ஆகவும் தங்கள் வெற்றிக்குப் பாதகம் ஆனவை எல்லாம் பாவம் ஆகவும் பார்க்கப்படும். ஆசை அதற்குத் தடை போடுவதின் மேல் கோபத்தை ஏற்படுத்தும். கோபம் புகைந்து புகைந்து வெறியாக மாறும். வெறியானதா என்று "TS"சால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. வேற்று மனிதர்களுக்கு எங்களில் துளியளவும் இரக்கம் வரவில்லை என்பதில் எங்கள் விம்பங்கள் கோரமாகிக் கிடப்பதை எத்தினை நபர்கள் ஒத்துக் கொள்வார்கள். நாங்கள் கோரமாகிக் கிடக்கிறோம் என்று சொல்வதற்கு எத்தினை பேருக்குத் துணிவு இருக்கிறது? அந்த வெள்ளாட்டுக் கூட்டத்தை விட்டு எந்தக் கறுப்பு ஆடுகளும் தப்பு என்று சொல்லிப் புறப்படுவது இல்லை. அந்த ஆடுகளுக்குத் தங்கள் நிறம் தெரியும். தங்கள் மனநிலை விளங்கும். உண்மையைவிடச் சுய ஆதாயம் ஒருபடி மேலே நிற்கிறது. அங்கே பொய்கள் உண்மைகளாகவும் உண்மைகள் பொய்களாகவும் உழுத்துப் போகின்றன. என் சுயம் என் மனதைப் பொறுத்தது. அறிவைப் பொறுத்தது இல்லை என்கிறது. அது ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு விதமாக இருக்கிறது.

எண்ணத்தின் வேகத்தில் "TS" "Remote control"லை இரும்புக் கோல் என்று நினைத்து விட்டாரோ என்கின்ற பதை பதைப்பு புவனலோசினியிடம். அதைச் சொல்வதற்கு அவள் வாய் திறக்கவும் அவரது அலைபேசி அதிரவும் சரியாக இருந்தது. "TS" "Remote control"லை கைவிட்டார். அலைபேசியைப் பாய்ந்து எடுத்தார். புவனலோசினி தொலைக்காட்சியை மௌனம் ஆக்கினாள்.

ஒஸ்லோத் தமிழர் ஐக்கிய அமைப்பு என்று ஒரு அமைப்பு இருக்கிறது. அதன் விருந்து உபசாரம் மேதினத்தை ஒட்டிப் பாடசாலை ஒன்றில் ஏற்பாடு செய்யப்பட்டு

இருந்தது. அதன் துண்டுப் பிரசுரம் "TS"சிற்கு ஏற்கனவே கிடைத்து இருந்தாலும் அதற்குப் போவதா விடுவதா என்பதான முடிவிற்கு வராது அந்த விஷயம் கிடப்பில் கிடந்தது. இப்போது அதன் தலைவர் அடித்து "TS"சை மேதினத்தைப் பற்றி ஒரு உரை ஆற்றும்படி திடீரெனக் கேட்டார். "TS" இதை எதிர்பார்க்க இல்லை. இந்தத் திடீர் அலுவல்கள் எல்லாம் அவரால் இயலாத காரியும். வேறு யாரையும் கேட்டுப் பார்க்கச் சொன்னார். தலைவர் சிவநாதன் தான் வேறு யாரிடமாவது கேட்டுப் பார்க்கிறேன் என்று கூறிவிட்டுக் கட்டாயம் இரவுப் போசனத்திற்கு வர வேண்டும் என்று கூறி இருந்தார்.

ஒஸ்லோ தமிழர் ஐக்கிய அமைப்பைத் தொடங்கியது சிவநாதனே. அதற்குப் பல காரணங்கள். அமைப்பு இருந்தால் மட்டுமே அதனைச் சாட்டிப் பல வேலைகள், வருவாய்களை ஏற்படுத்திக் கொள்ளலாம் என்பது அவரது எண்ணம். ஆரம்பத்தில் அலைந்து திரிந்து ஒருவாறு அங்கத்தவர்களைப் பிடித்துக் கொண்டார். அங்கத்தவர்களைப் பிடிப்பது முக்கியம். அங்கத்தவர் தொகைக்கு ஏற்பவே அரசிடம் இருந்து பணம் கறக்க முடியும். எவ்வளவு கறக்கிறார்கள் எவ்வளவு செலவு செய்கிறார்கள் என்பது எல்லாம் கணக்குக் காட்ட வேண்டியது இங்கு ஒரு கட்டாயமான காரியம். அந்த கணக்குக் காட்டுவதற்கு இந்த இரவுப் போசனம். அதற்கே பல திருகுதாளங்கள். இங்கு இன்று பிரியாணி செய்யப் போகிறார்கள் என்று துண்டுப் பிரசுரத்தில் எழுதி இருந்தார்கள். பிரியாணி தங்கத்தில் செய்ததாக அரசிற்குக் கணக்கில் காட்டுவார்கள். அரசின் கண்ணைக் கட்டி சுருட்டப்படுவது போக மீதி வேண்டிய இடங்களுக்குப் போய் சேரும். அது ஒன்றே இதில் இருக்கும் சிறிய நன்மை. அந்தச் சிறு தொகையைக் கொடுப்பதால் தியாகம் செய்வதான எண்ணம் சிவநாதனுக்கு. அதில் சிவநாதனின் பங்கு எவ்வளவு என்பது யாருக்கும் தெரியாது. அவர்களுக்குப் போக வேண்டியது போகும் போது பொதுவாகக் கேள்விகள் எழுவதில்லை. அப்படிக் கேள்வி கேட்பவனைத் தலையின் துரோகி என்கின்ற சம்மட்டியால் அடித்துக் கிடத்திப் போடலாம் என்பது அவர்களுக்குத் தெரியும்.

இப்படியாகக் கணக்குக் காட்ட நடத்தப்படும் விருந்து உபசாரத்திற்குப் போவதா விடுவதா என்கின்ற கேள்வி வந்தாலும் இறுதியில் அங்கே போவதாய் "TS" முடிவு செய்தார். அங்கத்தவராய் இருப்பதற்குக் கிடைப்பது இந்த இரவுப் போசனம் மட்டுமே. பிரியாணி என்கின்ற கறிச் சோறு. அதை விட்டால் சில கூட்டங்களில் தேநீரும், சிற்றுண்டியும், சில்லறை அடிபாடும் கிடைக்கும். "TS" எப்போதாவது போனால் சில்லறைகளோடு சில்லறைத் தனமாய் கதைப்பது இல்லை. மற்றவர் கதைப்பதைக் காது கொடுத்துக் கேட்பதில் அதிக நேரம் செலவு செய்வார். இது ஒரு வகையான வெட்டி ஓடல் என்பது அவருக்குத் தெரியும். உண்மை உள்ளத்தோடு விமர்சித்தால் பரம விரோதம். வெட்டி ஓடினால் விலாங்கு மீன் வாழ்க்கை. விரோதத்தைவிட விலாங்கு மீனாய் இருப்பதே வாழத் தெரிந்தவர்களின் வழி என்று "TS" எண்ணினார். வீட்டில் இருக்கும் நிலமைக்கு அவருக்கு அதைவிட வேறு தெரிவு இருக்கவில்லை என்கின்ற சமாதானமும் அவரிடம் உண்டு.

ஒஸ்லோத் தமிழர் ஐக்கிய அமைப்பு போன்று ஒஸ்லோவில் மட்டும் அல்லாது நோர்வே முழுவதும் நிறையத் தமிழ் அமைப்புக்கள் இருக்கின்றன. அரசு என்னும் கறவை மாட்டைத் தப்பவிடும் எண்ணம் தமிழர்களிடமோ, மற்றைய வெளிநாட்டவரிடமோ, அல்லது சுதேசிகளிடமோ இருந்தது இல்லை. கறவைக் கணக்கு எல்லா அமைப்புக்களிடமும் கிட்டத்தட்ட இப்படியாகவே காட்டப்படும். எதிர் அமைப்புகள் வேறு ஏதாவது காரியத்திற்குப் பணத்தைச் செலவு செய்வார்கள். சார்பு அமைப்புக்கள் இதைக் கண்டு பிடித்துப் பாவித்ததை பலரும் வரவேற்றார்கள். தமிழர்கள் மிகவும் இயக்கமானவர்கள் என்று நோர்வேயில் புகழப்பட்டது. தமிழர்கள் எதற்காக இயங்கினார்கள் என்று "TS"சிற்கு நன்கு தெரியும். கறவை மாட்டின் மடி மட்டும் வற்றட்டும் அவர்கள் அரசை விட்டு வேறு கறவை மாடு தேடிப் போய்விடுவார்கள் என்பதும் அவருக்குத் தெரியும். சிலர் சொந்தமாகவே எதையாவது சாட்டிக் கறந்து தாங்களே ஏகமாய் காய்ச்சிப் பருகுவார்கள். தாங்கள் கற்ற வித்தையை அதற்காக விலையாக்கி அரச பசுவில் கறப்பதற்கு வித்தைக் காட்டுபவர்களும் உண்டு.

ஆயிரத்து தொளாயிரத்து எண்பத்து ஏழில் வந்து இறங்கும் போது நோர்வேயில் பல அதிகாரிகள் மற்றைய மனிதர்கள் மேல் அநியாயத்திற்கு நம்பிக்கை வைத்து இருந்தார்கள். வீக்கிங் வழி வந்தாலும் அரிச்சந்திர வாரிசுகளான அவர்களுக்குப் பின்புதான் சிறிது சிறிதாக அது புலப்படத் தொடங்கியது. ஒவ்வொன்றும் பிடிபடக் கொஞ்சம் கொஞ்சமாகச் சட்டங்களை அவர்கள் இறுக்கத் தொடங்கினார்கள்.

*

பாடசாலைக்குள் புகுந்ததும் வலக்கைப் பக்கத்தில் அந்தப் பெரிய சமையல் அறை இருந்தது. அது மாணவர்களுக்குச் சமையல் பாடம் கற்பிக்கும் சமையல் அறை. உள்ளே தாராளமான வசதி. பல அடுப்புகளில் அரிசி அவிந்தது. பல ஆண்களும் பெண்களும் சிரமதானமாய் பணியாற்றினார்கள். இளைஞர்கள் சிலர் கோழியைக் கவுட்டுப் போட்டுத் தோலை உருவி, சுத்தமான இறைச்சியாக வெட்டினார்கள். இரு கால்களைத் தவிர அதன் உடம்பை எட்டுத் துண்டுகளாக வெட்டிக் குவித்தார்கள். கோழிக் குழம்பு வைத்துப் பிரியாணி செய்யும் முறையே இங்கேயும் பயிலப்பட இருந்ததை "TS" கண்டு கொண்டார். கிரைன்டர்கள் இயங்கின. அதில் வெங்காயம், பச்சைமிளகாய் நறுக்கும் வேலை இயந்திர கதியில் நடந்தது. கத்திரிக்காய்கள் போரனைகளில் சுடப்பட்டன. அந்தச் சம்பலும், வெங்காயச் சம்பலும் பிரியாணிக்கு முக்கியம் என்பதை யாரோ தெரிந்து வைத்து இருக்கிறார்கள் என்பது "TS"சிற்கு விளங்கியது.

சமையல் அறையில் சிறிது நேரம் உதவி செய்ய வேண்டும் என்பது "TS"சின் எண்ணம். எதற்கும் முதலில் யார் யார் வந்து இருக்கிறார்கள் என்று பார்த்து அறிமுகம் செய்து விட்டுப் பின்பு வந்து சமையல் அறையில் சிறிது நேரம் உதவி செய்யலாம் என்று எண்ணிய வண்ணம் "TS" உள்ளே சென்றார்.

பாடசாலை மண்டபம் வெள்ளைக் கடலான தோற்றம். மேசைகள் பரவிக் கதிரைகள் சுற்றி அடுக்கப்பட்டு, மேசைக்கு வெள்ளைக் கடதாசி உறை விரித்து இருந்தார்கள். அதன் மேலே கோலாப் போற்றில்களும்

(பிளாஸ்ரிக்கால் ஆனவை) சோலோப் போற்றில்களும், கடதாசிக் குவளைகளும் வைக்கப்பட்டு இருந்தன. சில மேசைகளில் பெண்கள், ஆண்கள், குழந்தைகள் சுற்றி இருந்து கதைத்தார்கள். சில பிள்ளைகளும் சில பெரியவர்களும் குளிர்பானப் போற்றில்களைத் திறந்து கடதாசிக் குவளைகளில் ஊற்றி விட்டுக்கட்டத் தொடங்கினார்கள்.

தமிழ் இசைக்குப் புது மெருகு ஊட்டும் விதமாக இரகுமான் இசையமைத்த பாட்டுக்கள் பின்னணியில் இசைத்தன. அது சிலரின் செவிப்பறைக்கு வரும் ஒலி அலைகளைக் குழப்ப அவர்கள் கத்திக் கதைத்தார்கள். அவர்களுக்கும் இரகுமானின் இசைக்கும் போட்டி தொடங்கியதில் அவர்கள் சத்தம் கூடிக்கொண்டே சென்றது.

உள்ளே றூபன், மலர், விக்னேஸ், வினி ஆகியோர் ஒரு மேசையில் இருந்து வேறு ஒரு குடும்பத்தோடு கதைத்தார்கள். அந்தக் குடும்பத்திற்கு இரட்டைப் பெண்கள். அந்தப் பெண்கள் பத்து வயதைத் தாண்டியதான தோற்றம். பருவத்தை ஊர்ஜிதப் படுத்தத் துடிக்கும் அங்கங்கள். "TS"சையும் புவனலோசினியையும் கண்டதும் றூபன் திரும்பிக் கையைக் காட்டினான். அவனைத் தொடர்ந்து எல்லோரும் "TS"சையும் புவனலோசினியையும் பார்த்தார்கள். இருவரும் சென்று அவர்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட கதிரையில் இருந்தார்கள்.

"என்ன அண்ணை இப்பதான் வாறியள்?" என்று றூபன் தொடங்கினான்.

"ஏற்கனவே வந்து நீங்கள் என்ன செய்கிறியள்? அவங்கள் இப்பதான் அரிசி அவியப் போடுகிறாங்கள். இன்னும் கறி வைக்கவே இல்லை. பிறகு சுத்தி மூடிக் கட்டி அமிழ விட கொஞ்ச நேரம் வேணும். நாங்கள் இண்டைக்குத்தான் கணக்கான நேரத்திற்கு வந்து இருக்கிறம். எங்கடை பம்பலுக்கு அருளும், சிவாவும் இருந்தால் நல்லா இருக்கும்." என்றார் "TS".

"அருள் அண்ணை இண்டைக்கு ஒப்தாத்." என்றான் றூபன்.

"ஏனடா?"

"சொரூபாவின்ரை தம்பிக்காரனைத் தெரியும் தானே... சோதிறூபன் எண்டு...? அவரும் ஒரு வியட்னாம் பெடியனும் கூட்டு. நேற்றும் வழமை போலக் கையப் பிடிச்சுக் கொண்டு தமிழர் செய்யத் துணியாத காரியத்தைச் செய்கிறம் எண்டுகிற சொரணை இல்லாமல் குரன்லாண்டிற்க வந்து இருக்கினம். இண்டைக்கு வேலை இல்லை எண்டுகிறதால நேற்றுக் குடி நாள் தானே? அதால தெரு எல்லாம் திருவிழா மாதிரி இருந்திருக்குது. இவையும் தங்கடை பொப்பிற்கு வழமை போல போயிட்டு வந்தவை ஆக்கும். அவங்கள் யாரோ இவை இரண்டு பேரையும் பார்த்து இருக்கிறாங்கள். பிறகு என்ன இவை குரன்லாண்டில இருந்து தொய்யன் பக்கம் போக அவங்கள் நாலைஞ்சுபேர் செமையா மூக்காலும் வாயாலும் இரத்தம் கக்கிற மாதிரிச் சாத்திப் போட்டுப் போயிட்டாங்கள். வியட்னாம்காரரே இப்பிடி எண்டாத் தற்சமயம் தம்பிமார் பாக்கிஸ்தான்காரர் இல்லாட்டி ஈரான்காரரிட்டை மாட்டுப் பட்டிருந்தால் கதை கந்தலாய் இருக்கும். இப்ப சோதிறூபன் அக்கா வீட்டிலதான் நிற்பான். அக்காவுக்கு இவனால ஆக்கினையா இருக்கும். அடி வாங்கினாப் பிறகு பொலிஸ் ஆட்களை ஏத்திக் கொண்டு போய் லெகவக்தில விட்டதாக்கும். அவங்கள் மருந்து கட்டி அனுப்பினவங்களாம். அருள் போய் பேசிப் போட்டுச் சோதிறூபனைக் கூட்டிக் கொண்டு வந்தவனாம் எண்டும் ஒரு கதை. அவனுக்கும் மனசில நிறைய வேதனையா இருக்கும். மனிசிக்காகப் பொறுமையா இருப்பான் போல இருக்குது. வியட்னாம்காரனை அவங்கடை தாய் தகப்பன் வந்து லெகவக்திலேயே தலையில குட்டுப் போட்டுக் கூட்டிக் கொண்டு போயிட்டினமாம்." என்று றூபன் தன் கதையை சொல்லி முடிக்க,

"அருளைப் பற்றி நீர் விளங்கி வைச்சு இருக்கிறது இவ்வளவு தானே? அருள் சோதிறூபனைப் பேசமாட்டான். அருள் எல்லா மனிசரும் ஒரே அச்சா இருக்க வேணும் எண்டும் நினைக்க மாட்டான். சில மனித மூளைகள் விசேடமான முறையில இயங்கப் படைக்கப்பட்டு இருக்கும். அது மற்றைய மனிசருக்கு ஆபத்தை விளைவிக்காத

மட்டும் அந்த மனிசர்களைச் சுதந்திரமாக வாழ விடவேணும். அதுக்கு இடைஞ்சலா இருக்கிறதோ, வெறுக்கிறதோ நாங்கள் இந்த யுகத்தில வாழத் தகுதி இல்லாதவர்கள் எண்டு சொல்லுகிற மாதிரி இருக்கும். எங்களுடைய அறியாமையும், மூட நம்பிக்கைகளும் மற்றைய மனிதர்களுடைய நியாயமான உரிமையைப் பறிக்கிற மாதிரி அமையக் கூடாது." என்றார் "TS".

"அப்ப நீங்கள் சோதிறூபன் செய்கிறது சரி எண்டுறியளா?" என்றான் றூபன்.

"நீயும் மலரும் செய்கிறது உங்களுக்கு எப்பிடிச் சரியாய் இருக்குதோ அப்பிடி அவனுக்குத் தான் செய்கிறதும் சரியாய் இருக்கும். சரி பிழை எண்டுகிறது உனக்குச் சார்பாக உன் அனுபவத்தில இருந்து பிறக்கிற பிரமை. அந்தப் பிரமை எல்லாருக்கும் ஒரே மாதிரியாக இருக்க வேணும் எண்டுகிற எந்த அவசியமும் இல்லை. யார் யார் மூளையில எந்த விதமான கோர்மோன் எவ்வளவு சுரக்க வேணும் எண்டுகிறதை அவங்கள் நிச்சயிக்கிறது இல்லை. பரம்பரையோடை சில புறக் காரணிகளும் அதை நிச்சயிக்கும். சுரக்கும் கோர்மோன்கள் செய்யும் வேலைக்காக ஒரு மனிதனை உயிரோடை சிதை ஏற்றுவது இந்த யுகத்திற்கான தர்மம் இல்லை. மனிதர்கள் எல்லாரும் எங்களைப் போல இருக்க வேணும் எண்டு ஒற்றையாக நினைக்காமல் மனிதர்கள் பல விதம் எண்டதை விளங்கிக் கொண்டு அவர்களை, அவர்களாக வாழ விடுகிறதே இந்த யுகத்தின் நியாயம் எண்டுகிறதை நாங்கள் ஒத்துக் கொள்ள வேணும். அப்படி ஒத்துக் கொள்ளுகிற போது சோதிறூபன் செய்கிறது எங்களுக்குப் பிரச்சனை ஆகவோ, அவமானம் ஆகவோ தெரியாது. அது அவனது வாழ்வு எண்டதை விளங்கிக் கொண்டு அதுக்கான இடத்தைக் கொடுக்கும் எண்ணம் எங்களிட்டை வரும்." என்றார் "TS".

"நீங்கள் சொல்லுகிறதை முழுசாக ஒத்துக் கொள்ள முடியாது அண்ணை. சரி இரண்டு ஆம்பிளையள் இல்லாட்டி இரண்டு பெம்பிளையள் ஒண்டாக இருக்கிறாங்கள் எண்டு வைச்சுக் கொள்ளுவம். அது அவங்கடை பிரச்சனை எண்டே விட்டிடுவம். அவங்கள் இரண்டா மட்டுமா இருக்க விரும்புகிறாங்கள்? எங்களைப்

போல அவங்களுக்கும் நாலாகிற ஆசை வருகுது இல்லையா? ஏதோ ஒரு குழந்தையைத் தத்து எடுக்கிறாங்கள். அந்தக் குழந்தைக்கு ஒன்றில் இரண்டு அப்பா இருப்பார். இல்லாட்டி இரண்டு அம்மா இருப்பா. ஒரு அப்பா ஒரு அம்மா எண்டுகிற இயற்கையின்ரை விதியையும் குழந்தையின்ரை எதிர்பார்ப்பையும், அதுகின்ரை எதிர்காலத்தையும் குழப்பி அடிக்கிற வேலை எப்பிடி அவங்களுக்குச் சரியாகப் படுகுது? இதைப் பார்த்தும் பாராமலும் விட்டுவிட முடியுமே?" என்றான் றூபன். றூபன் தன்னை மடக்குவது போலக் கொண்டு வந்து முடிப்பான் என்று "TS" எதிர் பார்க்கவில்லை. அவரிடம் ஏற்ற பதில் அதற்கு இருக்கவில்லை. ஆனால் ஏதாவது சொல்லி அவனைச் சமாளிக்க வேண்டும் என்று நினைத்தார்.

"எந்த ஆராய்ச்சியாலும் அப்படி வளருகிற பிள்ளைகள் பாதிக்கப் பட்டதாய் இன்னும் யாரும் நிரூபிக்க இல்லை. அப்படி இருக்க அதை நாங்கள் பிரச்சனையாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அது அவங்கடை மனித உரிமையைப் பறிக்கிறது போல அமைஞ்சு போகும். ஆணோ, பெண்ணோ குழந்தைகளுக்கு மிகவும் தேவையானது அன்பும், கரிசனையும். அது கிடைச்சால் அவர்களுக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாது." என்றார் "TS".

""TS" அண்ணை நீங்கள் ஏதோ சொல்லுங்கோ. ஆனா... எனக்கு இது இயற்கைக்கு விரோதமாய் படுகுது. தங்கடை ஆசைக்கு ஏன் குழந்தைப் பிள்ளையளை விளையாட்டுப் பொம்மையாப் பாவிக்க வேணும்?" என்றான் றூபன்.

"TS" பதில் சொல்ல முதல் சமையல் அறைக்கு ஆட்கள் தேவை என்ற வண்ணம் பிரபு வந்தான். பிரபு ஐந்தடி உயரம் இருப்பான். நல்ல மொத்தமான உடம்பு. கொலஸ்ரோலும் சீனியும் வயிற்றைச் சுற்றிய வாசுகியாய் வளர்ந்து கொண்டே போகிறது. நாளை வருமா என்பதே மனிதனுக்குத் தெரியாத போது எதற்கு நாளை பற்றிக் கவலைப்படுவான் என்பதால் இன்றே அனுபவிப்போம் என்கின்ற கட்சியை சார்ந்தவனாய் அவன் உலக இன்பத்தை அனுபவித்தான். சொந்தமாகப் பீச்சாக் கடை ஒன்று அவன் வைத்திருக்கிறான். சாப்பாடு, சமையல் என்றால் அவனுக்கு அத்துபடி. அதுவே அவன் வாழ்க்கை.

வாழ்வில் நித்தம் அனுபவிப்பதும் நிஜமாக அனுபவிப்பதும் உணவு என்பது அவன் கண்டு பிடிப்பு. பலருக்குக் குடியில், மங்கையரில் ஒருவித போதை இருக்கும். பிரபுவிற்கு அதெல்லாம் இரண்டாம் பட்சம். வாசுகி வயிற்றில் கொழுப்பாக ஏற ஏறப் பல விஷயங்களில் அக்கறை குறைந்து போயிற்று. சாப்பாட்டில் சுவையிருக்க வேண்டும். சாப்பாட்டிற்குச் சுவை வேண்டும் என்றால் முக்கியமாகச் சீனி, உப்பு, எண்ணை தாராளமாகச் சேர்க்க வேண்டும். உடல் நலத்திற்குக் கூடாது என்பதைக் கூட்டும் போது கூடிவரும் சுவையின் இரகசியம். வயிறு என்கின்ற அக்கினி குண்டத்தில் யாகப் பொருளை இட்டுச் சாபத்தைப் பெறுவது போல வாய்க்கு உருசியாக உணவு உண்ணும் வாழ்க்கை.

உண்ணும் உணவில் உள்ள சக்திக்கும் வேலையால் உடம்பு எரிக்கும் சக்திக்கும் சமநிலையைப் பேணினால் நோய்கள் தாக்காது என்று நம்பியது ஒரு காலம். இப்போது உள்ளே போகும் சக்திக்கும் உடம்பு எரிக்கும் சக்திக்கும் சமநிலை வேலையால் மட்டும் அல்லாது நிறமுகூர்த்தங்களிலும் தங்கி இருக்கிறது என்கிறார்கள். உடம்பு எரிக்கும் சக்தி ஆளுக்கு ஆள் மிகவும் வித்தியாசப் படுகிறது. சிலர் ஓயாது சாப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள். இருந்தும் அடிக்கும் காற்றில் பறக்கும் சருகின் தோற்றம் மாறாது. சிலர் மணந்தாலே வாசுகி வயிற்றைச் சுற்றத் தொடங்கி விடுவாள். பிரபு முதலாவது வகை இல்லை என்பது "TS"சிற்குத் தெரியும். தானும் அந்த இரண்டாவது வகையில் சேராது பார்த்துக்கொள்ள வேண்டும் என்பதில் "TS" தற்போது கவனம் எடுத்துக் கொள்வார். இங்கே அடிக்கடி கொண்டாட்டங்கள். ஊரில் கிடைத்திராத வருமானம். அங்கே காட்ட முடியாத பவுசை இங்கே காட்டும் தவுனம். எடுக்கும் சாப்பாட்டிலும், செய்யும் சாப்பாட்டிலும் சுவைக்காக எண்ணை, உப்பு, இனிப்புத் தாராளம். வாசுகி வஞ்சகம் இல்லாது வளர்கிறாள். வயிற்றுப்பக்க சட்டையைப் பிரித்து வெளியே வரத் துடிக்கிறாள். இது எதியோப்பியரின் அவஸ்தைக்கு எதிரானது. பணக்கார நாடுகளைப் பிடித்துக் கொண்ட பீடை. பணக்கார நாட்டிற்கு வந்த ஆசியரையும் அது கொடுமையாக வதைக்கிறது. அதற்கு அவர்களது உணவு பற்றிய அறிவு இன்மை காரணமாகிற்று. அதைவிடச்

சோம்பேறிகளாக உடற் பயிற்சிக்குக் கள்ளம் அடிக்கும் அக்கறை இன்மை தொடர்கதை ஆகிறது. "TS"சிற்குத் தானும் அதைச் செய்வதில்லை என்கின்ற குற்ற உணர்வு தோன்றியது.

பிரபு சமையல் அறையில் இவ்வளவு நேரமும் நின்றிருக்க வேண்டும். இப்போது இன்னும் உதவி தேவைப்படவே வந்திருக்கிறான். பிரபுவின் வேண்டுகோளை அடுத்து கோலில் மேசைகளைச் சுற்றி இருந்த பலர் கரும வீரர்களாக எழுந்து கொண்டார்கள். "TS"சும், றூபனும் அவர்களோடு எழுந்தார்கள். அது "TS"சிற்கு நல்லதாகவே தோன்றியது. பிரபு தன்னை இக்கட்டில் இருந்து காப்பாற்றிய செயலுக்கு அவனுக்கு மனதிற்குள் நன்றி சொல்லிக் கொண்டார். வரும் காலம் பல கேள்விகளுக்கான விடையைக் கண்டு பிடிக்கும் என்றும் அவர் நம்பினார். ஒரு இக்கட்டில் இருந்து விடுபட்டாலும் மறு விவாதம் மனதிற்குள் தொடங்கி விட்டதை அவரால் தடுக்க முடியவில்லை.

*

சமையல் அறைக்குள் போன போது அங்கே போரனை போல வெக்கை வெளியே தள்ளியது. இதற்குள் நின்று எப்படி உதவி செய்வது என்று ஒரு கணம் திகைப்பாக இருந்தது. இப்படி இருக்கும் என்கின்ற ஆரூடம் இருந்ததால் மேலங்கிகளைக் கழற்றிக் கொடுத்துவிட்டு வந்தது நல்லதாய் போயிற்று என்று "TS" எண்ணினார்.

சமையல் அறையில் கத்திரிக்காய் பல சுட்டு ஆறப் போட்டு இருந்தார்கள். வெண்காயம் வெட்டிக் குவிக்கப்பட்டு இருந்தது. சாலட்ற்குப் பொருட்கள் எடுத்து வைத்து இருந்தார்கள். அதை வெட்டித் தயிர் விட்டுச் சாலட் செய்ய வேண்டும் என்கின்ற தன் எண்ணத்தைப் பிரபு விவரித்தான். அதன் பின்பு கிடாரத்தில் அவியும் முட்டைகளின் கோதை நீக்க வேண்டும். முட்டை தயாரான பின்பே வேகும் கறிக்கு வேலை வரும். அதன் பின்பு படைப் படையாகக் கிடாரத்தில் சோற்றையும் கறியையும் போட்டு அமிழ வைக்க வேண்டும். அப்படி அமிழுவதற்கு அரை மணித்தியாலம் என்றாலும் வேண்டும். சமையல் வேலையில் உதவி செய்பவர்களுக்கு பியர் கொண்டு

வந்து பிரபு கொடுத்தான். பியரைக் குடித்துப் பிரியாணியைப் புக்கை ஆக்காமல் விட்டால் சரி என்று "TS" எண்ணிக் கொண்டார். மனதில் தோன்றியதை "TS" வெளியே சொல்லவில்லை. அதற்குப் பதிலாக அந்த குளிர்ந்த பியரை அவரும் வாங்கிக் கொண்டார். அத்தால் அன்றைய திருவிழா ஆரம்பமானது.

# 18 கற்கால மதங்களின் நவீன வாழ்விடங்கள்

நாணம் துறந்த ஞாயிறுவின் கதிர்கள் மாந்தரின் மேனியும் கண்களும் கூசக் கலவி செய்த நாள் அது. சுதேசிகள் ஆதவனின் இந்தக் கொடுமையைக் கண் தாங்காது என்கின்ற உண்மையை அறிந்து கறுத்தக் கண்ணாடியை மாட்டிக் கொள்வார்கள். அதுவே அவன் கொண்ட காமத்தில் இருந்து தப்பித்துக் கொள்ளும் மார்க்கமாக அவர்கள் பயின்று வைத்து இருந்தனர். ஒவ்வொரு மனிதனும் தனித்துவம் ஆனவன். அதைப் போல ஒவ்வொரு சமுதாயமும் தனித்துவம் ஆனது. அவர்களின் நம்பிக்கைகளும் கலாச்சாரங்களும் தனித்துவம் ஆனவை. இந்தச் சமுகங்களுக்குச் சரியாகப்படும் பொது விதிகள் மனிதத்தைக் காப்பாற்றுவதாய் இருக்க வேண்டும் என்பது அல்ல. இருந்தும் தங்கள் மதங்களையும், விழுமியங்களையும், கலாச்சாரங்களையும் சரி என்று அவர்கள் எங்கே சென்றாலும் நம்புகிறார்கள். ஐரோப்பிய நாடுகள் பல்கலாச்சார நாடுகளாய் தங்களை விரிவு படுத்திக் கொண்டமை போற்றத் தக்கது. இரண்டு இனங்கள் சொந்த நாட்டில் ஒற்றுமையாய் இருக்க முடியாது குத்துப் பட்டதை விட்டு இங்கு நூற்றுக்கு மேற்பட்ட இனங்கள் ஒற்றுமையாக இயங்குவதைப் பார்க்க முடிகிறது. இந்த ஒற்றுமையோடு இயங்குவதற்கும் ஒன்றோடு ஒன்று கலந்து வாழ்வதற்கும் வித்தியாசம் இருக்கிறது. பலராலும் கலப்பைத் தவிர்த்த இயக்கம் மட்டும் இங்கும் கடுமையாகப் பேணப்படுகிறது. அது மற்றவர்களுக்கு இடையூறாக இல்லாத வரை ஒரு பிரச்சனையாகப் பார்க்கப் படுவது இல்லை. பிரச்சனையாகப் பார்க்கப்படும் சந்தர்ப்பங்களும் இடைக்கிடை தோன்றுகின்றன என்பதும் தவிர்க்க முடியாத உண்மை. கல்லால் எறிந்து மனிதனைக் கொல்வது சரி என்று நம்பும் மனிதர்களும் இந்த ஐரோப்பிய தேசங்களில் வந்து குடி ஏறி இருக்கிறார்கள். அது இங்கும் செல்லுபடி ஆகலாம் என்று முரண்டு பிடிக்கும் முட்டாள்களும் அதில் இருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனும் தனித்துவமானவன் என்றால் இவ்வளவு மனிதர்களிலும் எத்தனை உலகங்கள்

இருக்கும்? இருக்கின்றன. அப்படி இருப்பது கூடப் பிரச்சனை இல்லை. அது மற்றவர்களின் வாழ்வின் குறுக்கே வராவிட்டால் நல்லது.

*

குளிர் வலய நாடுகளில் சூரியனும் அதன் வெப்பமும் வணங்கப்படும் ஆனந்தமான அற்புதம். இல்லாத போது அது இருந்ததில் கண்ட சுகம் விளங்குகிறது. குளிர் காலத்தில் வாடிய மனிதர்கள் கோடைக் காலத்தை அனுபவித்துவிடப் பேரார்வம் கொள்வார்கள். வந்தேறு குடிகளும் வெயிலைக் கண்டு ஒதுங்கியதை மறந்தவர்கள் ஆனார்கள். அவர்களும் சுதேசிகளைப் பின்பற்ற இந்த விஷயத்தில் பின்னுக்கு நிற்பது இல்லை. அப்படியான ஒரு பொழுதில் தொய்யனில் இருக்கும் முங் அருங்காட்சியகத்திற்கு முன்பு இருந்த வெளியில் பலர் கிறிக்கெற் விளையாடிக் கொண்டு நின்றார்கள். அவர்களில் பலர் பாக்கிஸ்தானியர். நோர்வேக்கு வந்த வெளிநாட்டவர்களில் அதிகமானவர்களும் நீண்டகாலமாய் வசித்து வருபவர்களும் அவர்களே. அந்த உண்மை ஐரோப்பிய ஒன்றியத்திற்காய் எல்லைகளைத் திறந்துவிட்டு மாறிக் கொண்டு வருகிறது. அதிக காலம் இங்கு வாழ்ந்தாலும் மாறாது தாய் நாட்டில் வாழ்ந்தது போலத் தொடர்ந்து இங்கு வாழ முயற்சிப்பவர்களும் அவர்களே. கோடைக்கால வெயிலைத் திறந்த மேனியோடு அனுபவிக்க விரும்பாவிட்டாலும் விளையாட்டில் அனுபவிக்க எண்ணி ஒஸ்லோவில் உள்ள மைதானங்களை நோக்கி அவர்கள் வருவார்கள். கிறிக்கெற் நோர்வேக்கு மிகவும் அந்நியமான ஒரு விளையாட்டு. அது ஆங்கிலேயரோடு சம்பந்தப்பட்டது என்றாலும் இங்கிலாந்தைத் தவிர மற்றைய ஐரோப்பிய நாடுகளைப் பாதிக்காத விளையாட்டு ஆகும்.

தொய்யன் ஒஸ்லோ நகரின் மையப் பகுதிக்குக் கிட்டவாக உள்ள ஒரு இடம். பொதுவாக வெளிநாட்டவர் செறிந்து வாழும் பகுதி அது. அதற்கு அருகே ஒரு பெரும் நாற்சந்தி வருகிறது. அது தொய்யனில் இருந்து காள்பாணர்ஸ்பிளாஸ் என்னும் சந்தியை நோக்கிச் செல்லும் திசையில் குறுக்கிடும். அந்த நாற்சந்தியைத் தாண்டினால் முங் அருங்காட்சியகம் வருகிறது. அந்த

அருங்காட்சியகத்திற்கு முன்பு வெட்டை வெளியான பரந்த பிரதேசம் உண்டு. கோடைக் காலத்தில் கூடாரங்கள் அமைக்கப்பட்டு வித்தைக் காட்டப்படும். அது அமைக்கப்படாத காலங்களில் மைதானமாக அது செயற்படும். அதற்கு எதிர் பக்கமாக தெருவைத் தாண்டி சோபின்வர்க் பூங்கா எனப்படும் பரந்த பூங்கா போன்ற புற்றரை இருக்கிறது. அதிலும் பல மைதானங்கள் உள்ளன. அவை உதை பந்தாட்டத்திற்குப் பயன்படும்.

முங் அருங்காட்சியகத்திற்கு வழமையான நாட்களில் அதிகம் சுற்றுலாப் பயணிகள் வந்து செல்வார்கள். அதுவும் ஜப்பானியர்கள், ஜொ்மானியர்கள் இப்போது சீனர்கள் என்று பலரும் வருவார்கள். அத்தோடு அந்த ஓவியனைப் பற்றி மிகவும் அறிந்து வைத்து இருப்பார்கள். ஸ்கிறீக் என்கின்ற அலறும் அந்த ஓவியம் என்ன சொல்கிறது என்பது பற்றி உலகு எங்கும் கதைத்தாலும் தமிழர்கள் பொதுவாக அதைப் பற்றிச் சிந்திப்பது இல்லை. அவர்கள் இரசனை வேறு. அதற்கான ஓவியங்கள் வேறு. சோதிரூபன் முங்கைப் பற்றிக் கேள்விப்படும் போது சில வேளை சிந்திப்பான். அது ஆயிரம் உணர்ச்சிகளை ஒரு தாளில் வரைந்ததான அற்புதமாய் அவனுக்குத் தோன்றும். முங்கின் அத்தினை ஓவியங்களும் அப்படியே என்பதும் சோதிரூபனுக்குத் தெரியும். ஒரு முறை அவனும் வியட்னாம் நண்பனும் அந்த அருங்காட்சியகத்திற்குச் சென்று வந்தார்கள். ஓவியம், இலக்கியம் என்கின்ற படைப்புக்களை பல கோணத்தில் நோக்கலாம். பல கோணத்தில் அதை விளங்கிக் கொள்ளலாம். முங்கின் ஓவியங்கள் உலகத்தையே உறைய வைத்தது என்பதற்கு மாற்றுக் கருத்துக் கிடையாது. அதைப் போல ஜிப்சனின் படைப்புகள் அற்புதமானவை. நான்கு மில்லியனை விடக் குறைவான சனத்தொகை மட்டும் நோர்வேயில் இருக்கும் போது பல உலக தரத்தை எட்டிய எழுத்தாளர்கள், ஓவியர்கள் வாழ்ந்த பூமியாக நோர்வே விளங்கி இருக்கிறது. தொடர்ந்தும் விளங்குகிறது. எதனால் என்பது சோதிரூபனுக்கு முழுமையாக விளங்காவிட்டாலும் இவர்களுக்கு இருக்கும் பொருளாதார வளம், அதனால் உண்டான அதிக அளவான ஓய்வு நேரம் போன்றவை இப்படியான படைப்புக்களை படைக்க வைத்து இருக்கிறது

என்கின்ற எண்ணம் அவனிடம் உண்டு. அதே வேளை நோர்வே மக்கள் அவர்கள் செய்வதில் மிகவும் நம்பிக்கை கொண்டவர்கள். அதுவே அவர்களுக்கு ஒரு வெற்றியாக அமைந்து விடுகிறது. ஐரோப்பியரை ஐரோப்பியரால் மட்டுமே விளங்கிக் கொள்ள முடிகிறது என்கின்ற உண்மையும் உண்டு.

முங் அருங்காட்சியகத்திற்கு முன்பு மிகவும் விறுவிறுப்பாக ஆட்டம் நடந்தது. அவர்கள் நொஸ்கிலும் உருதிலும் கலந்து கலந்து கத்திக் கத்தி விளையாடினார்கள். சோதிரூபனும் அவனுடைய வியட்னாம் காதலனும் ஐஸ்கிறீம் தெய்யனில் இருந்த பெட்டிக்கடையில் வாங்கிச் சுவைத்த வண்ணம் ஏற்கனவே நடந்த பல சம்பவங்களை மறந்து, கையைப் பிடித்துக் கொண்டு சோடியாக கால்வாணர்ஸ்பிளாசை நோக்கி நடந்தார்கள். அப்படி அவர்கள் நடந்து வரும் பாதையில் அந்தப் பாகிஸ்தான் இளைஞர்கள் விளையாடிக் கொண்டு நின்றார்கள். சோதிரூபனும் அவனது வியட்னாம் நண்பனும் கையைப் பிடித்துக் கொண்டு வருவது பற்றி அவர்கள் முதலில் கவனிக்கவில்லை. ஒருவன் அதை முதலில் கண்டான். அவன் மற்றவர்களுக்கு அதைப் பற்றி உருதில் கூறி ஏதோ கதைத்தான். திடீரென எல்லோரது கவனமும் இவர்கள் இருவர் மேல் மொத்தமாக விழுந்தது. கையைப் பிடித்துக் காதல் செய்யும் ஒரு பாலார் மதத்தால், மனம் அறிந்த அவர்கள் கலாச்சாரத்தால், வெறுக்கத்தக்கக் கொடுமையான பாவம் செய்பவர்கள். உடல்கள் இடம் பெயரும் கூடுகள் போல நாடு விட்டு நாடு வந்து விடுகின்றன. கூட்டுக்குள் அடங்கிக் கிடக்க வேண்டிய கட்டாயம் இல்லாத மனது எப்போதும் தான் விரும்பிய உலகத்திலேயே உலாவுகிறது. பாகிஸ்தானியர் ஆனால் என்ன, தமிழர்கள் ஆனால் என்ன அவர்கள் கூடுகள் இங்கு வாழ முயற்சிக்க மனதுகள் கூட்டை விட்டு அவர்களது பழைய உலகிலேயே வாழப் பார்க்கிறது.

கூடும் மனதும் ஒரே இடமாக, இங்கே கொடுக்கப்பட்ட உரிமைகளை எடுத்துக் கொண்டு, தங்கள் மனதிற்கு விரோதம் இல்லாது, தமது உணர்ச்சிகளுக்குச் சுதந்திரம் கொடுத்து வாழ்ந்தவர்கள், பாவிகளாகத் தோன்றினார்கள். உலக நியதியைக் கெடுக்க வந்த சாத்தானின்

உருவங்களாக எண்ணி அவர்கள் கொதி கொண்டு எழுந்தார்கள்.

பிழையான இடத்தில், பிழையான நேரத்தில் வந்துவிட்டதை சோதிறூபன் உணர்ந்து கொண்டான். அதே உணர்வில் அவனது வியட்னாம் நண்பனின் கைகள் உதறல் எடுத்து இருந்தது. இருந்தும் அந்த இடத்தை விட்டுத் தப்பி ஓடும் அவமானத்தை அவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவர்கள் பற்றிய கையையும் விடாது விறைப்பாக துணிவு உள்ளது போல் நடந்தார்கள். அரங்கத்தில் நின்றவர்கள் விளங்காத அவர்களது உருது மொழியில் ஏதோ கடுமையாக விவாதித்தார்கள். சிலர் இவர்களைப் பார்த்துக் கூக்காட்டினார்கள். இருவரும் புறமுதுகிட்டு ஓடாவிட்டாலும் அவர்கள் நடையில் வேகம் கூடி இருந்தது. மற்றவர்களின் மனதை, அதன் உணர்ச்சியை விளங்கிக் கொள்ளாது கல்லால் அடித்தே கொல்லும் இந்தக் காட்டு மிராண்டிகளிடம் இருந்து தப்பித்துப் போய்விட வேண்டும் என்கின்ற அவசரம் அவர்களிடம். இருந்தும் அது புறமுதுகிட்டு ஓடிய அவமானமாய் வந்துவிடக் கூடாது என்கின்ற கவனம். வியட்னாம் நண்பன் சாப்பிட்ட ஐஸ்கிறீமை பதட்டத்தில் கை தவறிக் கீழே போட்டுவிட்டுப் பரிதாபமாய் பார்த்தான். சோதிறூபன் அவனை இழுத்துக் கொண்டு நடந்தான்.

உருதில் கதைக்கும் குரல்கள் தேய்ந்து போகும் என்று எண்ணிய வண்ணம் சோதிறூபன் நடந்தான். அவன் நினைத்ததிற்கு எதிராக அவர்கள் குரல் தங்களைத் தொடர்ந்து வருவதை அவன் உணர்ந்தான். இதை அவன் சற்றும் எதிர்பார்க்க இல்லை. அதுவும் பட்டப்பகலில் ஒஸ்லோவில் இப்படி நடக்கும் என்கின்ற கற்பனையே அவனிடம் இருந்தது இல்லை. சோதிறூபனுக்குத் திரும்பிப் பின்னால் பார்ப்பதா விடுவதா என்கின்ற போராட்டம். பார்த்து என்ன செய்வது என்கின்ற குழப்பம். பின்னால் திரும்பிப் பார்க்கும் போது அவர்கள் தொடர்ந்து வந்தால் என்ன செய்வது என்கின்ற கலக்கம். ஓடுவதா என்கின்ற கேள்வி. ஓடினால் புறமுதுகிட்டு ஓடும் அவமானம் துரத்தும் என்கின்ற அவஸ்தை. என்ன செய்வது என்று அவனுக்கு விளங்கவில்லை. இறுதியாக மான அவமானம் பார்த்து நையப்புடைக்கும் ஒரு சங்கடத்தில் மாட்டிக் கொள்வதும்

புத்திசாலித்தனம் இல்லை என்பது அவனுக்கு நன்றாக விளங்கத் தொடங்கியது.

சோதிரூபன் பொறுக்க முடியாதவனாய் திடீரெனத் திரும்பிப் பார்த்தான். அவர்கள் இப்போது வேகமாக இவர்களை நோக்கி வருவதை அவன் பார்த்து விட்டான். இனிப் புறமுதுகிட்டு ஓடுதல், மான அவமானம் பார்த்தல் என்கின்ற தத்துவ வீரியத்தைத் தலையைச் சுற்றி எறிந்துவிட்டுப் புத்தியோடு எங்காவது ஓடி அடைக்கலம் ஆவதே உயிர் வாழ்வின் உண்மைத் தேவை என்பது அவனுக்கு விளங்கியது. எங்கு ஓடுவது என்கின்ற குழப்பம் அதனைத் தொடர்ந்து அவனைப் பீடித்தது. சிறிது குழப்பத்தின் பின்பு எங்கு ஓடுவது என்பதை அவன் தீர்மானித்துக் கொண்டான். தனது அலைபேசியை எடுத்துத் தாமோதரனோடு தொடர்பு கொண்டு காவலுக்கு அறிவிக்குமாறு கேட்டுக் கொண்டான். சோதிரூபன் வியட்னாம் நண்பனின் கையைப் பிடித்துக் கொண்டு அலைவது தாமோதரனுக்கும் பிடிக்காது. என்றாலும் தமிழரைப் பாகிஸ்தான்காரர்கள் தாக்க வருகிறார்கள் என்பதை அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அத்தால் தான் அதைக் காவலுக்கு அறிவிப்பதாய் கூறினார்.

அலைபேசி இணைப்பைத் துண்டித்த சோதிரூபன் மறு கணமே வியட்னாம் நண்பனின் கையை இறுகப் பற்றிய வண்ணம் ஓட்டம் எடுக்கலானான். இவர்கள் ஓடுவதைப் பார்த்த பாகிஸ்தானியர் இவர்களை விட்டுக் கலைத்துக் கொண்டு வந்தார்கள்.

இருவரும் தாமோதரன் வீட்டுப் பக்கம் உயிர் தப்பினால் போதும் என்கின்ற நினைப்போடு ஓட்டம் எடுத்தனர். இவர்கள் ஓடுவதைக் கண்டதும் துரத்தி வந்தவர்களும் இவர்களைத் தொடர்ந்து வேகமாக ஓடி வந்தார்கள்.

தாமோதரன் காவலுக்கு மட்டும் அல்லாமல் அயலார்களுக்கும் நடக்கும் சம்பவத்தைப் பற்றி அறிவித்து இருந்தார். காவல் வரப் பிந்தினால் சமாளிக்க வேண்டுமே என்கின்ற முன் யோசனை அவரிடம். அந்தச் செய்தியைக் கேட்டு "TS", அருள், ரூபன் ஆகியோர் தாமோதரன் வீட்டை நோக்கி வந்தார்கள்.

சோதிறூபனையும் அவனது வியட்னாம் நண்பனையும் உள்ளே விட்டுத் தாமோதரன் கதவைச் சாத்திக் கொண்டார். கட்டடத்தின் வெளிக் கதவையே அவர்களால் திறப்பில்லாது திறக்க முடியாது என்பதால் எல்லோரும் வாசலில் குழுமி நின்று விவாதித்தார்கள். இவர்கள் கலைத்து வந்ததைப் பார்த்த சில சுதேசிகளும் காவலிற்கு அறிவிக்க அவர்கள் மிகவும் விரைவாக அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் வரும் போது சத்தத்துடன் வந்ததால் அந்தச் சத்தத்தைக் கேட்டு பாகிஸ்தானியர்கள் நாலா பக்கமும் சிதறி ஓடத் தொடங்கினார்கள். காவல் வந்தபோது அவர்கள் யாரும் கதவுக்கு முன்பு நிற்கவில்லை. கட்டடத்தில் வசித்தவர்கள் கீழே சென்று காவலோடு கதைத்தார்கள்.

சிறிது நேரத்தில் சோதிறூபனும் அவனது வியட்னாம் நண்பனும் காவலிற்கு விளக்கம் அளித்தனர். பின்பு அவர்கள் சென்று விட்டார்கள். இவர்கள் விளக்கம் அளித்துக் கொண்டு நிற்கும் போதே "TS"சும், அருளும் அங்கு வந்து விட்டார்கள். அவர்கள் இவர்களைப் பார்த்துவிட்டுக் காவலருடன் கதைப்பதைக் குழப்பாமல் எதுவும் பேசாமல் மேலே தாமோதரன் வீட்டிற்கு ஏற்கனவே சென்று விட்டார்கள். விளக்கம் கொடுத்து முடிய அவர்கள் மீண்டும் மேலே வருவார்கள் என்பது அவர்களுக்குத் தெரியும். சிறிது நேரத்தில் றூபனும் மேலே வந்து சேர்ந்தான்.

உள்ளே மாலினி சமையல் அறையில் தேநீர் தயாரித்துக் கொண்டு நின்றாள். மற்றவர்கள் சோபாவில் அதிர்ச்சியில் இருந்தார்கள். எல்லோருக்கும் இது எதிர்பார்த்து இருக்காத பிரச்சனையாக இருந்தது. யாரும் இப்படி ஒரு சம்பவம் பட்டப் பகலில் நடைபெறும் என்று கனவுகூடக் கண்டது இல்லை. இருந்தும் அது இன்று நிஜமாக எழுந்து நிற்கின்றது. அந்தப் பேரமைதிக்கு முடிவு கட்டும் வண்ணமாக,

"நாங்கள் எப்பிடித் திரிஞ்சால் அவங்களுக்கு என்னங்கோ? என்ன துணிவில அவங்கள் எங்கடை பெடியளை விட்டுக் கலைப்பாங்கள்? எங்களைப் பற்றி அவங்களுக்குச் சரியாத் தெரிய இல்லையிங்கோ. உயிரைத் துச்சமா மதிக்கிற இனம் எங்கடை இனம். கொழும்பில காட்டின வேலையைப்

பார்த்தீங்கள் தானே? அப்பிடியான ஒரு இனத்தோடை முண்டுகிறத்துக்கு இவங்களுக்கு எவ்வளவு துணிவு இருக்கோணுமுங்கோ?" என்று தாமோதரன் குதித்தார்.

"இலங்கையில நாங்கள் போராடுகிறதுக்கும் இங்க ஏற்படுகிற பிரச்சனைகளுக்கும் எந்த முடிச்சும் போடக் கூடாது. இதை இங்கத்தே முறைப்படியே தீர்க்க வேணும். அதுதான் பொலிசைக் காண முதலே எல்லாரும் ஓடிட்டாங்கள் தானே? எண்டாலும் சோதிரூபன் இனிமேலைக்கு கவனமா இருக்கிறது நல்லதுதான். அவங்கள் இந்த நாட்டில வாழ்ந்தாலும் தங்கடை நாட்டு நினைவில வாழுகிறாங்கள். அங்க செய்கிற மாதிரி ஏதாவது இசகு பிசகாச் செய்தும் போடுவாங்கள். அதுக்கு நாங்கள்தான் கவனமாய் இருக்க வேணும்." என்றார் "TS".

"அதை நான் பார்த்துக் கொள்ளுகிறன். வந்தவங்கள்ள பலரும் ஒரு உசாரில வந்து இருக்கிறாங்கள். ஆனா... பொலிஸ் கேஸ் எண்டா இனிப் பெரிசாத் தலையிட மாட்டாங்கள். பொருளாதாரம் சம்பந்தப்படாத வரையில இதெல்லாம் சின்னப் பிரச்சனைதான்." என்றான் அருள்.

"நீ சொல்லுகிறதும் உண்மைதான். எதுக்கும் கவனமாய் இருக்கிறதும் புத்திசாலித்தனம்தான்." என்றார் "TS".

"நாங்கள் பெரிசாப் பயப்பிடத் தேவையில்லை. அவங்கள் நெடுகச் சேட்டை விடுவாங்கள் எண்டு நான் நினைக்க இல்லை. வேணும் எண்டா நாங்கள் கிறவுண்டுக்குப் போய் கேட்டிட்டு வரலாம்." என்றான் றூபன்.

"அதெல்லாம் வேண்டாம். அது இப்பிடியே ஓய்ஞ்சு போயிடும். நாங்கள் ஏன் சின்ன விஷயத்தை ஊதிப் பெருப்பிப்பான்?" என்றார் "TS".

"சரி அப்ப விடுவம். கொழும்பில அடிச்ச அடியில உலகமே நடுங்கிப் போயிட்டுது. அமரிக்கன்ரை படங்களிலகூட இப்பிடி வந்து இருக்காது. அதுவும் சனத்திற்குக் கொஞ்சமும் உயிரிழப்பு வராமல் அதே நேரம் கவர்மென்றுக்கு நல்ல பாதிப்பு வாற மாதிரி எப்பிடிச் செய்து இருக்கிறாங்கள். எப்பிடி எல்லாம் செய்ய முடிஞ்சுதோ எண்டு அவங்களுக்கு மட்டுமே தெரியும். இறங்கப் போன பிளைற் றண்வேயக் காணேல்லை எண்டு

சொல்லுகிற அளவில இருந்தது எண்டா நிலமையைப் பாருங்க? ரணிலின்ற அரசாங்கம் ஆடிப் போயிட்டுது. இனி உந்த இழப்பை ஈடுகட்டப் பேச்சு வார்த்தை எண்டு தொடங்குவினம். அவையின்ரை எக்கனோமி ஏற்கனவே ஆட்டங் கண்டுபோய் கிடக்குது. உதோடை அது படுத்திடும். வேறை வழியில்லாமல் பேச்சு வார்த்தை தொடங்கும்." என்றான் றூபன்.

"பெடியளை எடுத்தமானத்துக்கு லேசா நினைச்சவைக்கு உது நல்ல ஒரு படிப்பினை. அவங்களால எங்கையும் எதையும் செய்ய முடியுமுங்கோ. அதை இப்ப உலகத்திற்கு நல்லாக் காட்டி இருக்கிறாங்கள். நிச்சயம் உது தலைவற்றை வழி நடத்தல்லதான் நடந்திருக்கும். இதைப் போல இனியும் தலைவற்றை தலைமையில நிறையத் தாக்குதல்கள் நடக்கும்." என்றார் தாமோதரன்.

அருளுக்கு நிறையவே எதிர்த்துச் சொல்ல வேண்டும் என்பதாக மனது துடித்தது. இருந்தும் அவன் தன் நாவை ஞானியாக அடக்கிக் கொண்டான். சில இடங்களில் அமைதி காப்பதுவே எல்லோருக்கும் நன்மை பயிர்க்கும் என்பது அவனுக்கு விளங்கியது. சிவாவைப் போல விதண்டாவாதம் பண்ணி என்ன வந்தது என்கின்ற கேள்வி அவனுள் எழுந்தது. அவர்களுக்குச் சாதகமானதைக் கதைத்து, அவர்கள் இன்பம் பெறுகிறார்கள். அதற்கு எதிராகக் கதைத்து, ஏன் எல்லோருக்கும் துன்பத்தை ஏற்படுத்துவான் என்கின்ற எண்ணம் அவனிடம் எழுந்தது. அதைவிடச் சோதிறூபனின் சிக்கலை எப்படிச் சமாளிப்பது என்கின்ற யோசனையும் அவனை வாட்டியது.

சோதிறூபன் ஏன் இப்படியானான் என்பது அருளிற்கு விளங்கவில்லை. அதற்காக அவனைச் சிறுமைப்படுத்துவது எந்த விதத்திலும், யாருக்கும் நன்மை பயிர்க்காது என்பது அருளிற்கு விளங்கியது. இயற்கையில் படைக்கப்பட்ட உணர்ச்சிக்கு ஏற்பவே சோதிறூபன் வாழப் போகிறான். அதை எற்றுக் கொள்வதே அவனது உள்ளத்திற்கும் உடலுக்கும் நிம்மதியைத் தரும். இங்கு வாழ்ந்தும் அவனது வாழ்விற்குப் பல தளங்களில் இருந்தும் எதிர்ப்புக் கிளம்புகிறது. இதைவிட உள்வீட்டு எதிர்ப்பும் கிளம்பினால் அவனால் சமாளிக்க முடியாது. அது அவனது வாழ்வை

முடித்துக் கொள்ள வேண்டும் என்கின்ற எண்ணத்திற்கே இட்டுச் செல்லலாம்.

அவனுடைய உடம்பு. அதில் அவனுக்கே சொந்தமான அவனுடைய மூளை. அதில் தோன்றும் மின் பாய்ச்சலில் உண்டாகும் உணர்ச்சிகள். அவன் அதற்கு உரிமை மாற்ற முடியாத சொந்தக்காரன். அவன் அதை எப்படி அனுபவிக்க வேண்டும் என்பதைத் தீர்மானித்துக் கொள்ளும் சுதந்திரம் அவனுக்கு இங்கு உண்டு. உறவுகளுக்கு ஆகவோ மதத்திற்கு ஆகவோ அவன் ஒளித்து வாழ்வதில் எந்த நியாயமும் இல்லை என்பதாக அருள் எண்ணினான்.

"தாமோதரன் அண்ண நீங்கள் செய்த உதவிக்கு நன்றி. நான் வெளிக்கிடப் போகிறன். எனக்கு அலுவல்கள் இருக்குது. சொரூபா வேறை யோசிச்சுக் கொண்டு இருப்பாள்." என்று கூறிச் சோதிரூபனையும் அவனது நண்பனையும் பார்த்தான் அருள். சோதிரூபன் அதை விளங்கிக் கொண்டு எழ அவனது நண்பனும் எழுந்தான். மூவருமாகப் புறப்பட்டு வெளியே வந்தார்கள். வெளியே வந்ததும் அருளின் கண்கள் தன்னிச்சையாகவே யாராவது நிற்கிறார்களா என்று நோட்டமிட்டது. யாரும் இல்லை என்பது அவனுக்கு நிம்மதியைத் தந்தது. அவர்கள் சென்று தமது காரில் ஏறியதும் அது புறப்பட்டுச் சென்றது.

அதன் பின்பு "TS"சும் ரூபனும் சிறிது நேரம் இருந்து தாமோதரனுடன் கொழும்பு நிலைமையைப் பற்றி அலசிவிட்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

# 19 அனாமோதைய அப்பா

மனிதன் ஒரே செயலைச் செய்து கொண்டு இருந்தால் சலிப்பு அடைந்து விடுகிறான். அது யுத்தத்திற்கும் பொருந்துகிறது. தொடர்ந்து யுத்தம் நடந்தால் யுத்தகளத்தில் நிற்பவன் தொடக்கம் சாதாரண குடிமகன் வரையில் யுத்தத்தால் சலிப்பு அடைகின்றனர். ஈழத்தில் யுத்தத்தின் மேலான சலிப்பு அனைத்து மட்டத்திலும் பதநீரில் விழுந்த நுண் காளானாய் பரவி இருந்தது. விமான நிலையத் தாக்குதல் யுத்தத்தின் மீதான அரசின் நம்பிக்கையின் தூண்கள் சிலவற்றைப் திடீரெனப் பெயர்த்து விட்டது. எப்படி என்றாலும் யுத்தத்தைத் தந்திரமாக வெல்வதற்குப் பல வழிகள் உண்டு என்பது சிங்கள அரசிற்கு விளங்கியது. அத்தால் அவர்கள் பேச்சு வார்த்தையில் இறங்க எதிர் பார்க்காத யுத்த நிறுத்தம் ஒன்று நாட்டில் சடுதியாகக் குதித்தது. இந்தக் குதிப்பு முதலில் ஈழத்தில் வாழ்ந்தவர்களுக்கு ஒரு ஆழமான மூச்சை இழுத்து விடும் இடை வேளையாக அமைந்தது. அதே நேரம் தாயக ஏக்கத்தோடு இருந்த வெளிநாட்டுத் தமிழர்கள் பலருக்கு அது ஒரு பயமற்ற சுற்றுலா ஆகியது. சில அறிவிலிகளின் பௌவுசு அத்தால் ஊர்வலம் ஆகியது. பலரும் இந்த யுத்த நிறுத்தத்தை ஆதரித்துக் குதுகலமாக இலங்கை நோக்கிப் புறப்பட்டார்கள். யுத்தம் இல்லாது போராட்டம் சோர்ந்து போவதாயும், பேச்சுவார்த்தைக்குப் போகக் கூடாது என்றும் சிலர் அவிப்பிராயப் பட்டார்கள். சிலர் மிக விரைவில் மீண்டும் யுத்தம் தொடங்கும் என்றார்கள். அவர்கள் கணிப்பு சரியாய் இருந்தது அவர்களுக்கு அப்போது விளங்கியதோ இல்லையோ ஈழப் போராட்ட வரலாற்றைப் பின் நோக்குபவர்களுக்கு அது உள்ளங்கை நெல்லிக்கனி ஆகும்.

இப்படியாகக் குதித்த யுத்த நிறுத்தத்தைப் பயன்படுத்தி தாங்களும் நாட்டிற்குச் சென்று வரவேண்டும் என்று "TS" அளப்பரிய கற்பனையில் மிதந்தார். அவர் கற்பனை

நங்கூரம் இட்ட கப்பலாய் அசைய மறுத்தது. புவனலோசினிக்கும் சரிஸ்காவுக்கும் கனவில்கூட அது சுவைக்காத எண்ணம் ஆகியது. சுவைக்காமல் இருந்தால்கூடப் பருவாய் இல்லை. அப்படியான ஒரு நினைவூட்டலே உறைந்து போன வேதனைகளை மீண்டும் கிளறி உருக் கொள்ள வைத்து விடும். குடும்பமாக ஊருக்குச் செல்ல வேண்டும் என்கின்ற "TS"சின் ஆசை பெண்களின் சங்கடத்தால் நிராசை ஆனது. அதற்காக அபூர்வமாகக் கிடைத்த அந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிட "TS"சிற்கு மனது வரவில்லை. "TS"சிற்கு முதலில் கோபம் வந்தது. மனிதன் வாழ வேண்டும் என்பதற்கு ஆகவே மறதியோடு படைக்கப்பட்டு இருக்கிறான். மறக்க வேண்டியது மறக்கப்பட்டாக வேண்டும். அதை அடி மனதில் போட்டு வைத்துக் கொண்டால் யாருக்கும் நிம்மதி இருக்காது. அதை ஏன் இவர்கள் விளங்கிக் கொள்கிறார்கள் இல்லை என்கின்ற சலிப்பு அவர்கள் மேல் முதலில் "TS"சிற்கு உண்டானது. இருந்தும் அவரவர் மன வேதனைகள் அவரவருக்கு மட்டுமே முழுமையாக விளங்கும் என்கின்ற அறிவார்த்தத்திற்கு ஏற்ப அவர்களைக் கட்டாயப் படுத்தாது அவர் மட்டும் நாட்டிற்குப் புறப்பட்டார். அதற்குப் பெண்களிடம் இருந்து அவருக்கு எந்த எதிர்ப்பும் வரவில்லை.

*

கெடுபிடிகள் தொலைந்தது போன்ற ஒரு வித சுதந்திரத்தைத் தற்காலிகமாக அனுபவித்த காலம். தேவையான இடங்களில் கெடுபிடிகள் தேவைக்கு அதிகமாகவே இருந்ததாய் "TS"சிற்குத் தோன்றியது. இராணுவத்திடமும் போராளிகளிடமும் மக்கள் மண்டியிட வேண்டி இருந்தது மனதைத் தின்றது. நாடு ஒன்றைக் கட்டுவது என்றால் பல அசௌகரியங்களும் உண்டாகும் என்பதும் "TS"சிற்கு வெளிச்சம் ஆகியது. அவரது கனவு நகரம் அழிந்து பலாலி விமானத் தளத்திற்குள் அடக்கம் ஆனதால் அந்தப் பக்கமே போக முடியவில்லை. அப்போது "TS"ற்கு இம்முறை நாட்டிற்கு வந்ததிற்கே அர்த்தம் இல்லை என்பதாகத் தோன்றியது. உறவினர்களும் பல திக்குகளாகச் சிதறிப் போய் இருந்தார்கள். "TS"சைக் கண்டவர்கள் கவலை

தெரிவித்தனர். கரிசனையாக விசாரித்தனர். "TS"சும் கரிசனையாக அவர்களை விசாரித்தார். திரும்பி வரும் போது "TS" வன்னிக்கும் அதிதியாகப் போய் வந்தார். எங்களுக்கு ஒரு தனி நாடு அமையும் என்பதான நம்பிக்கை அவருக்கு அப்போது பலமாக வந்து இருந்தது. நாட்டில் அதிக காலம் நிற்க வேண்டும் என்கின்ற ஆசை இருந்தாலும் வீட்டில் என்ன நடக்கிறதோ என்கின்ற நினைப்பிற்கு விடுதலையே கிடையாது. "TS" திரும்பிவர மனம் இல்லாது மீண்டும் தாயைப் பிரிந்த கன்றின் ஏக்கத்தோடு நோர்வேக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

*

அன்று சனிக்கிழமை. புவனலோசினி பிரியாணி சமைத்து முடித்துவிட்டு இருவரையும் சாப்பிடக் கூப்பிட்டாள். சரிஸ்கா சமையல் அறைக்குள் அதிகம் மெனக்கெடுவது இல்லை. இங்கே பிறந்து வளரும் பிள்ளைகள் சில வேளைகளில் சுயநலத்தோடு தங்களது கடமைகளை ஒழுங்காகப் பயில்வது இல்லையோ என்கின்ற எண்ணம் "TS"சிற்கு எழும். ஊரிலே வாழ்ந்து இருந்தால் புவனலோசினி உலாத்திவர சரிஸ்காவே சமையலைக் கவனிக்க வேண்டி வந்து இருக்கும். இங்கு வாழும் பிள்ளைகளுக்கு கூட்டைவிட்டுப் பறக்காது பார்த்துக் கொள்ளும் தாய் தந்தையாக, அதுவே அவர்கள் வளர்ச்சிக்குத் தடையாக வருகிறது என்பதும், அதை அறியாத பெற்றோர்களாக பலர் இருக்கிறார்கள் என்பதும் "TS"சின் வேதனையான கருத்தாகும். பாசத்தாலும், இவர்களும் எங்களை விட்டுப் போய்விட்டால் என்கின்ற தனிமையின் பயத்தாலும், இறக்கையால் உந்தித் தள்ளாது அதற்குள் அடைகாத்து வைத்திருக்கும் செயலைச் செய்வதாக "TS" எண்ணினார். அதே வேளைப் பிள்ளைகள் எதையாவது விரும்பினால் பின்பு தாய் தகப்பன் எதிர்ப்பது பற்றி கருத்தில் எடுத்தக் கொள்வது இல்லை என்பதும் அவருக்கு விளங்கியது.

‘அம்மா பிரியாணிக்குக் கத்திரிக்காய் சம்பல் இருக்குத்தானே?’ என்று கேட்ட வண்ணமே தனது அறையில் இருந்து சரிஸ்கா புறப்பட்டாள். கத்திரிக்காய் சம்பல் என்றால் அவளுக்கு மிகவும் பிடிக்கும். அதைப் பிரியாணியோடு சேர்த்துச் சாப்பிடுவதில் அவள்

இரசனையே தனி. வாழ்க்கையின் முக்கியமானதில் முக்கியமானது சாப்பாடு. அதற்குச் செலவு செய்யும் நேரம் எவ்வளவாக இருந்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது என்பது "TS"சின் எண்ணம். இருந்தும் நாங்கள் ஒரு போதும் பிரஞ்சு மக்களைப் போல் உண்ணுபதற்கு நேரத்தைச் செலவு செய்வதில்லை என்கின்ற கவலை அவரிடம் உண்டு.

'என்னப்பா யோசினை?'

'சாப்பாட்டைப் பற்றி... இன்னும் எங்களுக்கு அம்மாதான் சமைச்சுத் தரவேண்டி இருக்குது...'

'என்னுடைய வேலை அப்பிடி அப்பா...'

'இது எல்லாம் ஒரு சாட்டு. அம்மாவும் வேலை செய்கிறா தானே?'

'சரி... இப்ப அதுக்கு என்ன?'

'எப்பவும் அம்மா சமைச்சு உனக்குத் தரலாம். அதில அவவுக்குச் சந்தோஷம்தான். ஆனா... எப்பவும் அம்மாவால உனக்குச் சமைச்சுத் தர முடியுமோ? அதைப் பற்றி உனக்கு இப்ப சிந்திக்கிற தகமை இருக்குத் தானே?'

'விளங்குது அப்பா. நான் வேறை ஒரு விஷயத்தையும் கதைக்க வேணும் எண்டு நினைச்சன். அதை எப்பிடித் துவங்குகிறது...?'

'என்னடி அது?' என்ற வண்ணம் புவனலோசினியும் வந்து மேசையில் அமர்ந்தாள்.

'அதுதான் எனக்கு எப்பிடித் துவங்குகிறது எண்டு தெரிய இல்லை...'

'நீ ஒரு டொக்ரர் எண்டு நினைச்சுக் கொண்டு சொல்லு. அப்ப லேசா இருக்கும்.'

'நான் என்னவா இருந்தா என்ன அப்பா. நான் உங்களுக்குப் பிள்ளை தானே? பிள்ளையள் தாய் தகப்பனோடை என்ன கதைக்கலாம் எண்டு ஒரு எழுதாத சட்டம் தமிழருக்கும் இருக்குது தானே? அதை மீறிக் கதைக்க முடியாமல் இருக்குது.'

'சரி அப்ப கதைக்காமல் விடு.'

‘கதைக்க வேணும் அப்பா.’

‘சரி கதை.’

‘நான் ஸ்பெயின் போகிறதா நினைச்சு இருக்கிறன். அங்க செயற்கை முறையில கற்பம் ஆகிறதுக்கு உதவி செய்கிற கொஸ்பிற்றல்ல வேலை பார்க்கிற டொக்ரரை எனக்குத் தெரியும். அவ எனக்கும் உதவி செய்யலாம் எண்டு வரச் சொல்லி இருக்கிறா. நான் இதைச் செய்கிறதுக்கு உங்கடை ஆதரவு எனக்கு வேணும்.’

அதிர்ச்சியில் சிறிது நேரம் உறைந்தவர் தன்னை விரைவாகச் சமாளித்துக் கொண்டு,

‘எங்கடை ஆதரவு உனக்கு எப்பவும் இருக்குது சரிஸ்கா. ஆனா... உதைவிட வேற வழி இல்லையா?’ என்று கேட்டார்.

‘இல்லை அப்பா. அதுதானே வேண்டாம் எண்டாச்சுது. அதைப் பற்றி திரும்பக் கதைக்காதீங்க.’

‘ம்… செய்... பிரச்சனை இல்லை. ஆனா... நாலு சனம் நாலு விதமாக் கதைக்குங்கள் எண்டதுக்கும் தயாராய் இரு.’

‘தெரியும் அப்பா. அதுக்காக நான் என்ரை விருப்பத்துக்கு வாழாமல் இருக்க முடியுமா?’

‘ம்’

‘ஸ்பெயின் எண்டா வெள்ளைப் பிள்ளையா இருக்குமே?’ என்று புவனலோசினி தனது பாரிய சந்தேகத்தை அடக்கி வைத்திருக்க முடியாது வெளியிட்டாள்.

‘பயப்பிடாத அம்மா. பிள்ளை இந்தியப் பிள்ளையாட்டம் இருக்க வேணும் எண்டு சொல்லி இருக்கிறன்.’

‘சனங்களின்ரை கதையைத் தாங்கிக் கொள்ளுகிறதுக்கு உன்ரை மனதைத் தயார் செய்து கொள்ள வேணும். கண்டதுகளும் கண்ட மாதிரிக் கதைக்குங்கள். எங்களுக்கும் ஒரு பேரப்பிள்ளையைப் பார்க்க ஆசைதான். எவ்வளவு காலம்தான் எங்கடை மூஞ்சையைப் பார்த்துக் கொண்டு இருப்பம். நிறையச் செலவு வருமே?’ என்றாள் புரட்சியாக அல்லது பெண்மையின் ஏக்கத்தின் வெளிப்பாடாக புவனலோசினி.

‘அது எல்லாம் ஒரு பிள்ளையோடை ஒப்பிடேக்க பெரிய காசில்லை அம்மா.’

‘சரி சரிஸ்கா... நீ அலுவலைப் பார். அம்மா சொன்ன மாதிரி உடம்பு மாத்திரம் இல்லை மனதையும் தயாராக்கிக் கொள்ளு. எங்களுக்கு இதைவிடச் சந்தோஷமான செய்தியை நீ சொல்ல முடியாது. நீ சொல்லுகிறது மாதிரிச் சனத்திற்காக நாங்கள் வாழாமல் இருக்க முடியாது.’ என்றார் "TS".

‘தாங்ஸ் அப்பா.’

‘இவன் செல்வன் எண்டவனை யாரோ குரன்லாண்டுக்க பிடிச்சு றிவோல்வரைத் தலையில வைச்சு வெருட்டினவங்களாம். அவன் பெடியளுக்கு எதிராக் கதைக்கிற தோடை அரசாங்கத்திற்கும் சப்போட்டாக் கதைப்பானாம். எண்டாலும் இங்கையும் துவக்கைக் காட்டி வெருட்டுகிறாங்கள் எண்டு பேப்பரில எழுதினா அது ஒரு நாளைக்குச் சிக்கலைக் கொண்டு வரும். ஏன் இதைப் பற்றி யோசிக்காமல் செய்கிறாங்களோ தெரிய இல்லை.’ என்றார் "TS". கதை வேறு திசைக்கு மாறியது.

‘எங்களுக்கு என்ன தெரியும். காரணம் இல்லாமல் செய்து இருப்பாங்களே? அப்பிடிச் செய்தாலும் இதில ஆச்சரியப்பட என்ன இருக்குது?’

‘காரணம் இருந்தாலும் செய்யாமல் இருக்கிறதுதான் நீண்ட காலத்திற்கு நல்லதாய் இருக்கும். யார் அதை எல்லாம் யோசிக்கிறாங்கள்.’

‘ஊரில கொலை செய்துபோட்டு நோர்வேக்கு வந்த ஒரு ஆளையும் பிடிச்சு வைச்சு இருக்கினமாம். குற்றம் செய்துபோட்டு இங்க வந்து மறைஞ்சு இருக்க கட்டாயம் விடக்கூடாது.’ என்றாள் சரிஸ்கா.

‘அது எப்ப என்னத்துக்காக நடந்திச்சோ யாருக்குத் தெரியும்?’ என்றார் "TS".

‘எப்ப என்னத்துக்கு, எங்க நடந்தாலும் கொலை கொலைதான் அப்பா. அதில இருந்து யாரையும் தப்ப விடக்கூடாது. அது வெளிநாட்டு ஆட்களாய் இருந்தால் என்ன? நோர்வே நாட்டு ஆட்களாய் இருந்தால் என்ன? நீங்கள் உதுக்குச் சப்போட்டாக் கதைக்கிறதா அப்பா?’

'ம் நான் கொலை செய்துபோட்டு இங்க ஓடி வாறதை வரவேற்க இல்லை. அதே நேரம் இலங்கையில ஒரு யுத்தம் நடக்குது. அங்க எது கொலை எது தர்மம் எண்டுகிறது அவரவர் தளத்தை, சார்பு நிலையைப் பொறுத்தது. அங்க யுத்தத்தில அல்லது கட்டளைக்காகச் செய்த கொலைக்கு இங்க தண்டனை கொடுக்கலாம். கொடுத்தா அது நீதியைக் காப்பாற்றுமா எண்டுகிறதும் கேள்வி தானே? எய்தவனை விட்டு அம்பை நொந்த கதையாட்டம் இருக்கும் அது. அதை விட இங்க இவங்கடை கண்ணால பார்த்து எங்கடை பிரச்சனைக்குச் சொல்லுகிற தீர்ப்பும் பிழையாகத்தான் இருக்கும். இவங்கடை தளமும் பார்வையும் நிறைய வேறுபட்டது.'

'இங்க வழக்கு எண்டா அது நேர்மையா நடக்கும் எண்டு நான் நம்புகிறன். அப்ப தீர்ப்பும் சரியாகத்தான் இருக்கும். அங்க எண்டா நீதியை விலைக்கு வாங்கலாம்.' என்றாள் சரிஸ்கா.

'அப்பாவுக்கும் மகளுக்கும் உதை விட்டா வேறை கதை இல்லையே?' என்றாள் புவனலோசினி.

# 20 ஒன்று பலதாகி பலது ஒன்றாகி

சரிஸ்கா ‘வலன்சியா’ போய் தங்கித் தனது அலுவலை முடித்துக் கொண்டு வந்தாள். அதே அலுவலை நோர்வேயில் செய்ய முடியாது சட்டம் தடுப்பதால் அயல் நாடுகள் தேடித் திரிய வேண்டியது கட்டாயம் ஆகிறது. கடவுள் படைத்ததை மனிதன் மீறக் கூடாது, சீண்டக் கூடாது என்று பயம் கொள்ளும் கிறிஸ்தவ நோர்வேஜியச் சட்டங்கள் இங்கே பல சிகிச்சைகளுக்கும் வரம்பாகி விடுகின்றன. அந்தச் சட்டங்களை மதிக்கும் குடிமக்கள் பலர். அவளும் அதற்குக் கட்டுப்படுவதால் பணத்தையும், நேரத்தையும் செலவு செய்து, வலன்சியா என்கின்ற ஸ்பெயின் நாட்டின் நகரத்திற்குச் சென்று, பரந்த மனம் கொண்ட மருத்துவர்கள் துணையோடு, அழகிய இந்திய ஆணின் விந்தோடும் அவளின் கருவைச் ஆராய்ச்சிக் கூடத்தில் சேர்த்து, அந்தச் சேர்ப்பில் இரண்டு ஒன்றாகி, பின்பு ஒன்றாகியது பலதாக, அதைக் கவனமாக சரிஸ்காவின் கற்பத்தில் கருவிருத்திக் கொடுத்தார்கள். தாய்மை என்பதை ஆண் மட்டுமே நேரடியாகத் தரவேண்டும் என்கின்ற ஆதிகால வழக்கம் ஒழித்து, அன்பிற்கும், ஆசைக்கும் ஒரு சேயைத் தன் கருவில் சுமந்து, சரிஸ்கா மீண்டும் திரும்பி நோர்வேக்கு வந்தாள்.

அவளுக்குத் தொடர்ந்தும் வலன்சியாவில் நிற்பது போன்ற ஞாபகம். இயற்கையின் விதிப்படி அவளால் குழந்தை பெறுவதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. அந்த எண்ணத்தை அவள் அதே வலுவுடன் இன்றும் வெறுத்தாள். அவளது வெறுப்பைக் கருத்தில் எடுத்து அவளுக்கு நோர்வேயில் கருணை காட்டப்படவில்லை. அந்தக் கருணை பணத்தைக் கொடுத்தால் அந்த நகரத்தில் காட்டப் படுகிறது. இருந்தும் அவர்கள் செய்த பேருதவி அவள் மனதை நெகிழ வைத்தது. அதைவிட அவள் வலன்சியாவில் சுரங்க இரதத்திற்கு நிற்கும் போது பார்த்த அந்த விளம்பரம் அவள் மனதை இப்போதும் ஆட்கொண்ட வண்ணமே இருந்தது. அதன் வாசகங்களை அவள் மீண்டும் ஞாபகப்படுத்தினாள். ‘மற்றைய மனிதர்களைச் சந்தோஷப்படுத்த இணைகிறீர்களா?

உங்கள் கருக்களையும் விந்துகளையும் எங்களிடம் தானம் கொடுங்கள்.’ என்று அது கேட்டது. எம்மிடம் மிகையாக இருப்பது. சிலர் இல்லாது தவிப்பது. வரும் காலத்தில் அது பலராக மாறப் போகிறதாம். ஒருவனின் கழிவு மற்றவரின் தவம். எமது கழிவால் மற்றவர் தவம் நிறைவு பெறும் என்றால் அந்தத் தானத்தை எவ்வளவு மகிழ்வோடு செய்ய வேண்டும்? இந்தத் தானத்தை எது தடுக்கிறது? எப்போது அதில் வியாபாரம் புகுந்தது? குறைகள் இல்லாத மனிதச் செயல்களே இல்லை என்பதாக ஆகிவிட்டது. இருந்தும் அந்தக் குறைகளையும் மிஞ்சும் அழகான செயலையே ஸ்பெயின் நாட்டு மருத்துவர்கள் செய்தார்கள் என்பதைச் சரிஸ்கா நம்பினாள். அத்தோடு அதை ஊக்குவிப்பதான விளம்பரங்கள்.

மனிதனின் பல சோகங்கள் மனிதன் தன்னைத்தான் விளங்கிக் கொள்ளும் போது நீங்கிவிடும். அல்லது மற்றைய மனிதனின் துணை இருந்தால் நீங்கிவிடும். அந்த விளம்பரம் மற்றைய மனிதனின் துன்பத்தை நீக்கி அவன் வாழ்வில் ஒளி ஏற்றி வைக்க அழைத்தது. சரிஸ்கா தனக்கு ஒரு பிள்ளையைப் பெற்றுக் கொண்டு தனது பல பிள்ளைகளை மற்றவர்களுக்கு அழிப்பது என்று உறுதி அழித்து விட்டு வந்தாள். அதை இப்போது எண்ண அவளுக்குப் பெருமையாக இருந்தது.

துணிந்தால் எதையும் செய்துவிட முடிந்த மனிதனாற்கூட எதையும் துணிவாகச் சக மனிதனிடம் சொல்லிவிட முடிவது இல்லை. இடமும் காலமும் மாறிவிட்டாலும் பழைய நினைவுகளில் உறைந்து கிடக்கும் ஈழத்தமிழர் கணவன் இல்லாது கருத்தரிப்பதைக் கடவுளே ஒத்துக் கொண்டாலும் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். அது அவர்களுக்குப் புதிராக, விசித்திரமாகத் தோன்றும். சரிஸ்காவிற்கும், தான் சந்திக்கப் போகும் தமிழர்கள் மூக்கை அவசியம் இன்றி நுழைத்து இந்தக் கருவின் அப்பா யார் என்று கேட்கப் போவது விளங்கியது. நேரம் வரும் போது சொல்கிறேன் என்கின்ற பதிலை அவள் இப்போதே தயார் செய்து வைத்து இருந்தாள். முதலில் உள்ளபடி உண்மையை உரைப்பது என்றே எண்ணி இருந்தாள். உரைத்தாலும் விளங்கிக் கொள்ள முடியாத

மனிதர்களுக்கு உரைத்து என்ன பலன் என்பதால் அவள் அந்த முடிவை மாற்றிக் கொண்டாள்.

பார ஊர்தி ஏறி மிதித்தது போலச் சரிஸ்காவை அலுப்பு ஏறி மிதித்தது. இதனால் இப்படியான அலுப்பு வரும் என்பது அவளுக்கு முதலும் கடைசியுமான அனுபவம். இதற்கு மேல் இல்லை என்பதும் இதுவே எல்லை என்பதும் அவள் எண்ணம். அம்மாவின் தொடர் அனுக்கிரகத்தில் சமையல் சாப்பாடு பற்றிய கவலை அவளுக்குக் கிடையாது. இப்போது புவனலோசினி சரிஸ்காவிற்கு விசேட சாப்பாடுகளும் செய்து கொடுப்பாள். கற்பமாக இருக்கும் போது ஆசைப்படுவது எல்லாம் கிடைக்க வேண்டும் என்பது அவள் தத்துவம். புவனலோசினிக்கு காலம் தந்த மருந்து வேலை செய்தது. பழையன கழிந்து புதியன புகுந்தன. அத்தோடு "TS"சின் அரவணைப்பு அவளுக்கு முழுமையாக இருந்தது. இருந்தாலும் சரிஸ்கா மாறாமல் அல்லது மார்க்கம் மாறியமை அவளைப் பயமுறுத்தியது. தாங்கள் விரும்பியது போல அவள் வாழாவிட்டால் சுற்றி இருக்கும் உலகம் என்ன சொல்லும், செய்யும் என்கின்ற நடுக்கம் உள் மனதில் எப்போதும் நகத்தால் பிறாண்டும் பிசாசாகிக் கலக்கியது. இருந்தும் அவள் அதைச் சரிஸ்காவோடு கதைத்து, அவள் துணிவைக் கெடுத்து, அவளை அஞ்ச வைக்க விரும்பவில்லை.

*

அன்று பிற்பகல் ஐந்துமணி போல் அருளும் சொரூபாவும் "TS" வீட்டிற்கு வந்தார்கள். அருள் மாற விரும்பாத சம தர்ம விசுவாசி. அதனால் மட்டுமே இந்த உலகை நல்வழிப்படுத்த முடியும் என்பதற்கு அவனிடம் எப்போதும் மாற்றுக் கருத்து இருந்தது கிடையாது. மனித வாழ்வின் ஒவ்வொரு அசைவும் முதலாளிகளாலும், பல்தேசிய நிறுவனங்களாலும், ஏகாதிபத்திய அரசுகளாலும் கட்டுப்படுத்தப் படுவதாய் குமுறுவான். இலங்கையிலும் தான் சார்ந்த அமைப்பு மேலோங்கி இருந்தால் சமதர்மமான ஆட்சி மலர்ந்து இருக்கும் என்றும் அதை விட்டால் மற்றும் ஒரு இயக்கத்தைத் தவிர மற்றைய இயக்கங்கள் எல்லாம் முதலாளிகளினதும், ஏகாதிபத்திய அரசுகளினதும் அருவருடிகள் என்பதும் அவன் எண்ணம்.

களத்தில் நின்று போராடும் புலிகளையும் அவன் அப்படித்தான் மதிப்பிட்டு வைத்து இருக்கிறான். அவனின் அந்த மதிப்பீடு "TS"சிற்குப் பிடிப்பது இல்லை. ரஷ்யா, சீனா, கியூபா போன்ற அவன் நம்பும் தத்துவத்தை முதன்மையாகச் செயற்படுத்த விளைந்த நாடுகளிலேயே சர்வாதிகாரம் மட்டுமே நடக்கிறது என்பது அவர் எண்ணம். எது எப்படி இருந்தாலும் சம நீதி, சம உரிமை எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதில் அவருக்கும் அவனை ஒத்த விருப்பு இருந்தது.

*

சோழக் காட்டில் ஆனை புகுந்தது போல மூவரும் வீட்டிற்குள் வந்தார்கள். திவ்வியாவிற்கு இப்போது ஆறு வயது ஆகி விட்டது என்பதே "TS"சிற்குத் திகைப்பைத் தந்தது. எல்லாம் இப்பொழுது என்பது போல் இருந்தாலும் காலம் காற்றாய் பறப்பது விளங்கியது. சரிஸ்காவின் முடிவும் சரி என்பதாக "TS" எண்ணினார். அது அது அந்த அந்தப் பருவத்தில் நடக்க வேண்டும் என்பதை அவர் நம்பினார். நாற்பது வயது வரையும் நொட்டை சொல்லிக் கொண்டு இருந்துவிட்டுப் பின்பு திருமணம் செய்து என்ன செய்யப் போகிறார்கள்? திருமணம் செய்யவில்லை என்பதற்காகச் செல்வியாக இருந்த காலம் அப்பாக்குட்டியோடு மலையேறி விட்டது. இந்த நாட்டில் செல்வியாக இருந்தாலும் குழந்தைச் செல்வமாவது இருக்க வேண்டும். அதுவும் இல்லாவிட்டால் அவள் முதுமைக் காலத்தில் தனிமைப்பட்டு விடுவாள் என்பதான கவலை "TS"சிடம் இருந்தது. அதற்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது ஒரு வகையில் நிம்மதியாக இருந்தாலும் சனத்தின் வாயையும், சொல்லையும் எண்ணும் போது "TS"சிற்குப் பீதி உண்டாகியது.

'என்ன மாமா யோசினை? இந்தாங்க ஜக்கெற்.' என்று "TS"சின் சிந்தனையைக் குழப்பி உற்சாகமாகத் தனது மேலங்கியைக் கொடுத்துவிட்டுச் சரிஸ்காவின் அறையை நோக்கி அவள் ஓடினாள்.

'என்ன அண்ணை யோசினை? என்ரை குட்டியே நீங்கள் யோசிக்கிறியள் எண்டு சொல்லிப் போட்டாள். அந்த அளவுக்கு என்ன யோசினை எண்டு எங்களுக்கும்

சொல்லலாம் தானே? அப்ப உங்களுக்கும் பாரம் குறையும்.'

'ம்... எல்லாம் ஒரே மாதிரி இல்லை. சிலது பாரம் குறையும்... சிலது பாரம் கூடும். காலம் வரட்டும் நிச்சயம் சொல்லுகிறன்.'

'பிரச்சனை இல்லை அண்ணை. நீங்கள் ஆறுதலாச் சொல்லுங்கோ. ஆனா... உங்கடை பீடிகையைப் பார்த்தா ஏதோ பெரிய விஷயமா இருக்கும் போல இருக்குது?' என்றான் அருள்.

'ம்...' "TS" அதைத் தொடர விரும்பவில்லை. சொல்ல வேண்டும். அது தவிர்க்க முடியாது என்பது அவருக்கு விளங்கியது. அவசரப்பட்டுச் சொல்லி எதற்காகத் தேவை இல்லாது அர்த்தம் அற்ற கேள்விகளுக்கு இப்போதே பதில் சொல்லிக் கொண்டு இருக்க வேண்டும் என்று அவர் எண்ணினார். அதை அவர் தவிர்க்க நினைத்தார்.

அருளும் சொரூபாவும் வந்து சோபாவில் அமர்ந்தார்கள். புவனலோசினி அவசரமாக எட்டி வந்து, 'இருங்கோ... நான் ரீ கொண்டு வாறன்.' என்று கூறிவிட்டுச் சமையல் அறைக்குள் புகுந்து கொண்டாள். தேநீரையும், கேக்கையும் கொண்டு வந்தால் எல்லோரும் இருந்து அதைச் சாப்பிட்ட வண்ணம் புதினம் கதைக்கலாம் என்பது அவள் திட்டம். அறைக்குள் இருக்கும் சரிஸ்காவும் தேநீர் வரும் போது வெளியே வந்து இவர்களோடு சிறிது நேரம் இருந்து கதைப்பாள் என்பது புவனலோசினிக்குத் தெரியும்.

'ஊர் புதினம் எப்படியாம் அண்ணை?'

'அருள் உம்மை மாதிரி நானும் நெற்றையும், யாரும் சொல்லுகிறதையும் நம்பித்தான் இருக்கிறன். கோடை காலத்தில தோன்றின கார் முகிலாட்டம் விடிவு வரும் மாதிரி ஒரு பொய் தோற்றம் இருந்திச்சுது... இப்ப அது எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் கலைஞ்சு போகுது. அதை நினைக்கக் கவலையாகத்தான் இருக்குது. முகில் கலைஞ்சு போனா வெயில் வரும்... எங்கடை சமாதானம் கலைஞ்சு போனா யுத்தம் வரும். ஏமாத்த வேணும் எண்டு அரசாங்கம் நினைக்குது போல. ஏமாந்து விடுவமோ எண்டு பெடியள் நினைக்கிறாங்கள் போல. நம்பிக்கை இல்லாமல் கதைச்சால் எப்பிடித் தீர்வு வரும்?'

'அதுக்குத் தானே ஏறிக் திரிகிறார்? ஆனா... ஏறிக் எங்கடை நாட்டைத் தன்ரை கண்ணால பார்க்கிற விதம் ஒருக்காலும் சரிவராது. அதைப் போலத்தான் நாங்கள் உவங்களைப் பார்க்கிறதும் சரிவராது. இரண்டுக்கும் இடையில இருக்கிற இடைவெளியும் பார்வைகளின்ரை கோணங்களும் வெகு வித்தியாசமானவை. எரிக்கால இந்தப் பிரச்சனை தீர்ந்தால் அது பெரிய சாதனை ஆகத்தான் இருக்கும். அதோடை எனக்குச் சமாதானம் வரும் எண்டு ஒரு துளி நம்பிக்கையும் கிடையாது. அதுக்கு என்ன காரணம் எண்டு நான் நினைப்பன் எண்டதும் உங்களுக்குத் தெரியும்.' என்றான் அருள்.

'அப்பிடி இல்லை அருள். அரசாங்கம்தான் முக்கிய காரணம். எவ்வளவு காலம் ஏமாத்திக் கொண்டு வந்து இருக்கிறாங்கள் எண்டதை வரலாற்றில இருந்து நாங்கள் ஆதாரப் படுத்தலாம். அப்ப யாருக்கும் பயம் வரும் தானே? இதை அரசாங்கமும் வெளிநாடுகளும் தெரிஞ்சு கொண்டு விட்டுக் கொடுக்க வேணும். பெடியள் விட்டுக் கொடுத்தாலும் அவங்கள் விட்டுக் கொடுக்கிற மாதிரி எனக்குத் தெரிய இல்லை. இது அவங்களே உருவாக்கின பிரச்சனை. அவங்களே இதைத் தீர்த்து வைக்க விருப்பம் இல்லாமல் இழுத்து அடிக்கிறாங்கள்.' என்றார் "TS".

'அது உங்கடை பார்வை அப்படி அண்ணை. சிங்கள அரசின்ரை பார்வை எப்பிடி இருக்கும்? இடைக்கால சுயாட்சித் திட்டம் எண்ட பெயரில தனி நாடு அமைக்கினம் எண்டு சிவப்புச் சட்டை போட்ட யேவிபி அங்க பிரச்சாரம் செய்யும். அம்மையாருக்கும் இவங்கள் எதிர். எப்பிடி இவை கேட்கிறது கிடைக்கும்? அவங்கள் கொடுக்கிறதையும் வேண்டாம் எண்டு சொல்லி ஆச்சுது. அப்ப இனி? பாவம் சனங்கள்... அதுகளுக்குத்தான் விடிவு இல்லை...'

சரிஸ்கா திவ்வியாவோடு தனது அறையை விட்டு வெளியே வந்தாள். அவள் அப்படி வரும் போதே இவர்கள் என்ன கதைக்கிறார்கள் என்று கேட்டுக் கொண்டே வந்தாள். கோலுக்குள் வந்ததும்,

'என்ன அருள் அண்ணை அப்பாவோடை அரசியல் மட்டுமே கதைப்பியள்? வேறை ஏதாவது கதைக்கலாம் தானே? அப்ப நாங்களும் உங்களோடை கதைக்கலாம்.

எப்பவும் தீராத, எப்பிடியும் தீராத பிரச்சனை எங்கடை நாட்டு அரசியல். உதுக்கு நீங்கள் இங்க இருந்து மாநாடு வைச்சுப் பிரச்சனை தீர்ந்திடுமா?'

'அப்பிடி எண்டு இல்லைச் சரிஸ்கா. அரசியல் இல்லாமல் என்ன இருக்குது சொல்லு பார்ப்பம்? எல்லாச் செயற்பாட்டிலும் வெளிப்படை ஆகவோ அல்லது மறைமுகம் ஆகவோ அரசியல் இருக்கத்தான் செய்யும். அப்ப அரசியல் தவிர்க்க முடியாத ஒண்டுதான். நீங்கள் ஏற்றுக் கொண்டாலும் சரி இல்லாட்டியும் சரி அது அப்பிடியே. நாங்கள் அரசியல் கதைக்க வேண்டிய காலத்தில கட்டாயமாகப் புதைச்சு வைக்கப்பட்டு இருக்கிறம். அது பல கோணங்களில இருக்கலாம். ஆனா... கதைக்க வேண்டியதை அடக்கி வைக்க முடியாத எங்களுடைய ஆர்ப்பரிப்பான உணர்வுகள். சரி அதை விடு... ஏதோ கொம்பியூற்ரருக்கு வருத்தம் பிடிக்குதாம்? உண்மையாகவா?'

'ஓ அதுவா? அது ஏதோ 'ஸ்பை பூத் வோம்' எண்டு சொல்லுகிறாங்கள். நான் இப்ப குறைவாகத்தான் நெற் பாவிக்கிறது. அதுவும் "FTP & IRC" நான் பாவிக்கிறதே இல்லை. அதால என்ரை கொம்பிற்ரருக்கு வருத்தம் பிடிக்காது எண்டு நம்புகிறன்.' என்றாள் சரிஸ்கா.

'நீ கெட்டிக்காரி... எல்லாம் அறிஞ்சு வைச்சிருக்கிறாய்.' என்று அருள் அவளைப் புகழ்ந்தான்.

'யுத்தமும் யுத்தத்திற்கான அரசியலும் கொடுமை ஆனது. அதுவும் யுத்தம் நடக்கிற இடத்தில பெண்ணாக இருக்கிறது அதைவிடக் கொடுமை ஆனது. ஏன் சண்டை பிடிக்கோணும் எண்டு விரும்புகினம் அண்ணை? எங்கடை நாட்டில நடந்தா என்ன? இப்ப ஈராக்கில நடந்தா என்ன? எவ்வளவு வேதனை? எவ்வளவு இழப்பு? எத்தினை பெண்களின்ரை மானம்? உயிர்?' சரிஸ்கா மேற்கொண்டு சொல்ல முடியாது குலுங்கிக் குலுங்கி அழுதாள். சொரூபா அவளை அவசரமாக அணைத்துக் கொண்டாள். திவ்வியா தாயின் மறு பக்கத்தில் கவலையோடு தானும் அணைந்து கொண்டாள். "TS" திகைத்துப் போய் இருந்தார். இதை அவர் எதிர்பார்க்க இல்லை. கல்லும் கரையும். காலமா அல்லது கற்பமானதின் கோலமா என்பது அவருக்கு விளங்கவில்லை. கற்பகாலம் கோர்மோன்களின் யுத்த

காலம் ஆதலால் அது கல்லையும் கரைக்கலாம் என்று எண்ணினார். அங்கு யாரும் எதிர்பாராத அமைதி அரக்கனின் அகங்காரத்தோடு இராணுவ ஆட்சி செய்தது.

'ச்… நான் இப்ப எல்லாரையும் குழப்பிப் போட்டன் போல.' என்றாள் சரிஸ்கா. அவள் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

'அது எல்லாம் ஒண்டும் இல்லைச் சரிஸ்கா. நீ சொன்னது உண்மையான விஷயம். அதுக்காக நீ உருகுகிறது மேன்மையான செயல். நீ அப்படி இருக்கிறது பெருமைப்பட வேண்டிய விஷயம். இவ்வளவு நல்ல செயல் நடக்கேக்க நாங்கள் ஏன் கவலைப்படுவம். ம்… சொல்லும்?'

சரிஸ்கா அழுவதை நிறுத்தினாலும் அங்கே இருந்த இறுக்கம் தொலைந்து விடாது கலகலப்பைக் கருவறுத்தது. அதைக் கலைக்கும் விதமாக,

'வொய்ப், ஸ்கைப் எண்டு எல்லாம் வருகுதாம் சரிஸ்கா. இனி ரெலிபோனே காசில்லாமல் கதைக்கலாமாம்?' என்றான் அருள்.

'ஓ இரண்டு கொம்பியூற்ரரும் நெற்றில இருந்தால் இலவசமாய் கதைக்கலாம். அத்தோடை இப்ப புதிசா வின்டோஸ் மொபையில் எண்டு சொல்லி குட்டிக் கொம்பியூற்ரர் மாதிரி மெபையில் வரத் தொடங்கீட்டுதாம். இன்னும் நிறைய முன்னேற்றம் வரும். பெரிய கொம்பியூற்ரர் எல்லாம் தேவை இல்லாமல் சின்ன மெபைல்ல எல்லாம் செய்கிற மாதிரி வரப் போகுது. பிறகு கொம்பியூற்ரருக்கு வேலை இருக்காது.'

'என்ன நடந்தது?' என்ற வண்ணம் புவனலோசினி தேநீருடனும், கேக்குடனும் அங்கு வந்து சேர்ந்தாள்.

'அது ஒண்டும் இல்லை.' என்று "TS" அந்தக் கதைக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

'அருள் திரும்ப நாட்டுக்குப் போகேல்லையே?' என்றாள் புவனலோசினி.

'ம்… போகலாம். போனாலும் பிளைற்றில யாழ்ப்பாணம் போய் வரவேண்டி இருக்கும். அதைவிட இனி எப்ப குழம்புமோ எண்டு தெரியாத நிலையில இருக்குது.

எதுக்கும் ஆறுதலா அமைதி நிலவினா போகலாம் எண்டு இருக்கிறன். ஆனா அமைதி தொடரும் எண்டு எனக்கு நம்பிக்கை கிடையாது அக்கா.'

'நீர் சொல்லுகிறது உண்மை. உது நெடுக நடக்கிற கதைதானே? மாறி நடந்தா அதிசயம். சனம் எல்லாம் தொடக்கத்தில ஆரவாரிச்சுதுகள். இப்ப திரும்பவும் அவைக்குக் கவலை வந்திட்டுது. எங்கடை சனத்தின்ரை விதி அப்பிடி.'

'யாருக்குச் சண்டை பிடிக்க வேணும் எண்டு ஆசை. தவிர்க்க முடியாட்டி என்ன செய்வாங்கள்? இது ஒண்டும் நாங்கள் விரும்பிக் கேட்டது இல்லையே? வலுவில எங்கடை தலையில அரசால திணிக்கப்பட்டு இருக்குது. அதைத் திணிச்சவங்கள் உணராத வரைக்கும் மாற்றம் எப்பிடி வரும்?' என்றார் "TS".

தேநீர் குடித்துக் கொண்டு இருக்கும் போது சரிஸ்காவிற்கு வயிற்றைப் பிரட்டியது. அவள் எழுந்து ஓங்காளித்தபடி குழியல் அறையை நோக்கி ஓடினாள். அதைப் பார்த்த சொரூபா அவள் பின்னால் ஓடினாள்.

# 21 சுனாமியான மூச்சடைப்பு

அன்று காலை "TS" அவரது அம்மாவை ஈழத்தில் பார்த்துவிட்டு நோர்வேக்குத் திரும்பி வருவதற்காகக் கொழும்பு விமான நிலையத்திற்குச் சென்ற போது நாடு யுத்த நிறுத்த அமைதியை அனுபவித்த அதே நேரம் வானம் கதிரவனால் முழுமையான ஆசீர்வாதத்தைப் பெற்று இருந்தது. "TS" உடன் அவரது மூத்த மைத்துனர் விமான நிலையத்திற்கு வந்தார். கொழும்பில் இருந்து லண்டனுக்கு எயார்லங்கா விமானத்தில் பயணம். அங்கிருந்து ஸ்கண்டிநேவியன் எயார்லைன்ஸில் ஒஸ்லோவிற்குப் பயணம். விமானத்திற்குள் எப்போதும் சிரிக்க வேண்டியவர்கள் சிரித்தார்கள். மற்றவர்கள் அவர்கள் மனநிலையைப் பொறுத்துச் சிரித்தார்கள் அல்லது முறைத்தார்கள். இது "TS"சிற்கு அடிக்கடி பார்த்துப் புளித்துப் போன விஷயம். ஆனால் இம்முறையும் சரிஸ்காவும் புவனலோசினியும் இலங்கை வருவது என்கின்ற கதைக்கே இடம் வைக்காததால் ஒற்றையில் போய் ஒற்றையில் திரும்ப வேண்டியது "TS"சின் விதியாகியது. ஆகாய விமானங்கள் காற்றை உள்ளே அடைத்தது போலத் தகவல்களையும் உள்ளே வராது அடைத்து விடுகிறது. தரையை விமானம் உந்தி வானில் எழும்பிப் பறக்கும் போது கடல் அமைதியாக நீல ஆகாயம் தரையில் படுத்ததாகத் தோன்றியது. பூமியின் மைய அக்கினிக் கோளத்தை மூடும் ஒரு தட்டின் மேல் இன்னொரு தட்டு வன்முறை புரிந்ததால் பூமி பிளந்து கடல் அசுர வேகத்தில் நான்கு திசைக்கும் பயணிப்பதை அப்போது யாரும் அறிந்து இருக்கவில்லை.

விமானம் என்பது வேறு உலகம். பூமியை விட்டுப் புறப்பட்டால் அதற்கும் பூமிக்குமான தொப்பிழ் கொடி ஒலியால், மற்றும் அலைகளால் உருவாகும் தகவல் தொடர்பு மட்டுமே. அதுவும் விமானிக்குக் கிடைக்கும் தகவல்கள் எல்லாம் பயணிகளுக்கும் தெரிவிக்கப்படும் என்பதும் அல்ல.

அழிவு என்பது உலகத்தில் வெள்ளத்தால் உருவாகும் என்பதற்கு மலிவான ஆதாரங்கள் உண்டு. எரிமலை, புவி நடுக்கம் என்பன பூமிக்குக் கீழே உள்ள காரணிகளால் நிச்சயிக்கப் படுகிறது. எப்போது வரும் என்பது தெரியாவிட்டாலும் எங்கே வரும் என்பது மனிதனுக்கு ஓரளவிற்குத் தெரிய வருகிறது.

எங்கும், எப்படியும், எப்போதும் வரக்கூடியதே வெள்ளம் என்பதை நிரூபிக்க, பூமியில் ஒரு பேய் நர்த்தனம் நடக்க, அம்மாவைப் பார்த்துவிட்டு வரும் சந்தோஷத்தில் எதையும் அறியாது, விமானப் பணிப் பெண்கள் கொடுத்த வயினை அருந்தி, உணவை சுவைத்துச் சாப்பிட்டார்.

கறுத்தப் பூதங்களால் இழுத்து வரப்படும் கோடான கோடி ஆதிசேஷன் படம் எடுத்தபடி நாடு முழுவதையும் விழுங்க வருவதாய் கடல் பல பனை உயரத்திற்கு எழுந்து, ஏக்களித்து, கரை தாண்டி, கட்டுடைத்து, ஊழித் தாண்டவத்தில் ஒரு கணம் காட்டுவதாய், மனித எல்லைகளை மிதித்துத் தள்ளி, அவர்கள் உயிர்களை துடிக்கத் துடிக்கப் பறித்து எறிந்து, நான் என்கின்ற கற்பனையில் வாழ்ந்த மனிதனைப் பார்த்து, நீங்கள் எதுவும் இல்லை என்பதாய் இரைந்து, உதைந்து, அழித்து, உயிர்களை மொத்தமாகப் பறித்து, கடலை நாடாக்கி, கண்முன்னே நாட்டைக் கடலாக்கி, இயமனாக எழுந்து, நர வதை தொடர்ந்து, வந்த வேலை முடித்து, மீண்டும் அது தணிந்த போது, என்றும் மறக்க முடியாத இழப்பிற்குள் மனித இனத்தில் பலரைத் தள்ளிவிட்டு அது சென்று இருந்தது. அது இந்த நவீன உலகம் என்றும் மறக்க முடியாத வரலாறு ஆகியது.

நாம் அறிந்த நவீன உலகம் இப்படியான இயற்கை அழிவைப் பார்த்தது இல்லை. ஒரு சில மணித்தியாலத்தில் இவ்வளவு பெரிய அழிவு ஏற்பட்டது என்பதை எவராலும் ஜீரணிக்க முடியவில்லை. மனித ஜிரணிப்பு வேறு, நிஜம் வேறு என்பதாகப் பேய் போல வந்து அள்ளிக் கொண்டு போன கடல் பிணக் காட்டை சான்றாக்கி மீண்டும் தனக்குள் அடக்கமாகியது.

நீங்கள் அல்ல… உங்கள் எல்லைகள் அல்ல... நான் எழும் போது பரமாத்மா போல எனக்குள் எல்லாமே அடக்கம். பல்குழல் எறியலாம். விமானத்தால் தாக்கலாம்.

நான் எழுந்து வரும் போது எதுவுமே நிலைக்காது என்று கடல் சொல்லிச் சென்றாலும் திருந்தாத மனித ஜென்மங்கள் அழிவை வைத்து மீண்டும் அரசியல் வியாபாரம் தொடங்கின.

விமானம் லண்டன் விமான நிலயத்தை வந்து அடைந்தது. அவசரம் இல்லாவிட்டாலும் அவசரமாக இறங்கி அடுத்த விமானத்திற்கான ஓட்டத்தைத் தொடங்கினார் "TS". அங்கு ஒன்றும் வெட்டிப் பிளக்க வேண்டிய அலுவல்கள் இருக்கவில்லை. கொழும்பிலேயே "Boarding pass" கொடுத்து அனுப்பி வைத்து இருந்தார்கள். கொழும்பில் இருந்து வரும் விமானம் நிற்கும் விமான நிலையத்தின் பகுதிக்கும் நோர்வே செல்லும் விமானம் நிற்கும் பகுதிக்கும் இடையில் சில மைல்களைக் கடந்தாக வேண்டும். அதைக் கடந்து முடிந்ததும் இனி என்ன செய்வது என்கின்ற கேள்வி உண்டாகியது. விலை என்றாலும் பருவாய் இல்லை என்று ஒரு பியரை வாங்கிக் குடித்துக் காலத்தைப் போக்குவோம் என்று எண்ணிய வண்ணம் ஒரு சாப்பாட்டுக் கடைக்குள் புகுந்தார். அங்கு குளிராக ஒரு பியரை வாங்கிக் கொண்டு தொலைக்காட்சிக்கு அருகாக இருந்த இருக்கை ஒன்றில் அமர்ந்து அதைப் பார்க்கத் தொடங்கினார். விமானத்தில் பறக்கும் போது பூமியில் என்ன நடந்து இருக்கிறது என்பது அப்போது தெரிய வந்தது. "TS"சிற்கு அது பெரும் அதிர்ச்சியாக இருந்ததோடு நம்ப முடியாமலும் இருந்தது.

தொலைக்காட்சியில் முழு ஆசியாவும், ஆபிரிக்காவின் சில பகுதிகளும், ஆத்திரேலியாவின் சில பகுதிகளும் அதனால் பாதிக்கப்பட்டது என்று கூறியது. கரைகள் தாண்டிய கடல்களும் அது கரும் பூதமாய் பல மீற்ரர்களுக்குக் கொலை வெறியோடு எழுந்த காட்சியும், தனது வழியில் அகப்பட்ட அனைத்தையும் தன்னோடு சுருட்டி எடுத்துக் கொண்டு விமானத்தின் வேகத்தில் பயணிப்பதையும், மனிதர்கள் விட்டில் பூச்சியாக அதற்குள் அகப்பட்டு மடியும் அவலத்தையும் தொலைக்காட்சி மீண்டும் மீண்டும் காட்டியது. "TS" தனது வாழ்நாளில் சூறாவளி அடித்து ஏற்பட்ட அழிவு பற்றி, வெள்ளப் பெருக்கால் ஏற்பட்ட அழிவு பற்றி, வேற்று நாடுகளில் நடந்த புவி நடுக்கத்தால்

ஏற்பட்ட அழிவு பற்றி, அல்லது வேற்று நாட்டில் எரிமலைகளால் ஏற்பட்ட அழிவு பற்றி, மண் சரிவுகளால் ஏற்படும் அழிவு பற்றி, ஐரோப்பாவில் பனிச் சரிவுகளால் ஏற்படும் அழிவு பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறார். இந்தச் சுனாமி என்பது அவருக்கும் புதிதுதான். இது ஜப்பானியச் சொல்லில் இருந்து வந்தது. பிரமாண்டமான அலைகள் என்று கருதிக் கொள்ளலாம். அது பிரமாண்டமாய் இருப்பது மட்டுமல்ல அதன் அழிவும் அப்படித்தான் இருக்கிறது. தொலைக்காட்சியில் இந்தோனேசியா, தாய்லாந்து, இலங்கை, இந்தியா, சோமாலியா, ஆத்திரேலியா என்று அது உலகத்தையே தாக்கியதை காட்டினார்கள். அதை "TS"சால் தொடர்ந்தும் நம்ப முடியாமல் இருந்தது. பல பனைகள் தாண்டி வளர்ந்து விழுங்க வரும் அந்தப் பூதத்தின் கருமையும், வேகமும், பலமும் மனித வாழ்வில் எவராலும் மறக்க முடியாத, எந்த உள்ளத்தில் இருந்தும் மறைய முடியாத ஞாபகத்தை, கொடுமையாக ஏற்பட்ட அழியா வடுவை விட்டுச் செல்கிறது. தொலைக்காட்சியில் இடைவிடாது அப்படியான காட்சிகளே விரிந்தன. இது தொடக்கம் என்பது "TS"சிற்கு விளங்கியது. இன்னும் கொடூரமான காட்சிகள் இனி வரும் நாட்களில் தொலைக்காட்சியில் தொடர் அலைகளாக வந்து தாக்கும் என்பது அவருக்குத் தெரியும்.

நிலையாமை என்பது இதுதானா என்கின்ற எண்ணம் "TS"சிற்கு உண்டானது. சில கணங்களுக்கு முன்பு பூவுலகின் சொற்கமாக இருந்த இலங்கையின் கரையோரப் பகுதிகள் அடுத்த கணம் பூவுலகின் கொடூர நரகமாக மாறிவிட்டதை எப்படி நம்புவது? இதுதான் மெய்ப்பொருள் கண்ட நிலையாமையா? இதுதான் வாழ்வின் அழியாத் தத்துவமா? இதை அறியாத மூட ஆத்மாக்களாக நாம் மாயையில் வீழ்ந்து ஆணவ ஆட்டத்தை உலகிற்குப் பெருமையாக அறிவிக்கும் கணங்களான வாழ்வா?

உலகத்தையே தாக்கிய சுனாமி. சுனாமி பற்றிய அடிப்படை அறிவே இல்லாத, ஆசிய, ஆப்பிரிக்க நாட்டு மக்கள். ஜப்பானியர் மாத்திரம் அதற்கு விதி விலக்கு. ஜப்பானைத் தவிர்ந்த நாடுகளில் எந்த அபாய அறிவிப்புக்களுக்கான ஏற்பாடும் அற்ற அசண்டையீனம்.

பேரழிவு. பேரவலம். பிணக்காடு. மனித உள்ளங்களில் மறையாத வடுவை ஏற்படுத்திய இயற்கை என்னும் இறையின் ரௌத்திரத்தில் பாய்ந்த கரங்கள்.

*

விமானம் கர்டமூவனில் இறங்கிய உடன் "TS" அலைபேசியை இயக்கினார். அதற்கு முதலே புவனலோசினி கொழும்பிற்குத் தொடர்பு கொண்டு தகவல் அறிந்து வைத்து இருந்தாள். அத்தால் அவள் பதட்டம் குறைந்து இருந்தாலும் தொலைக்காட்சியில் காட்டப்படும் காட்சிகளைக் கண்டு அவளும், சரிஸ்காவும் சோபாவை விட்டு நகர மறந்து, சிலையாகினர்.

"TS" வீட்டிற்கு வந்து சேர்ந்த போது இரவு ஏழுமணி ஆகிவிட்டது. வீட்டில் தொலைக்காட்சிக்கு முன்பு அசையாது இருந்து குடிகாரர்களைப் போலக் கண்கள் சிவந்த பெண்களை மட்டுமே அவர் பார்க்க முடிந்தது. புவனலோசினி அன்று சமைக்கவில்லை. பாண்தான் சாப்பாடு என்றாள். அது பற்றி "TS" குறைபட்டுக் கொள்ளவில்லை. ‘இந்தக் கணத்தில் குடிப்பதற்கு நீர்கூடக் கிடைக்காமல் எவ்வளவு சனங்கள் இருக்கும்?’ என்கின்ற எண்ணமே அவருக்கு உண்டானது. அப்படி எண்ணவே அவர் கண்கள் பனித்துக் கொண்டன. இந்தப் பெண்கள் இதைப் பார்த்துப் பார்த்து அழுது இருப்பார்கள் என்றே அவருக்குத் தோன்றியது.

அன்று தொலைக்காட்சியை விட்டு நகராமல் இரவு பதினொரு மணி வரையும் இருந்துவிட்டு இனி இருக்க முடியாது என்கின்ற பயணக் களைப்பில் "TS" உறங்கச் சென்றார்.

*

உலகம் இதற்கு முன்பு கண்டிராத அழிவு என்பதோடு ஐரோப்பியர்களும் மாட்டிக் கொண்டதால் நோர்வே உட்பட ஐரோப்பியத் தொலைக்காட்சிகளையும் சுனாமியின் அவலம் தொடர் சுனாமியாக ஆக்கிரமித்து இருந்தது. இந்தோனேசியா, இலங்கை, இந்தியா போன்றவற்றை விட்டால் தாய்லாந்து முக்கிய இடம் பிடித்துக் கொண்டது. அங்கு இறந்த ஐரோப்பியர்களை அடையாளம் காண்பதற்குப் பெரும் பிரயத்தனங்கள் நடந்து கொண்டு

இருந்தன. அவரவர் சொந்தப் பிரஜைகளில் கொண்ட அக்கறையாகவும் அதை எடுத்துக் கொள்ளலாம். நோர்வேயில் இந்தப் பிரச்சனையைக் கையாள்வதற்கு ஒரு கட்டமைப்பு உருவாக்கப் பட்டது. அழிந்ததில் இது ஒரு சொற்பமே என்கின்ற உண்மை அனைவருக்கும் அதிர்ச்சியான தகவல் ஆகிற்று. அதே நேரம் இலங்கைத் தமிழருக்குப் பணம் சேர்த்துக் கொடுப்பதற்கு ஆகத் தமிழர் அமைப்பு வழமை போல ஒஸ்லோவில் களம் இறங்கியது. பேரழிவில் மனம் பேதலித்துப் போய் இருந்தவர்கள் எதிரிகளாய் இருந்தாலும் இம்முறை மனமுவந்து உதவி செய்தார்கள். அவர்களுக்கு இது என்றாலும் மக்களுக்குப் போய் சேரலாம் என்கின்ற நப்பாசையும் சிறிய நம்பிக்கையும் அப்போது இருந்தது.

வந்த அடுத்த நாள்தான் "TS"சிற்கு சிவா வருத்தமாய் இருந்தது பற்றிப் புவனலோசினி கூறினாள். உடனேயே பார்த்துவர வேண்டும் என்று குடும்பம் ஆகப் புறப்பட்டு "TS" சிவா வீட்டிற்கு வந்தார். வரும் போதுதான் வாங்கி வந்த "Chocolate" பெட்டி ஒன்றைக் கொண்டு வந்தார். இப்போது நத்தார்க் காலம் என்பதால் குழந்தைப் பிள்ளைகள் எதிர்பார்ப்போடு இருப்பார்கள் என்பதோடு வெறும் கையோடு வருத்தம் பார்க்கப் போவதும் முறை அல்ல என்பது அவர் எண்ணம்.

அழைப்பு மணியை அழுத்தியதும் மனோகரி வந்து கதவைத் திறந்தாள். சந்தோஷமாய்,

'வாங்கோ… வாங்கோ...' என்றாள். நிஸா நித்திரை கொள்வதால் சரிஸ்கா அவளை அப்படியே வண்டிலோடு படுக்க விட்டாள். மனோகரி பின்னால் அசுவினியும், அரணும் மறைந்து கொண்டு எட்டிப் பார்த்தார்கள். பின்பு மெதுவாக வந்து நிஸா தூங்குவதை விடுப்புப் பார்த்தார்கள். "TS" அதைப் பார்த்துச் சிரித்த வண்ணம் கொண்டு வந்த "Chocolate" பெட்டியை நீட்ட அரண் சிறிது நேரம் தயங்கிவிட்டு வாங்கிக் கொண்டு,

'தக்.' என்று கூறினான். பின்பு அதனுடன் தனது அறைக்குள் ஓடினான்.

‘இப்பவே அதை உடைச்சு முழுதும் சாப்பிடுகிறேல்லை. இங்க வந்து அக்காவோடை கதை பார்ப்பம். சொக்லற்றை இங்க கொண்டு வா அரண்.’ என்றாள் மனோகரி.

‘சமர் முடிய இவருக்குப் பள்ளிக்கூடம் தொடங்க வேணும் ஆக்கும்?’ என்றாள் புவனலோசினி.

‘ஓ… ஆனாக் குளப்படிக்குக் குறை இல்லை.’

‘அது அப்பா அம்மாவோடைதான். பள்ளிக்கூடத்தில பதுமையா இருப்பினம். நாங்கள் இருந்து வரேல்லையே?’

தாயின் குரலைக் கேட்டு அவனின் முகத்தில் பொங்கிய சந்தோஷம் அடங்கிப் போக வாடிய முகத்தோடு அறையை விட்டு வெளியே வந்தான்.

சிவா சோபாவில் இருந்து வந்தவர்களைப் பார்த்துச் சிரித்தான். வருத்தம் உலுப்பியதில் வண்டி சுருங்கி நெஞ்சாங்கூடு மிதக்கும் கோலம். இன்று குளித்துச் சவரம் செய்திருந்த சுத்தத்தில் தாடையில் கருநீலமான சிறிய மினுமினுப்பு. "TS"சைக் கண்டதால் சுவாரசியமான மாலையாகக் கழியும் என்கிற சந்தோஷம் அவனிடம்.

‘வாங்க… வாங்க…’

‘நிமோனியா வாற அளவுக்கு வீக்கா இருந்தியா சிவா?’

‘அப்பிடி இல்லை அப்பா. அது சில வேளை இளம் ஆட்களுக்கும் வரும்.’ என்றாள் சரிஸ்கா.

‘அப்ப என்னை இளம் ஆள் எண்டுகிறியா சரிஸ்கா? நல்லது. இருந்தாப் போலப் போட்டு அமத்திப் போட்டுது. இருமல், நெஞ்சுவலி, காய்ச்சல் எண்டு மூச்சு எடுக்க முடியேல்லை. அதுக்குப் பிறகுதான் ஆஸ்பத்திரிக்குப் போனம். அப்ப அது எவ்வளவு சீதியஸ் எண்டு விளங்கிச்சுது. அவங்கள் உடனேயே அட்மிற் பண்ணி மருந்து ஏத்தினாங்கள். பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் குறையத் தொடங்கிச்சுது. உங்க லட்சம் லட்சமாய் சனம் செத்துப் போனதை நினைக்கேக்கை இது எல்லாம் ஒரு விஷயமே இல்லை. நீங்கள் சுனாமி வரேக்க எங்க நிண்டநீங்கள்?’

‘நான் அதுக்கு முதலே பிளைற்றில ஏறீட்டன் சிவா. எனக்கு வந்ததும் தெரியாது, சனங்கள் இவ்வளவு

செத்ததும் தெரியாது. லண்டனில ரீவியப் பார்க்கேக்கதான் விஷயம் விளங்கிச்சுது. நான் பிளைற்றில ஏறிட்டன் எண்டு சந்தோஷப் படுவனா இல்லாட்டி இவ்வளவு சனம் இப்படி அநியாயமாய் அழிஞ்சு போச்சுதே எண்டு கவலைப் படுவனா?'

'நானும் அது அறிஞ்சது தொடக்கம் வருத்தம் எண்டாலும் படுக்க மனம் இல்லாமல் ரீவியவே பார்த்துக் கொண்டு இருக்கிறன். எத்தினை பேற்றை வாழ்க்கை ஒரு மணித்தியாலக் கடலின்ரை கோபத்தில தலைகீழாய் மாறி இருக்குது. அதுவும் எங்கடை பக்கம் மோசமாம். சண்டை எண்டு முதல்ல அழிஞ்சுதுகள். இப்ப இயற்கையும் அழிக்குது. எப்பதான் இந்த அழிவுக்கு ஒரு முடிவு வருமோ தெரிய இல்லை. அதோடை உங்கடை ஆட்கள் காசு சேர்த்துக் கொண்டு திரிகினம். இங்கையும் முதல் முறை துணிவா வந்தாங்கள். எனக்கும் இல்லை எண்டு சொல்ல மனம் வரேல்லை. இந்த அழிவுக்குப் பிறகு அப்பிடி மனம் வராது எல்லோ. குடுத்து இருக்கிறன். போய்ச் சேர்ந்தாப் புண்ணியம். இல்லாட்டி கொலை செய்த பாவம். போய் சேரும் எண்டு நடக்காததை நம்புகிறன் எண்டு உள்க்குரல் சொல்லுது.'

'நிச்சயமா போய் சேரும் சிவா. இதிலை எல்லாம் அவங்கள் விளையாட மாட்டாங்கள்.' என்றார் "TS".

'நீங்கள் தேவை இல்லாததுக்கு எல்லாம் தெரிஞ்ச மாதிரி வக்காளத்து வாங்காதேங்கோ அப்பா. அது உங்கடை பெயருக்கு நல்லது இல்லை.' என்று கூறி நமட்டலாகச் சிரித்தாள் சரிஸ்கா.

'இவள் இப்ப என்னை மட்டம் தட்டுகிறாள் சிவா. நான் சொல்லுகிறது, அவங்களைச் சப்போட் பண்ணிக் கதைக்கிறது பிழை எண்டுகிறாள். பிழை எண்டா யாருக்குப் பிழை? எதுக்குப் பிழை எண்டு பார்க்க வேணும். எங்கடை போராட்டத்தை எந்த இயக்கம் செய்தாலும், சிங்களவருக்கும், ஐரோப்பியருக்கும் ஏன் இந்தியாவுக்கும் பயங்கரவாதிகளாக மட்டுமே தெரியப் போகுது. அடி வாங்கி வாழ்ந்த எங்கடை பார்வையில அது எப்பவும் விடுதலைக்கான போராட்டமாய் மட்டும்தான் இருக்கும். அந்தப் பார்வை மாறச் சந்தர்ப்பமே கிடையாது. நீ, சரிஸ்கா போல பலரும் போராட்டத்தை, விடுதலையை

எதிர்க்க வேணும் எண்டு நினைக்காட்டியும் புலியளைக் கடுமையா எதிர்க்கிறீங்கள். அதுக்குக் காரணம் இல்லாமலும் இல்லை எண்டு சொல்லலாம். இருந்தும் நீங்கள் ஒண்டை விளங்கிக் கொள்ள வேணும். போராட்டம் எண்டால் தவறுகள் வரத்தான் செய்யும். அப்பிடித் தவறு இல்லாமல் போராட்டம் நடந்ததா உலகத்தில எந்த வரலாறும் இல்லை. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது சிவா.'

'அது உண்மை "TS" அண்ணை. தவறு விடுகிறது இயற்கை. அந்தத் தவறை உணர்ந்து திருந்துகிறது அதைவிட இயற்கையாக இருக்க வேணும். தப்பைத் தப்பா உணராது தப்பைத் தொடருகிறது இனத்தை அழிக்கும் தப்பாகும். அதைச் செய்கிறதுக்கு ஆதரவு கொடுத்தால் நாங்கள் எங்களை அழிக்கிறது மட்டும் இல்லை எங்கடை வருங்காலங்களையும் அழிக்கிற மாதிரி அமையும். அதுதான் எனக்குத் தெரிஞ்ச உண்மை. என்ரை மூளையில இருக்கிற சிந்தனையில பிழை இல்லை எண்டு நான் எப்பவும் உறுதியா நம்புகிறன்.'

'அப்பிடிச் சொல்லுங்க சிவா அண்ணை. கண்ணுக்கு மறைப்புக் கட்டின குதிரை மாதிரி அப்பாவின்ரை பார்வை சில விசயத்தில மட்டானது. எவ்வளவு சந்தர்ப்பம் கிடைச்சுது? ஏதாவது மாற்றம் வந்த மாதிரி உங்களுக்குத் தெரியுதா அப்பா? நீங்கள் ஒருக்கா ஆயுதத்தைக் காட்ட முதலே வெளிநாடு போயிட்டியள்… எங்களுக்குத்தான் அது தெரியும்…'

அதற்கு மேல் சரிஸ்காவால் கதைக்க முடியவில்லை. கண்களில் நிறம் அற்ற திரவ முத்துக்கள் திரள தலையைக் குனிந்து கொண்டாள்.

'பிள்ளையை நான் விட்டிட்டு வர வேணும் எண்டா நினைச்சன். வர வேண்டியதாப் போச்சுது. சொறி சரிஸ்கா. என்ன நடந்தாலும் நான் உங்களை விட்டிட்டு வந்து இருக்கக் கூடாது.'

'நீங்கள் எந்த நிலையில வெளிக்கிட வேண்டி வந்தது எண்டு எனக்குத் தெரியும் அப்பா. நீங்கள் வந்த பிறகு நாங்கள் இருந்து அனுபவிச்சதை வைச்சுக் கொண்டே என்ரை கருத்தைச் சொல்லுகிறன். அதை நீங்கள்

அடியோடை மறுக்கிறது கொஞ்சமும் எனக்குப் பிடிக்க இல்லை அப்பா.'

'என்னைப் பொறுத்தவரை யார் குத்தினாலும் அரிசி ஆக வேணும். எங்களுக்கு விடுதலைக் கிடைக்க வேணும். அதை எதுக்கு ஆகவும் விட்டுக் குடுக்க முடியாது சரிஸ்கா. விட்டுக் குடுக்கவும் கூடாது.'

'அது உண்மை "TS" அண்ணை. விடுதலை கிடைக்கும் எண்டால் நீங்கள் சொல்லுகிறது சரி. இந்தப் போராட்டம் அந்த முடிவில கொண்டு போய் நிறுத்தும் எண்டு எனக்கு நம்பிக்கை இல்லை. நீங்கள் நினைக்கிற மாதிரி நான் எதிர்க்கிறது எங்கடை போராட்டம் அழிய வேணும் எண்டு இல்லை. அது அழியக் கூடாது எண்டுகிற அக்கறையில எண்டதை விளங்கிக் கொள்ளுங்க... இப்ப இல்லாட்டியும் நீங்கள் ஒரு நாள் அதை ஆறுதலா விளங்கிக் கொள்ளுவியள் அண்ணை.'

'அது இப்ப அப்பாவுக்கு விளங்காது சிவா அண்ணை.'

'சரி... எனக்கு விளங்க இல்லை எண்டே வைச்சுக் கொள்ளுங்க... எனக்கு எது வெளிப்படையாகச் சரி எண்டு படுகுதோ அதை நான் ஆதரிக்கிறன். அதை நான் நம்புகிறன். அவ்வளவுதான்.'

'இப்ப உதை விட்டா வேறை கதை இல்லையே?' என்றாள் புவனலோசினி.

'நாங்கள் எங்கடை நாட்டுப் பிரச்சனையைக் கதைக்காமல் றொக்கெற் சயன்ஸ் பற்றியா கதைக்கிறது? அது கதைக்கிறதுக்கு முதல்ல அந்த அளவுக்கு அறிவு இருக்க வேணுமே?' என்றார் "TS". புவனலோசினி கதையை வளர்க்க விரும்பாது மௌனம் என்னும் மேன்மையான ஆயுதத்தைப் பாவித்தாள்.

# 22 கடற்கரையில்

தவம் இருந்து கிடைப்பதின் தரம் உயர்வாக மதிக்கப் படுகிறது. வெயில் குறைவாக இருந்தால் நன்றாக இருக்குமே என்று இலங்கையில் எண்ணிய இளமைப் பருவம் உண்டு. அதற்கு எதிர்மாறாக வெயில் நன்கு எறித்தால் இதமாக இருக்குமே என்கின்ற இடை முதிர்ப் பருவம் "TS"சிற்கு இங்கு. காலமும் இடமும்கூட மனிதத் தவத்தின் குறிக்கோளை மாற்றி விடலாம். இன்று இயற்கை இம் மானிடருக்கு வரம் கொடுத்து இருந்தது. வானம் நிர்மலமாக, ஆதவன் அம்மணமாக, வாயு பகவான் பகை துறந்து போக, குளிரைப் புறமுதுகிட்டு ஓட அடித்து விரட்டி வெம்மை, ஞாயிறுவின் தூதனாய் வியாபித்த நாள் இது. மா போன்ற வெள்ளை நிறத்தைப் பாண் போன்று குன்ற வைக்க ஆதவனின் ஆலிங்கனத்தை நாடும் சுதேசிகள். ஆதவனின் அந்தக் கருக்கலை பெருமையாக எண்ணி, அதைக் காட்டிக் கதைத்து மகிழும் அவர்கள் ஆர்வம். தமிழருக்கு மேலும் கருகிய நிறம் தேவை இல்லை என்றாலும் ஆதவ அனுக்கிரகத்தில் கிடைக்கும் இதம் இங்கு வேண்டி இருந்தது.

ஒஸ்லோவில் உள்ள சில கடற்கரைகள், சில ஏரிகள் போன்றவை இப்படியான ஆதவ அனுக்கிரக நாட்களில் அடைக்கலம் தரும் இடங்களாய், தீர்த்தத் தலங்களாய், குளிரை வெறுத்தவர்களுக்கு இப்போது குளிர்ச்சியைத் தரும் சாமிகளாக வெட்கைக்கு மோட்சம் தரும் புண்ணியத் தலங்களாகின.

கோடைக்கால விடுமுறைக்காகப் பலரும் இம்முறை இந்தியா சென்று விட்டார்கள். போன வருசம் இலங்கைக்குச் சென்று வந்ததால் இம்முறை வேறு இடம் பார்த்தது ஒரு பகுதி. இலங்கையில் காற்றுத் திசை மாறுகிறது என்கின்ற அச்சத்தில் தங்கள் பாதுகாப்பை எண்ணியவர்கள் பலர். அதையும் மீறி, இந்த முறையும்

நாட்டிற்குச் சென்றவர்கள் சிலர். அவர்கள் எல்லாம் ஒஸ்லோத் தமிழரின் சனத் தொகையில் கழிய தற்போது ஒஸ்லோவில் வாசம் செய்த "TS" குடும்பமும், சிவா குடும்பமும், அருள் குடும்பமும் 'கொல்மன்சாறத்' என்கின்ற சாமி வராத, சமைத்துச் சாப்பிட்டுக் குளித்து மகிழும் தீர்த்தத் தலத்திற்கு போவதாக அலைபேசியில் கதைத்து முடிவு எடுத்து இருந்தார்கள்.

சரிஸ்காவிற்கும் திவ்வியாவை வெளியே அழைத்துச் செல்ல வேண்டும் என்கின்ற அவா இருந்ததால் மிகவும் ஆர்வத்தோடு புறப்பட்டாள். மூன்று குடும்பங்களும் 'கொல்மன்சாறத்'தில் சந்திப்பதாக முடிவு செய்து கொண்டு புறப்படத் தயாரானார்கள்.

கொல்மன்சாறத் ஒஸ்லோவிற்கு வெளியே மேற்குப் பக்கத்தில் கடலும் தீவுமாக இயற்கையின் கலை அம்சத்தோடு இருக்கிறது. அந்தப் பக்கமே பணக்காரருடைய பக்கம் என்பதாகக் கடவுளால் படைக்கப் பட்டதை மனிதன் பிரித்து எடுத்துக் கொண்ட யதார்த்தம். பொதுவான இடங்களுக்குச் செல்வதற்குப் பணக்காரர் பிச்சைக்காரர் என்கின்ற பாகுபாடு பெரிதாக நோர்வேயில் இல்லை. வேறு எதற்காகவும் இந்த நாட்டில் பாகுபாடு காட்ட முடியாது. அந்தக் கடற்கரைக்கு எதிர் பக்கம் அழகிய தீவுகள் உள்ளன. அதில் இருக்கும் வீடுகள் பணக்காரத் தனி மனிதர்களுக்குச் சொந்தமானவை.

கல்லுக் குறைந்த கடற்கரையும் அதைச் சார்ந்து இருக்கும் பெரிய வெளியும் குளிப்பதற்கும், சமைத்துச் சாப்பிடுவதற்கும் மிகவும் வசதியாகும். வாகனங்களை நிறுத்துவதற்கும் பிரத்தியேகமாக இடம் இருப்பதோடு, ஐஸ்கிறீம், குளிர்பானம் போன்றவை வாங்குவதற்கும் ஒரு சிறிய பெட்டிக் கடையும் அங்கு இருக்கிறது.

மறு பக்கத்தில் மரத்தால் செய்யப்பட்ட பாலம் ஒன்று கடலுக்கு மேலே மிதக்கும் தளமாக ஊடறுத்துச் செல்கிறது. மீன் பிடித்துப் பொழுது போக்குவதற்கு அந்தப் பாலம் அருமையான இடம். இரண்டு பாறைத் தீவுகள் இரு பக்கமாக, கடலுக்கு நடுவே அபாயத்திற்கு அடைக்கலம் தருவதற்குத் தயாராக இருப்பதோடு, பாய்ந்து கடலுக்குள் குதிப்பதற்கும் ஏதுவாகவும் அமைகிறது. நடுக்கடலிற்குச் சென்று அங்கு இருந்து பாய்வதற்கு மரமேடையும்,

ஏணியும் கட்டப்பட்டு இருந்தன. வெயில் எறிக்கும் நாட்களில் அந்தக் கடற்கரைக்கு வந்தால் குழந்தைப் பிள்ளைகளின் வதனங்கள் ஆயிரம் சூரியனின் பிரகாசம் பெற்றுவிடும். அவர்களின் துள்ளலும் பாயலும் ஓயாது. ஓடி ஓடிக் கடலில் பாய்வதும், கரையில் இருந்து நீந்தி நடுவே சென்று, பின்பு ஏணியில் மீண்டும் மீண்டும் ஏறி ஏறிக் குதிப்பதுமாய் வெகு கொண்டாட்டமாய் இருக்கும்.

"TS" அங்கே சென்றபோதே மற்றவர்கள் ஏற்கனவே வந்து வெயில் படும் நல்ல இடமாகக் கடற்கரையை அண்டிய பகுதி ஒன்றில் இடம் பிடித்து இருந்தனர். சிவா 'கிறில்' (இறைச்சி வாட்டும் அடுப்பு) கொண்டு வந்து அதில் கரியைக் கொட்டி எரிய வைப்பதற்குத் தயார் செய்து இருந்தான். இரண்டு ஈரம் ஏறாத கம்பளங்கள் விரித்து அதன் மேல் அருள், சொரூபா, அகலிகா, மனோ, அஸ்வினி, அரண் ஆகியோர் இவர்கள் வரவை எதிர் பார்த்துக் காத்து இருந்தார்கள். இவர்களைக் கண்ட உடன் பல சூரியன்களை ஒரே நேரத்தில் நேத்திரத் தாமரைகளாகப் பெற்றதாக அவர்கள் வதனங்கள் மலர்ந்து சூரியகாந்திப் பூக்களாக இவர்களின் அசைவைப் பின் தொடர்ந்தன.

அகலிகா, அஸ்வின், அரண் இருக்கும் இடத்தை நோக்கி திவ்வியா ஓடினாள். அனைவரும் வந்தபடியே வெயில் காய்ந்தார்கள். ஒருவரும் குளிப்பதற்கு உடுப்பு மாற்றவில்லை. பெண்கள் பலருக்கும் கார் ஓட்டத் தெரிந்தமை இப்படியான வெயில் கால நாட்களை இன்பமாகக் கடற்கரையில் குழிப்பதற்கும், குதுகலமாய் இருப்பதற்கும் ஏதுவாய் அமைந்து விடுகிறது. சாரதி அனுமதிப் பத்திரம் எடுப்பதற்கு அதிகமாகச் செலவு செய்ய வேண்டி இருந்தாலும் அது கொடுக்கும் வசதிக்கு முன்பு அதற்குச் செலவு செய்வது ஒரு பொருட்டாகத் தோன்றாது. தமிழிலேயே கார் ஓட்டிப் பழக்க ஒஸ்லோவில் ஆட்கள் இருந்தார்கள். சில வேளை வெளிநாட்டவர்கள் நேர்மையாக இருக்கும் அமைப்புக்களைத் தங்கள் நாடுகள் போலக் குழப்பி விடுகிறார்கள். சுயநலத்திற்காய்ச் செய்யும் அச்செயல்கள் மொத்தச் சமுதாயத்திற்கும் நீண்ட காலத்தில் எப்படியான பாதிப்பை உண்டு பண்ணும் என்பதை அறியாது, அல்லது அறிய மறுத்துக் குறுகிய

எண்ணத்தோடு தங்கள் நன்மை கருதி அதைச் செய்கிறார்கள்.

"திவ்வியா ஒரு அரசியல் தலைவராகத்தான் வரப் போகிறாள். இப்பவே தலைமை தாங்குவா போல இருக்குது." என்றான் சிவா.

"ஐயோ சிவா அண்ணை… போயும் போயும் ஆரும் பிள்ளையளை அரசியலுக்க விடுவினமா?"

"ஏன் இல்லை சரிஸ்கா? அது ஊரில மண்டையில போடுகிற கலாச்சாரத்திற்குப் பயந்து... அதைச் சொல்ல ஒரு மாதிரித்தான் இருக்குது. இருந்தாலும் சொல்லத்தான் வேணும். மண்டையில போடுகிற கலாச்சாரத்திற்கு முன்ன அரசியல் எதிரிகளுக்கு நலமடிக்கிற கலாச்சாரம் எங்கடை பகுதியள்ள இருந்திச்சுது. இங்க அந்தப் பிரச்சனை இல்லைத் தானே? உங்க நிறையத் தமிழ் ஆட்களே இளைஞர் அணியில பிள்ளையளைச் சேர்க்கினமாம். நானும் என்ரை இரண்டுக்கும் சொல்லுகிறன். ஆனா... அதுகள் துளிகூட அதைப் பற்றி அக்கறை எடுக்குதுகள் இல்லை. பாகிஸ்தான்காரர் இருக்கினம். எங்களிலும் ஒரு சிலர் இருக்கினம். தொடர்ந்து வாறதும் தப்பில்லை. இவங்கடை அரசியல் ஓரளவுக்குச் சுத்தமான ஆபத்து இல்லாத அரசியல். சந்தர்ப்பம் கிடைச்சா அதை விடக் கூடாது சரிஸ்கா."

"ம் நீங்கள் சொல்லுகிறதும் உண்மைதான். என்ன எண்டாலும் திவ்வியாவுக்கு காலம் இருக்குது. அதைவிட என்னத்துக்குப் போகிறது எண்டதை அவள் தானே முடிவு செய்ய வேணும்?"

"சிவா நீ ஊர் அரசியல் கதைக்க இங்கத்தே அரசியலோடை சுழி போடுகிறாய் போல இருக்குது?" என்றான் அருள்.

"நீ கெட்டிக்காரன் அருள். என்ன நாங்கள் கதைக்கத் தொடங்கினா "TS" அண்ணைக்குத்தான் கஸ்ரம்." என்றான் சிவா.

"அப்பிடி எல்லாம் ஒண்டும் இல்லை. நான் எந்த விமர்சனத்தையும் தாங்கிக் கொள்ளுகிற உள்ளம் படைச்சவன். இப்ப புதுசா என்னைவிட்டு நானே விலகி

நின்று எல்லாருடைய கருத்தையும் கேட்கிற பக்குவம் இருக்குதோ எண்டு முயற்சி செய்து பார்க்கிறன். நீங்கள் என்ன கதைக்க விரும்பினாலும் கதைக்கலாம். நான் கோவப்படுவன் எண்டு நினைக்க வேண்டிய அவசியம் இல்லவே இல்லை."

"நீங்கள் எங்கயோ போயிட்டியள் அண்ணை." என்றான் சிவா.

"அங்க போகிறத்துக்கு இனித் தயாராகத்தானே வேணும்?"

"சந்தோஷமாய் இருக்க வந்தா உங்கடை தத்துவமா கதைப்பியள் அப்பா?" என்றாள் சரிஸ்கா.

"சரி விடு. அப்ப வேறை என்ன கதைக்கலாம் சொல்லு?"

"ம்... கதைக்கிறதுக்கா விஷயம் இல்லை. சிவா அண்ணை கூகிள் மப் பார்த்தீங்களா?"

"பார்த்தன். எப்பிடித்தான் இதை எல்லாம் செய்யிறாங்களோ? நானும் பலாலி எயாப்போட்டை உருட்டி உருட்டிப் பார்க்கிறன். சில இடங்களில படம் தெளிவாய் இல்லை. எவ்வளவு வேலை செய்து இருக்கிறாங்கள்?"

"கூகிளே ஒரு விளையாட்டாத் தொடங்கினாங்கள். இப்ப எப்பிடி வளர்ந்திட்டாங்கள்?"

"திறமை இருக்கோணும்." என்றான் அருள்.

"திறமை மட்டும் இல்லை. அதிஸ்ரமும் இருக்க வேணும்." என்றாள் சொரூபா.

"இந்த மாற்றம் எல்லாம் கொம்பியூற்ரரும் இன்ரர்நெற்றும் இல்லாட்டி வந்து இருக்காது. அது இரண்டும் மனிசனை வேறை உலகத்திற்கே கொண்டு போயிட்டுது. இப்ப அதை விட்டுத் திரும்ப முடியாமல் மனிசன் அதுகின்ர அடிமை ஆகீட்டான்." என்றார் " TS".

"நிச்சயமா. உங்கடை தத்துவம் சரியாகத்தான் இருக்குது. இனி உலகத்தாலை அது இரண்டையும் விட்டிட்டு இருக்க ஏலாது. உலகத்தில உண்டான தொழிநுட்ப வளர்ச்சிகள் எல்லாம் அப்பிடியே இருக்குது." என்றான் சிவா.

”கூகிள் மப்பைவிட *Youtube* எண்டு ஒரு நெத் இருக்குது. அதிலை வீடியோ எல்லாம் அப்லோட் பண்ணலாம். வரும் காலத்திலை படம் எல்லாம் நாங்கள் அதிலை பார்க்கக் கூடியதா இருக்கும்.” என்றாள் சரிஸ்கா.

”ஓ நான் பார்த்தன். இப்பவே படங்கள் வந்திட்டுது. கொஞ்சம் கொஞ்சமாய் ”TS” அண்ணை சொல்லுகிற மாதிரி எங்களை உதுகள் எல்லாம் அடிமை ஆக்கப் போகுது.” என்றான் சிவா.

"சரிஸ்கா... திவ்வியாவுக்கு உதவி செய்து அவளையும் அவையோடை கொண்டு போய் கடல்ல குளிக்க விட்டு, அவைய அவதானமாய் கவனிச்சுக் கொண்டு நில்" என்றாள் புவனலோசினி.

அதைத் தொடர்ந்து "TS", புவனலோசினி, சொரூபா மாத்திரம் அங்கு இருக்க மற்றவர்கள் உடுப்பு மாற்றிக் கொண்டு குளிப்பதற்குக் கடலை நோக்கிச் சென்றார்கள். அடுப்பில் கரி எரிந்து தணல் விழுந்து இருந்தது. புவனலோசினி சிறிது நேரத்தின் பின்பு பொல்சர் வாட்டலாம் என்கின்ற எண்ணத்தோடு இருந்தாள். அதன் பின்பு கோழி, பண்டி, மீன் ஆகியவற்றை வாட்டலாம் என்று எண்ணிக் கொண்டாள். அதை அறியாத சொரூபா,

"வாட்டுவமே அக்கா?" என்றாள்.

"பொறு... பொறு... அவங்கள் கொஞ்சம் களைக்கட்டும். பொல்சர் கெதியா வெந்திடும். ஆளுக்கு இரண்டு முதல் பசிக்குக் குடுத்திட்டு மிச்சத்தைப் பிறகு வாட்டலாம்." என்றாள் புவனலோஜினி.

"ஓ அப்பிடிச் செய்வம்." என்று ஒப்புக் கொண்டாள் சொரூபா.

"TS" வியர் ஒன்றை எடுத்து அருந்தத் தொடங்கினார். சிறிது நேரத்தில் திரும்பி வந்த சிவாவும் அருளும் அவரோடு சேர்ந்து கொண்டனர். அருள் தங்களிடம் இருந்த பொல்சரையும் எடுத்து வாட்டக் கொடுத்தான். பொல்சர் வாட்டும் வேலை அத்தோடு தொடங்கியது. சரிஸ்காவும், மனோகரியும் பிள்ளைகளைக் கவனித்துக் கொண்டு அவர்களோடு குளித்தார்கள்.

அப்போது வாகனத் தரிப்பிடத்தில் இருந்து வேறு ஒரு தமிழ் குடும்பம் இரண்டு பிள்ளைகளோடு இவர்களை நோக்கி வந்தார்கள். "TS"சிற்கு அவர்கள் யார் என்று தெரியவில்லை. சிவாவுக்கு அவர்களைத் தெரியும். அவர்கள் வடக்கில் மீன் தொழிற்சாலை ஒன்றில் வேலை செய்தவர்கள். தற்போது அங்கு வேலை இல்லை என்பதால் இங்கு வந்து விட்டார்கள். இவர்களைப் போல நிறையத் தமிழர்கள் அங்கு வேலை இல்லாததால் ஒஸ்லோவிற்கும், தெற்குப் பக்கமாக உள்ள நகரங்களுக்கும் மாறி வந்து விட்டார்கள். வேலை இல்லை என்கின்ற போது வடக்கில் கடும் குளிருக்குள் இருந்து உத்தரிப்பதை யாரும் விரும்பமாட்டார்கள். அதனால் இயற்கையாகவே அவர்கள் தெற்கு நோக்கி வந்து விட்டார்கள். தெற்கில் ஒஸ்லோ போன்ற நகரங்களில் தமிழ்ப் பாடசாலைகள், தமிழ்க் கடைகள், வேற்று நாட்டுக்குப் பிரயாணம் செய்வதில் உள்ள வசதி போன்ற பல காரணங்கள் அவர்களைக் கவர்ந்து ஈர்க்கின்றன.

வந்தவர்கள் இவர்களிடம் வந்து,

"நாங்களும் உங்களோடை இருக்கலாமோ?" என்று கருப்பாய் மெல்லிய தோற்றத்தோடு, சுருண்ட கேசத்தோடு, நட்பான பார்வையுடன், நீல அரைக் காற்சட்டையும், வெள்ளை வென்னியனும் அணிந்த அந்த ஆண் தனது அழகான வெள்ளைப் பற்களைக் காட்டிச் சிரித்த வண்ணம் கேட்டான்.

"தாராளமாய் வந்து இருக்கலாம். உமக்கு வினோதன் எல்லே பெயர்? நீர் சோமாவின்ரை மச்சான். அவ சோமாவின்ரை தங்கச்சி இல்லையே?" என்று சிவா கேட்டான்.

"உங்களுக்கு எங்கடை வரலாறு எல்லாம் தெரிஞ்சு இருக்குது..."

"தெரியும். எனக்குச் சோமாவை நல்லாத் தெரியும். இவர் "TS" அண்ணை, அவர் அருள்..." என்று சிவா தனது நீண்ட அறிமுகத்தை முடித்தான். அவர்களுக்கும் பொல்சர் வழங்கப்பட்டது. அதன் பின்பு அவர்களும் பிள்ளைகளைக் குளிப்பதற்கு அனுப்பிவிட்டு இவர்களோடு இருந்து

கதைத்தார்கள். அப்போது சிவா விட்ட கதையைத் தொடர்வது போல,

"அப்ப... நோத்தில இருந்து இப்ப எல்லாரும் இங்கால வந்தாச்சுது போல இருக்குது?"

"ஓம்... அண்ணை. அங்க வேலை இல்லாமல் என்ன செய்கிறது? முதல்ல இவங்களே போய் கடல்ல இருந்து தொஸ்க்கா (ஒருவகை மீன்) அள்ளி வருவாங்கள். அப்ப நல்ல வேலை இருந்திச்சுது. ஆனா... இப்ப அந்த வரத்துக் குறைஞ்சு போச்சுது. பிறகு ரசியன் கொண்டு வந்து தந்தான். அதுவும் இப்ப நிண்டிட்டுது. இனி எவ்வளவு காலம் அங்க வேலை இல்லாமல் இருக்கிறது? அப்படி அங்க குளிருக்க இருக்கிறதிலையும் இங்கால வாறது வெற்றர் தானே? முக்கியமாப் பிள்ளைகளைப் பற்றி யோசிக்க வேண்டி இருக்குது. அவங்கள் ஏன் தேவை இல்லாமல் குளிருக்க கிடந்து கஸ்ரப் படுவான் எண்டு வெளிக்கிட்டு வந்திட்டம். நாங்கள் இருந்த இடத்தை விட்டுத் தமிழர் எல்லாம் வெளிக்கிட்டுப் போனதால அது இப்ப பேய் நகரம் போல இருக்குது. ஒரு ஊரில சனம் இல்லாட்டி அது பெரிய கொடுமை ஆகத்தான் இருக்கும் எண்டதை இரண்டாம் தரம் இங்கையும் பார்த்தாச்சுது."

"உண்மைதான். ஊரிலை எத்தினை கிராமம் இப்பிடிப் பாழாய் போய் இருக்கும்?" என்றார் "TS".

"வேலை எடுத்தாச்சே?" என்றான் சிவா.

"ஓ... மச்சான் கொண்டு போய் ஒரு கழுவல் வேலைக்கையும், ஒரு பேப்பர் போடுகிற வேலைக்கையும் செருகி விட்டு இருக்கிறார்." என்றான் வினோதன்.

பிள்ளைகள் ஒரு பாட்டம் குளித்துக் களைத்துப் பசியில் ஓடிவர அவர்களுக்கு பொல்சர் வழங்கும் பணி ஆரம்பம் ஆகியது.

சிறிது நேரத்தில் அந்த வெளி எங்கும் மனிதர்கள் வண்ணப் புழுக்கள் போல நெருக்கமாய் நெளிய, இறைச்சியை வாட்டுவதும், மதுவை அருந்துவதும், வெயில் காய்வதும், கரப்பந்து விளையாடுவதும், நீந்துவதுமாக அது பூலோக சுவர்க்கத்தின் மையம் ஆகிற்று.

"TS"சிற்கு இருப்பவன் அனுபவிப்பது போல இல்லாதவன் அனுபவிப்பது இல்லை என்பது விளங்கியது.

*

மனைவியும், மகளும் மன அழுத்தத்தை வென்று வாழ்வது "TS"சிற்கு இப்போது பெரும் நிம்மதியைத் தந்தது. ஆரம்பத்தில் புவனலோசினியைவிட சரிஸ்காவை எண்ணிப் பெரிதும் கவலைப்பட்டார். அவளுக்கு ஏற்பட்ட பாதிப்பை அவளால் மறக்க முடியாது அவள் ஒரு புறநடையான வாழ்க்கையை வாழ்ந்தாள். அதை ஏற்றுக் கொள்ளும் பக்குவம் இங்கு வாழும் அனைத்துத் தமிழர்களிடமும் இருக்கவில்லை. இருந்தும் இந்நாட்டு மக்களிடம் பொதுவாக அந்தப் பக்குவம் இருப்பது அவருக்கு நிம்மதியைத் தந்தது. இப்போது அவள் தனக்கு என்று ஒரு குடும்பத்தை உருவாக்கியது மேலும் மன ஆறுதலைத் தந்தாலும் குடும்பம் என்றால் கணவன், மனைவி, பிள்ளைகள் என்கின்ற பொதுவான விதியை விட்டு விலகிக் கணவனே இல்லாத ஒரு குடும்பம் என்பதை இங்கு வாழும் தமிழர்களும் ஜீரணித்துக் கொள்கிறார்கள் இல்லை என்பது அவரை வாட்டியது. அந்தத் தமிழர்களின் புரிந்துணர்வு இன்மை சரிஸ்காவையும் வாட்டுகிறது. அவளுக்கும் மற்றவர்களைப் போல தனது மகளுக்குப் பிறந்த நாள் செய்ய வேண்டும் என்று நிறையவே ஆசை இருந்தது. இருந்தும் அங்கு வந்து இப்போதும் திவ்வியாவின் பிறப்பு பற்றிய விமர்சனத்தையே முதன்மை ஆக்குவார்கள் என்பதால் அதை அவள் தவிர்ப்பதாக முடிவு எடுத்தாள்.

சிவாவிற்கும், அருளுக்கும் அவளைப் பற்றித் தெரியும் ஆதலால் அவர்களைக் கூப்பிட்டு வீட்டில் பிறந்த நாளை மகளுக்குச் செய்ய வேண்டும் என்று நினைத்தாள். அத்தோடு ஆரம்பப் பாடசாலைக்கும் கேக் செய்து கொடுத்து அங்கும் அவள் கொண்டாடச் சரிஸ்கா ஒழுங்கு செய்தாள்.

இன்று அருள்தான் அகலிகா உடனும், சொரூபா உடனும் முதலில் வந்தான். வீட்டிற்குள் வந்ததும் சொரூபா சமையல் அறைக்குச் சென்று விட்டாள். அது இனி அவர்கள் சபா. அருள் வந்து சோபாவில் இருந்தான். பின்பு எதையோ நினைத்தவன் போல,

"ம் சிலோனில இலக்சன் வருகுது. அதில தலைவர் இரணிலுக்குச் சப்போட் பண்ண மாட்டார் போல இருக்குது. தங்களுக்க நடக்கிற குத்துப்பாட்டிற்கு இரணில்தான் காரணம் எண்டுகிற நினைப்பில இருக்கினம். இரணில் வராட்டி மஹிந்தா வருவர். அவர் வந்தா மட்டும் பிரச்சனை தீருமே?" என்றான் அருள்.

அவன் சொல்லி முடிக்கவும் சிவா குடும்பம் வரவும் சரியாக இருந்தது. சிவா வந்து சோபாவில் இருந்தான். பிள்ளைகள் திவ்வியாவோடு விளையாடச் சென்றுவிட மனோகரி சமையல் அறைக்குச் சென்று விட்டாள்.

"ஏதோ கதைச்சுக் கொண்டு இருந்தீங்கள்... குழப்பிப் போட்டன் போல இருக்குது?" என்றான் சிவா. அருள் சிவாவிற்கு மீண்டும் தான் கூறியதைக் கூறினான். அதைக் கேட்ட சிவா,

"இரணில் லேசான ஆள் இல்லை. ஆனா... இரணிலைவிட மஹிந்தா மோசமா இருப்பார். அதுக்கு... அவர் முதல்ல வெல்ல வேணுமே? தமிழ் ஆட்கள் புலியள் சொல்லிப் பகிஸ்கரிச்சாலும் தெற்கில எப்பிடி வோட் பிரியுது எண்டுகிறதைப் பொறுத்து அது இருக்குது. அதேவேளை இரணில் தோற்கிறதுக்கும் நிறையச் சந்தர்ப்பம் இருக்குது. இரணில் பேச்சுவார்த்தை நடத்தி நாட்டையே தாரைவாத்துக் குடுக்கிறார் எண்டுதானே சிங்களப் பக்கம் பிரச்சாரம் நடக்குது. நகரப் பக்கமும், வன்னிக்கு வெளிய இருக்கிற தமிழ் ஆட்களின்ரை வோட்டும் கிடைச்சாலும் எல்லா இடமும் வோட் கிடைக்கும் எண்டு இல்லைத் தானே? அதே மாதிரி மஹிந்தாவுக்குத் தமிழ் ஆட்களின்ரை வோட்டே கிடைக்காது. இந்த முறைத் தேர்தல் பரபரப்பாக இருக்கும்." என்று முடித்தான்.

"இரணிலை வெல்ல வைக்கிறது புத்தியான அரசியல். தெரியாத பிசாசைவிடத் தேரிஞ்ச பேய் மேலானது தானே?" என்றான் அருள்.

"அவங்களும் எழுந்தமானத்திற்கு ஒண்டும் செய்ய மாட்டாங்கள். நல்லாய் யோசிச்சுத்தான் செய்வாங்கள். ராஜிவ்காந்தியோடை நிச்சயம் படிச்சு இருப்பாங்கள். இனி வரும் காலங்களில அப்பிடிச் சோடை போக மாட்டாங்கள் எண்டு நான் நினைக்கிறன்." என்றார் "TS".

"நீங்கள் நல்ல நம்பிக்கையான மனிசர் அண்ணை. ஆனா... அதைக் கொண்டு போய் புலியளில வைச்சு இருக்கிறியளே... அங்கதான் எனக்கு இடிக்குது. நீங்கள் நினைக்கிற மாதிரி அவங்கள் இல்லை. அப்பிடித் திருந்துகிறதா இருந்தா எவ்வளவு சந்தர்ப்பங்கள் கிடைச்சுது எண்டு உங்களுக்கே தெரியும். புளட்டின்ரை சுந்தரத்தில இருந்து ரஜீவ்காந்தி ஊடாகத் தொடர்ந்து கதிர்காமர் வரை கொலை செய்தா விடுதலை கிடைக்கும் எண்டு நினைக்கிற தலைமை அது. கொலை செய்யச் செய்யப் புலியளை மட்டுமில்லை எங்கடை நியாயமான உரிமைக்கான போராட்டத்தையும் உலகம் வெறுத்துக் கொண்டு வருகுது. எந்தச் சுயவிமர்சனமும் இல்லாது புலிகளுக்குத் தமிழர் தொடர்ந்தும் ஆதரவு தெரிவிக்கிறது ஒரு வகையில தங்கடை நியாயமான போராட்டத்தையே கொச்சைப் படுத்துகிற மாதிரி. இதை எல்லாம் தாண்டி எங்களுக்கு ஒரு விடிவு கிடைச்சா அது பெரிய சாதனையாகத்தான் இருக்கும். நீங்கள் நினைக்கிற மாதிரி இராணுவ வெற்றி தோல்விகள் தனிய எங்களுக்கு விடுதலையைப் பெற்றுத் தராது." என்றான் சிவா.

"ம்... கொலைதான் ஒரே முடிவு எண்டு நம்புகிறதைச் சரி எண்டு நானும் சொல்ல இல்லை. ஆனா... அவங்கடை நிலையையும் நாங்கள் யோசிக்கத்தான் வேணும். ஏதாவது ஒரு நாடு முறையா அங்கீகரிச்சு உதவி செய்தா நிறைய மாற்றம் இருக்கும். ஆனா... ஒருத்தரும் எங்களுக்கு வெளிப்படையா உதவி செய்கிறாங்கள் இல்லையே?" என்றார் "TS".

"எப்பிடி அண்ணை...? இதை அவங்கள் பயங்கரவாதிகள் எண்டு பட்டம் எடுக்க முதல் யோசிச்சு இருக்க வேணும். இலங்கை அரசிட்டை மட்டும் பயங்கரவாதிகள் எண்டு பட்டம் எடுத்து இருந்தால் பருவாய் இல்லை. அது எல்லாருக்கும் இலங்கை அரசு கொடுக்கிற பட்டம் தானே? ஆனா... உலகத்திட்டையே அந்தப் பட்டத்தை எடுத்தா அது இனி மாறுமோ? இல்லை... மாத்தத்தான் முடியுமோ? அதுவும் இந்தியாவைப் பயன்படுத்தத் தெரியாமல் பகைச்சாப்பிறகு, எங்களுக்கு இவங்கள் இருக்கும் வரைக்கும் உய்வு கிடைக்கும் எண்டுகிற நம்பிக்கை எனக்குத் துளியும் கிடையாது." என்றான் சிவா.

”அது எண்டா உண்மை சிவா. எங்கடை போராட்டத்தைப் பிழையான வழியில கொண்டு போயாச்சுது. இருட்டுக் குகையிக்க துலைஞ்ச ஊசியைத் தேடுகிற மாதிரி அது இப்ப நடக்குது. அதைப் பற்றி ஒரு ஆக்கபூர்வமான விவாதங்கள் ஒரு இடத்திலும் இல்லை. இது வரை மற்ற இயக்கங்களை அழிச்சினம். இப்ப இவையும் அழிகிறதைப் பார்த்தா எங்கடை போராட்டம் எப்பிடிப் போகும் எண்டு தெரியாது.” என்றான் அருள்.

”புலியளுக்குப் பின்னடைவு ஒண்டும் புதுசு இல்லை. இப்படிப் பல சந்தர்ப்பங்களில பின்னடைவு வந்து இருக்குது... அதை எல்லாம் உடைச்சுக் கொண்டு புத்துயிர்ப்போடை மீண்டும் அவங்கள் வந்த வரலாறுகள் நிறைய இருக்குது. உதுகும் அப்படியான ஒண்டுதான். அதைப் பற்றி நாங்கள் பெரிசாக் கவலைப்படத் தேவை இல்லை. எல்லாம் நல்லபடியா நடக்கும். இது தமிழற்ற நியாயமான போராட்டம். அது தோற்காது. நியாயம் தோற்றதா வரலாறு இல்லைத் தானே?”

”நியாயம் தோற்றதா இல்லைத்தான். தமிழற்ற போராட்டம் நியாயமானதுதான். அதை வழிநடத்துகிற முறைதான் எந்த நியாயத்திற்கும் கட்டுப்பட்டதாய் இல்லை.” என்றான் அருள்.

”அருள் அண்ணா... நீங்கள் ஒரு பக்கம் கதைப்பியள். அப்பா மற்றப் பக்கம் கதைப்பார். யாரும் உங்கடை கருத்தை விட்டு மாற மாட்டியள். அப்ப ஏன் மாய்ஞ்சு மாய்ஞ்சு உதைப் பற்றிக் கதைச்சு நேரத்தை வீண் ஆக்குகிறியள் எண்டு சொல்லுங்க பார்ப்பம்?” என்றாள் சரிஸ்கா.

”நீ சொல்லுகிறதும் நியாயம்தான் சரிஸ்கா. உதை விட்டா நாங்கள் என்னத்தைக் கதைக்க முடியும் சொல்லு பார்ப்பம்? எங்கையும், எப்பவும் எங்களை முழுமையா ஆக்கிரமிச்சு இருக்கிற ஒரே விஷயம் நாட்டுப் பிரச்சனை மட்டும்தான். அதுதான் எங்கடை வாழ்க்கையை நிரந்தரமா மாத்திச்சுது. அதுதான் எங்களை வாழ் நாள் பூராகவும் ஆக்கிரமிச்சு இருக்கப் போகுது... அது சரி... புதுசாப் போன் ஒண்டு வைச்சு இருக்கிறாய்... நல்ல வடிவா இருக்குது.”

"இதா...? இந்தா பாருங்க."

"சின்னச் சோப்புக் கட்டி மாதிரி நல்ல சோக்கா இருக்குது. வெளியாலேயே மணிக்கூடும், கமறாவும்... ம்... பொக்கேற்றுக்கை வைச்சுக் கொண்டு திரியலாம். சமுசுங்.. என்ன மொடல் இது?" என்றான் அருள்.

"ச 530. "

"நானும் இப்பிடி ஒண்டு வாங்க வேணும். லேசா கொண்டு திரியலாம்."

"இன்னும் கொஞ்சக் காலம் பொறுத்து வாங்குங்கோ அண்ணை. கிட்டடத்தட்ட கொம்பியூற்றர் மாதிரி போன் வரப் போகுது. அப்பிடி இருக்குது இப்ப முன்னேற்றம்."

"கதைச்சுக் கொண்டு இருந்தாச் சரியே? கேக் வெட்டுகிற வேலையைப் பார்ப்பமே?" என்று புவனலோசினி அவளது உரையாடலுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

# 23 பேய்கள் அரசாண்டால்

பரமேஸ்வரனின் மகள் கனகநாயகி பெரிய பிள்ளை ஆனதால் வழமை போலப் பெரிய கொண்டாட்டம் ஒன்று ஒஸ்லோவில் வந்து இறங்கியது. சரிஸ்கா இதற்குக் கட்டாயம் போக வேண்டும் என்பது பொது விதி. சரிஸ்கா இதற்குத்தான் கட்டாயம் வரமாட்டேன் என்பதைப் பரமேஸ்வரனுக்கு ஏற்கனவே கூறிவிட்டாள். வைபவத்திற்கு முன்னும், பின்னும் தேவையான உதவிகளைத் தான் செய்து தருவதாகவும், தன் நிலைமையைத் தயவு செய்து விளங்கிக் கொண்டு, தன்மீது கோபம் கொள்ள வேண்டாம் என்றும் அவள் அவரிடம் கேட்டுக் கொண்டாள். சரிஸ்காவின் சங்கடம் பற்றிப் பரமேஸ்வரனுக்கும் தெரியும். அத்தால் அவன் அவள் வைபவத்திற்கு வராது விடுவது பற்றி புரிந்துணர்வோடு ஏற்றுக் கொண்டான். அந்தச் சலுகை "TS"சிற்கோ அல்லது புவனலோசினிக்கோ கிடையாது. கிடைத்தாலும் அது அவருக்குச் சுவைக்காது.

ஆட்களின் மத்தியில் எப்போதும் இருப்பதில் மகிழ்வு கொள்பவர்கள் ஒரு வகை. அதனால் சகமனிதர்களோடு நெருங்கிப் பழகலாம். நேரத்தைக் கரைத்து நட்பை, சில வேளைப் பகையை அறுவடை செய்யலாம். இதற்குப் பதிலாகச் சிலர் தனிமையை நாடுவார்கள். தமக்குப் பிடித்த எதை ஆவது செய்வார்கள். மெய்ஞானிகள், அவர்கள் மெய்ஞானத்தைப் பொய்ப்பிக்கும் விஞ்ஞானிகள், ஓவியர்கள், சிற்பிகள், எழுத்தாளர்கள், வருத்தக்காரர்கள் என்று அந்தப் பட்டியல் நீண்டு செல்லும். சரிஸ்கா ஓவியம் வரைவதற்காகத் தனிமையை விரும்பவில்லை. அவள் தனிமைக்கு அவளுக்கான காரணங்கள் உண்டு. அது அவளது வருத்தமும் இல்லை.

"TS" மண்டபத்திற்குச் செல்லும் முன்பே பலர் அங்கு வந்து விட்டார்கள். ஒஸ்லோவின் புறநகர் பகுதியில் இருந்த ஒரு பாடசாலை மண்டபத்தில் அந்த நிகழ்வு

நடந்தது. பாடசாலைகள் பண வரவை எண்ணி மண்டபங்களை வாடகைக்குத் திறந்து விடுகிறார்கள். தமிழர்களுக்கும் நூற்றுக் கணக்கான மக்களைக் கொள்ளக்கூடிய வேறு மண்டபம் தேட முடியாது. கிடைத்தாலும் அவர்கள் பொருளாதாரத்திற்குக் கட்டுபடி ஆகாது. வைபவம் பாடசாலையின் விளையாட்டு மைதானத்தில் நடப்பதற்கு ஒழுங்கு செய்யப்பட்டு இருந்தது. விளையாட்டு மைதானம் மிகப் பெரிய மண்டபமாக இருக்கும். பரமேஸ்வரன் அதிகமானோரை எதிர்பார்த்ததால் அந்த இடமே அவனுக்குப் பொருத்தம் ஆகிற்று. விளையாட்டு மைதானத்தை வாடகைக்கு எடுப்பதில் இருந்த பல சிக்கல்களை வென்று அவன் அதை எடுத்ததால் இந்த வைபவம் இங்கே சாத்தியம் ஆகிற்று.

மேசைகள், கதிரைகள் அவற்றிற்கான ஆடைகள், மேடைகள், அலங்காரங்கள் என்று எதிலும் குறைவு இல்லாத இந்திரலோகத்துக் காட்சி மைதானத்திற்கு இறங்கியதான கோலம். வண்ண வண்ணப் பாணங்கள் மேசைகளில்… களி தரும் பாணம் இரகசியமாகச் சமையல் அறையில்... பொன் திரவங்கள் தேடும் சில ஆண் வண்டுகள்...

அருளும் சிவாவும் குடும்பமாக ஒரு நீட்டு மேசையில் அமர்ந்து இருந்தார்கள். அவர்களோடு "TS"சும் போய் அமர்ந்து கொண்டார்.

""TS" அண்ணை வாங்க... கிச்சனுக்குப் போயிட்டு வருவம்."

"வேண்டாம் சிவா."

"என்ன அண்ணை டெயிலியா இது... வாங்க..." என்ற வண்ணம் அவன் எழுந்தான். "TS"சிற்கும் கிரக்கம் ஏற்ற உள் மனதில் விருப்பமே. தயங்கியவாறு எழுந்து கொள்ள அருளும் எழுந்து கொண்டான். மூவரும் சமையல் அறையை நோக்கிச் சென்றனர். அப்படிச் சமையல் அறையை நோக்கிச் செல்லும் போதே,

"அநியாயம் செய்கிறாங்கள். சொந்த நாட்டிலையே நினைச்ச இடத்தில இருக்க முடியாமல் போயிட்டுது.

தமிழனாப் பிறந்த குற்றத்திற்காக அடிப்படை உரிமைகூட இல்லாமல் போயிட்டுது." என்றார் "TS".

"கோத்தபாயா தமிழருக்கு எதிராகச் செய்கிற ஈனச் செயல்களில் இதுவும் ஒண்டு. ஆனா... அதைத் தப்பு எண்டு சொல்லத் தமிழருக்கு எந்தத் தார்மீகப் பலமும் கிடையாது. சிங்களவரை, முஸ்லிம்களை எண்டு சக இனத்தை நாங்களும் மதிக்கிறது கிடையாது. அதுவும் யாழ்ப்பாணத்தில இருந்த முஸ்லீம்களை வெளி ஏற்றேக்க மௌனமா இருந்து தமிழர் தங்கடை தார்மீகப் பலத்தை அந்தக் கணத்தோடை குழிதோண்டிப் புதைச்சுப் போட்டினம். தமிழருக்குத் தார்மீகப் பலம் இல்லாட்டியும் ஒரு நாடும், அதனுடைய அரசும் இப்படிச் செய்கிறது அசிங்கம் எண்டது அவங்களுக்கு விளங்க இல்லை. ஒருத்தனைப் பார்த்து ஒருத்தன் பிரதி பண்ணின கொடுங்கோல் ஆட்சி இது.

பேய்கள் அரசாண்டால் பிணம் தின்னும் சாஸ்திரங்கள். ஹிட்லர் போலந்தைப் பிடிச்சுச் செய்தது போல இவை தங்கடை கட்டுப்பாட்டில இருக்கேக்க செய்திச்சினம். அவன் இண்டைக்கு எங்களுக்குத் திருப்பிச் செய்கிறான். எப்பிடி இருந்தாலும் அது அநியாயம்தான். தமிழர் ஐரோப்பியத் தெருக்களில ஆர்ப்பாட்டம் செய்கிறதும் சரிதான். மற்றவைக்கு செய்யேக்க ஐரோப்பாவில இருந்தோ, அமெரிக்காவில இருந்தோ எந்தச் சத்தமும் வரேல்லை. கண்டிச்சு அறிக்கை விடக்கூட யாருக்கும் துணிவோ, விருப்பமோ இருக்க இல்லை. இதுக்கு நீங்கள் என்ன சொல்லுறியள் "TS" அண்ணை?" என்றான் சிவா.

"நடந்த துன்பியலை ஞாபகப் படுத்திக் கொண்டு இருக்கிறதில என்ன பிரயோசனம்? இப்ப நாங்கள் சேர்ந்து குரல் கொடுக்க வேண்டிய காலம் வந்து இருக்குது. அப்பிடிச் செய்கிறது மட்டும்தான் சரியாய் இருக்கும். ,ல்லாட்டி கடந்து போகப் போகிற சந்தர்ப்பத்திற்காய் கவலைப்படுகிற எதிர்காலம் வரும்." என்றார் "TS".

"நடந்த துன்பியலை ஞாபகம் வைச்சு இருக்கவும் வேணும். அப்பதான் திரும்ப நாங்கள் அதைச் செய்ய யோசிப்பம். அதுக்குத் தானே இங்க பள்ளிக்கூடங்கள் வெள்ளை வஸ் பிடிச்சு உந்தப் பிள்ளையளை எல்லாம்

போலந்துக்குக் கூட்டிக் கொண்டு போய் காட்டுகிறவங்கள். வரலாற்றை ஞாபகம் வைச்சு இருந்தாத்தான் அது மீண்டும் எழாது எண்டு இவங்கள் நம்புகிறாங்கள். நாங்கள் நம்பாட்டி அதுக்கு எதிரான விளைவுதானே உண்டாகும்?"

சமையல் அறைக்குள் இரண்டு மேசைகள் போடப்பட்டு இருந்தன. அதில் கலப்பதற்குத் தேவையான கோலா, ஸ்பிறைற், ஆலம் கட்டிகள், சுவைப்பதற்கு மிக்சர், பொரித்த கோழிக்கால், ஈரல் புரட்டல் ஆகியவை வைத்து இருந்தார்கள். ஒரு பக்கத்தில் இருந்த மேசையில் விஸ்கி, பியர், வயின் போன்றவை இருந்தன. விஸ்கி, வயின் போன்றவற்றை ஊற்றிக் கொடுப்பதற்கு ஒரு இளைஞன் தயாராக நின்றான்.

அங்கே சென்ற மூவரும் தங்களுக்கு விஸ்கி வாங்கிக் கொண்டு மூலையில் இருந்த மேசையில் போய் இருந்தார்கள். வாங்கி வந்த விஸ்கிக்குள் "TS" ஸ்பிறைற்றை எடுத்து ஊற்றினார். அருளும் அதையே கலந்தான். சிவா கோலா கலந்து கொண்டான். பின்பு "TS" தனது விஸ்கியில் ஒரு துளி நிலத்தில் தெளித்துவிட்டு மற்றவர்களைப் பார்த்தார். அவர்களும் குவளைகளைத் தூக்க, முட்டிச் சியேஸ் என்று சொல்லிவிட்டு ஒரு இழுவை இழுத்து நிமிர்ந்தவர்கள் மதுவின் கசர்வை மாற்றப் பொரித்த பதார்த்தங்களை அவசரமாக அள்ளி வாய்க்குள் திணித்தார்கள்.

"அண்ணை... தேசியம் தலைக்கு ஏறினால் அரசுகளோ, ஆயுதம் வைச்சிருக்கிற குளுக்களோ கொலைகாரர்களா மாறி விடுவாங்கள். ஹிட்லரின்ரை உச்சத் தேசியம் நாசிசமாய் தங்களைவிட மற்றவர்கள் மனிதர்களே இல்லை என்கின்ற நினைப்பை ஏற்படுத்திச்சுது. கண்மூடித் தனமான இன, அரசியல், பதவி வெறியில கொலைத் தொழிற்சாலைகளை உருவாக்கி, அதிலை யூதரை, இடதுசாரிகளை, எதிர்ப்பாளர்களைக் கொன்று குவிச்சான். அது மட்டும் இல்லாமல் போலந்தில வீடுகளைப் பறிச்சு தங்கடை ஆட்களைக் கொண்டு போய் குடியேற்றி அநியாயத்தின் உச்சிக்குப் போனான். இது இரண்டாம் உலகமகா யுத்தத்தில மாத்திரம் நடக்கேல்லை. எங்கடை போராட்டத்திலும் இரண்டு பகுதியாலும் நடத்தப்பட்டு இருக்குது. அதை யாரும் ஒத்துக் கொள்ள

முன்வரமாட்டம். அதுதான் தமிழற்ற சாபம். அதுக்காக கோத்தபாயாவோ இந்த அரசாங்கமோ செய்கிறதை எந்த மனிதாபிமானம் உள்ள மனிதனாலும் நியாயப்படுத்த முடியாது. நான் நியாயப்படுத்தவும் இல்லை." என்றான் சிவா.

"போராட்டம் எண்டு வந்தால் தவறுகள் நடக்கத் தானே செய்யும்? யாராவது தவறுகள் வராமல் எப்பிடிப் போராடுகிறது எண்டுகிற அனுபவத்தோடையா போராடத் தொடங்கிறம்? பிரச்சனைகள் வந்த உடன திடீரெனப் போராட்டம் தொடங்குது. போராட்டத்தில ஏற்படுகிற தவறுகளில இருந்து பாடம் கற்றுத்தான் திருந்துகிறது. அதுக்கு நாங்களும் விதிவிலக்கு இல்லை. எங்களுக்கும் கொஞ்சக் காலம் எடுக்கும். அவ்வளவுதான்."

"போராட்டத்தில தவறு இருந்தால் பருவாய் இல்லை. தவற்றிலேயே போராட்டம் இருந்தால்...? இல்லை எண்டு சொல்ல முடியுமா? கொலை. கொலையால் மட்டுமே விடுதலைக் கிடைக்கும் எண்டு வலுவாக நினைக்கிற தலைமைகள்?" என்றான் சிவா மீண்டும்.

"ஊத்தை உரஞ்சுகிற மாதிரித்தான் இந்தப் பிரச்சனையைப் பற்றிக் கதைக்கிறது எண்டதும் சர்வ சத்தியம். கொலையை ஆயுதமாக வைத்து யுத்தம் செய்து ஹிட்லர் ஐரோப்பாவைக் கட்டி ஆள நினைச்சுத் தோத்துப் போனான். அதே ஐரோப்பாவை இப்ப ஜெர்மனி சமாதானமாய் பொருளாதாரத்தால கட்டி ஆளுகிறது. ஐரோப்பிய ஒன்றியத்தின் தலையாக இருக்கிறதும் அதுதான். யுத்தம் கைகொடுக்காத இடத்துக்குச் சமாதானமும், பொருளாதாரமும் கைகொடுத்து இருக்குது. என்ன நடக்குதோ...? எங்கடை நாட்டில இந்த யுத்தம் முடிஞ்சு, உரிமைகளைக் குடுக்காத வரைக்கும் ஒழுங்கான சமாதானமோ, அபிவிருத்தியோ வரப் போகிறது இல்லை." என்றான் அருள்.

மதுக் குவளைகள் வெறுமை ஆனதால் எழுந்து சென்று அதை நிரப்பிக் கொண்டு வந்து இருந்தார்கள்.

சிவா ஒரு முறை வருகின்றவர்களையும், போகின்றவர்களையும் பார்த்தான். பின்பு "TS"சையும் அருளையும் பார்த்து,

"சனத்துக்குத்தான் என்ன அவசரம்?" என்றான் சிவா.

"என்ன சொல்லுகிறா சிவா?"

"கொண்டாட்டம் எண்டா கொண்டாடுகிறவையை விடக் கொண்டாட வருகிறவை காட்டுகிற பவுசு தாங்க முடிகிறேல்லை. போகிறதுக்கு முதல் எல்லாத்தையும் காட்டிப் போட்டுப் போக வேணும் எண்டுகிற ஒருவித ஆவேசம் போல. போட்டிக்கு நகையும் புடவையும். இந்த அற்பம் எல்லாம் மனித மனதில நிரந்தர மகிழ்ச்சியைத் தருமா அண்ணை?" என்றான் சிவா.

"நிச்சயம் இல்லை. நித்திய நிரந்தரம் எண்டுகிறது எதுவும் இல்லை. ஆனா... மனிசன்தான் நிரந்தரம் எண்டு நினைச்சுக் கொண்டு இத்தினை கூத்து அடிக்கிறான். நாங்கள் எழுதக் கற்றுக் கொண்டதோடு உன்னதமாகச் சிந்திக்கத் தெரிந்த மிருகங்கள் என்பதை விட மற்றவை எல்லாம் மனித மூளையின் பிறழ்வுகள் மட்டுமே. அதன் மாயைகளில் அதுவே மயங்கும் யதார்த்தம். எங்கடை போராட்டம் என்ன, எங்கடை வாழ்க்கை என்ன, எல்லாம் இதுக்கு உள்ள அடங்கும். பெரியவன், சிறியவன், நல்லவன், கெட்டவன், இன்பம், துன்பம் எல்லாம் எங்கடை ஒப்பீட்டால உண்டாகிற விம்பம், அல்லது மூளை இப்போது தரும் கற்பிதம். மற்றவர்களை எண்ணிக் குழம்புகிறதை விட்டிட்டு இந்தக் கணத்தை, இந்தப் பொழுதை இன்பமாகக் கழிக்க வேணும்." என்றார் "TS".

"அதுதான் நாங்கள் மது உண்டு, களி கொண்டு, இந்தக் கணத்தை இன்பமாகக் கழிப்பது..." என்றான் சிவா.

"இருந்தும் அவலம் பற்றி அடிக்கடி கதைச்சு மனக் கமலத்தை வாட வைக்கிறமே? நாங்கள் எவ்வளவு இங்க இருந்து கதைச்சாலும் அங்க எதுவும் மாறப் போகிறது இல்லை. நாங்கள் எங்கடை நேரத்தை வீணடிச்சு, மனதைப் புண்படுத்திக் கொள்ளுகிறதுதான் மிச்சம்." என்றான் அருள்.

"அப்பிடி முழுசா எங்கடை விஷயத்தைச் சொல்ல முடியாது. வெளிநாட்டில இருந்து போராட்டத்திற்குப் போகிற பணத்திற்கு நிறைய வலு இருந்தாலும் புலம் பெயர்ந்த தமிழர்கள் அந்த வலுவை நல்ல முறையில

பயன்படுத்துகிறது இல்லை." என்றார் "TS". அதைக் கேட்ட சிவா "TS"சிற்குச் சாதுவாக ஏறிவிட்டது என்று எண்ணிக் கொண்டான்.

*

வானத்து இடி காதிற்குள் வெடித்ததாகக் கதவு படாரென அடித்துச் சாத்திக் கொண்டது. அதற்கு அந்த விசையைக் கொடுத்தவள் சரிஸ்காவா என்பது "TS"சிற்கு வியப்பைத் தந்தது. அவள் தனது கோபத்தை, வெறுப்பை அப்படி வழமையாகக் கதவு மேல் காட்டிக் கொள்வது இல்லை. பிள்ளைகள் பெற்றவருக்குக் கொடுக்கும் மதிப்பு, மரியாதை, போன்ற சம்பிரதாயங்கள் இங்கு எதுவும் அதிகமாக இருப்பது இல்லை. அதற்கு மாறாக சில பிள்ளைகள் பெற்றவரை மரியாதைக் குறைவாகப் பேசுவது வழமை ஆகிவிட்டது. மத்தளம் போன்று வதை படும் பிறப்புகள் எங்கள் காலத்து மனிதர்கள் என்கின்ற எண்ணம் "TS"சிற்கு உண்டானது. சரிஸ்கா ஏன் அப்படிச் செய்தாள் என்று "TS" கேட்கவில்லை. அவர் எட்டி ஒரு முறை அவள் உள்ளே வருவதைப் பார்த்துவிட்டு வந்து மீண்டும் சோபாவில் அமர்ந்து கொண்டார்.

குண்டூசி விழும் ஓசைகூட எழுப்பாது இருக்க வேண்டும் என்கின்ற அமைதியை விரதமாக்கிய அப்பா உடனான வாழ்வு அனுபவம் "TS"சிற்கு. அப்பாவுக்கு வீட்டில் பயந்து, பள்ளியில் ஆசிரியருக்குப் பயந்து, வளர்ந்த பின்பு காவலுக்கும், இராணுவத்திற்கும் பயந்து, இங்கு இன்று... இப்போது... அடித்த கதவுக்குப் பயம் கொள்ளா விட்டாலும் அதிர்ந்து... ஏதோ ஒரு ஆதங்கமும், கவலையும் அவர் மனதை விழுங்க, இந்தக் கணத்தை இன்பமாக்க, அந்த அழுகுணி எண்ணத்தை மறக்கடிக்க, அவர் தொலைக்காட்சியில் ஒன்றத் தொடங்கினார்.

அறைக்குள் சென்ற சரிஸ்கா அரை மணித்தியாலமாக வெளியே வரவில்லை. அதன் பின்பு அமைதி அடைந்து குழியல் அறைக்குள் புகுந்தாள். பின்பு அப்படியே சமையல் அறைக்குள் சென்றாள். புவனலோசினி அதற்கு முன்பே சமையல் அறைக்குச் சென்றுவிட்டாள்.

சரிஸ்கா தனது தட்டுடன் கோலுக்குள் வர அவள் பின்னே குடிப்பதற்கு நீரையும் குவளையையும் புவனலோசினி

எடுத்து வந்தாள். இருவரும் வந்து சோபாவில் அமர்ந்த பின்பு தொலைக்காட்சியின் சத்தத்தை சிறிது குறைத்துவிட்டுச் சரிஸ்காவைப் பார்த்து,

”கதவை ஏன் உந்த அடி அடிச்சனி?” என்றார் "TS". அந்தத் தொனியில் இளை ஓடிய எரிச்சல் சரிஸ்காவிற்கு விளங்கியது.

”ச்.. என்னுடைய கோபத்தைக் காட்ட உந்தக் கதவுதான் வசமாய் கிடைச்சுது. சொறி அப்பா... உங்களை டிஸ்ரொப் பண்ண வேணும் எண்டு இல்லை.”

”அப்படி என்ன கோபம்? ஆரில அந்தக் கோபம்?”

”சனத்தில... சனத்தின்ர கதையில...”

”ம்.. சனத்தின்ர கதைக்குக் காது குடுத்தா நிம்மதியா வாழ முடியுமா? சனம் கதைக்கிறதை ஒரு காதால கேட்டு மற்றக் காதால அவசரமா வெளிய விட்டிடோணும்.”

”அது சொல்லுகிற மாதிரி லேசில்லை அப்பா. மனம் கொதிக்கும். பைத்தியம் பிடிக்கும்.”

”ம்.. இள இரத்தம் இருக்கேக்க அப்பிடித்தான் இருக்கும். போகப் போக அனுபவமும், அறிவும் அமைதி தரும்.”

”என்ன அறிவு கிடைச்சாலும் அநியாயம் அநியாயம் தானே? அநியாயத்தை நியாயமாக் கதைக்கிற, நம்புகிற சனத்தைக் கண்டா கோவம் பொங்குது அப்பா.”

”ஒவ்வொரு மனிசருக்கும் ஒவ்வொரு கருத்து இருக்கும். அது அவை அவையின்ரை சுதந்திரம் சரிஸ்கா. மற்றவையின்ரை சுதந்திரத்தைப் பார்த்து நாங்கள் ஆத்திரப்பட முடியாது. அதே வேளை அநியாயத்தைப் பார்த்து அமைதி கொள்ளவும் முடியாது. சில வேளைகளில மனச் சாட்சி உடன வாழ்கிறதே பெரும் போராட்டம் ஆகத்தான் இருக்கும்.”

”ம். நீங்கள் சொல்லுகிறது சரி அப்பா.”

”அது சரி உனக்கு என்னத்திற்குக் கோபம் வந்தது?”

”என்னோடை வேலை செய்கிறவைக்கு வயது போச்சுதே தவிர அறிவோ, தயவோ கூடின மாதிரித் தெரிய இல்லை. மதத்தை நம்பலாம். அதுக்காக எல்லாத்தையும் பாவமா இந்தக் காலத்திற்கு ஒப்பாததையும் தூக்கிப் பிடிக்கிறதா?

அப்படித்தான் என்னோடை வேலை செய்கிற ஆட்கள் சிலதுகள். அதுவும் ஏன் இவ்வளவு மூர்க்கமா எதிர்க்கினமோ தெரிய இல்லை. அப்பிடி அவை கதைக்கேக்க சினம் சினமா வருகுது அப்பா.”

”என்னத்தைப் பற்றி உந்தக் கதை சரிஸ்கா?”

”தனி மனிசற்றை வாழ்க்கையைப் பற்றினது. காலத்துக்கு ஏற்ப குடும்ப முறை மாறீட்டுது. இப்ப... ஒரு அம்மாவும் ஒரு அப்பாவும் இருக்க வேணும் எண்டுகிற கட்டாயம் இல்லை. தனிய அப்பாக்களும் தனிய அம்மாக்களும் பிள்ளைகளோடை இருக்கினம். அதே மாதிரி இரண்டு அம்மாவுக்கோ இல்லாட்டி இரண்டு அப்பாவுக்கோ பிள்ளையள் இருக்கிறது தப்பு எண்டு நான் நினைக்க இல்லை. தங்கடை மதக் கொள்கைக்காக மற்றைய மனிசற்றை உரிமையை, சுதந்திரத்தைப் பறிக்க நினைக்கிறதைப் பார்த்தா பத்திக் கொண்டு வருகுது. குழந்தைகளை நல்ல முறையில வளர்க்கிறது அவரவற்றை கெட்டித்தனம். அதை விட்டிட்டு அம்மாவும் அப்பாவும் இருந்தால்தான் பிள்ளை வளர்க்கலாம் எண்டுகிறது இந்தக் காலத்தோடை ஒப்பிடேக்க எவ்வளவு முட்டாள் தனமான கருத்து?”

”நீ சொல்லுகிறது ஒரு வகையில சரி எண்டாலும் முற்றிலும் சரி எண்டு சொல்ல முடியாது. பழமையான மதக் கொள்கைகளை வைச்சுக் கொண்டு இந்தக் காலத்து குடும்ப அமைப்புக்குக் கோடு வரைகிறது சரியாய் வராது எண்டுகிறதை நான் ஒப்புக் கொள்ளுகிறன். அதே மாதிரி இரண்டு மனுசர் எப்பிடிச் சேர்ந்து வாழ வேணும் எண்டதும் அவை அவையின்ரை சுதந்திரம். ஆனா... அதுக்கு உள்ள மூன்றாவது மனிசர் வந்தால் அவையின்ரை நலத்தைத்தான் முதன்மைப் படுத்த வேணும். ஏன் எண்டா இரண்டு தாயிட்டையோ அல்லது இரண்டு தகப்பனிட்டையோ பிள்ளையள் வளர்கிறது இயற்கை இல்லை. அந்தப் பிள்ளைகளுக்கு உண்மையான அப்பா, அல்லது அம்மாவை உணர்கிற பாக்கியம் இல்லாமல் போயிடும். உண்மையில அந்தப் பிள்ளைகளுக்கு எந்தத் தெரிவும் இல்லை. ஆனா... பிள்ளைகளின்ரை நன்மையை முதன்மையா நினைச்சா இந்த ஒரு பால் பெற்றோருக்குத் தெரிவு உண்டு.

பிள்ளைகள் என்ன விளையாட்டுப் பொம்மைகளா? இறைவன் இரு பொம்மைகள் செய்தான் தான் விளையாட அவை இரண்டும் சேர்ந்தொரு பொம்மையைச் செய்தன தாம் விளையாட எண்டுகிற மாதிரிக் குழந்தைகளின்ரை உணர்வையோ, அனுபவத்தையோ, அன்பையோ பெரியவர்களின்ரை ஏக்கத்துக்காக துஸ்பிரயோகம் செய்யக் கூடாது. தாங்களாகப் பெத்துக் கொள்ளுகிறது அவையின்ரை உரிமை. ஆனா... தத்து எடுக்கிறது சமுதாயத்திற்கு நன்மை எண்டு நான் சொல்ல மாட்டன். அது வேறை பிரச்சனைகளுக்கும் ஏதுவாய் இருக்கலாம்."

"என்னப்பா நீங்களும் இப்பிடிக் கதைக்கிறியள்?"

"நான் இப்ப சொன்னது தனி மனிசற்றை நன்மையை விடச் சமுதாய நன்மையை முதன்மைப் படுத்திச் சொன்ன கருத்து. நீ ஆறுதலாய் இருந்து சிந்திச்சுப் பார். அப்ப விளங்கும். எனக்கு யார் எப்பிடி வாழுகினம் எண்டதில எந்த அதிர்ச்சியும் கிடையாது. ஆனா... ஒரு குழந்தையின்ரை மனசில எப்பிடியான விம்பம் உருவாகும் அது என்ன விதமாக மாறும் எண்டுகிற கவலை இருக்குது. தாங்களாப் பெத்துக் கொள்ளுகிறதை தடுக்க ஏலாது. மற்றதை ஏலும் எண்டாத் தவிர்க்கிறது நல்லது தானே?"

"அப்பா நீங்கள் விளங்காமல் கதைக்கிறியள். நீங்கள் சொல்லுகிறதுக்கு எந்த ஆதாரமோ ஆராய்ச்சியோ பக்க பலமாய் இல்லை. நீங்கள் சொல்லுகிற மாதிரிச் செய்தா அவங்களின்ரை உரிமையைப் பறிக்கிற மாதிரி இருக்கும்."

"நீ நம்புகிறதுக்கும் எந்த ஆராய்ச்சிகளும், ஆதாரங்களும் பக்கபலமா இல்லை சரிஸ்கா. உன்னுடைய அன்பும் தாய்மையும்தான் அதுக்குக் காரணம். இது ஒரு பரிசோதனை. இதில எத்தினை பிள்ளைகள் பாதிக்கப்படுமோ யாருக்குத் தெரியும்? என்னப் பொறுத்தவரை சில வேளைகளில தனி மனிதர்கள் சமுதாயத்திற்காகத் தியாகம் செய்யத்தான் வேணும். அதுவும் குழந்தைகளின் வாழ்க்கைக்கு முன்னுரிமை கொடுக்கத்தான் வேணும். சில வேளை நான் சொல்லுகிறது பத்தாம்பசலித் தனமாய் இருக்கலாம். ஆனால் அர்த்தம் இல்லாமல் இல்லை. குழந்தைகளின்ரை மனநிலை எப்படி இதால பாதிக்கப்படும் எண்டுகிறது

தெரியாமல் நாங்கள் அவர்களைப் பரிசோதனைக்கு உரிய எலிகளாக்கக் கூடாது. மற்றவைக்குத் தப்பாத் தெரிஞ்சாலும் எனக்கு நான் சொல்லுகிற இந்தக் கருத்து சரியாகவே இருக்குது.”

”இதெல்லாம் அர்த்தமில்லாத கவலையப்பா.”

”இது எல்லாம் அர்த்தமில்லாத கவலை இல்லை. அர்த்தம் இல்லாத கதை. இரண்டு பேருக்கும் வேறை கதை ஒண்டும் இல்லையே?" என்று புவனலோசினி அந்தக் கதைக்கு வழமை போல முற்றுப்புள்ளி வைத்தாள்.

# 24 நான் என்பதால் அழிந்த நாம்

ஈழத்தில் போராட்டம் ஆக்கத்தை விட்டு அனர்த்தத்தின் வாலைப் பிடித்ததான உணர்வு "TS"சைச் சில காலமாகவே வாட்டுகிறது. அந்த வாட்டலில் போராட்டம் என்பதில் இருந்த உற்சாகம் சோரம் போகக் கவலையும், அச்சமும் அவரை வாட்டத் தொடங்கியது. இந்தப் போராட்டம் எப்படிப் போகப் போகிறது என்பது தெளிவாகத் தெரியாது விட்டாலும், தர்மம் எம்மிடம் பலமாக இருந்தாலும், உலகத்தையே பகைத்துக் கொண்டு, வன்முறையால் மட்டும் எமது தர்மத்தையும், உரிமையையும் வெல்ல முடியுமா என்கின்ற ஐயம் அவரிடம் வரவர வலுத்தது.

பல நான்களின் போராட்டத்தின் உச்சமாக எழுந்த ஒரு நானால் நாம் என்பது காற்றில் கரைந்த கற்பூரமான தமிழினமாக, அதைப் பொருட் படுத்தாத நான் ஆணவத்தின் பாதையில் கண்மூடிச் செல்ல, அதை ஒத்துக் கொள்ள முடியாது கலாநிதிகளும், மூன்றாம் கண்ணை இழந்த ஈழத்தமிழரும், அறிவுக்கு முக்காடு போட்டுக் கொண்டு, அதை ஆமோதித்து இருந்ததின் விளைவு, திரும்ப முடியாத இருட்டுக் குகைக்குள் மந்தைக் கூட்டத்தை அனுப்பி, பசுத் தோல் போர்த்த அரிகள் வஞ்சகமாய் அவற்றை வேட்டையாடுதல் போல எமது போராட்டத்தை வீழ்த்துவதற்கு அதுவே ஏதுவாகுமோ என்கின்ற கவலை அவரை முன்பை விட இப்போது அதிகம் அரித்தது. அது தினமும் அவர் நம்பிக்கையை கறையானாகத் தின்றது. அது அவரை நித்தமும் தோற்று விடுவோமோ என்கின்ற பயத் தீயில் நிற்க வைத்தது. பலகாலத் தவம் பலனற்றுப் போகப் போகிறதோ என்கின்ற ஏக்கம் அவரிடம் தொடர்ந்தது.

அந்த அரிப்பு அவரின் மன உளைவாக, இந்தக் கூட்டத்தில் இருந்து விலகி இருக்க வேண்டும் என்கின்ற எண்ணம் அவரை அழுங்காகப் பிடித்துக் கொண்டது. அந்த அழுங்குப் பிடியால் அவர் தனது மூட

விசுவாசத்தைத் துறந்து ஒரு அமைதி நிலையை நாடித் தவம் செய்வதாக ஆரவாரத்தை அறவே வெறுத்தார். அந்த ஒதுக்கத்திற்கு என்ன அர்த்தம் கற்பிக்கப்படும் என்கின்ற ஒருவித மெல்லிய நடுக்கம் இருந்தாலும் இந்த ஆரவாரங்களால் இனி எதுவும் விளையப் போவது இல்லை என்பது அவருக்கு நன்கு உறைத்தது. ஒற்றை வழிப் பாதைக்குள் வழி தெரியாது ஒதுங்கிக் கொண்ட மந்தைக் கூட்டத்தை வஞ்சக அரிகள் சுற்றி வளைத்து வேட்டை ஆடிய போது வஞ்சக அரிமாக்கள் மீது உண்டான கோபத்தைவிட முரட்டுத் தனமான, மூளைத் திறன் அற்ற மந்தைக் கூட்டத்தின் மீதே அதிக கோபம் வந்தது.

மனதைத் திறந்து வைத்து அதற்குள் வீசப்படும் தன் பக்கக் கற்களின் அடியால் துடிப்பதிலும், அதைச் சுயநலமாக மூடிக் கொள்வதால் அந்தத் துன்பத்தில் இருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று "TS" எண்ணினார். அந்தத் துன்பத்தை அனுபவிப்பது நடந்து செல்லும் பாதையைச் சற்றும் மாற்றப் போவதில்லை என்பதோடு, மனதை மீண்டும் மீண்டும் தேவை இல்லாது காயப்படுத்தும் செய்கையாக "TS"சிற்குத் தோன்றியது.

பிறந்த நாட்டிலேயே வாழ்ந்து மடிவது மனிதனுக்குக் கிடைக்கும் ஒரு கொடை. அந்தக் கொடை இவ்வுலகில் கூடு பற்றிய எல்லா ஆத்மாக்களுக்கும் கிடைத்து விடுவது இல்லை. தனக்கும் அது இல்லை என்பது அவருக்கு விளங்கியது. இருக்கும் வரை சரிஸ்காவும், திவ்வியாவும், புவனலோசினியும் மட்டுமே தனது உலக சுகம் என்பதும் தெளிவாகிற்று.

# 25 அகத்தைத் தின்ற அதிர்ச்சி

அன்று திடீரென சரிஸ்காவின் வேலை நண்பர்களில் ஒருவரான வீடார் அலைபேசியில் தொடர்பு கொண்டு தனக்காக ஒஸ்லோ சிற்றியில் இருக்கும் பல் மருத்துவமனையில் பிற்பகல் ஐந்து மணியில் இருந்து பத்து மணிவரை வேலை செய்யுமாறு கேட்டார். சரிஸ்கா இரவு என்றவுடன் தற்போதைய ஒஸ்லோ நிலமையை எண்ணிப் பார்த்து வேண்டாம் என்று மறுத்தாள். மகளை வேறு தனியே விட்டுச் செல்ல வேண்டும். ஏற்கனவே கூறி இருந்தால் அம்மா வீட்டில் நின்று இருப்பார். அந்த வேலையையும் அப்பா செய்துவிட்டு வருவார். இன்று அதற்கு வசதி இல்லை என்றாலும் அவர் விடவில்லை. கெஞ்சுவது போல் மீண்டும் மீண்டும் கேட்க இரக்கம் கொண்டவளாய் சம்மதித்து விட்டாள்.

ஆபிரிக்காவில் இருந்து வந்த அனல் காற்று ஒஸ்லோவை முற்றுகையிட்ட நாள் ஒன்று. இலங்கை போல் உடையணிந்து சரிஸ்காவும் இன்று புறப்பட்டாள். "Tram" பிடித்துக் குன்னாரியூஸ்சில் இறங்கி அங்கே சென்றாள். அங்கே சென்றது தொடக்கம் அவளுக்கு இருப்பதற்கு நிற்பதற்கு நேரம் இல்லாத வேலையாக இருந்தது. அதுவும் அதிகமான வெளிநாட்டுப் பிள்ளைகள் கன்னத்திற்குக் கையைக் கொடுத்த வண்ணம் வலியில் இருக்க முடியாது துள்ளித் துள்ளி அலைந்தனர். பெரியவர்களிலும் வெளிநாட்டுப் பெரியவர்களையே அதிகம் காண முடிந்தது. அது எங்கள் பல்லைப் பராமரிக்கும் முறையில் இருக்கும் பிழை என்பது சரிஸ்காவிற்குத் தெரியும். ஆசியாவில் இருந்து வருபவர்கள் பற்களைத் தீட்டிய பின்பே சாப்பிடுவார்கள். சாப்பிட்ட பின்பு பற்கள் தீட்டுவது இல்லை. பற்களுக்கு

இடையில் இருக்கும் அழுக்குகள் பற்றிய அறிவு முழுமையாக இருப்பது இல்லை. ஐரோப்பியர்கள் இந்த விசயத்தில் மிகவும் கெட்டிக்காரர்கள். இருந்தாலும் அதிகமான இனிப்பு, குளிர்பானங்கள் மற்றும் புகை பிடித்தல் போன்றவற்றால் பல்லைப் கெடுத்துக் கொள்வார்கள்.

இடையில் ஒரு தமிழ் வயது முதிர்ந்தவர் வந்தார்.

"நீங்கள் எத்தினை முறை பல்லுத் தீட்டுவீர்கள்? " என்று சரிஸ்கா கேட்டாள்.

"எத்தினை முறை தீட்ட வேணும்? நான் ஒரு முறைதான் தீட்டுவன்." என்றார் அவர்.

"எப்போது? சாப்பாட்டிற்கு முன்பா அல்லது சாப்பாட்டிற்குப் பின்பா? " என்று சரிஸ்கா கேட்டாள்.

"இது என்ன பிள்ளை குளிசை சாப்பிடுகிற மாதிரிப் புதினமாய் கேட்கிறாய்? " என்று கேட்டு அவர் அதை எண்ணி நகைத்தார்.

"பதில் சொல்லுங்க..." என்றாள் சரிஸ்கா மீண்டும் அதைப் பொருட்படுத்தாது.

"வழமையா நாங்கள் ஒரு முறை காலமையில பல்லுத் தீட்டுவம். அது உங்களுக்குத் தெரியும் தானே... பிறகு என்ன கேள்வி இது?" என்றார் அவர்.

"அதுதான் பிழை அங்கிள். பல்லு எப்பவும் சாப்பிட்ட பிறகுதான் தீட்ட வேணும். முக்கியமா இரவு சாப்பிட்ட பிறகு தீட்ட வேணும். அதோடை பல்லு இடுக்குகளுக்க இருக்கிற அழுக்குகளையும் பல்லுக் குச்சியால அல்லது நூலால அகற்ற வேணும். நான் சொல்லுகிற மாதிரிச் செய்தாப் பொதுவாப் பல்லில பிரச்சனை வராது."

"ம்... அது எப்பிடிப் பிள்ளை காலமையில வாய் கழுவாமல் சாப்பிடுகிறது?" என்றார் அவர்.

"வாய முதல்ல கொப்பிழிச்சுப் போட்டு சாப்பிடுங்க. சாப்பிட்ட பிறகு பல்லை நல்ல வடிவாத் தீட்டுங்க." என்றாள் சரிஸ்கா.

"நீர் டொக்ரர்... அப்ப நீ சொன்னால் சரியாகத்தான் இருக்கும்."

"பல் இடுக்குக்க இருக்கிற அழுக்கையும் மறந்து போகாதீங்க." என்றாள் சரிஸ்கா.

"சரி பிள்ளை... நீ இருந்ததால தமிழில கதைக்கக் கூடியதா இருந்திச்சுது. நான் பல்லை இனிக் கவனமாய் பார்த்துக் கொள்ளுகிறன்." என்று சிரித்த வண்ணம் கூறிவிட்டு அவர் சென்றார்.

வேலையின் ஆக்கிரமிப்பில் நேரம் அனல் பட்ட பனித் துளிகளாய் மாயமாய் மறைந்து போய்விடச் சரிஸ்கா வீட்டிற்குச் செல்லும் நேரம் வந்தது. எவ்வளவு அவதியோடு வேலைக்கு வருகின்றோமோ அவ்வளவு அவதியோடு வீட்டிற்கும் செல்வது மனித இயல்பு. அதற்கு சரிஸ்காவும் விதி விலக்கல்ல. அவள் புறப்பட்டுச் சுரங்கரதம் எடுத்தாள். சுரங்கரதம் தொய்யனில் நின்று விட்டது. ஏதோ மின்சாரப் பழுதினால் அதற்கு மேல் அது ஓடாது என்றார்கள். இனி நடப்பதைத் தவிர சிறந்த வழி எதுவும் இல்லை என்று எண்ணிச் சரிஸ்கா நடக்கத் தொடங்கினாள். சுரங்கரத நிலையத்தை விட்டு வெளியே வந்த போது நான்கு இளைஞர்கள் மது போதையில் தள்ளாடித் தள்ளாடி ஆளையாள் இடித்துக் கொண்டு சென்றார்கள். இவர்களும் அடிபடுவார்கள்... பல்லை உடைத்துக் கொண்டு வந்து நிற்பார்கள். ஆனாலும் ஆயுதம் இலகுவில் தூக்குவது இல்லை. ஆயுதம் எடுத்தால் கொலை செய்யாமல் விடுவதும் இல்லை என்று சொல்ல வேண்டும். அது எங்களோடு ஒப்பிடுகையில் மிகவும் குறைவு. ஈழத்தில் இரத்த ஆற்றில் நீந்தினோம் என்றால் வந்த இடங்களிலாவது அமைதியாக இருக்கலாம். சில நாட்களுக்கு முன்பு குரன்லாண்டில் தமிழர்கள் வெட்டுப்பட்டார்கள். அதை எண்ணச் சரிஸ்காவிற்குத் திடீரெனப் பயமாக இருந்தது. மிருகங்களை விடக் கேவலமாக நடந்து கொண்டார்கள். வெட்டுப்பட்டவன் உயிருக்காக உல்லவோல் மருத்துவமனையில் போராடுகிறான். வெட்டிய கூட்டம் ஒளித்து விட்டது. கிட்டத்தட்ட பத்து நபர்கள் பங்கு பற்றினார்கள் என்று காவல் சொல்கிறது. கடன் அட்டைப் பிரச்சனையாக இருக்க வேண்டுமாம். இந்தக் காசு யாருக்காக என்பதும் எல்லோருக்கும் தெரியும். பிரான்சில் இருந்து குண்டர்கள் வந்தே இதைச் செய்து இருப்பதாக ஊகம். நடுத் தெருவில் வெட்டியும் சுட்டும் இரத்த வெள்ளத்தில் இங்கும் மனிதரை மிதக்க விட்டது தமிழர்கள் என்றால் அவர்கள்

திருந்தாத வன்முறையாளர்கள் என்பதை இங்கும் நிரூபிப்பது போலவே அது முடிந்து விட்டது. சுதேசிகள் கதைக்கும் போது தமிழர்கள் வெட்டுப்பட்டார்கள் என்றே கதைப்பார்கள். அதில் தமிழர்கள் இப்படியானவர்களா என்று கேட்பது போல இருக்கும்.

நான் ஏன் இதைப் பற்றிச் சிந்திக்கிறேன் என்கின்ற எண்ணம் சரிஸ்காவிற்கு வந்தது. அதை எண்ண ஏனோ பயமாக இருந்தது. என்றாலும் தன்னால் அல்லது தனது குடும்பத்தால் இதற்கு எதிராக என்ன செய்ய முடியும் என்பதும் அவளுக்கு விளங்கவில்லை. அப்பாவும் அம்மாவும் வேலை, வாழ்க்கை, அமைதி என்பதையே விரும்புவார்கள். அவர்கள் வரலாற்றில் கத்தி எடுத்துச் சொந்த விருப்பு வெறுப்பிற்காய் யுத்தம் புரிவது ஒரு அத்தியாயம் இல்லை. பலருக்கு அதுவே வாழ்க்கை ஆவதுடன் அது தங்களுக்குக் கௌரவம் தருவதாயும் எண்ணிக் கொள்கிறார்கள்.

இன்று நல்ல வெக்கையாக இருந்ததால் பலரும் மாலையில் இருந்தே மது அருந்தத் தொடங்கி இருப்பார்கள் போன்று இருந்தது. வெறியோடு பல மனிதர்கள் கடந்து சென்றார்கள். அவர்கள் எதுவும் செய்யமாட்டார்கள் என்றாலும் அவர்களைப் பார்ப்பதற்குச் சரிஸ்காவிற்குப் பயமாக இருந்தது. என்றாலும் அவள் அதைக் காட்டிக் கொள்ளாது நடந்து சென்றாள்.

நோர்வேயில் மின்சாரத்திற்குப் பொதுவாகத் தட்டுப்பாடு கிடையாது. பற்றாக்குறை ஏற்பட்டால் இறக்குமதி செய்யும் வசதி உண்டு. அதனால் தெரு விளக்குகளும் தாராளமே. என்றாலும் சூரியனைப் போல அதனால் அனைத்து இருட்டுப் பொந்துகளையும் அடித்து விரட்டிவிட முடியாது. அப்படியாக அவை தோற்ற இடங்களுக்கு அருகே செல்வதே வயிற்றைப் பிரட்டும் அசௌகரியத்தைச் சரிஸ்காவிற்கு உண்டு பண்ணும். அதனால் அவள் வெளிச்சம் பார்த்தே நடந்து செல்வது வழக்கம். இன்று தன்னால் இயலுமானவரை அப்படியே சென்றாள்.
ஒருவாறு சந்தியைத் தாண்டி விட்டாள். இப்போது மேலும் இருட்டி விட்டது. கதகதப்புக் குறைந்து குளிர் காற்றை

வருடத் தொடங்கி இருந்தது. இன்னும் சிறிது நேரத்தில் குளிர் கட்டெறும்பு கடிப்பது போலக் கடிக்கத் தொடங்கிவிடும் என்பதை உணர்ந்தவளாக எட்டி நடக்கத் தொடங்கினாள்.
தாமோதரன் வீடு கழிந்து சோபியன்வர்க் பூங்காவினுள் பிரவேசித்து வீட்டை நோக்கி வரும் போது கண்ணுக்கு எட்டும் கடைசி எல்லைத் தூரத்தில் ஒரு பெண் மது வெறியில் தளும்பித் தளும்பி நடப்பதைப் பார்த்தாள். அவள் இன்று நிறையவே மது அருந்தி இருப்பாள் என்பது சரிஸ்காவிற்கு விளங்கியது. அது ஆணுக்கும் பெண்ணுக்குமான சுதந்திரம். ஆனாலும் ஆண்கள் பல வேளைப் பெண்களின் சுதந்திரத்தை தமது உடற் பலத்தைக் கொண்டு பறிக்க முயல்வதாக சரிஸ்கா எண்ணுவது உண்டு. அதற்குப் பின் தனது வாழ்வில் அப்படி யாரும் வராது பார்த்துக் கொண்டாள். இருந்தும் சில வேளைகளில் வேலை இடங்களில் உடல் பலத்தைக் காட்ட முடியாவிட்டாலும் உடல் பலம் இருப்பதாகப் பந்தா காட்ட அவர்கள் எண்ணும் போது அவளுக்குப் படு கேந்தி உருவாகும்.
ஆடி ஆடிப் போன பெண் சிறிய சிவப்புக் காற்சட்டையும் மெல்லிய வெள்ளை மேற்சட்டையும் அணிந்து இருந்தாள். அதனால் அவள் அசைவுகள் தூரத்திலும் துல்லியமாகத் தெரிந்தன. நோர்வேயில் பெண்கள் பொதுவாக இரவில் தனியே போய் வரலாம். ஆண்கள் காட்டு மிருகங்கள் போல் இச்சை கொண்டு பாயாத நாடு. சில வேளை அதுவும் நடப்பதாய் சரிஸ்கா கேள்விப்பட்டு இருக்கிறாள். தற்போது அப்படி ஒஸ்லோவில் நடப்பதாகவும் அவள் அறிந்து இருந்தாள். அது மனதில் ஒரு அச்சத்தை உண்டு பண்ணி இருந்தது. இருந்தாலும் அப்படித் தமக்கு நடக்காது என்கின்ற ஒரு குருட்டு நம்பிக்கை எல்லா மனிதர்களுக்கும் இருப்பது போலச் சரிஸ்காவிற்கும் இருந்தது.
சரிஸ்காவுக்கும் அந்த ஆடி ஆடிப் போன பெண்ணிற்குமான இடைவெளி குறைந்ததான எண்ணம் அவளுக்குத் தோன்றியது. அவளின் நடையில் இருந்த தள்ளாட்டம் அவள் வேகத்தைக் குறைத்தது. அதனால் அவளை முன்பைவிட நெருங்கியதாய் சரிஸ்கா உணர்ந்தாள். வாகனங்களின் போக்குவரத்து அடங்கிப்

போனதில் வெறிகாரர்களின் சத்தத்தைத் தவிர்த்து ஒரு வித மயான அமைதி எங்கும். மயான அமைதிகள் சரிஸ்காவின் மனதிற்கு ஒரு போதும் அமைதி தந்து விடுவதில்லை. ஊரிலும் மயான அமைதி ஏற்படுவது உண்டு. அப்போது பட்சிகளின் ஒலியைவிட வேறு ஒன்றும் கேட்காது. பட்சிகளும் சில வேளைப் பயந்து பறந்து போகும் ஒலியே கேட்கும். அப்படிக் கேட்டால் அபாயம் என்பது தெரியும். அது விளங்க முதல் பேய்களாக இராணுவம் வேகமாக வந்து இறங்கும். மூச்சு எடுப்பதற்கு முதல் எல்லாம் முடிந்து போய்விடும். சில வேளை உயிர். சில வேளை மானம். சில வேளை அச்சத்தின் அவதி. ஏதோ ஒன்று. நாம் வேண்டாததை அவர்கள் வேண்டும் என்று தந்து விட்டுச் செல்வார்கள். அதில் இராணுவம் என்கின்ற ஆண்களின் கருணையற்ற சுவடுகள் ஆழமாகப் பதிந்து இருக்கும்.

ஏன் நான் இன்று இப்படி எல்லாம் யோசிக்கிறேன்? எனக்கு என்ன நேர்ந்தது? ஊரைப் பற்றி ஏன் எனக்கு இப்போது யோசனை வந்தது? என்கின்ற கேள்வியில் சரிஸ்காவிற்கு மூச்சு முட்டுவது போல் இருந்தது. அழுகை வந்துவிடும் எனத் தோன்றியது. அவள் குளிர் காற்றை நன்கு உள்ளே இழுத்துக் கொண்டு தொடர்ந்து நடந்தாள்.

பூனை ஒரு பட்சியைப் பாய்ந்து பிடிக்கும் போது எவ்வளவு விரைவாகப் பிடிக்குமோ அவ்வளவு விரைவாக அது நடந்து விட்டது. சரிஸ்கா முதலில் திகைத்துப் போய்விட்டாள். அடுத்த கணமே அவள் வாய்விட்டு உதவி கேட்டுக் கத்தினாள். கத்தும் போது அவளுக்கு முதலில் சத்தம் வரவில்லை. உடல் வியர்த்து நடுங்கியது. தலை சுற்றுவது போல இருந்தது. இருந்தும் அவள் நம்பிக்கை இழக்காது வில்லங்கத்திற்குக் குரல் எடுத்துக் கத்தினாள். இறுதியாக அது வந்தது. கத்திய சரிஸ்காவுக்கு அங்கே போக முதலில் பயமாக இருந்தது. பயந்து கொண்டு நின்றால் எப்படி அவளைப் பாதுகாப்பது என்பது அவளுக்கு விளங்கவில்லை. அவள் ஒரு முடிவு செய்தாள். உரத்துக் கத்திய வண்ணம் அருகே ஓடினாள்.

சரிஸ்கா கத்திக் கொண்டு ஓடி வருவதை அவன் கண்டுவிட்டான். அவளை விட்டுவிட்டு வேகமாக அவன் ஓடினான். அந்தப் பெண் தரையில் மல்லாந்து கிடந்தாள். சரிஸ்கா அலைபேசியை எடுத்துக் காவலோடு தொடர்பு கொண்ட வண்ணம் அவள் அருகே ஓடினாள். சரிஸ்காவின் குரல் அதிக தூரம் கேட்டிருக்க வேண்டும். அவள் பின்னால் பலர் ஓடி வந்தார்கள். அதில் ஒரு ஆண் மல்லாந்து கிடந்தவள் மீது தனது மேலங்கியைக் கழற்றிப் போர்த்தி விட்டான்.
சரிஸ்காவிற்கு உடல் நடுங்கிய வண்ணம் இருந்தது. ஏதோ நினைவுகள் வந்து போயின. என்ன நடந்தது என்று கூடியவர்கள் கேட்டார்கள். தான் கண்டதையும் அதற்குத்தான் என்ன செய்தேன் என்பதையும் அவள் எடுத்துக் கூறினாள். அவர்களும் அனுதாபத்தோடும் ஆர்வத்தோடும் அதைக் கேட்டார்கள்.
காவல் விரைவாக வந்தது. சரிஸ்காவிடம் விபரம் கேட்டு எழுதி எடுத்துக் கொண்டனர். பின்பு அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு புறப்பட்டனர். அதை அடுத்து எல்லோரும் கலைந்து சென்றார்கள். சரிஸ்காவும் அவசரமாக வீட்டை நோக்கி நடந்தாள். உடல் உதறிக் கொண்டு இருந்தது.

*

சரிஸ்கா கத்தி ஆட்களை வரவழைத்து நிலமையைச் சமாளித்தாலும் பூனையின் பாயலில் பாய்ந்த அவன் செயல் அவளைத் தொடர்ந்து அதிர வைத்தது. அதில் இருந்து அவளால் சுலபமாக விடுபட முடியவில்லை. அன்று இரவு சாப்பிடாமலே படுத்துக் கொண்டாள். அவள் தொடர்ந்தும் அழுது கொண்டே படுக்கிறாளோ என்கின்ற சந்தேகம் "TS"ற்கு இருந்தது. இருந்தும் அவளைக் குழப்ப வேண்டாம் என்று விட்டுவிட்டார். காலையில் அவளது அறைக்குச் சென்ற புவனலோசினி அவளைத் தொட்டுப் பார்த்து அதிர்ந்தாள். பின்பு பதறிய வண்ணம் வெளியே வந்து அவள் காய்ச்சலோடு படுத்து இருப்பதாய் "TS" இடம் சொன்னாள். "TS" சென்று தொட்டுப் பார்த்தார். வெப்பமூட்டியில் கை வைத்தது போன்று இருந்தது. மாத்திரையைக் கொண்டு வந்து விழுங்க வைத்தார். அதன் பின்பு அவள் சற்று அமைதியாகப் படுத்து நித்திரை கொண்டாள். செய்தி எப்படியோ பரவி இருக்க

வேண்டும். மாலை சரிஸ்காவைப் பார்க்க வரவேண்டும் என்று சிவாவும் அருளும் கேட்டனர். "TS" தனது வேலையை ஏழுமணி போல முடித்துக் கொண்டு வருவதாகவும் அதன் பின்பு வருமாறும் அவர்களுக்குக் கூறினார். அவர்களும் அதற்கு ஒப்புக் கொண்டார்கள்.

*

ஏழுமணிக்குச் சொல்லி வைத்தது போல சிவா குடும்பமும் அருள் குடும்பமும் வீட்டிற்கு வந்தார்கள். சரிஸ்கா முதலில் கோலிற்குள் போக வேண்டாம் என்று எண்ணினாள். இருந்தும் அது மரியாதையாக இருக்காது என்பதால் தடித்த ரோஜா நிறக் கம்பளி சட்டையை அணிந்து முகத்தை, தலையைக் குளியல் அறையில் சரி செய்து பல்லைத் தீட்டி வாயைக் கொப்பளித்து விட்டுக் கோலுக்குள் வந்தாள். எல்லோர் முகத்திலும் அவளைப் பார்க்க சூரியனை மறைத்த கரும் முகில்களாகக் கவலை படர்ந்தது. சிவா தனது பாணியில் தொடங்கினான்.

"என்னதான் சொன்னாலும் சரிஸ்கா தொட்டால் சிணுங்கி மாதிரி. ஒரு சின்ன விசயம் எண்ட உடனை எப்படி மாறிப் போனா பாருங்க?"

"சிவா அண்ணை அது உங்களுக்குச் சின்ன விசயம். எனக்குப் பூதம் போலப் பெரிய விசயம். பயத்தில காய்ச்சல் வந்திட்டுது எண்டு சொன்னா வெட்கக்கேடு. ஆனால் இந்த மனதுக்க எவ்வளவு பயம் இருந்து இருந்தால் இப்பிடிக் காய்ச்சல் வந்து இருக்கும்? யோசிச்சுப் பாருங்க சிவா அண்ணை?" என்றாள்.

"உண்மை சரிஸ்கா. அவரவர் வேதனை அவர் அவருக்கு மட்டும்தான் தெரியும். கொஞ்ச நாளாகவே ஒஸ்லோவும் பயப்பிட வேண்டிய இடமாப் போச்சுது. அகதிகளாக வந்த வெளிநாட்டுச் சனங்கள் அதிகமாக இப்படிச் செய்யுதுகள் எண்டும் கதைக்கிறாங்கள். அதில உண்மை இல்லாமலும் இல்லை. அதே நேரம் பழிபோடுகிறதுக்கும் வெளிநாட்டுக்காரர் வசதியாவே இருக்கினம்." என்றான் சிவா.

"அது ஒரு வகையில உண்மை மாதிரித்தான். இங்க தனியா இருக்கிறாங்கள். அவங்கடை நாட்டில போர்த்துக் கட்டினால் நல்ல பெம்பிளையள் எண்டு அர்த்தம் ஆக்கும். இங்க கொஞ்சம் பிறியா இவளவை போகிறதைப் பார்த்த

உடன பாய நினைக்கிறாங்கள். இவங்கள் எல்லாம் திருந்த வேணும். இல்லாட்டி இப்பிடிச் செய்து பிடிபடுகிறவங்களைத் திருப்பி அவங்கடை நாட்டிற்கே அனுப்பி விடவேணும். அங்க போய் யாரிலையும் பாயட்டன். தலையை வெட்டினால் என்ன குலையை வெட்டினால் என்ன? அதுக்கும் இவங்கள் விடமாட்டாங்கள். சட்டம், ஒழுங்கு, மனிதாபிமானம் எண்டு கொட்டல் கணக்கா அறை குடுத்து விருந்தாளி போல ஜெயில்ல வைப்பாங்கள். அவங்களும் திரும்பி வந்தும் அதையேதான் தொடருவாங்கள்." என்றான் அருள்.
"பிழை செய்கிற எல்லாரையும் போட்டுத் தள்ளுகிறது இவங்கடை நீதி பரிபாலனம் இல்லை. பிழையை உணர வைச்சு மனிசனைத் திருத்துகிறதே இவங்கடை நீதி பரிபாலனம். அதைச் சில நாட்டுச் சனங்கள் தவறாய் பயன் படுத்துகினம். எங்களையும் சேர்த்துத்தான் அது. அப்ப அவையக் கொஞ்சம் வித்தியாசமான முறையிலயே கையாள வேணும். ஆனா... அதுக்கும் உள்ளூர் சட்டம் இல்லாட்டியும் உலக சட்டம் தடையா நிற்கும். எப்பிடியும் இங்கத்தை நடைமுறையை லேசில மாத்த முடியாது. ஆனா... இந்த அறுவார்ற்றை சேட்டையை நிற்பாட்ட வேணும். அதை எப்பிடிச் செய்கிறது? " என்றான் சிவா.
"இங்கத்தே பொலிசு சும்மாய் இல்லை. கெதியாய் நிப்பாட்டுவாங்கள். எப்பிடியோ அவையின்ரை அடையாளங்கள் நிறமுகூர்த்தங்கள் எண்டு மாட்டுப்படும் தானே?" என்றான் அருள்.
"சரிஸ்கா தேவை இல்லாமல் பயப்பிடத் தேவை இல்லை. இது கோடியில ஒண்டு நடக்கிற மாதிரி. ஏதோ கெட்ட காலமோ நல்ல காலமோ நீங்கள் பார்த்திட்டீங்கள். இனி அப்பிடி ஒரு சந்தர்ப்பமும் வராது. நீங்களும் தேவை இல்லாமல் பயப்பிடத் தேவை இல்லை." என்றான் சிவா.
"விளங்குது சிவா அண்ணை. எண்டாலும் நாங்கள் சொல்லுகிற மாதிரி எல்லாம் மனம் எப்பவும் கேட்காது. அதை லேசில விளங்கப்படுத்தவும் முடியாது."
"அவங்கள் வெளிநாட்டுக் காரரில அதிகம் சேட்டை விடுகிற மாதிரித் தெரிய இல்லை. ஆனா... நொஸ்குகள்தான் அதிகம் மாட்டுப்பட்டு இருக்கினம்." என்றான் அருள்.

"அருள் அதுக்குச் சில காரணங்கள் இருக்குது. வெளிநாட்டுச் சனம் பொதுவா இரவிரவாகத் திரியாதுகள். மற்றது குடிக்காதுகள். அதால இப்பிடியான இக்கட்டான சந்தர்ப்பங்களுக்கையும் அவை வந்து மாட்டுப்பட மாட்டினம். நொஸ்குகள் அப்பிடி இல்லைத் தானே? குடி... அதில தலை கால் தெரியாட்டித்தான் சந்தோசம். அவங்களுக்கு அது ஈசி வேலை எல்லோ? என்ன எண்டாலும் பண்பு இருக்கிறதுகள் அப்பிடிச் செய்யக் கூடாது. இப்பிடிச் செய்கிறதுகள் மிருகங்களாய்த்தான் இருக்க வேணும். ஒரு வகையில இவங்களைப் பிடிச்சு அவங்கடை நாட்டுக்கே அனுப்பி விடுகிறது நிச்சயம் சரி. அந்தந்த இடங்களில இருந்தால் அவங்கள் அதுக்கு ஏத்த மாதிரி இருப்பாங்கள்." என்றார் "TS".

"ஆனா... அதுவும் ஒரு வகையில பிழை அண்ணை. அப்படி ஒரு நிலை வந்தால் எங்களுக்கு எதிரான கட்சிகள் எல்லாம் சேர்ந்து குற்றம் செய்கிறவங்களை அனுப்புகிறம் எண்ட சாட்டிலை எல்லாரிலும் கை வைப்பாங்கள். அப்படிச் செய்தா அவங்களுக்கு நிறைய ஆதரவு வரும். அப்படித்தான் ஒரு பகுதி சனத்தின்ரை மனதும் மாறிக் கொண்டு போகுது. அதே வேளை ஏதாவது கடுமையாச் செய்யாட்டியும் இப்பிடியான சொறிச் சேட்டைகளைக் கட்டுப்படுத்தவும் ஏலாது. அதுவும் சில நாட்டுச் சனங்களும் அவங்கடை கற்காலக் கலாச்சாரமும் எங்களுக்கே பொறுக்க ஏலாமல் இருக்குது. கொஞ்சம் அடக்கி வாசிப்பம், மற்ற மனிசருக்கும் மதிப்புக் கொடுப்பம் எண்டு அவங்கள் யோசிக்கிறாங்கள் இல்லை. ஐரோப்பிய நாடுகளின்ரை தந்திரமும் கீழத்தேய நாடுகளின்ரை தாழ்வு மனப்பான்மையும் அதுக்கான சில காரணங்களாக இருக்குது."

"ம் பல காரணங்கள் இருக்கலாம் அருள். ஆனா... இந்த நாட்டுக்கு அடைக்கலம் தேடி வந்தா இந்த நாட்டுக் கலாச்சாரம், பண்பாடு, சட்டம், ஒழுங்கு எல்லாத்தையும் மதிச்சு நடக்க வேணும். அதை விட்டிட்டு அங்கை இருந்த மாதிரியே இங்கையும் இருக்க வேணும் எண்டாத் தேவை இல்லாத பிரச்சனைகள் நிறைய வரத்தான் செய்யும். தங்கடை நாடுகளில வெளிநாட்டுக் காரருக்கு எப்பிடியான சுதந்திரத்தைக் கொடுத்து இருக்கினம் எண்டு அவை

முதல்ல யோசிக்க வேணும். எங்களுக்குத் தெரியும் தானே அது. இதிலும் சிலருக்கு ஒருவித திமிர் இருக்குது எண்டுதான் சொல்ல வேணும். எங்கடை இடங்களுக்கு வரேக்க ஓரளவுக்கு எண்டாலும் எங்களைப் போல இருக்க வேணும் எண்டுதான் நினைப்பம். எல்லா நாட்டிலையும் அந்த எதிர்பார்ப்பு இருக்கத்தான் செய்யும்." என்றார் "TS".

""TS" அண்ணை சொல்லுகிறதிலையும் நிறைய உண்மை இருக்குது. ஒவ்வொரு மனிசனும் ஒவ்வொரு உலகம் எண்டா அது ஒவ்வொண்டும் ஒவ்வொரு பாதையிலதான் இழுத்துக் கொண்டு போகும். ஆனா... வந்த நாடுகளில கொஞ்சம் விட்டுக் குடுத்துப் போக வேணும் எண்ட எண்ணமும் இருக்கத்தான் வேணும். நீங்கள் சொன்ன மாதிரி தங்கடை நாடுகளில வெளிநாட்டுக் காரரை எப்பிடி நடத்துகினம் எண்டு யோசிக்கிறதோடை அதுக்காக நாங்கள் ஆகவும் உரிமைகளை விட்டுக் கொடுத்தும் நடக்கக் கூடாது." என்றான் சிவா.

"ம்... சிவா சொல்லுகிறதும் சரிதான். வெளிநாட்டுக் காரரிலை குத்தம் கண்டு பிடிக்கிறதும், மதத்தை வெறித்தனமாய் நம்பி வன்முறையில ஈடுபடுகிறதும் அதுக்குச் சில காரணமாய் இருக்குது." என்றார் "TS".

"என்ன அண்ணை நாட்டுப் பிரச்சனை இப்படிப் போகுது? தோப்பிக்கலையையும் விட்டால் இனிக் கிழக்கிலையும் இடம் இல்லை. இது தன்வினை தன்னைச் சுட்டது மாதிரிக் கருணாவோடையும் குழம்பி... ஐயோ... " என்றான் அருள் வெறுப்பாக.

"இந்தியன் ஆமிக்கு அது அறியாத பூமி.. ஆனா... பிரிஞ்சவையே துணையா நிண்டதால இலங்கை ஆமிக்கு அது லேசாப் போச்சுது. எல்லாத்தையும் முடிச்சுக் கொண்டு கடைசியா வந்து அவரும் லண்டனில மாட்டுப்பட்டு தானே இருக்கிறார். இதுதான் தமிழருக்க இருக்கிற ஒற்றுமை. அதுதான் எங்கடை இனத்தின்ரை சாபம். எல்லா இயக்கங்களையும் அடிக்கேக்க தங்களையும் ஒரு நாளைக்கு யாரோ அடிப்பாங்கள் எண்டு எதிர்பார்த்து இருக்க வேணும். ஆனா... நடந்தது அதைவிடக் கொடுமை. சொந்த இயக்கமே இப்ப காட்டிக் குடுத்திட்டுது. எல்லாம் சுற்றி வரும். வந்தவை யாவும் கடந்து போகும் எண்டது சரியாப் போச்சுது." என்றான் சிவா.

"உள் பகைதான் கண்டு பிடிக்கவும் முடியாது. அதிலை இருந்து காப்பாற்றவும் முடியாது. முகுந்தனுக்கும் அதுதான்... பிரபாகரனுக்கும் அதுவாகத்தான் இருக்கப் போகுது. எங்கடை தலைவர் நம்பிக்கையில தானே நடந்த கொலைகளுக்கு கை எழுத்து வைச்சுக் கொடுத்து இருக்க வேணும். அதே நேரம் எங்களைப் போல உணர்ச்சியில சிந்திக்கத் தெரியாமல் அள்ளுப்பட்ட சனங்களால இயக்கம் ஊதிப் பெருத்திச்சுது. அதை வைச்சு வியாபாரம் செய்து முன்னுக்கு வந்தவை பலர். உண்மையில போராட்டத்தை வைச்சுப் பொருளாதாரம் தேடின பகுதி பெரும் பகுதிதான். கடைசியில இந்தப் போராட்டமே கனவு ஆகிப் போனாலும் போகலாம்." என்றான் அருள்.

"தோப்பிக்கலை மாதிரிப் பல இடங்கள் போகலாம். திரும்பி வரலாம். போராட்டம் எண்டால் அப்பிடித்தான். அவங்கள் தந்திரமா அடிப்பாங்கள். பின்வாங்க வேண்டிய நேரத்தில பின்வாங்குவாங்கள். இதுவும் அப்பிடித்தான். எண்டாலும் இயக்கத்தின்ரை பிரிவால இயக்கம் ஆட்டம் கண்டு இருக்கிறதும் உண்மைதான். ஆனா... எல்லாத்தையும் அவங்கள் வெல்லுவாங்கள் எண்டு நான் நினைக்கிறன்." என்றார் "TS" விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கின்ற நம்பிக்கையோடு.

"உங்களால அப்படித்தான் நினைக்க முடியும். இருந்தும் இராணுவ வெற்றி தோல்விகளுக்கு எண்டு ஒரு வரைபிலக்கணம் இருக்குது. அதுக்கு அமையத்தான் வெற்றி தோல்வி வரும். ஒரு மனிதம் இழந்த நாடும் அதன் மக்களும். என்னைப் பொறுத்தவரை எல்லாப் பகுதியும் மோசமானதுதான்." என்றான் சிவா.

"ம்..." என்பதோடு "TS" நிறுத்திக் கொண்டார்.

# 26 சுகந்தி

நிமலன் வேலைக்குச் சென்றுவிட்டான். தேவியைக் கொண்டு சென்று பாடசாலையில் விட்ட பின்பு சுகந்தி நடந்து வந்தாள். வீட்டிற்குச் சென்று சமைத்து வைத்துவிட்டு வேலைக்குச் செல்ல வேண்டும். நிமலன் வந்து தேவியைப் பாடசாலையில் இருந்து அழைத்து வருவான். அவன் தேவிக்குக் கணிதம் சொல்லிக் கொடுப்பான். அவளுக்கும் கணிதம் என்றால் அதில் தனிப் பிரியம். அதைப் போல் அப்பாவிலும் அவளுக்குத் தனிப் பிரியம். இருந்தும் அம்மாவே அனைத்து அலுவல்களுக்கும் சம்பளம் இல்லாத வேலைக்காரி போல முந்தியடித்து வர வேண்டும். அந்தத் தாதி வேலைக்கு அம்மாவைத் தவிர வேறு யாரும் விண்ணப்பிக்க முடியாது. அம்மாவின் அந்தக் கரிசனையும் அளவு கடந்த பிரயத்தனமும் அம்மா மீதும் அவளுக்கும் அளவுகடந்த பிரியத்தை உண்டு பண்ணி இருந்தது. நவீன உலகத்தில் மனித வாழ்க்கை என்பது பொருளாதாரத்திற்குள் சிறைப்பட்டது. அதைப் பலராலும் உடைத்து எறிந்து வெளியே வர முடிவதில்லை. அதற்குச் சுகந்தியோ நிமலனோ புறநடை ஆனவர்கள் அல்ல... அவர்களும் அந்தச் செக்கினில் அகப்பட்ட மாடுகளாக எந்த மாற்றமும் செய்ய முடியாத அதே பாதையில்.

இயற்கையின் அழகிய அற்புதம் சுகந்தியைச் சில கணங்கள் மலைக்க வைத்தன. மாளும் போதும் மயக்கி மாளும் இயற்கையின் அற்புதத்தை இங்குதான் காண முடியும். எத்தினை வர்ணங்கள்? எத்தினை அழகுகள்? பச்சை குறைந்து, கலைந்து, மஞ்சளாகி அதன் உச்சமாகப் பொன்னாகத் தகதகக்கும் இலைகளைக் கொண்ட சுவர்க்க லோகத்துக் கர்பகத்தருக்கள் போல. கற்பகத்தருப் போல் கேட்டது எல்லாம் இவை

தராவிட்டாலும் பார்த்த போது எல்லாம் களிப்பை மனதில் அள்ளி நிறைத்தது.

இயற்கை என்றும் அற்புதம். இயற்கை உருவாக்கிய அத்தினை படைப்புக்களும் அதைவிட அற்புதம். அது தன்னைத் தேவை என்கின்ற போது உருவாக்குவதும் தேவை இல்லாத போது அழித்துக் கொள்வதும் மனிதனால் முழுமையாக விளங்கிக் கொள்ள முடியாத அதைவிட அற்புதமான அதன் வாழ்வு.

கார் ஒன்று படு வேகமாகச் சென்றது. எதற்கு இந்த வேகம் என்பது சுகந்திக்கு ஒரு கணம் விளங்கவில்லை. மனிதர்களுக்கு எப்போதும் அவசரம். உலகத்தில் உள்ள அத்தினையையும் அனுபவித்து விட்டுச் செல்ல வேண்டும் என்கின்ற அடங்காத அவசரம். அவசரம் தீருகிறதா? அனுபவிப்பு முடிகிறதா? வேண்டாம் என்று உண்மையாக வெறுத்து ஒதுக்கும் வேதாந்தியின் நிலை வருகிறதா? ஆசையோடு, இறப்புவரை அல்லாடி, அறிவிலிகளாய் மடியும் அற்பர்களின் வாழ்க்கைதான் இதுவா?

சுகந்தி நடக்க முடியாத அவஸ்தையோடு திடீரென நின்றாள். என்றும் அனுபவித்திராத அந்தவலி வயிற்றில் இருந்து கிளம்பி சுவாசத்தை இறுக்கிப் பிடித்தது போல அழுத்தியது. அவளுக்குச் சிறிய வலி இடைக்கிடையே வருவது உண்டு. ஆனால் ஒரு கணம் மூச்சை நிறுத்தி அதன் அந்தரிப்பில் அண்டத்தில் பறந்ததான உணர்வு ஒரு போதும் வந்ததில்லை. ஒருவாறு சுகந்தி சமாளித்தாள். எதற்காக இந்த வலி? எதனால் வரும் சோதனை என்பது அவளுக்கு விளங்கவில்லை. சமைக்க வேண்டும். வேலைக்குப் போக வேண்டும் என்கின்ற நினைவு மீண்டும் எழ, வலியைப் புறக்கணித்து மேற்கொண்டு நடக்கத் தொடங்கினாள். சிறிது தூரம் நடந்திருப்பாள். மீண்டும் அந்த வலி மயக்குவதாய் அவளை நடக்க விடாது தெருவின் ஓரத்தில் இருக்க வைத்தது. சுகந்திக்கு அழுகை வந்தது. நிமலனை அலைபேசியில் தொடர்பு கொண்டு வரச் சொல்லலாம் என்று எண்ணியவள் அது சரி இல்லை என்று முடிவு செய்து கொண்டு சிறிது நேரம் இருந்த பின்பு மீண்டும் எழுந்து நடக்கத் தொடங்கினாள்.

தொடர்ந்தும் வயிற்றுக்குள் கடுமையாக வலித்தது. சுகந்திக்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை. அவள் மெதுவாக நடந்தாள். எப்படி என்றாலும் முதலில் வீட்டிற்குச் சென்றுவிட வேண்டும் என்பதே அவள் முதல் எண்ணமாக இருந்தது. ஒருவாறு பல்லைக் கடித்துக் கொண்டு வீட்டிற்கு வந்து சேர்ந்து விட்டாள். ஆனால் வலி விட்டதாகத் தெரியவில்லை. வலி விடும் என்றும் அவளுக்குத் தோன்றவில்லை. எதற்கும் மருத்துவரிடம் சென்றால் நல்லது என்றே தோன்றியது. அவள் அலைபேசியில் தனது மருத்துவரின் அலுவலகத்திற்குத் தொடர்பு கொண்டு நேரம் தருமாறு கேட்டாள். முதலில் நேரம் தர மறுத்தவர்கள் பின்பு சுகந்தி விளங்கப்படுத்தியதைத் தொடர்ந்து ஒரு மணித்தியாலத்தில் தங்களை வந்து பார்க்குமாறு கூறினார்கள். அதன் பின்பு அவள் குளியல் அறைக்குச் சென்று முகத்தையும் தலை முடியையும் சரி செய்து கொண்டு புறப்பட்டாள். நிமலனுக்கு அலைபேசியில் அழைத்துக் கூறுவோம் என்று எண்ணியவள் பின்பு எதற்கு வேலையில் இருப்பவரைக் குழப்புவான் என்கின்ற எண்ணத்தோடு அவனைத் தொடர்பு கொள்ளாது அவள் மருத்துவரைப் பார்க்கச் சென்றாள். அவளுக்குத் தொடர்ந்தும் வலித்தது. இடதுபக்க மேல் வயிறு முதுகு எல்லாம் வலிப்பதோடு வயிற்றைப் புரட்டுவது போலவும் இருந்தது. ஒரு கணம் மருத்துவரிடம் பேருந்தில் போக முடியுமா என்கின்ற சந்தேகம் அவளுக்கு உண்டானது. இருந்தும் அவள் ஒருவித துணிவுடன் புறப்பட்டாள்.

பேருந்தில் பயணம் செய்யும் போதும் அவளுக்கு வலித்துக் கொண்டே இருந்தது. இருந்தும் அதை அவள் தாங்கிய வண்ணம் பல்லைக் கடித்துக் கொண்டு இருந்தாள். பேருந்திற்குள் வாந்தி எடுத்துவிடக் கூடாது என்பது அவளின் தற்போதைய ஒரு பெரும் கவலையாக இருந்தது.

எப்படியோ எந்தவித அசம்பாவிதங்களும் இன்றி அவள் மருத்துவரின் அலுவலகத்தை வந்து அடைந்தாள். மருத்துவருக்கு என்ன நடந்தது என்று சுகந்திக்கு ஒரு

கணம் எண்ணத் தோன்றியது. இப்படி எல்லாம் விரைவாக வந்து உள்ளே அழைத்துச் செல்வது வழமை அல்ல... இருந்தும் அந்த வழமை மீறப்பட்டுப் புதுமை நடந்தது பற்றி அவளுக்கு விளங்கவில்லை. மருத்துவர் இவ்வளவு விரைவாகக் கூப்பிட்டது ஒரு வித பயத்தையும் உண்டு பண்ணியது. என்றாலும் அவள் அதை உதறித் தள்ளிவிட்டு நடந்து சென்றாள்.

பழக்கப்பட்ட மருத்துவர் என்றமையால் இன்றும் கை தந்து அறிமுகப்படுத்த அவர் முனையவில்லை. அதைச் சுகந்தியும் எதிர்பார்க்கவில்லை. மருத்துவர் பிரசவ வேதனையோடு சிரிப்பது போலச் சிரித்தாலும் அதையும் மீறி அவரின் பதட்டம் முகத்தில் முழுமையாக ஆட்சி செய்ததை அவள் கண்டு கொண்டாள். அவர் பரபரப்பாகக் காகித விரிப்பை அங்கு இருந்த படுக்கைக்கு இழுத்துவிட்டு சுகந்தியை அதில் ஏறிப் படுக்குமாறு கட்டளை இட்டார். சுகந்தி வேதனையோடு ஏறிப் படுத்தாள். மருத்துவர் இடப்பக்க மேல் வயிற்றை அழுத்தினார். சுகந்தி வேதனையால் அம்மா என்றாள். "கடுமையாக வலிக்கிறதா?" என்று மருத்துவர் கேட்டார். "ஆம் உயிரே போகிறது..." என்றாள் சுகந்தி வேதனையோடு.

மருத்துவர் மிகவும் கவலையாகச் சுகந்தியைப் பார்த்துவிட்டுத் தொலைபேசியை எடுத்து எங்கோ கதைத்தார். அவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு கதைத்தது எங்கே என்று அவளுக்கு விளங்கவில்லை. சிறிது நேரத்தின் பின்பு தன்னை அம்புலன்சில் ராடியம்கொஸ்பிற்றலுக்கு அனுப்பி வைக்கும் அலுவல் நடக்கிறது என்பது விளங்கியது. வயிற்று நோவை இவ்வளவு பெரிதாக எடுத்துக் கொண்ட மருத்துவரின் செயல் அவளுக்கு முழுமையாக விளங்கவில்லை. இப்போதாவது நிலமையை நிமலனுக்கு அறிவிக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. இல்லாவிட்டால் அவன் கேட்கும் கேள்விகளுக்குத் தான் அவனுக்குப் பதில் சொல்ல முடியாது என்பதும் அவளுக்கு விளங்கியது.

மருத்துவர் சுகந்தியை அழைத்து வந்து வெளியே இருக்க வைத்துவிட்டு அடுத்த நோயாளியைப் பார்க்கச் சென்றுவிட்டார். சுகந்தி அவசரமாக அலைபேசியை எடுத்து நிமலனைத் தொடர்பு கொண்டாள். நிமலனுக்கு இந்த நேரத்தில் சுகந்தியிடம் இருந்து அலைபேசி அழைப்பு வந்தது அதிசயமாக இருந்தது. அவன் அலுவலகத்திற்கு வெளியே ஓடி வந்து அதை ஆர்வத்தோடு எடுத்தான். அதில் சுகந்தி தனது நிலையைக் கூறியதும் அவனுக்குத் தலை சுற்றத் தொடங்கியது. இப்படி ஒரு பிரச்சனை திடீரென வரும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அதைவிடச் சுகந்திக்குத் திடீரென என்ன வருத்தம் வந்தது? அது எவ்வளவு பாதிப்பாய் இருந்தால் உடனடியாக றாடியம்கொஸ்பிற்றலுக்கு அனுப்பி வைப்பார்கள் என்கின்ற கேள்விகள் மனதைக் குடைந்து நடுக்கம் எடுக்க வைத்தது. அங்கே சென்றதும் என்ன செய்கிறார்கள் எந்த இடத்தில் வைத்து இருக்கிறார்கள் என்பதை அறிவிக்குமாறு கூறிவிட்டு நிமலன் அலைபேசியைத் துண்டித்துக் கொண்டான்.

சிறிது நேரத்தில் வந்த அம்புலன்ஸ் சுகந்தியை ஏற்றிக் கொண்டு றாடியம்கொஸ்பிற்றலுக்குச் சென்றது. அங்கு அவளை அழைத்துச் சென்று அவளது விபரங்களை முழுமையாகப் பதிந்து சரி பார்த்து விட்டு அவளை "Ultrasound,CT scan,MR" என்று ஒவ்வொரு இடமாக அழைத்துச் சென்றார்கள். எல்லா இடத்திலும் இடது விலாப் பக்கம் நுணுக்கமாக ஆராயப்பட்டது. ஏன் இப்படிச் செய்கிறார்கள் என்பது அவளுக்கு விளங்கவில்லை. ஏதும் பெரிதாக இருக்கக் கூடாது. இந்த வலி இடைக்கிடை சாதுவாக வந்து போவது உண்டு. நிலைத்து விட்ட புயல் போல உலுக்கியது இன்றுதான். எப்படி என்றாலும் இந்த நோக் குறைய வேண்டும். வேலைக்குப் போகாவிட்டாலும் பருவாய் இல்லை. வீட்டிற்குச் சென்று சமைக்க வேண்டும். அவருக்கும் தேவிக்கும் சாப்பாடு கொடுக்க வேண்டும். அதற்கு இவர்கள் அலுவல்களை முடித்துக் கொண்டு ஓரளவு கெதியாக தன்னை அனுப்பி வைத்தால் போதும் என்று இருந்தது அவளுக்கு. அவளுக்கு மனது சுத்தமாகக் கேட்கவில்லை. எப்போது இந்த அலுவல்கள் முடியும் என்கின்ற அவஸ்தையோடு அவள் காத்திருந்தாள்.

*

அதன் பின்பு ஒரு கணம் என்ன செய்வது என்று அவனுக்கு விளங்கவில்லை. அப்படியே யோசித்துக் கொண்டு இருக்க முடியாது என்பதை உணர்ந்தவன் எழுந்து சென்று மேல் அதிகாரியோடு கதைத்து விடுப்பு எடுத்துக் கொண்டு தேவியை எடுப்பதற்குச் சென்றான்.

அப்பாவை அகாலத்தில் கண்டதில் அளவு கடந்த அதிர்ச்சியும் ஆனந்தமும் தேவிக்கு. எதற்கு என்பது விளங்காவிட்டாலும் இன்று அரை நேரம் என்பதில் அவளுக்கு ஆனந்தம். இல்லைப் பரமானந்தம். ஆனால் அந்த ஆனந்தத்தை, அவளின் சந்தோசத்தைத் தானும் கொண்டாட முடியாத அவஸ்தையில் நிமலன் நெளிந்தான். அவனுக்குச் சுகந்திக்கு என்ன நடந்தது என்கின்ற கவலையாக இருந்தது.

அந்தக் கவலையைக் காட்டித் தேவியையும் கவலை கொள்ள வைக்காது தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு அவளோடு சென்று தனது வாகனத்தில் ஏறி அதை இயக்கினான். நிமலனுக்கு மூச்சு எடுக்க முடியாத கவலையாக இருந்தது. அப்பாவின் கவலையை அறியாத தேவி "எங்க போகிறம் அப்பா? எங்க போகிறம் அப்பா?" என்று குடைந்து கொண்டே இருந்தாள். நிமலன் அதைப் பொறுமையாகச் சமாளித்து வாகனத்தைச் செலுத்தினான். இடையில் சுகந்தியிடம் இருந்து, தான் எந்தப் பகுதியில் தங்க வைக்கப்பட்டு இருக்கிறேன் என்று குறுஞ் செய்தி வந்து சேர்ந்தது. அது நிமலனுக்குப் பெரும் நிம்மதியைத் தந்தது. அங்கே போய் எங்கே எங்கே என்று தேடிக் கொண்டு நிற்க வேண்டியது இல்லை என்கின்ற ஒரு சிறு நிம்மதி வந்தது.

ஒருவாறு நிறுத்துவதற்கு ஒரு இடம் எடுத்து அதற்கான துண்டை எடுத்து வைத்துவிட்டு தேவியையும் அழைத்துக் கொண்டு, மருத்துவ மனைக்குள் சென்றான். மருத்துவ மனைக்குள் வந்த பின்பும் தேவியால் அதை மீண்டும் கேட்காது இருக்க முடியவில்லை.
"அப்பா... ஏன் அப்பா என்னை இங்க கூட்டி வாறீங்க? இங்க யார் இருக்கிறது அப்பா? சொல்லுங்க அப்பா..."

என்றாள் தேவி சற்று எரிச்சலுடன். அவளின் எரிச்சல் நிமலனுக்கு விளங்கியது. இனி அவளுக்கு யார் இங்கு இருப்பது என்று கூறிவிடலாம் என்று தோன்றியது.
"அம்மா இங்க வந்து இருக்கிறா தேவி. அம்மாவுக்கு ஏதோ வயித்துக்க நோகுதாம். அதை இங்க இருக்கிற டொக்ரர் செக் பண்ணி என்ன எண்டு கண்டு பிடிச்சு மருந்து குடுத்துத் திருப்பி அனுப்பி வைப்பாங்கள்." என்றான் நிமலன்.
"அம்மாவுக்கு வருத்தமா?" என்கின்ற அவள் கேள்வியிலேயே அவள் அழத் தொடங்கி விடுவாளோ என்கின்ற கவலையாக இருந்தது. அவள் அப்படி அழுவதை நிமலன் பார்க்க விரும்பவில்லை.

அந்த அறைக்குள் இருந்த ஒரு கட்டிலில் அவள் ஒளியை இழந்த சூரியனாக சோம்பிக் கிடந்தாள். அவளை அப்படிப் பார்க்கவே அவனுக்கு இதயத்தை ஒரு இரும்புக் கை அழுத்திப் பிடிக்க வயிற்றைப் புரட்டுவது போல இருந்தது. அவன் அவளை அப்படிப் பார்த்ததில் இருந்து மிகவும் சோர்ந்து போய்விட்டான். அவன் அருகே சென்று அவள் தலையைக் காதலோடு தடவினான். அவள் அவன் கையைப் பிடித்துக் கொண்டு,
"சும்மா தேவை இல்லாமல் பயப்பிடாதேங்க. டொக்ரரோடை ஒருக்கா கதையுங்க. எப்ப வீட்டை போகலாம் எண்டு கேழுங்க. மறக்காமல் இவளுக்கு ஏதாவது சாப்பிட வாங்கிக் குடுங்க." என்று தனது பணியைத் தொடங்கினாள்.
"பொறு... அவதிப் படாத. நான் போய் கேட்டு வாறன்." என்றான் நிமலன். அதை மணந்தவள் போல,
"அப்பா பசிக்குது." என்றாள் தேவி.
"இவளுக்கு முதல்ல கன்ரீன்ல சாப்பாடு வாங்கிக் குடுத்துச் சாப்பிட வைச்சிட்டு பிறகு டொக்ரரிட்டை இல்லாட்டிச் சீக்கப்பிளையரிட்டை எப்ப வீட்டை போகிறது எண்டு கேளுங்க. எனக்கும் ஏதாவது குடிக்க வாங்கி வாங்க. இவங்கள் இன்னும் ஒண்டும் தர இல்லை." என்றாள் சுகந்தி.

"சரி" என்று விட்டுத் தேவியையும் அழைத்துக் கொண்டு நிமலன் வெளியே சென்றான். விடுதியில் அவன்

எதிர்பார்த்ததைவிட அதிகமான சனமாக இருந்தது. ஒருவாறு தேவி விரும்பிய சாப்பாட்டை வாங்கிக் கொடுத்துச் சாப்பிட வைத்து தானும் சாப்பிட்ட பின்பு சுகந்திக்குக் குடிப்பதற்குப் பழரசமும் வாங்கிக் கொண்டு மீண்டும் வந்தான். அறைக்குள் போகும் போது ஒரு தாதி அவனைக் கண்டுவிட்டு மறித்து யார் என்று கேட்டாள். அதற்குத்தான் யார் என்று அவன் கூறினான். அவள் உடனேயே தன்னுடன் வருமாறு அவனை அழைத்துக் கொண்டு சென்றாள். தேவியைச் சுகந்தியிடம் விட்டுவிட்டு வரும் போது பழரசத்தைச் சுகந்தியிடம் கொடுக்க, அந்தத் தாதி சுகந்தி இப்போது எதுவும் குடிக்கக் கூடாது என்று கூறினாள். மருத்துவர் கூறிய பின்புதான் நீங்கள் எதுவும் அருந்தலாம் என்றும் கூறினாள். சுகந்தி சலிப்போடு சம்மதித்துவிட்டுத் தாகத்தோடு படுத்துக் கொண்டாள்.

நிமலன் அவள் பின்னால் சென்றான். மனதிற்குள் ஏதோ செய்தது. ஏன் இந்த உணர்வு என்று தன்னைக் கேட்டவன் எதுவும் விளங்காது இறைவா என்று தன்னிச்சையாகக் கூறிக் கொண்டான். அந்தத் தாதி நடப்பதை நிறுத்திவிட்டு என்ன என்பது போல அவனைப் பார்த்தாள். நிமலன் ஒன்றும் இல்லை ஒன்றும் இல்லை என்று அவளை அவசரமாகச் சமாளித்தான்.

கவலை இருக்கும் போது கடவுள் நினைவு வருவது சில வேளைத் தவிர்க்க முடியாது போய்விடுகிறது. ஆனாலும் மனதில் தோன்றிய இந்த இனம் புரியாத பயத்திற்கு என்ன பதில் என்பது விளங்கவில்லை. கடவுளே எல்லாம் நல்லதாக நடக்க வேண்டும் என்பதாக பிரார்த்தித்துக் கொண்டு நடந்தான். அந்தத் தாதி,
"உங்களுக்கு ஒரு செய்தி காத்திருக்கிறது. அதை உங்கள் இருவரிடமும் மருத்துவர் கூறுவார். நான் அதைக் கூற முடியாது." என்று விட்டு ஏனோ பரிதாபமாகப் பார்த்தாள்.
"எனக்கும் அப்படித்தான் பயமாக இருந்தது. அது சரியாகப் போய்விட்டது போல இருக்கிறது." என்றான் நிமலன் நடுங்கும் குரலில்.
"பயப்பிடாதீர்கள். எல்லாம் நல்லதாக நடக்கும்." என்றாள் பரிவோடு. நிமலன் சிரிக்க முடியாது சிரித்தான். இது

என்ன சிக்கல் என்று எண்ணிய அவனுக்கு திடீரென உடம்பு சூடாகி வியர்க்கத் தலையைச் சுற்றுவது போல இருந்தது. அவன் ஒருவாறு சமாளித்து அறையை நோக்கிச் சென்றான். மருத்துவரைக் கூட்டி வருவதாகக் கூறிவிட்டு அந்தத் தாதியும் சென்றாள்.

அறைக்கு உள்ளே சென்றதும் சுகந்தி நிமலனைப் பார்த்துவிட்டு,
"என்ன பேய் அறைஞ்ச மாதிரி வாறியள்?" என்றாள்.
"சரி அதை இப்ப எண்டாலும் தாங்க குடிப்பம். கையிலயே கொண்டு அலையிறியள்."
"ஏற்கனவே சொன்ன மாதிரி உன்னை ஒண்டும் குடிக்க வேண்டாமாம். எதுக்கும் கொஞ்சம் பொறு... டொக்ரர் வருவார் கேட்டிட்டுக் குடிக்கலாம்." என்றான் நிமலன்.
"இது என்ன கோதாரியாய் இருக்குது? தாகத்திற்குத் தண்ணி கூடக் கிடையாதே? சும்மா வீட்டை போகவிடாமல் இவங்கள் என்ன ஆட்டம் காட்டுகிறாங்கள்?" என்றாள் சுகந்தி அரிகண்டத்தோடு.
"கொஞ்சம் பொறு பார்ப்பம்." என்றான் நிமலன். அவனும் துளிகூட நிம்மதி இல்லாது அந்தரித்தான்.

அந்த அவஸ்தையைத் தீர்த்து வைப்பது போல மருத்துவர் அறைக்குள் புகுந்தார். தாதி வந்து ஒருவாறு தேவியை அழைத்துக் கொண்டு வெளியே சென்றாள். மருத்துவர் "மாட்டின் கன்சன்" என்று கையைக் கொடுத்துத் தன்னை அறிமுகம் செய்துவிட்டு,
"இரண்டு பேரும் இருக்கும் போதே கதைக்கலாமா?" என்று சுகந்தியைப் பார்த்துக் கேட்டார்.
"ஓம்... எந்தப் பிரச்சனையும் இல்லை." என்றாள் சுகந்தி. மருத்துவர் இருவரையும் ஒரு முறை பார்த்துவிட்டு,
"நீங்கள் இருவரும் பதட்டப்படவோ பயப்படவோ தேவை இல்லை. காலம் கொஞ்சம் பிந்தினாலும் காப்பாற்றலாம் என்கின்ற நம்பிக்கை இருக்கிறது. உங்களுக்கு நான் நேரடியாக விசயத்தைச் சொல்லுகிறேன். சுகந்திக்குக் கணையத்தில் புற்று நோய் வந்து இருக்கிறது. நாங்கள் அதை மேலும் நுணுக்கமாகப் பரிசோதிக்க வேண்டும். அதன் பின்பு சத்திர சிகிச்சை செய்ய வேண்டும். சுகந்தி இங்கே குறைந்தது ஒரு கிழமை ஆவது தங்கி இருக்க

வேண்டும். எங்களோடு நீங்கள் அதற்கு ஒத்துழைக்க வேண்டும்."

"நீங்கள் என்ன சொல்லுறீங்கள்? கான்சர் எண்டா ஆபத்து இல்லையா டொக்ரர்?" என்று அவதிப்பட்டான் நிமலன்.

"அவதிப் படாதீர்கள். சுகந்திக்கு அமைதி வேண்டும். தூக்கம் வேண்டும். வருத்தம் குறைப்பதற்கு மருந்து கொடுக்க வேண்டும். பரிசோதனைகள் செய்ய வேண்டும். நீங்கள் உங்கள் குழந்தையையும் அழைத்துக் கொண்டு வீட்டிற்குச் செல்லுங்கள். மாலை வேளைகளில் நீங்கள் வந்து பார்க்கலாம்."

"டொக்ரர் கான்சர் எண்டா நான் செத்துப் போயிடுவனா?" என்றாள் சுகந்தி. நிமலன் முகத்தைப் பொத்திக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதான். மருத்துவர் அவனைத் தன்னோடு அணைத்து ஆறுதல் கூறினார். நிமலன் தான் செய்த தவற்றை உணர்ந்து சுகந்தியை அணைத்துக் கொண்டான்.

"நீங்கள் தேவை இல்லாமல் கவலைப்பட்டு எந்தவித பிரயோசனமும் இல்லை. அது உங்கள் உடலையும், மனதையும் மேலும் பலவீனமாக்கும் காரியம் ஆகிவிடும். ஆகவே இருவரும் மிகவும் துணிவோடும் நம்பிக்கையோடும் இருக்க வேண்டும். நாங்களும் வெற்றிக்காகக் கடுமையாக உழைப்போம். நீங்கள் பெரியவர்கள். உங்களுக்கு மிகுதி விளங்கும் என்று நினைக்கிறேன்." என்று கூறிய மருத்துவர் நிமலனின் தோழ் பட்டையில் அழுத்திவிட்டு வெளியே சென்றார்.

*

அடுத்து வந்த நாட்களில் நிமலனும் அரை நாளே வேலைக்குச் சென்றான். தேவியைப் பார்க்கும் வேலை சில வேளை புவனலோசினியிடமும் கொடுக்கப்பட்டது. பெரும் நோய் என்றாலும் நாட்கள் நம்பிக்கையோடும் கவலையோடும் நகர்ந்தன. நல்ல விதமாகச் சிகிச்சை முடிந்து ஒருவாறு சுகந்தி வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். எல்லோருக்கும் அது நிம்மதியாக இருந்தது. வருத்தம் பார்க்கவும் பலரும் வந்து போயினர்.

*

நிமலன் சாதாரண மனிதன். இந்த உலகத்தில் தோன்றுபவை நிஜம் என்று நம்புபவன். குடும்பம், மனைவி, வாழ்வு, பணம் என்கின்ற உலக வஸ்துக்களும், உறவுகளும் நீண்ட தொடராக இந்த உலகத்தில் நின்று நிலைக்கும் என்று எண்ணி இருந்தான். அது பொய்யாகும் என்கின்ற கற்பனை ஒரு போதும் அவனிடம் இருந்தது கிடையாது. நித்தமும் சா என்பது எம்மைச் சுற்றி நடக்கும் போதும் அது எமக்கும் எப்போதும் நேரலாம் என்பதையும், அப்படி நேர்ந்தால் அதையும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்றும் எண்ண முடியாத சாதாரண மனிதர்களில் அவனும் ஒருவன். காலம் பல வேளை மனிதக் கற்பனைகளை கனவாக்கிச் செல்கிறது. அதைச் சாதாரண மனிதர்களால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. இறப்பு என்பது நித்தமும் நடக்கிறது என்பதை எல்லாம் ஞானிகள் போல விளங்கிக் கொள்ளும் ஞானமும் எல்லோருக்கும் இருப்பதில்லை. இருந்தாலும் அது தனக்கு நேரும்போது தலைகீழாய் புரட்டிப் போடுவதும் உண்டு.

*

கடவுளுக்கு நிமலன் அப்பாவியாகத் தெரிந்தானோ பேராசைக் காரனாகத் தெரிந்தானோ தெரியவில்லை. அல்லது பாவக் கணக்குகளின் நிறை கூடினால் இறப்பு விரைவாக வருகிறதோ? அதற்கு எதிராக பாவக் கணக்கின் நிறை குறைவாக இருந்தால் இறப்பு விரைவாக வருகிறதோ? என்று அவனுக்கு விளங்கவில்லை. அவன் விளக்கமோ யாரது விளக்கமோ கேட்டு எதுவும் இவ்வுலகில் நடப்பதில்லை. எல்லாம் அதன் பாட்டில் நாங்கள் துச்சம் என்பதை என்றும் விளம்பிக் கொண்டு செல்கிறது.

இவை எல்லாம் முடிந்து காலம் ஒருவாறு சுமுகமாய் போவதாக எண்ணி இருந்த போது அது தலை கீழாக மாறியது. சுகந்திக்கு உடல் நிலை மீண்டும் வெகுவாகக் குன்றியது. மீண்டும் வயிற்றுக்குள் வலிப்பதாகக் கூறினாள். இம்முறை அவளை றாடியம்கொஸ்பிற்றலுக்கு உடனடியாக அனுப்பி வைத்தார்கள். அதுதான் புற்று நோய்க்கு நோர்வேயில் சிறந்த மருத்துவமனை. அவர்களும் தங்களால் இயன்ற வைத்தியத்தை "Radiotherapy,

chemotherapy" என்று செய்து பார்த்தார்கள். எதையும் நாங்கள் செய்யலாம். பல வேளைகளில் முடிவு எங்கள் கையில் இருப்பது இல்லை. அதை எங்களால் மாற்ற முடிவதில்லை. அது அப்படியே நிகழ்ந்தது. எல்லோரையும் அதிர்ச்சி புயலாக அடித்துச் சென்றது. நிமலன் சில காலம் பேச்சு இழந்து போனான். அம்மாவை இழந்து தவித்த தேவிக்கு அது மேலும் அதிர்ச்சி ஆகியது. பின்பு "TS" கொடுத்த அறிவுரைகளை ஏற்று மீண்டும் ஒருவாறு பேசத் தொடங்கினான். அந்தப் பிரச்சனைக்காக மருத்துவரிடம் செல்ல வேண்டிய அவசியம் வரவில்லை என்பது எல்லோருக்கும் ஆறுதலாக இருந்தது.

# 27 நிமலனும் தேவியும்

மனிதராய் பிறந்தாலும் நாங்களும் விலங்குகளே என்பதும், அதை முழுமையாக எங்களால் மறைக்க முடியாது என்பதும் என்றும் அசைக்க முடியாத பெரும் மலைகள் போன்ற உண்மைகள். அத்தினை உயிரினங்களுக்கும் அவற்றை ஈன்று எடுக்கும் தாயின் மீது இயற்கையாகவே அளவு கடந்த அன்பை வைத்து இருக்கின்றன. ஆண் மிருகத்தின் மீது ஒரு பயம் அல்லது மரியாதை அதன் வாரிசுகளுக்கு இருக்கலாம். சில வேளைகளில் மட்டுமே அது அன்பாக இருக்க முடியும். மனித மிருகங்கள் வித்தியாசமானவை. அவை தங்கள் அன்பை வைத்து மற்றைய மிருகத்தை ஆட்சி செய்யவோ அடிமைப்படுத்தவோ பல வேளைகளில் முயல்வது உண்டு. ஐரோப்பாவில் வாழும் சில பெண் மனித மிருகங்கள் இங்கு இருக்கும் உரிமைகளைச் சாதகமாய் பயன்படுத்திக் கொண்டு ஆண் மிருகங்களிடம் இருந்து தங்கள் சிசுக்களைப் பிரித்துக் கொண்டு செல்கின்றன. அதற்கு அன்புடன் கபடமும் பயன்படுத்தப் படுகிறது.

நிமலனுக்குக் கிடைத்த சுகந்தி மனிதத்தில் ஒரு புனிதமான தேவதை. அவள் இப்படியான எண்ணங்களை விரும்புபவள் இல்லை. இறப்பில்கூட அவனுக்கே அத்தினையும் அர்ப்பணித்து விட்டுச் சென்றவள். இந்த நற்குணத்தினால் இறைவன் அவளை அதிக காலம் உலகில் வாழ விடவில்லை என்று நிமலனுக்குக் கடவுள்மேல் கோபமாக இருக்கும். எங்கள் வசப்படாததின் மீது நாங்கள் கோவம் கொண்டு என்ன செய்ய முடியும்? மனிதன் மிகவும் அற்பமானவன். அவனை மிஞ்சிய சக்திகள் ஆயிரம் ஆயிரம். மனிதனின் வசப்படாவிட்டாலும் அதைப் பார்த்து அவனால் கோவம் கொள்ள மட்டும் முடிகிறது. அப்படித்தான் நிமலனின் கோபமும் இருந்தது. இறப்பு என்பது இழப்பு மாத்திரம் இல்லை என்பது நிமலனுக்கு விளங்கினாலும் தன்னைப் பொறுத்தவரை அது இழப்பாக மட்டுமே இருப்பதாக அவனால் உணர முடிந்தது.

தேவி சிறு குழந்தை. அதிலும் ஒரு பெண் குழந்தை. பெண் குழந்தைக்குத் தாய், தாயாகவும் தகப்பனாகவும் இருந்துவிட முடியும். தகப்பனால் அப்படி இலகுவாகத் தாயாகவும், தகப்பனாகவும் இருந்துவிட முடிவது இல்லை. இயற்கையே அதற்குத் தடை பரப்பியதாக அவனுக்குத் தோன்றும். தேவியை எப்படி அம்மாவாகவும், அப்பாவாகவும் இருந்து பாதுகாப்பது என்று அவனுக்குச் சில வேளை விளங்குவது இல்லை. எப்படியோ இதைச் சமாளிக்க வேண்டும் என்று அவன் எண்ணி இருந்தான். நாட்கள் நகர நகர எப்படிச் சமாளிப்பது என்கின்ற கேள்வி வீட்டில் வளர்க்கும் செல்லப் பிராணி போல் அவனுடன் பல நேரங்களில் குலாவியது.

நிமலனுக்கு இந்த இருதலைக் கொள்ளி எறும்பின் நிலைக்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை. "TS"ம் புவனலோசினியும் "நீ இப்பிடியே தனித்து இருந்து என்ன செய்யப் போகிறாய்? " என்று கேட்டார்கள். நிமலனுக்கு அதன் அர்த்தம் முழுமையாக முதலில் விளங்கவில்லை. இறப்பு என்பது இருப்பவர்களுக்கு இழப்பாகவும், இறந்தவனுக்கு பெரும் விடுதலையாகவும் அமைகிறது. நிமலனுக்கு அவள் இல்லாததால் இழப்பாகவும், தான் இழந்து தவிக்கும் சுகந்திக்கு, இந்தப் பூவுலக வாழ்வில் இருந்து நிரந்தர விடுதலையாகவும் இருக்கும் என்பதாக ஒரு எண்ணம் தோன்றியது. இந்த உடலுக்குள் உயிர் உள்ள வரைக்கும் அதன் அவஸ்தையில் இருந்து இலகுவாக யாராலும் தப்பித்து விட முடியாது என்பது விளங்கியது. நிமலனுக்கு இழப்பினால் ஏற்பட்ட மனவேதனையும், இருப்பினால் ஏற்படும் உடல் வேதனையும் நித்தமும் தொடர்ந்தது. அது உடல் வேதனை மட்டுமல்ல மன வேதனையும் ஆகும் என்பது அவனுக்கு விளங்கியது. இருந்தும் தேவிக்கு இன்று, தான் தாயும் தந்தையுமாக இருக்க வேண்டிய யதார்த்தமும் விளங்கியது. அதற்கு "TS" அப்படி எல்லாம் இருக்க முடியாது என்கிறார். இறந்தவருக்காக அல்லது பிரிந்தவருக்காக சன்னியாசம் இருக்க முடியாது என்று அடித்துக் கூறுகிறார். அவர் சொல்வதில் உள்ள நியாயம் விளங்கினாலும் தேவியை எண்ணும் போது முடிவு எடுக்க

முடியாமல் இருந்தது. பிள்ளை ஒன்று உடன் இருக்காவிட்டால் அந்த முடிவை எடுப்பது இலகுவாக இருந்திருக்கும். இறந்தவருக்காகவோ பிரிந்தவருக்காகவோ எவருடைய இவ்வுலக வாழ்க்கையும் உறைந்து விடுவதில்லை. அது மேற் கொண்டு முன்னேற வேண்டும் என்பதில் யாருக்கும் மாற்றுக் கருத்து இருக்க முடியாது என்பதும் அவனுக்கு விளங்கியது.

எண்ணங்களும் ஆசைகளும் இருந்தாலும் மனிதர்களின் விட்டுக் கொடுக்க முடியாத எதிர்பார்ப்பு அவர்களது வாழ்விற்குச் சாபமாகி விடுகிறது. நிச்சயம் இனி நிமலனால் ஐரோப்பிய மாதரை எண்ணிப் பார்க்கவே முடியாது. தமிழ் சமுதாயத்தில் திருமணம் என்பது அன்பிற்கான இணைவு மட்டும் அல்ல. அது பல வேளை அந்தஸ்திற்கான இணைவாக மட்டுமே இருக்கிறது. அதனாலேயே ஐம்பது வயது வரையும் காத்திருந்து, அந்த வயதிலும் முதல் மணம் செய்து இருக்காத மணமகனை அல்லது மணமகளை இருட்டுக் குகையில் குண்டூசியைத் தேடுவது போலத் தேடிக் கொண்டு இருக்கிறார்கள் பலர். ஒரு பிள்ளை தன்னுடன் வசிக்கிறாள் என்றால் பொருளாதாரத்தை வக்கிரமாகக் கணக்குப் பார்க்கும் யாரும் இலகுவாகத் திருமணம் செய்ய வரமாட்டார்கள் என்பது அவனுக்கு விளங்கியது. அதனால் அது தான் விரும்பினாலும் அண்மையில் அண்மிக்காத விடயம் என்பது அவனுக்கு விளங்கியது. இருந்தும் நிமலன் பலவாறு சிந்தித்த பின்பு தனக்கு இதில் சம்மதம் என்று சொல்ல வேண்டும் என்று எண்ணி இருந்தான். தனக்குச் சம்மதம் என்று சொன்னாலும் அது இப்போதைக்குச் சாத்தியம் ஆகாது என்கின்ற துணிவு அவனிடம் இருந்தது. காலப் போக்கில் அவன் எண்ணியது சரி என்றே அவனுக்குத் தோன்றியது. சேர்ப்பதற்கு இருக்கும் காரணங்களைவிடப் பிரிப்பதற்கு உரியக் காரணங்களை துருவித் துருவி ஆராய்வதிலேயே எம்மவர்கள் மிகவும் அக்கறையாக இருக்கிறார்கள் என்பது அவனுக்கு நன்கு விளங்கியது. தான் விரும்பினாலும் அது நடக்குமா என்கின்ற சந்தேகம்கூட அவனுக்குத் தோன்றத் தொடங்கியது. ஒரு வகையில் அது அவனுக்கு வெறுப்பாகவும் அலுப்பாகவும் இருந்தது. தற்போது

இதற்காகச் சக்தியை வீண் விரயம் செய்யாது தனது அன்றாட அலுவலைப் பார்க்க வேண்டும் என்றும், அது வந்து அமையும் போது அமையட்டும் என்றும் அவன் அதன் மேல் அக்கறை வைக்காது தனது அன்றாட வாழ்வை கவனிக்கத் தொடங்கினான். இருந்தும் இயற்கை ஒவ்வொரு உயிரின் மீதும் தான் வைத்திருக்கும் பிடியை எதற்காகவும், எப்போதும் விட்டுவிடுவதில்லை என்பதும் அவனுக்கு விளங்கியது.

*

நிமலன் வேலை முடிந்து தேவியைப் புவனலோசினியிடம் எடுப்பதற்குப் பேருந்தில் வந்தான். புவனலோசினிக்கும் "TS"க்கும் தங்களுக்கு இரண்டு பேரப்பிள்ளைகள் என்கின்ற நினைப்பு. தேவியைப் பார்த்துக் கொள்வது, அவளோடு விளையாடுவது என்றால் அவர்களுக்கு நேரம் போவதே தெரியாது. பல வேளை அவர்களே சென்று தேவியை எடுத்து வருவார்கள். அதற்கு நிமலன் இவர்களும் எடுக்க வருவார்கள் என்று ஒரு நாள் பாடசாலைக்கு அவர்களைக் கூட்டிச் சென்று அறிமுகப்படுத்த வேண்டி இருந்தது. அதில் பாடசாலை மிகவும் அவதானமாக இருக்கிறது. இருப்பதும் அவசியமே என்பதை எல்லோரும் அறிவார்கள். சொந்தத் தாய் தகப்பனே பிள்ளைகளைக் கடத்திக் கொண்டு அவர்களின் பழைய தாய் நாட்டிற்கு ஓடுவது இங்கு அடிக்கடி நடக்கும் சம்பவம். தாய் தகப்பனே கடத்துவதை ஒரு போதும் தடுக்க முடியாவிட்டாலும் மற்றவர்கள் அப்படிக் கடத்துவதற்கு அவர்கள் இலகுவாகச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்க விரும்புவது இல்லை. நிமலன் அறிமுகம் செய்து வைத்ததின் பின்பு அந்த வசதி அவனுக்கு இருந்தது. சில வேளைகளில் தேவி பற்றிய கவலையை ஒரு அலைபேசித் தொடர்பில் தீர்த்துக் கொள்ளலாம் என்கின்ற வசதி இருந்தது. இன்றும் அவனுக்காக அவர்கள் அந்த வசதியைச் செய்து கொடுத்ததால் ஆறுதலாகப் பேருந்தில் வந்தவனுக்கு இப்படி அந்தப் பயணம் தடைப்படும் என்கின்ற ஊகம் இருந்தது இல்லை. ஒரு கணம் அவனுக்குத் திகைப்பாக இருந்தது. பேருந்துகள் தொய்யன் உடன் நின்றுவிட்டன. இறங்கி நடந்தே "TS" வீட்டிற்குச் செல்வோம் என்று முடிவு எடுத்துவிட்டு இறங்கி நடக்கத் தொடங்கினான்.

அதே வேளைதான் இப்படி நடக்க வேண்டி வந்ததிற்கான காரணம் என்னவாக இருக்கும் என்கின்ற கேள்வி அவனைக் குடைந்தது. அதை அறிவதற்கு அவன் அதிகம் பிரயத்தனம் செய்ய வேண்டி இருக்கவில்லை. பேருந்தால் இறங்கிய உடனேயே தேர்த் திருவிழா போன்று முங் அருங்காட்சியகம் தொடக்கம் நின்ற சனங்களின் தொகை அதற்குச் சாட்சி ஆகியது. ஏதோ நடந்திருக்க வேண்டும் என்பது விளங்கியது. அதனால் என்ன நடந்திருக்கும் என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்கின்ற ஒரு வக்கிர ஆர்வம் அவனிடம் எழுந்தது.

நிமலன் நடந்து சனங்கள் கூடி நின்ற இடத்தை நோக்கிச் சென்றான். என்ன நடந்திருக்கும் என்பது முழுமையாகத் தெரியவில்லை. இருந்தும் அம்புலன்ஸ் காவல் என்பன வந்து நின்றதால் ஏதோ பெரிதாக நடந்து இருக்க வேண்டும் என்று தோன்றியது. வழமையாகச் சோபியன்வர்க் பூங்கா அமைதியாக இருக்கும். சில வேளைகளில் அது அமைதி இழந்து தவிப்பதும் உண்டு. இன்று அதற்கு மிகவும் தொல்லையான நாளாக இருக்கிறது. இந்தப் பூங்காவிற்கு நான்கு பக்கத்தினாலும் சனங்கள் வருவார்கள். அதைவிட இந்தப் பூங்காவிற்கு உள்ளும் குடிமனைகள் உண்டு. அதனால் அதிக மனித நடமாட்டம் உள்ள இடம் இது. அத்தோடு நகரின் மத்திய பகுதிக்கு அருகாமையால் இருப்பதால் அங்கு வாங்கிய போதைப் பொருட்களை கொண்டு வந்து வசதியாக இங்கு இருந்து பாவிப்பதற்கும் சிலருக்கு இந்தப் பூங்கா தேவைப்படும். அதைவிட விளையாட்டு, வித்தைக் காட்டும் மையம் என்று பலவும் பல வேளைப் பிரசன்னம் ஆகும். இன்று என்ன நடந்தது என்கின்ற கேள்வியோடு நிமலன் அந்தக் கூட்டத்திற்கு அருகாகச் சென்றான். இதில் நின்று தேவியை எடுக்க அதிக நேரம் தாமதம் ஆகவும் கூடாது என்று அவன் எண்ணினான். தாமதம் ஆனால் அதனால் யாருக்கும் தொல்லை இல்லை என்றாலும் அது நிமலனுக்கு ஒரு மாதிரியாக இருக்கும்.

அந்தக் கூட்டத்தில் ஒரு பாகிஸ்தான் காரர் நின்றார். அவர் முதலே அங்கு வந்திருக்க வேண்டும் போல அவனுக்குத் தோன்றியது. முதலில் அவரைப் பார்த்துச் சிரித்த நிமலன்,

"என்ன நடக்கிறது? ஏன் இவ்வளவு கூட்டம்?" என்று கேட்டான்.
"சரியாகத் தெரியாது. ஆனா... அந்தச் சோமாலியாக்காரனை கானாக்காரன் என்று சொல்லுகிறவன் தலையில் அடித்து இருக்க வேண்டும். எதற்கு என்று எனக்கு விளங்க இல்லை. அம்புலன்சிற்குள் சோமாலியாக்காரனை முதலில் ஏற்றினார்கள். அவன் அதற்கு உள்ளே ஏதோ யூரின் போய் பிரச்சனையாய் இருக்க வேண்டும். அவர்கள் இறக்கி விட்டார்கள். போலீசும் இவன் ஏதோ மூர்க்கமாய் இருக்கிறான் என்றும் அம்புலன்ஸ் செய்தது சரி என்றும் சொல்லுகிறார்கள். என்றாலும் எல்லாரும் சேர்ந்து தலையில் அடிபட்டவனை இப்பிடி விடக்கூடாது. அவன் கஞ்சா பாவிக்கிறவன் என்றும் சோமாலியா இளைஞன் ஒருவன் சொன்னான். பல காரணங்கள் அவன் அப்பிடிச் செய்ய ஏதுவாக இருந்து இருக்கலாம். ஆனா... அம்புலன்ஸ் சேவைக்கு என்று வந்துவிட்டு இப்பிடிச் செய்யக் கூடாது. அதுவும் போலீசும் இங்க சேர்ந்து நிற்கிறது. அதைப் பார்க்க எனக்கு ஒரு மாதிரி இருக்கிறது." என்றார் அவர்.
"இவ்வளவு நடந்து இருக்கிறதா? வெளிநாட்டுக்காரரான நாங்கள் எப்போதும் கவனமாகத்தான் இருக்க வேண்டும்." என்றான் நிமலன்.
"ம் எல்லோரையும் அப்பிடிச் சொல்ல முடியாது. என்றாலும் இன்னும் அங்கங்கே இருக்கத்தான் செய்கிறது." என்றுவிட்டு அவர் புறப்பட்டுச் செல்ல நிமலனும் தேவியின் ஞாபகம் வந்தவனாய் "TS" வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

*

நிமலன் ஒருவாறு "TS" வீட்டிற்கு வந்து சேர்ந்தான். நிமலன் வந்த வரத்தைப் பார்த்தே "TS"ற்கு மூக்கு வியர்த்து இருக்க வேண்டும். அவர் நிமலனைப் பார்த்து,
"என்ன நிமலன் அம்புலன்ஸ் சத்தமும் போலீஸ் சத்தமும் கேட்டுக் கொண்டே இருந்திச்சுது. என்ன நடக்குது?"
"நீயூசில காட்டினாலும் காட்டுவாங்கள். சோபியன்வர்க் பார்க்கில யாரோ சோமாலியாக்காரனை அம்புலன்சில ஏத்தாமல் ஒரே இழுபாடா இருக்குது. அவனுக்கு யாரோ கானாக்காரன் தலையில அடிச்சுப் போட்டானாம். போலீசும்

அம்புலன்ஸ்காரன்களுக்குச் சப்போட்டாம். அவன் ஏதோ தூள் அடிக்கிறவனாம். அம்புலன்சிற்கு உள்ள மூத்திரம் பெய்து போட்டானாம். அதால அம்புலன்சில ஏத்தாமல் ஒரே இழுபாடாம்." என்று மீண்டும் அதை ஒப்புவித்தான்.
"அதுவும் அப்பிடியே? ம் நாங்களும் கவனமாய் இருக்க வேணும். அவங்கள் எங்களைப் பொதுவா அடிக்கிறேல்லை. ஆனா... அடிக்கவும் சந்தர்ப்பம் இருக்குது. இவங்களும் இப்படி எங்களையும் ஏத்தாமல் விடலாம். எதுக்கும் நாங்களும் கவனமாய் இருக்க வேணும்." என்றார் "TS". அவருக்குக் கவலையாகவும் யோசனையாகவும் இருந்தது. தேவி ஓடி வந்து நிமலனைக் கட்டி அணைத்தாள். பின்பும் சிறிது நேரம் இருந்து கதைத்துவிட்டு நிமலன் வீட்டிற்குச் சென்றான்.

# 28 மீண்டும் ஆரம்பித்த அனர்த்தம்

கால் நோகிறது என்று தனது மருத்துவரிடம் "TS" சென்றார். அந்த மருத்துவருக்கு மருந்து கொடுப்பது என்றால் வேப்பெண்ணெய் குடிப்பது போல. அதைக் கடுமையாகக் கடைப்பிடிப்பதனால் தனது தொழிலின் ஆத்ம திருப்தியை அடைவதாக அவர் எப்போதும் எண்ணுவார். அதனால் வழமை போல் மருந்து கொடுக்காது முதலில் உடற்பயிற்சி செய்தால் மாறிவிடும் என்று முழங்காலிற்குப் பயிற்சி செய்யக் கூறி இருந்தார். அதன்படி உடற்பயிற்சி செய்தும் எந்த முன்னேற்றமும் இல்லை என்பதால் மீண்டும் "TS" அவரிடம் கதைப்பதற்குச் சென்றார். அதற்கு அவர் யோசித்துவிட்டு ஆக்கர் மருத்துவமனையில் மேற்கொண்டு பரிசோதிப்பதற்கான பரிந்துரை எழுதிக் கொடுத்தார். அதன்படி இன்று "TS" அந்த மருத்துவமனைக்குச் சென்றார்.

அவர் கண்கள் இயற்கையின் வசியத்தில் வசமாகித் தம்மை இழந்தன. விதவைக் கோலம் தவிர்த்த பூமாதேவி மீண்டும் கன்னியாகி, வீரியமாகப் பச்சைப் பட்டு உடுத்தும் காலம் இது. ஆதவன் அவள் அழகில் மையல் கொண்டு அவளைத் தொடர்ந்து நோக்கும் மோகம் பீரிட்ட நேரம். ஓஸ்லோ துப்பரவான, ஒழுங்கான நகரம்தான். இயற்கை கோடை என்னும் தோகை விரித்தால் அது இன்னும் அழகாகி விடும். அந்த மருத்துவமனை பழைய மருத்துவமனைகளில் ஒன்று. வாழ்வா சாவா என்கின்ற நிலையில் அதன் இன்றைய வாழ்க்கை அரசியல்வாதிகளின் கையில். அந்த மருத்துவமனை ஒரு நெடுஞ்சாலையை ஒட்டி இருந்தது. வளாகத்திற்கு உள்ளே கட்டடங்களுக்கும், பச்சை விரிப்புக்களுக்கும் குறைவில்லை. அதைவிடப் பரந்த பச்சை விரிப்பு நெடுஞ்சாலையைத் தாண்டி மறுபக்கத்தில் விரிந்து கிடக்கிறது.

மருத்துவமனைக்குள் சென்ற "TS"யைக் காக்க வைத்துப் பின்பு கதிர்வீச்சின் கீழ் உருட்டி எடுப்பதற்கு ஒரு

மணித்தியாலத்திற்கு மேல் ஆகியது. அதன் பின்பு விடையை மருத்துவருக்கு அனுப்புவதாய் கூறி விடை கொடுத்தனர். "TS"இற்கு ஒன்றும் எதிர்த்துக் கதைக்க முடியவில்லை. அவர் வேறு வழி இன்றிப் புறப்பட்டார். இனி நடந்தே வீட்டிற்குச் செல்லலாம் என்று நினைத்தவர் வேலையிலும் உடலை முறித்து, இப்போதும் எதற்கு என்று அந்த எண்ணத்தை அலுப்பில் கைவிட்டார். பின்பு மறு கரைக்குச் சென்று பேருந்தைப் பிடித்து வீட்டிற்குச் செல்வதில் மும்மரமானார். பேருந்துத் தரிப்பில் காத்து நிற்கும் போது பல அம்புலன்ஸ் வண்டிகளும் காவல் வண்டிகளும் கதறிய வண்ணம் அவரைக் கடந்து சென்றன. நகரம் என்றால் இப்படியான ஊர்வலங்களுக்குப் பஞ்சம் இருப்பதில்லை. அதில் இதுவும் ஒன்று என்று எண்ணியவர் என்றாலும் ஒஸ்லோவில் இப்போது குற்றம் அதிகரித்து இருக்கிறது என்பதற்கு இதுவும் ஒரு நல்ல உதாரணம் என்று எண்ணினார். சரி... இதற்குத்தான் என்ன செய்ய முடியும் என்கின்ற எண்ணத்தோடு வந்து நின்ற முப்பத்து ஒன்றாம் எண் பேருந்தில் ஏறினார்.

பேருந்திற்குள் ஏறியதும் இன்று அருள் ஏழுமணி போல் வீட்டிற்கு வருவான் என்று கூறியது "TS"ற்கு ஞாபகம் வந்தது. வேலையை விரைவாக முடித்துவிட்டு இன்று வீட்டிற்குப் போக வேண்டும் என்று எண்ணிக் கொண்டார்.

*

வேலையை முடித்துவிட்டு "TS" அவசரமாக வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அவருக்கு அருள் வருவதோடு செய்தியும் கட்டாயம் பார்க்க வேண்டும் என்கின்ற ஆர்வமும் இருந்தது. அந்த அம்புலன்ஸ் வண்டிகளின் ஞாபகம் அவர் மனதில் அழியாது கல்லில் வடித்த எழுத்துக்களாய் ஆழமாக இருந்தன. வீட்டிற்கு வந்து விரைவாக அலுவல்களை முடித்துக் கொண்டு அவசரமாக வந்து தொலைக்காட்சியை இயக்கிவிட்டு உட்கார்ந்தார். தொலைக்காட்சியில் செய்தி தொடங்கியது. அதில் அன்று அம்புலன்ஸ் ஓடியதற்கான காரணத்தை அறிய அறிய அவருக்குக் கவலையாக இருந்தது. யாரோ எவரோ என்றாலும், ஒரு பெண்ணும், இரண்டு பிள்ளைகளும்

இப்படி கோரமாக உயிர் விடுவதற்கு அவர்கள் என்ன தவறு செய்திருக்க முடியும்? அதுவும் இந்த நாட்டில் அப்படி மாளும் அவலம் ஏன் வருகிறது? வெளிநாட்டவர் அகதிகளாக வருகிறார்கள். அவர்கள் என்ன விதமான பாதிப்பில் இருந்து இங்கு வருகிறார்கள் என்று ஆழமாக ஆராயப்பட்டு, அதற்கான மனோ உதவி வழங்கப்படுவது இல்லை. தங்களுக்கு அப்படி எதுவும் நடக்கவில்லை என்பதோடு, எந்தவித மருத்துவப் பரிசோதனையும் செய்யவில்லை என்பதும் "TS"ற்கு நன்கு ஞாபகம் இருக்கிறது. ஏதோ சுற்றுலாவிற்காக வந்தவர்கள் என்கின்ற நினைப்பில் அப்படி நடத்தினார்களா என்பது அவருடைய விடை இல்லாத கேள்வி. உண்மையில் யுத்தகளத்தில் இருந்து தப்பி ஓடிவரும் ஒவ்வொரு மனிதனுக்கு உள்ளேயும் எவ்வளவு வேதனை, கோபம், ஏக்கம், வெறுப்பு ஆகியவை இருக்கும். அவற்றை உண்டு பண்ணும் சம்பவங்களைக் கண்ட ஞாபகம், அனுபவித்து வந்த கொடுமையான உணர்வுகள் உள்ளன என்பன பற்றி எந்தக் கரிசனையும் இல்லாது விட்டதின் மர்மம் "TS"க்கு ஒரு போதும் விளங்கியது இல்லை. ஏன் தங்கள் பிரசைகள் என்றவுடன் துடிக்கும் இவர்கள் மனதும் அதன் அக்கறையும் அகதிகள் மேல் இல்லாது போய் விட்டது? நாய் பூனைகளைத் தூக்கி வைத்து மகிழும் இவர்களுக்கு ஏன் மற்றைய மனிதர்களின் மேல் அந்தக் கரிசனையைக் காட்ட முடியவில்லை? கால நிலைக்கு ஏற்ப காலம் வகுத்த நிறம்தானா இந்த அற்ப மனிதருக்குள் விளைந்த வெறுப்பிற்கு காரணம்? நோர்வே அகதிகளை ஆதரித்தது பெருந்தன்மை. அதை முற்று முழுதாக ஆதரிக்காதது சிறுமை என்று அவர் எண்ணினார்.

*

தொலைக்காட்சியில் செய்தி தொடங்கியது. "TS" மிகவும் அக்கறையோடு சோபாவிற்கு மேல் சப்பாணி போட்டு அமர்ந்து அதை ஊன்றிக் கவனித்தார். அவர் எதிர்பார்ப்புச் சரியாக இருந்தது. அந்தக் கொலைகள் செய்தியில் முன்னணி ஆகி இருந்தது.

அது வசதியான தனி வீடுகள் உள்ள பகுதி ஒன்று. பெரிய மரங்கள் நிறைந்த அழகு சோலைக்குள் இருக்கும் வெள்ளை வீடுகள். அதில் பெரிய வீடாக ஒன்றை எடுத்து அகதிகளாக வந்தவர்களைத் தங்க வைத்து இருக்கிறார்கள். அந்தக் குடியிருப்பில் இந்தக் குடும்பத்தையும் குடி வைத்து இருக்கிறார்கள். எதற்காக நடந்தது என்பது தெரியவில்லை. இப்படிக் கொடுமையாகப் பிள்ளைகளை, மனைவியை அல்லது கூடப் பகிர்ந்தவளை சாதாரண மனநிலையில் இருக்கும் மனிதனால் கொல்ல முடியாது. பிள்ளையை ஒருவன் கொல்வது என்றால் அவன் மனநிலை ஏதோ ஒரு பிறழ்வில் அகப்பட்டுத் தவிக்க வேண்டும். அந்தக் குற்றவாளியைக் கைது செய்து விட்டார்கள். காவல் வரும் போதும் பெண் உயிருடன் இருந்தாளாம். அம்புலன்சில் கொண்டு செல்லும் போது அவள் உயிர் பிரிந்துவிட்டது. குழந்தைகளுக்கு அவளின் அவஸ்தை வேண்டாம் என்று இறைவன் முடிவு செய்துவிட்டான். அந்த வீட்டில் பலர் அப்போது நின்று இருக்கிறார்கள். கொலை செய்தவனும் காவல் வரும் வரையும் அங்கேயே நின்று இருக்கிறான்.

தொலைக் காட்சியில் அதை வைத்து அரைக்கத் தொடங்கினார்கள். அப்போது அருள் அழைப்பு மணியை அழுத்திய ஒலி அவரைக் குழப்பியது. "TS" அவசரமாகச் சென்று கதவைத் திறந்தார். அருள் தனியே நின்றான்.
"எங்க சொரூபாவும், அகலிகாவும் வர இல்லையே? நீ நல்லா மெலிஞ்ச மாதிரிக் கிடக்குது."
"அவை வயலின் வகுப்புக்குப் போயிட்டினம். பிள்ளைகளுக்கு வெளியில இருந்து உள்ள கொட்டி பெரிய ஆளாக்க வேணும் எண்டு எல்லாருக்கும் அடங்காத ஆசைதான். அது உண்மை ஞானம் இல்லை. அது தற்காலிகமான கசெற் மாதிரி... சுயமா எதுவும் வராது. சுயமா வருகிறது எண்டா அது உள்ள இருந்து வரவேணும். உண்மையான ஞானம் உள்ள இருந்து வற்றாமல் ஊற்றெடுக்கும். அப்பிடியான மனிசர்கள்தான் உயர்ந்த மனிசராய், மேதைகளாய் இருந்து இருக்கினம். இது வில்லங்கத்திற்கு கூட்டிக் கொண்டே அள்ளிக் கொட்டுகிற குப்பை எண்டு சொல்ல வேணும். ஏன் எண்டா அது அந்த மனிதனுக்கு விருப்பம் இல்லாத, தேவை

இல்லாத விசயம். அதில ஏதாவது மிஞ்சி நிண்டாப் பார்ப்பம்."

"நீ சொல்லுகிறதும் உண்மை அருள். அதுக்காக முயற்சி எடுக்காமலும் விடக்கூடாது தானே? பின்னால எப்பிடி வருகினம் எண்டது அவை அவையின்ரை அக்கறையைப் பொறுத்தது."

"நீங்கள் சொல்லுகிறது உண்மை. ஆனா... பிள்ளைகளை எதுக்கும் தெண்டிக்கக் கூடாது."

"ம்... விசயம் தெரியுமே? உங்க கிறப்சனுக்க கொலை நடந்ததாம். இரண்டு பிள்ளைகளையும் ஒரு மனிசியையும் ஒருத்தன் கொலை செய்து போட்டானாம். உனக்குத் தெரியுமே?"

"ஓ... நான் வேலை செய்து கொண்டு நிக்கேக்க ரேடியோவில கேட்டன். யாரோ வெளிநாட்டுக்காரர் எண்டு தெரியுது. எந்த நாடு, அவனுக்கும் அதுகளுக்கும் என்ன தொடர்பு எண்டு ஒண்டும் தெரியாது. அதைப் பற்றி ஒண்டும் செய்தியில சொல்ல இல்லை."

"வெளிநாட்டுக்காரர் எண்டா அவையிக்க என்ன தொடர்பாய் இருக்கும் அருள்? ஏதோ பிரச்சனையில, அந்தரத்தில கொலை செய்து இருக்கிறான் போல இருக்குது. ஆனா... பிள்ளையையும் கொண்டதைப் பார்க்க மெண்டலா இருப்பான் போலவும் இருக்குது."

"ம்... அப்பிடியும் இருக்கலாம். அதே வேளை, தான் இளக்கப் போகிறன் எண்டா இல்லாமலே செய்வம் எண்டு நினைக்கிறவங்களும் உண்டு தானே? இவன் எப்பிடிப்பட்டவன் எண்டு யாருக்குத் தெரியும்? எண்டாலும் மூண்டு உயிர்கள். கோரமான சாவு." என்றான் அருள்.

"ம் அகதிகளா வாற சனத்தின்ரை மனநலத்தைப் பற்றி இங்க சரியான கவனம் இருக்க இல்லை. வளர்ச்சி அடைஞ்ச நாடுகள் எண்டுகிற இவங்கள் அதைக் கவனமாய் செய்திருக்க வேணும். அதை விட்டிட்டு அகதிகளையும் அரசியலாகவும், வியாபாரமாகவும் ஆக்கினால் இப்படியான அவலங்கள் வரத்தான் செய்யும். நாங்கள் என்ன செய்ய முடியும்? எங்களை நாங்கள்தான் கவனமான கவனிச்சுக் கொள்ள வேணும்."

"உண்மைதான் "TS" அண்ணை. அதோடை வெளிநாட்டுச் சனமும் கொஞ்சம் இசகு பிசகு எண்டாலும் கொலையில கொண்டு போய் முடிக்குதுகள். யுத்தமும் அதால

வன்முறைக்கு அஞ்சாத குணமும் பட்டெண்டு கொலையில
போய் விடுகுது போல இருக்குது." என்றான் அருள்.
"இனியாவது இங்கத்தே அரசுகள் விளங்கிக் கொண்டு
செயற்பட்டால் நல்லாகத்தான் இருக்கும். ஆனா... அது
நடக்காது. அரசியல் எண்டாலே நாட்டுக்கு, மக்களுக்கு
நன்மை செய்ய வேணும் எண்டதைவிடத், தான் அல்லது
தங்கடை கட்சி ஆழ வேணும் எண்ட சுயநலம்
மட்டும்தான் முன்னுக்கு நிக்கும். இங்ககூடப் பதவியில
இருக்கும் போது கிடைக்கும் மரியாதைக்கும்,
வசதிக்குமாக ஒட்டுமொத்தச் சமுதாயத்தின்ரை
நன்மையையும் குழிதோண்டிப் புதைக்க சிலர் தயாராக
இருக்கினம். அதைவிட வேர்களை மறந்த விழுதுகளான
சில வரலாற்று அவமானச் சின்னங்கள் தங்கடை
நன்மைக்காக ஒரு சமுதாயத்தின்ரை ஒட்டுமொத்த
வருங்காலத்தையே பலிகொடுக்கிற சுயநலமிகளாக
இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்குத் தங்கள்
மேல் மலம் வீசப்படுவது பற்றிக்கூட எந்தக் கவலையும்
இல்லை. அப்படியான கட்சியில் இருப்பது பற்றி எங்களால்
நினைத்துக்கூடப் பார்க்க முடியாது இருக்கும் போது
அதில் அவர்களால் எப்படி அங்கத்தவராய் இருக்க
முடிகிறது என்பதை என்னால் என்றும் விளங்கிக் கொள்ள
முடியாது."
"அந்தக் கட்சியில இருக்கிறவங்கள் வெளிநாட்டுக்
காரரைப் பார்த்து ஆப்பிரிக்காவில இருந்து வந்த
குரங்குகள் எண்டுகிற நினைப்பு. நான் மந்திதான். எனக்கு
மான அவமானம் இல்லை எண்டு அவங்கடை காலை
நக்கிறவங்களை நாங்கள் என்ன செய்ய முடியும்? இது
சுத்தமான சுயநலம். யார் கெட்டால் என்ன, தான் வாழ
வேணும் எண்ட சுயநலம். உவங்களைப் பற்றிக்
கதைக்கிறது நாங்களே எங்கடை நேரத்தை வீணடிக்கிற
மாதிரி இருக்கும்." என்றான் அருள்.
"நீ சொல்லுகிறது உண்மைதான் அருள். இப்பிடியும்
சிலரால செய்ய முடியுதே எண்டு மனது பொறுக்குது
இல்லை." என்றார் "TS".
"எங்கடை நாட்டுப் பிரச்சனைக்கே நாங்கள் எதுவும்
செய்ய முடியாமல் போயிட்டுது. இதுகள் போடுகிற
கூத்திற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்? நாட்டில
அரசாங்கம் தையில இருந்து புத்தியோடை யுத்த

நிறுத்தத்தில இருந்து விலகீட்டுது. அதை செய்கிறதுக்கு ஏதோ ஒரு சரியான பின்புலம் இருக்க வேணும். அனேகமாக அது இந்தியாவாகத்தான் இருக்கும். அது ஏற்கனவே கற்றுத் தந்த பாடத்தைத் திரும்பவும் கற்பிக்கிறதா எங்கடை போராட்டம் வந்திடக் கூடாது. ஆனாப் புலியள் அதிலைதான் கொண்டே முடிப்பினம் எண்டு நினைக்கிறன். இப்ப ஆமி திட்டம் போட்டுத்தான் புலியளின்ரை வங்கரை அடிச்சுக் கொண்டு வாறாங்கள். புலியளுக்கு வந்த ஆயுதக் கப்பல்கள் எல்லாம் அடிபட்டதை பார்க்கேக்க இதுக்குப் பின்னால பெரிய திட்டங்கள் இருக்கலாம். எதில முடியும் எண்டு யாருக்கும் தெரியாது. ஆனா... அந்த முடிவு தமிழற்ற எதிர்காலத்தை நிர்ணயிக்கும் எண்டது மட்டும் நிச்சயம்."

"ஏதாவது திட்டமாய் இருக்கலாம் அருள். அவங்கள் அரசாங்கம். அதுவும் பல நாடுகள் உதவி செய்கிற அரசாங்கம். எதுவும் நடக்கலாம்தான். ஆனா... அது புலிகளுக்கும் தெரியும். நிச்சயம் அவங்கள் எதையும் சமாளிக்கத் தயாராக இருப்பாங்கள்."

"நீங்களும் தலைவர் உள்ளுக்க விட்டுத்தான் அடிப்பார் எண்டுகிறியள். பார்ப்பம். இப்ப ஏயார் அற்றாக்கும் கண்டபடி நடக்குதாம். பார்க்கப் போனா அவங்கள் ஏதோ முடிவு செய்திட்டுத் தொடங்கின மாதிரி இருக்குது. தலைவர் உள்ளுக்க விட்டிட்டுத்தான் அடிப்பார் எண்டு கடைசியில மொக்கியீனப் படுகிறதோ தெரியாது. இராணுவ வெற்றிக்கு ஆள்ப் பலம், ஆயுதப் பலம், தந்திரம் எல்லாம் தேவை. வர வரப் புலியளின்ரை பக்கத்தில அதுகள் எல்லாம் இல்லாமல் போகிற மாதிரி இருக்குது."

"பயப்படாத அருள். வெற்றி எங்களுக்கு நிச்சயம் கிடைக்கும். இராணுவமாய் தொடர்ந்து போராட முடியாட்டிப் பழையபடி அவங்கள் கொரில்லாவா மாறுவாங்கள். அவங்கள் மானம், மரியாதை எண்டு வறட்டுக் கௌரவம் பார்க்கப் போகிறது இல்லை?"

"நான் அவங்கள் அப்பிடி இனி மாறுவாங்கள் எண்டு நினைக்க இல்லை. அதுக்கு ஏதுவா அவைக்கு இப்ப எந்தப் பின்தளமும் இல்லை. ஆனா... மாறினால் சில வேளை நிண்டு பிடிக்கலாம். என்ன உந்தப் பட்டங்கள், பதவிகள், கட்டி வைச்சிருக்கிற ஆட்சிகள் எல்லாத்தையும் விட்டிட்டு ஓட வேணும்."

"அவசியம் வந்தால் அவங்கள் எல்லாம் செய்வாங்கள் அருள். எதுவும் வேண்டாம் எண்டுதானே போராட்டத்திற்குப் போனவங்கள். அவசியம் வந்தால் எதையும் இளக்கத் தயாராகத்தானே சையனெட் குப்பி அணிஞ்சு திரிகிறாங்கள். அப்படியானவங்கள் எதையும் நாட்டிற்காகச் செய்வாங்கள். அரசாங்கம் திட்டம் போட்டு யுத்த நிறுத்தத்தில இருந்து விலகித் தமிழரை அழிக்க நினைக்குது."
"அந்த அரசை ஆட்சிக்கு வர வைச்சது புலியள் தானே அண்ணை? அப்ப அவை கொஞ்சம் யோசிச்சு இருக்க வேணும். அதை நினைக்கேக்கதான் பொல்லுக் குடுத்து அடி வாங்கின மாதிரி இவையின்ரை அரசியல் எப்படிப் போகுது எண்டு பயமா இருக்குது. ரணிலைத் தோற்க வைச்சதில அரசியல் இருக்கிற மாதிரி எனக்குத் தெரிய இல்லை. அதில ராஜீவ்காந்தியைக் கொண்ட மாதிரிக் கோபம் மட்டும் இருந்த மாதிரித்தான் எனக்குத் தெரியுது."
"எங்களுக்குத் தெரிகிறதை விடத் தெரியாமல் நிறையக் காரணங்கள் இருக்கலாம். யாருக்கும் அவங்கள் ஏன் இப்படிச் செய்கிறாங்கள் எண்டு முழுமையா விளங்காது. நிச்சயம் எதாவது முக்கிய காரணங்கள் இருந்து இருக்கலாம். எல்லாம் வெல்லுவம் அருள்."
"யார் எண்டாலும் வெண்டாச் சரிதான் அண்ணை."

சரிஸ்காவும் திவ்வியாவும் தங்கள் அறைக்குள் இருந்து வெளியே வந்தார்கள். அருளை நோக்கி வந்தவர்கள்,
"அருள் அண்ணா வந்து கன நேரமே?"
"ஏன் உங்களுக்கு கதைச்சது ஒண்டும் கேட்க இல்லையே? நல்ல நித்திரை போல இருக்குது."
"ஒய்வு இல்லாமல் நோண்டிக் கொண்டு நிக்கிறதால ஏதோ அலுப்பு அப்பா... நான் நித்திரை கொள்ள அவளும் என்னோடை படுத்திட்டாள். நீயூசில என்ன சொன்னதப்பா?"
"அந்தக் கிறப்சனில நடந்த கொலையைப் பற்றித்தான் சொன்னாங்கள். அகதிகள் இருக்கிற இடத்தில அது நடந்து இருக்குது. பிரச்சனைகளை ஒழுங்காக் கையாளாமல் விடுகிறதால வருகிற பிரச்சனை இது."
"அதுவும் உண்மைதான். ஆனா... சில வெளிநாட்டுச் சனங்களுக்கு கொலை, குத்து வெட்டு ஒண்டும் பெரிய

விசயம் இல்லை. ஏன் எங்கடையளும் குறைவே? கொஞ்ச நாளைக்கு முதல்தானே அது நடந்தது."
"ம் சரிஸ்கா சொல்லுகிறதும் சரிதான்." என்றான் அருள்.
"அப்ப அருள் அண்ணை பாடு எப்பிடிப் போகுது?"
"ஏதோ வீடு, வேலை எண்டு விசியாப் போகுது."
"இங்க எல்லாருக்கும் அதுதானே வாழ்க்கை அண்ணா? நான் இவளுக்குச் சாப்பாடு எடுத்துக் கொண்டு வாறன். உங்களுக்கு ரீ ஒண்டும் அம்மா கொண்டு வர இல்லையா?" என்று கேட்டுவிட்டு அவள் அடுக்களையை நோக்கிச் சென்றாள்.

# 29 மாறிய கோலங்கள்

எத்தினை வர்ணங்கள் இந்தப் பூமியில் இருக்கின்றன என்பது சாமானியனுக்குத் தெரியாது. ஓவியனின் கண்களுக்கு மட்டுமே அது பூரிக்கும். இயற்கையின் அற்புதம் இங்கு மலிவாக மலிந்து கிடக்க, அது மகிழ்வாக இந்திர லோகத்து ஜாலம் காட்டுவது இங்கு அற்புதமாய் நடக்கும். அதில் காலங்கள் இன்பக் கவி பாடி விரைவாகச் செல்லும். நித்தமும் மாறும் அரியக் காட்சியாக இயற்கை தனது வர்ணங்களை எங்கும் அள்ளி இறைக்கும் அதி அற்புதம். அதன் அழகு சித்திரங்கள். யாவும் மயங்கும் இந்த ஞாலத்தின் கோலம். அதன் பருவகாலத்தில் வரும் இலையுதிர் காலம்கூட எத்தினை அழகு. அதில் எத்தினை வர்ணங்கள்? தங்கமாகத் தகதகக்கும் இலைகள் நிறைந்த இயற்கையின் தங்க மரங்களை பூமியில் இங்கு மாத்திரம்தான் காண முடியுமா? அதைவிடச் சிகப்பும் மஞ்சளும் சேர்த்துக் குழைத்த நிறத்தில் இலைகளைக் கொண்ட மரங்களின் அழகு கோலங்கள். அந்த இலைகள்தான் எவ்வளவு மேன்மையானவை? அவை இருக்கும் போது முழுமரத்திற்குமாய் உழைக்கின்றன. இறக்கும் போது அழகாக இறக்கின்றன. இறந்த பின்பும் அது மீண்டும் அதற்கே உரமாகிறது. எந்தச் சுயநலமும் அற்ற அதன் வாழ்வு யாரிடம் இருக்கிறது? மனிதர்களில் எத்தினை பேரால் அப்படி இருக்க முடிகிறது? பிறருக்காக வாழ்கிறேன் என்று எல்லோரும் சொல்லலாம். உண்மை உடன், முழுமையாக எத்தினை பேரால் பிறருக்காக முழுமையாக வாழ முடிகிறது? அப்படி வாழ முடியாவிட்டாலும் பல மனிதர்களால் பிற மனிதர்களின் உதிர்விற்காய் கவலைப்பட முடியும். அதுவும் பிள்ளையின் உதிர்வு பெற்றவர்களை ஒரு போதும் இலகுவாக விட்டு விடுவதில்லை. அது உயிர் உள்ளவரை அணைந்து விடாத அக்கினிக் குஞ்சாய் மனதிற்குள் ஒளிந்து இருக்கும்.

அன்று நரேசின் நினைவு தினம். தாமோதரன் முதலாவது நினைவு நாளைப் பெரிதாகச் செய்து இருந்தார். அதன் பின்பு தனது பழைய வட்டத்தோடு அதை முடித்துக் கொள்வதே அவர் வழமை ஆகியது. அப்படியே இம்முறையும் தனது வழமையான வட்டத்தை அதற்குக் கூப்பிட்டு இருந்தார். அங்கே சென்ற பலருக்கும் அவர் கோலத்தைப் பார்த்துத் திகைப்பாக இருந்தது. தாமோதரனை இந்தக் கோலத்தில் பார்க்கப் பலருக்கும் நம்ப முடியாத வியப்பாகவும் பரிதாபமாகவும் இருந்தது. சிவாவிற்கு அத்தோடு சிறிது நகைப்பாக இருந்தது. அது இன்று மட்டுமா அல்லது நிரந்தரமா என்பது ஒருவருக்கும் தெரியாது. அப்படி நிரந்தரம் என்றால் அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று மகனை இழந்த சோகம் அவரை இன்றுவரை விடவே இல்லை. அடுத்தது நாட்டில் அவர் நினைத்ததிற்கு எதிராகவே எல்லாம் நடக்கின்ற யதார்த்தத்தின் உறுத்தல். அதனால் மனம் வெறுத்து அவர் காவிக்கு மாறினாலும் அவரின் மனது எந்த அளவிற்குக் காவிக்கு மாறி இருக்கும் என்பதில் சிவாவிற்கு இப்போதும் பாரிய சந்தேகம் இருந்தது. மகனின் இழப்பால் வந்த சோகத்தையும் அதன் பாதிப்பையும் அவன் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை. ஆனால் நாட்டுப் பிரச்சனை பற்றி அவருக்கு இருக்கும் தெளிவற்ற தன்மை, அவர்கள் மேல் வைத்து இருக்கும் கண்மூடித்தனமான நம்பிக்கை, அதனால் அவருக்கு மற்றவர்கள் மேல் வரும் வெறுப்பு, ஆகியவை சிவாவிற்கு பல வேளை நகைப்பை உண்டு பண்ணும். இது இன்றும் அவனிடம் மாறவில்லை. இருந்தும் அவன் அதை அவரிடமே கேட்காது அவரைப் பார்த்துக் கொண்டு இருந்தான். அவனால் அதிக நேரம் அப்படி இருக்க முடியவில்லை. அவனின் தவிப்பைப் பார்த்த அருள்,

"என்ன சிவா இப்பிடிப் பேசா மடந்தையாய் இருக்கிறாய்? அது எப்பிடி உன்னால இண்டைக்கு அப்பிடி இருக்க முடியிது? அதுதானே தாமோதரன் அண்ணை காவி கட்டி இருக்கிறார். அப்ப நாங்கள் என்ன கதைச்சாலும் அவர் இப்ப கோவிக்கமாட்டார். கோவிக்கக் கூடாது. இண்டைக்குக் கோவிச்சாலும் வீட்டை விட்டா ஓட முடியும்? என்ன சோகத்தில இருக்கிறவரை நாங்களும்

கடுமையாகச் சோகப்படுத்தாமல் பார்ப்பம்." என்றுவிட்டு அருள் தாமோதரனைப் பார்க்கச் சிவாவும் பார்த்தான்.
"பயப்பிடாதேங்க... எல்லாமே கை விட்டுப் போயிடும் போல இருக்குது. நீங்கள் என்ன எண்டாலும் கதையுங்கோ. அதால அங்க எதுவும் மாறப் போகிறது இல்லை. உண்மையில எல்லாம் அநியாயமாய் போய்க்கொண்டு இருக்குது. அதுக்கு எங்களுக்கு உள்ள இருக்கிற வேறுபாடும், முரண்பாடும் முக்கிய காரணம்." என்றார் தாமோதரன்.
"தாமோதரன் அண்ணையா இப்படிக் கதைக்கிறது? ம்... எல்லாம் காலம் தரும் பாடம்தான். எங்களுக்கு மாத்திரம் குறை சொல்ல வேணும் எண்டா ஆசை? இப்படிப் போகக் கூடாது எண்ட பதட்டத்திலதான் கத்திக் கொண்டு இருந்தம். ஒருத்தரும் எங்களை நம்ப இல்லை. எழுந்தமானத்திற்கு எங்களைத் துரோகிகள் ஆக்கிச்சினம்." என்றான் சிவா.
"ம்... இப்பவும் முழுமையாக் கைவிட்ட மாதிரி ஒண்டும் இல்லை. இன்னும் நிறைய நம்பிக்கை இருக்குது. நிறையச் சந்தர்ப்பமும் இருக்குது. ஆனா... என்னைப் பொறுத்தவரை இனி நான் முன்னை மாதிரி மூர்க்கமா இதுக்காகச் செயற்படப் போகிறது இல்லை." என்றார் தாமோதரன்.
"அப்ப உந்தக் காவி தற்காலிகமா அண்ணை?" என்றான் அருள்.
"அப்பிடி இல்லை அருள். இயலுமானவரை கட்டுவமுங்கோ. இயலுமானவரைச் சாந்தமா இருக்கப் பார்ப்பமுங்கோ. எல்லாத்துக்கும் நல்ல முடிவு வரும் எண்டு நம்புவம்." என்றார் தாமோதரன்.
"அது நல்லதுதான்." என்றான் அருள்.
"யாருக்காகவும் நாட்டுப்பிரச்சனையைப் பற்றிக் கதைக்காமல் இருக்க முடியாது. இப்ப கிட்டத்தட்ட மன்னார் கைவிட்டுப் போச்சுது. மன்னார்ப் போராட்டமும், இயக்கம் அங்க நிண்டு நிலைக்கிறதும் தமிழருக்குப் பல வகையில முக்கியம். அதைக் கைவிட்டது இராணுவத்தைப் பலம் ஆக்கிப் பெடியளைப் பலவீனம் ஆக்கிப் போட்டுது. ஒரு காலத்தில காடு மேடு ஆமிக்குச் சரிவராது எண்டு இருந்திச்சுது. இப்ப அவங்களுக்குக் காடு மேடுதான் பிடிச்ச இடமா இருக்குது. ஆமிக்கு மட்டும்தான்

அம்பூஸ் வைக்கலாம் எண்டு நினைச்சினம். அதைத் திருப்பிப் பெடியளுக்கும் வைக்கலாம் எண்டதை அவங்கள் இப்ப செய்து காட்டுகிறாங்கள். இல்லாதது எல்லாம் இருக்கிற மாதிரிப் பெடியள் நிறையத் தம்பட்டம் அடிச்ச உண்மை இப்ப தெரியுது. கிளிநொச்சியை ஆவதும் வருங்காலத்தில ஆமியிட்டை விழாமல் காப்பாத்தினால் சரிதான்."

"கிளிநொச்சியை விடமாட்டாங்களுங்கோ. அதை விட்டாப் போராட்டத்தை முடிவுக்குக் கொண்டு வாற மாதிரித்தான் போயிடும். கடைசிப் புலி உயிரோடை இருக்கிற வரைக்கும் கிளிநொச்சியைக் காப்பாற்றுகிறது அவங்கடை உயிர் மூச்சா இருக்கும்."

"புலியளின்ரை வாழ்வா சாவா எண்டுகிறதே கிளிநொச்சியைக் காப்பாத்துகிறதிலதான் இருக்குது. அதுக்கும் உள்ளுக்க விட்டுத்தான் அடிப்பம் எண்டாக் கடைசியில இவையளை உள்ளுக்க விட்டுத்தான் ஆமி அடிப்பான். இந்தியன் ஆமி தோத்ததுக்குப் பல காரணம் இருக்கலாம். அது நடந்து கொண்ட முறை காந்தி தேசத்தை ஞாபகப்படுத்தாமல் ஏகாதிபத்தியத்தின் பேய் முகத்தைக் காட்டிச் சென்ற மாதிரி இருக்கலாம். பேயை நம்பாமல் பிசாசிட்டப் போன அனுபவம் தமிழ் மக்களுக்கு அவங்களால ஏற்பட்டிச்சுது. இலங்கை ஆமி இப்ப வெல்லுகிறதுக்கு ஒரு வகையில புலிகள்தான் காரணம் எண்டு சொல்ல வேணும். நான் இப்பிடிச் சொன்னா நீங்கள் இப்பவும் கோவிப்பியள். ஆனா... ஆழமாய் சிந்திச்சா அது விளங்கும்." என்றான் சிவா.

"புலியள் காரணம் எண்டு இலேசா எல்லாரும் சொல்லலாம். ஆனா... அவங்கள் எண்டதாலதான் போராட்டம் இப்பிடியாவது நடக்குது? மற்ற இயக்கங்கள் எண்டா அது எப்பவோ முடிஞ்சு இருக்கும்." என்றார் "TS".

""TS" அண்ணை போராட்டம் எந்தத்திற்கு நடத்துகிறது? உரிமையைப் பெறுகிறதுக்கு ஒரு ஆயுதமாகத்தான் அதைப் பாவிக்க வேணும். இது போராட்டமே வாழ்க்கை எண்ட மாதிரி நடக்குது. அதைவிடச் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற மாதிரி நுணுக்கமா அரசியல் முடிவு எடுக்காமல் சாணக்கியன் மாதிரி எல்லாத் தலையும் விழுந்தால்தான் குடுமியை முடிவன் எண்டு அடம் பிடிக்கிறது இந்தக் கால அரசியலுக்குச் சரிவராது. அதுதான் இப்பவும் தொடர்ந்து

நடக்குது. இனி இவை சமாதானத்திற்குப் போனாலும் அவங்கள் சமாதானத்திற்கு வருவாங்களா எண்டது ஐமிச்சம். மகிந்தா நிச்சயம் மசியமாட்டார். அது மாத்திரம் நிச்சயமாத் தெரியுது." என்றான் சிவா.

"சிவா சொல்லுகிறது சரிதான். மன்னாரை விட்டால் பருவாய் இல்லை. ஓயாத அலைகள் எண்ட மாதிரி இப்ப ஆமியின்ரை ஓயாத அலைகள் அடிக்கிற காலம் இது. ஒவ்வொரு இடமாய் போகுது. கேட்க எங்களுக்கே கவலையா இருக்குது. உயிலங்குளம், பெரியமடு, விடத்தல் தீவு, இலுப்பைக் கடவை, வெள்ளான் குளம், நாச்சிக்குடா, எண்டு இப்ப கடைசியா உயிலன் குளம் ரவுணும் ஆமியிட்டப் போயிட்டுது எண்டதுதான் உண்மை. ஓடத் தொடங்கினது நிற்கிற மாதிரித் தெரிய இல்லை. நிண்டாக்கூட இனி விட்ட இடங்களை லேசில திரும்பப் பிடிக்க இயலாது எண்டது உண்மை. எல்லாரும் எல்லா விதத்திலும் நல்லா இறுக்கிப் போட்டாங்கள். இனி எந்த உதவியும் யாரிட்டை இருந்தும் நிச்சயம் வரப் போகிறதும் இல்லை. இப்ப சனத்தைப் பலி ஆடுகளாக வைச்சுக் கொண்டு... சீ... இதை எப்பிடிப் போராட்டம் எண்டு சொல்லுகிறது? சனத்திற்காகப் போராட்டம் எண்டது மறந்து போய் சனத்தைக் கொல்லுகிறதே போராட்டம் எண்ட மாதிரி இருக்குது." என்றான் அருள். அவனுக்குப் போராட்டத்தைப் பற்றி நினைத்தாலே எப்போதும் வெறுப்பு வரும். அது இப்போது இன்னும் அதிகமாக இருந்தது. சரித்திரம் பார்த்துச் சிரிக்கும் நிகழ்வாகப் பேருந்திற்குக் கல் எறிந்த விளையாட்டாக எங்கள் போராட்டம் முடியலாம் என்கின்ற வெறுப்பு அவன் மனதில் இருந்தது. இதற்குத்தான் இருந்த இயக்கமும் ஒரு காரணமாய் இருந்தாலும் புலிகளே அதன் முக்கிய, தவிர்க்க முடியாத காரணம் என்கின்ற எண்ணம் அவன் மனதில் இருக்கும் நிலையான கருத்து ஆகும். ஒன்று மட்டும் அவனுக்கு விளங்கியது. போராட்டம் வென்றாலும் தமிழர்கள் அழப்போகிறார்கள். போராட்டம் தோற்றாலும் அவர்கள் அழியப் போகிறார்கள். ஆனாலும் அழிந்து கொண்டு இருக்காமல் அதற்கு ஒரு முடிவு வரவேண்டும் என்று அவன் மனதிற்குள் எண்ணினான்.

"அருள் சுத்திச் சுத்தி அவங்களைக் குறை சொல்லுகிறதிலதான் நீங்களும் ஏதோ திருப்திப்படுகிறியளுங்கோ." என்றார் தாமோதரன்.
"அப்பிடி இல்லைத் தாமோதரன் அண்ணை. எல்லா இயக்கத்திற்கும் பங்கு இருந்தாலும் எல்லாப் பொறுப்பையும் இப்ப புலிகள்தான் ஏற்க வேணும். கடைசியில போராட்டத்தின்ரை ஒட்டு மொத்த உரிமையையும் வலுவில எடுத்துக் கொண்டவை அவை தானே? அந்த நேரமே இந்தப் போராட்டத்தின்ரை முடிவுக்கும் தாங்களே பொறுப்பேற்க வேணும் எண்டதை நல்லா விளங்கி இருக்க வேணும்."
"ஆமி இப்ப அடிக்கிற மாதிரிக்கு அவங்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறாங்கள் எண்டு தெரியுது. கருணாவையும் கலைச்சு, மகிந்தாவையும் வெல்ல வைச்சதால இவை என்ன அரசியல் ஆதாயத்தைக் காண முடியும்? இனிக் கடவுள்தான் காப்பாத்த வேணும் எண்ட மாதிரி நிலைமை இப்ப இருக்குது. எல்லாரும் எதிர் எண்டதும் அவைக்குத் தெரியும். பிறகு எதுக்குச் சனத்தைப் பணயம் வைச்சு இந்த ஆபத்தான விளையாட்டு? இந்தியா எப்பவும் கொள்கை அளவில பெடியளுக்கு எதிர்தான். தமிழ்நாடு இனி ஒரு நாளும் உருப்படியா எங்களுக்கு உதவி செய்யாது. ஐரோப்பா, அமெரிக்கா எண்டு உலகமே ஒட்டுமொத்தமாய் எதிர். தனிமைப் படுத்தப்பட்ட புலிகளும் தன்நலத்தால எங்களைப் போல ஓடிவந்த வால்களும் இனி என்ன செய்யமுடியும்? இருக்கிற இடங்களையும் இனி எவ்வளவு நாளைக்கு காப்பாத்தி வைச்சிருப்பினம் எண்டதும் கேள்விதான்." என்றான் நிமலன்.
"ம்... நிமலன் சொல்லுகிறது முழுக்க முழுக்க உண்மை. எனக்கு உதில இனிப் பெரிய மாற்றங்கள் வரும் எண்ட நம்பிக்கை கொஞ்சமும் இல்லை. கடதாசியில கட்டின வீடு மாதிரி எங்கடை போராட்டத்தின்ரை கதையும் முடியும் எண்டு நான் நினைக்கிறன். கிளிநொச்சியில கடைசி முடிவு தெரியும். அதுவும் விழுந்தாப் பேசாமல் சனத்தைத் தப்ப விட்டிட்டு பழைய போராட்ட முறைக்குப் போகிறது புத்தி." என்றான் சிவா.
"சிவா நம்பிக்கைதான் போராட்டம். அது இல்லாட்டி எங்கடை போராட்டம் இந்த அளவிற்கு வளர்ந்து

இருக்காது. அந்த நம்பிக்கை இப்பவும் பெடியளிட்டையும் சனத்திட்டையும் இருக்குதுங்கோ." என்றார் தாமோதரன்.

சிவா பதில் அழிக்காது சிரித்தான். மனிதர்கள் பல விதமாக இருக்கிறார்கள். அவர்கள் எண்ணங்களும் அதே போல வித்தியாசமானவை. அந்த வித்தியாசங்களைச் சகமனிதர்களால் சாதாரணமாய் அழித்துவிட முடியாது. சகித்துக் கொள்ள வேண்டியது பல மனிதர்களின் கட்டாயம் என்று அவனுக்கு விளங்கியது.
"ஒரு வகையில சொல்லப் போனால் வெளிநாட்டில போராட்டம் வலுக்குது. உள்நாட்டில போராட்டம் திசை தெரியாமல் போய் கொண்டு இருக்குது. இங்க இவை கத்துகிறதுக்கு ஒரு மதிப்பும் இருக்கிற மாதிரித் தெரிய இல்லை. அது முத்திரை குத்தின ஒரு இயக்கத்துக்கு ஆதரவாக் குரல் கொடுக்கிறதைப் பார்த்து இங்க இருக்கிறவங்களும் பயங்கரவாதிகள் எண்டுதான் இவங்கள் நினைக்கிறாங்கள். அதுதான் இவை என்ன கத்தினாலும் எதிலும் காட்டுகிறாங்கள் இல்லை."
"அது இந்த மேற்கு நாடுகள் எப்பதான் ஆயுதப் போராட்டத்தை ஆதரிச்சவை? ஆயுதத்தையும் செய்து விற்பாங்கள். அதை வைச்சு ஏகாதிபத்தியத்தை வளர்ப்பாங்கள். தங்களுக்குச் சாதகமாய் இருக்கப் போராட்டத்தை ஏற்படுத்துவாங்கள். தங்களுக்கு எதிர் எண்டா அதை அழிப்பாங்கள். ஆனா... எந்த நீதியான போராட்டத்தையும் ஆதரிக்கவே மாட்டாங்கள். உலகத்தில நடக்கிற அநியாயங்களுக்கு எல்லாம் இவங்கள்தான் காரணம். இவங்கடை ஊடகத்தில காட்டினால் என்ன காட்டாட்டி என்ன?" என்றான் சண்முகன்.
"இவங்கள் மாத்திரம் இல்லைச் சண்முகா, பொதுவுடமை, சமவுடமை எண்டு எல்லா நாடுகளும் கண்டும் காணாமலும்தான் இருக்குது. ம்.... சொந்த இனமே எங்களை முழுமையாக் கைவிட்டிட்டுது. பிறகு அதை விளங்காமல் நாங்கள் மேற்கும் தெற்கும் கதைக்கிறம். எங்களால தானே எங்டை இரத்தமே எங்களுக்காக் கொதிக்காமல் உறைஞ்சுபோய் கிடக்குது. நாங்கள் நடத்தின போராட்டம் சரியான பாதையில போக இல்லை எண்டது இப்ப ஆவது யாருக்கும் விளங்குமா இல்லையா?" என்றான் சிவா.

தாமோதரன் இன்றும் அவனை ஒரு கணம் ஒரு மாதிரிப் பார்த்துவிட்டு அதை உடனடியாக மாற்றிக் கொண்டார். இவன் சொல்வதுதான் சில வேளைச் சரியோ என்கின்ற எண்ணம் அவர் உள்ளத்தில் ஒரு கணம் தோன்றிக் கானல் நீராக மறைந்து போயிற்று. "இல்லை அவங்கள் வெல்லுவாங்கள்." என்கின்ற நம்பிக்கை அவர் தப்பை திருத்திக் கொள்ளுமாறு அவருக்குக் கட்டளை இட்டது. அவரின் காவி தோற்பதற்கேதான் வரம் பெற்றேன் என்றது கவலையாக.

"நாங்கள் தேவை இல்லாமல் பயப்பிட வேண்டியது இல்லை. புலியள் வெல்லுவாங்கள். தோற்கிறதும் வெல்லுகிறதும் அவங்கடை சரித்திரத்தில தொடர்ந்து நடக்கிற காரியம் தானே?" என்றான் றுபன்.

"எந்த நாடும் தங்கடை சுயநலத்தை மீறிப் பொது நலம் செய்யப் போகிறது இல்லை. கொள்கை எல்லாம் தங்கடை சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் வரைக்கும்தான். அதை மீறிப் போராட்டம் எண்டுகிறது அவங்களுக்கு முக்கியம் இல்லை. போராட்டம் எண்டுகிறதே உண்மையில அவங்கள் தங்கடை சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ள அவங்களாலேயே மறைமுகமாக உருவாக்கப் படுகிறது தானே? அதற்குச் சில தத்துவங்கள் தேவைப்படும். அதை நாங்கள் இசங்களாக்கித் தலையில தூக்கி வைச்சுக் கூத்தாடுகிறம். உண்மையில சுயநலத்தை மீறி எந்தப் போராட்டமும் இல்லை. சுயநலத்தைக் காப்பாற்றவே எல்லாப் போராட்டங்களும். நாங்களும் எங்கடை இனமும் ஒரு வகையில அரசியல் தெரியாமல் வலையில அகப்பட்ட மீன்கள் போல... அதுக்கு என்ன முடிவு வரும் எண்டு நினைக்க முடியும்?"

"சிவா அண்ணை தொடங்கீட்டார்." என்றான் றுபன்.

"சிவா அண்ணை சொல்லுகிறது உண்மைதான். எங்கடை போராட்டம் எப்பிடிப் போகும் எண்டது கேள்விக்குறியே. அது எப்பவோ எங்களுக்குத் தெரியும். அது இப்ப இன்னும் உறுதியாகீட்டுது." என்றான் நிமலன்.

அவன் கூறி முடிக்கும் போது றுபன் அந்த அலைபேசியை வெளியே எடுத்தான். அது ஒரு கறுப்பு நிறமான "Nokia N82". இந்த வருசத்திற்கான சிறந்த அலைபேசி என்கின்ற

பெயருக்கு ஏற்ப அடக்கமாகவும், அழகாகவும் இருந்தது. றுபன் வெளியே எடுத்த அலை பேசியைப் பார்த்த சிவா, "பார்க்க நல்லா இருக்குது. உதிலை என்ன விசேசம்?" என்றான்.

"நல்ல கமேறா, நல்ல சவுண்ட், நல்ல ஸ்கிறீன், வைபை, வீடியோக் கமேறா, ஜிபிஸ் எண்டு ஒரு கொம்பியூற்றர் மாதிரி நிறையச் சிஸ்ரம் இதில இருக்குது. எங்கையும் எப்பவும் படமும், வீடியோவும் எடுக்க வசதியா இருக்கும். அதுக்கான இடத்தையும் இதில பெருப்பிக்கலாம்." என்றான் றுபன்.

"என்னுடைய மொபீலும் பழசாப் போச்சுது. இப்பிடி ஒண்டு வாங்கினால் நல்லதுதான். அடுத்த முறை சம்பளம் வரேக்க கட்டாயம் ஒண்டு பார்க்கத்தான் வேணும்." என்றான் அருள்.

"இந்த கொம்பனியள் என்ன நினைக்குதுகளோ அதுக்கு நாங்கள் பலியாடுகள் ஆகிறம். அதில மாத்திரம் இந்தக் கொம்பனியளுக்கு எப்பவும் வெற்றிதான்." என்றான் சிவா.

"இது உலகளாவியது. இதிலை யாரும் தப்ப முடியாது. ஆசைகளுக்கும், வசதிக்கும் வசப்படுகிற மனிதர் எம்மாத்திரம்?" என்றார் "TS".

"எல்லாம் ஒருவித மாயையில் மயக்கம்." என்றார் தாமோதரன் ஞானம் பெற்றவராய். அவரின் அந்த வசனத்தைப் பற்றிய நினைவில் சிவாவிற்குச் சிரிப்பு வந்தது. அதை அவன் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

அதன் பின்பு அலுவல்கள் தொடங்கின. கதைகள் நாலா பக்கமும் சிதறின. சிவாவிற்குப் போராட்டம் இலக்கு அற்றுப் போனதாக ஒரு தோல்வியான எண்ணம் தோன்றியது. அவன் எழுந்து சென்று கண்ணாடி ஊடாக வெளியே பார்த்தான். மனது அவலக் குரலோடு அவனை எங்கெங்கோ இழுத்துச் சென்றது. எவ்வளவு கற்பனைகள்? எவ்வளவு அதிகாரங்கள்? எவ்வளவு அதர்மங்கள்? எல்லாம் ஒரு நாள் வரலாற்றுப் பக்கங்களை நிரப்பும் வெறுமையான வெற்றுச் சம்பவங்களாக...

"சிவா அண்ணை என்ன கனவு காணுறியளே. சாப்பிட வரட்டாம்." என்றான் நிமலன்.

"கனவுகூடக் காணமுடியாத வாழ்க்கை எங்கடை வாழ்க்கை." என்றான் சிவா.

"நீங்கள் இப்படி மற்றவையைக் குழப்புகிறதைக் கைவிட்டால் கனவு காணலாம்." என்றான் நிமலன்.
"பல அதிகாரக் கைகள் எப்பவும் இடைவிடாமல் தொண்டையை நெரிக்கிற உலகம் இது நிமலா. நீ ஒரு கவிஞன் எண்டா உனக்கு உது எல்லாம் அருவி போலக் கவியா வரவேணுமெடா?"
"வருகிறது வருகிற நேரம் வரட்டும். நாங்கள் இப்ப சாப்பிடுவமே?"
"சரி வா." என்று சிவாவும் சாப்பிடச் சென்றான்.

# 30 இங்கும் கலவரம்

நத்தார் பண்டிகை முடிந்து புதுவருடக் கொண்டாட்டத்திற்காய் ஒஸ்லோ நகரம் சோம்பல் முறித்துக் கொண்டு காத்திருந்த நேரம். நத்தாரும் புதுவருடமும் கிறிஸ்தவர்களான இந்த நாட்டவருக்கு மிகவும் முக்கியமான கொண்டாட்டம் என்றாலும் பல வேற்று மதத்தினருக்கும், கலாச்சார, மத நம்பிக்கை அற்றவர்களுக்கும் அது வழமையான நாட்கள். நோர்வேயில் நத்தாருக்கும் புதுவருடத்திற்கும் இடைப்பட்ட நாட்களில் பல அலுவலகங்கள் திறந்து இருப்பதும் உண்டு. "TS"இற்கு இன்று இசுரேல் தூதரகத்திற்கு அருகில் இருந்த ஒரு அலுவலகத்தில் வேலை இருந்தது. அவர் அலுவலகத்திற்குள் புகுந்து அலுவலைத் தொடங்கினால் அவர் கவனம் அதில் மட்டும்தான் இருக்கும். வேலையை விரைவாக முடித்து விட்டுச் செல்ல வேண்டும் என்று அவர் அங்கு இருந்து எண்ணினார். அதற்கான முக்கிய காரணம் இன்று அருள் நத்தாரை முன்னிட்டு விருந்து ஒன்று வைப்பதாகவும் அதற்குக் கட்டாயம் குடும்பமாக வரவேண்டும் என்றும் அழைத்து இருந்தான். இன்று சரிஸ்காவும் அதற்கு வருவதாக ஒத்துக் கொண்டது அவருக்கு மிகவும் மகிழ்வைத் தந்தது. எல்லோரும் மகிழ்வாய் இருப்பதோடு சரிஸ்காவும் மகிழ்வாய் இருந்தால் அதைப் போன்ற சந்தோசம் அவருக்கு வேறு எதுவும் இருக்க முடியாது. அந்த சந்தோசத்தைக் கொண்டாட வேண்டும் என்கின்ற அவசரம் அவரிடம்.

வேலையை முடித்து விட்டுக் கதவைப் பூட்டிக் கொண்டு நிற்கும் போது வெளியே பல குரல்கள் பலமாக, ஆக்ரோஷமாகக் கேட்டன. என்னவாக இருக்கும் என்பது அவருக்கு முதலில் விளங்கவில்லை. இந்த நாட்கள் அமைதியான நாட்கள். பலர் நகரத்தை விட்டு விடுமுறைக்காக வெளியேறி இருப்பார்கள். நகரம் வருசத்தில் மிகவும் அமைதியில் தத்தளிக்கும் காலம் இது. அப்படி இருக்கும் காலத்தில் எப்படி இந்த

அமர்க்களம் என்பது அவருக்கு முதலில் விளங்கவில்லை. அது என்னவாக இருந்தாலும் வெளியே சென்றால் அறிந்துவிட முடியும் என்கின்ற பரபரப்போடு அவர் வெளியே வந்தார். வெளியே வந்தவர் நம்ப முடியாது திகைத்துப் போய்விட்டார். இப்படி ஒரு ஊர்வலம் இந்த நேரத்தில் நடப்பது அவருக்கு அதிர்ச்சியைத் தந்தாலும், இந்த இடத்தில் நடப்பது அவருக்கு அதிர்வைத் தரவில்லை. இசுரேலின் தூதரகம், யூதர்களின் ஆலயம் இருக்கும் இடங்கள் இஸ்லாமியரின் ஆர்ப்பாட்டத் தளங்களாகத் தாக்குதல் இலக்குகளாக மாறுவது ஐரோப்பாவிலும் தவிர்க்க முடியாத ஜதார்த்தம் ஆகிறது. இசுரேலில் நடப்பதற்காய் இங்கு இருக்கும் யூதர்களின் ஆலயங்களின் மீது தாக்குதல் நடத்துவதில் என்ன நியாயம் இருக்கிறது என்பது அவருக்கு விளங்காவிட்டாலும் அதன் தூதரகத்தின் முன்பு நடக்கும் இந்த ஆர்ப்பாட்டத்திற்கு நியாயமான காரணம் உண்டு என்று அவர் நம்பினார்.

வெளியே வந்த "TS" இற்கு ஆச்சரியமாக இருந்தது. இவ்வளவு சனத்தை அவர் வெளியே எதிர்பார்க்கவில்லை. அதுவும் நோர்வே அரசியல் கட்சிகள் பலவும் சேர்ந்து இப்படி ஒரு ஊர்வலத்தை இந்த நேரத்தில் இங்கு நடத்துவார்கள் என்பதை அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. குறைந்தது ஆயிரம் ஆர்ப்பாட்டக்காரர்கள் ஆவது அங்கே குழுமி இருப்பார்கள் என்று அவருக்குத் தோன்றியது. முதலில் இடது சாரி அரசியல் கட்சிகளின் உரைகள் நடந்தன. "TS"இற்கு அங்கு நிற்பதா போவதா என்கின்ற அவதி. சிறிது நேரம் நின்று விடுப்புப் பார்த்துவிட்டு பின்பு செல்வோம் என்று அவர் எண்ணினார். தெரு எங்கும் பெண்களின் முக்காடும், நிக்காவும், பாலஸ்தீனக் கொடியைக் கழுத்தில் சுற்றிய ஆண்களும், சில சிறுவர் சிறுமியரும், சில சுதேசிகளுமாக ஆர்ப்பாட்டம் அமைதியாகத்தான் தொடங்கி இருந்தது. அமைதியாக உரைகள் நடந்து கொண்டு இருக்கும் போது அந்தச் சம்பவம் நடந்தது. இதை யாரும் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் வந்தால் பிரச்சனை வருவது வழமையே. அவர்கள் போராட்டத்திற்கு நன்மை

செய்வதாக வன்முறையில் இறங்கி அந்தப் போராட்டத்தின் நோக்கத்தையே கெடுப்பது அவர்கள் வரலாறு ஆகும்.

பிளிற்ஸ், "young boys" ஆகிய இரண்டும் காவல் முன் ஏற்பாடாக நிறுவி வைத்து இருந்த தடையை மீற எத்தனித்ததால் அங்கே குழப்ப நிலை உருவாகியது. அது அப்படி மாறும் என்று தெரிந்து இருந்தால் "TS" எப்போதோ அந்த இடத்தை விட்டு நகர்ந்து இருப்பார். இப்படித் திடீரென நிலமை மாறும் என்று அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. எங்கிருந்து அவை திடீரென அப்படி ஏவுகணைகள் போல் வந்தன என்று தெரியவில்லை. பெற்ரோல் குண்டுகள் காவலை நோக்கி வேகமாகப் பாய்ந்தன. இசுரேல் தூதரகத்தை நோக்கிக் கற்கள் சீறிப் பாய்ந்தன. என்னதான் நல்ல காரணமாய் இருந்தாலும் ஏன் இப்படிச் செய்கிறார்கள் என்பது "TS"இற்கு விளங்கவில்லை. நல்ல நோக்கத்தோடு போராடுபவர்கள் எதற்காகப் பெற்ரோல் குண்டுடன் வருகிறார்கள் என்பது அவருக்கு விளங்கவில்லை.

"TS"இற்குச் சற்றுப் பயமாக இருந்தது. அதை அடுத்து இஸ்லாமிய இளைஞர்கள், சில பெரியவர்கள் என்பதாக வெறி பிடித்தவர்கள் போல் அல்லாஹு அக்பர் என்று பெரிய சத்தமாகக் கத்திக் கொண்டு கடைகளின் கண்ணாடிகளை அடித்து நொறுக்கினர். கார்களுக்குத் தீ வைத்தனர். அதை அடுத்துக் காவல் பரவலாகக் கண்ணீர்ப் புகைக் குண்டுகளை அவர்களை நோக்கி வீசினர். "TS" அதற்கு மேல் அங்கே நிற்க விரும்பாது மேற்கொண்டு நடந்தார். சிறிய பாதைகளாகப் பார்த்து இராணுவத்திற்குப் பயந்து தப்பி ஓடுவது போல ஓடிச் சுரங்கரத நிலையத்திற்குள் இறங்கினார். அதன் பின்புதான் அவருக்கு ஓரளவு நிம்மதியாக இருந்தது. நல்ல போராட்டத்தை ஏன் இப்படிக் கெடுக்கிறார்கள் என்கின்ற கேள்வி மட்டும் அவர் மனதில் நீண்ட நேரமாக ஓய மறுத்தது.

"TS"இற்கு அந்த நினைவு அவர் மனதை விட்டுப் போக மறுத்தது. வெறித்தனமான போராட்டத்தால் என்ன நன்மை உண்டாகும் என்பது அவருக்கு விளங்கவில்லை. ஈழத்தில்

என்ன நடந்தது என்கின்ற கேள்வி அவரிடம் பிறந்தது. இருந்தும் அந்தப் போராட்டத்தோடு இதை ஒப்பிடக் கூடாது என்று அவர் தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டார். பிளிற்ஸ் ஒரு காரணம் என்றால் அதை மேற்கொண்டு வக்கிரமாக்கிய இஸ்லாமிய ஆண்கள் மேலும் ஒரு முக்கிய காரணம் என்று அவருக்குத் தோன்றியது. இந்தச் செயல் அவர்கள் மேல் எந்தவித நன்மதிப்பையும் கொடுக்கப் போவது இல்லை என்று அவருக்குத் தோன்றியது. ஐரோப்பாவில் இஸ்லாமியரின் போராட்டத்தையே பயங்கரவாதப் போராட்டம் என்று சந்தேகக் கண்ணோடு பார்க்கும் போது அவர்கள் மிகவும் கவனமாகப் போராட வேண்டும் என்பதை ஏன் கவனத்தில் எடுத்துக் கொள்வது இல்லை? சமதர்மம் பேசும் பிளிற்சும் அதற்கு எண்ணெய் ஊற்றுவது போல நடந்து கொள்வது அவருக்கு மன வருத்தத்தைத் தந்தது.

*

அருள் சொரூபாவினதும், புவனலோசினியினதும் உதவியுடன் திட்டமிட்டு உணவுகள் சமைத்து வைத்து இருந்தான். அன்று கடையில் எடுக்கும் வசதி இருக்கவில்லை. அவர்களும் அன்று விடுப்பு எடுத்து விட்டார்கள். கட்டாயம் சாப்பாடு வீட்டில் செய்ய வேண்டி இருந்தது. அதில் ஈடுபட்ட மூவருக்கும் அது மகிழ்வாக இருந்தது. சமைத்துச் சாப்பாடு கொடுப்பதில் ஒருவித தனி சுகம் இருக்கிறது. அதையே சிலர் தங்கள் பாக்கியமாய் எண்ணுவார்கள். இவர்கள் அனைவரும் அந்த வகையினர் என்பதால் அனுபவித்துச் சமைத்தார்கள். அனுபவித்து அன்போடு சமைத்தால் அதன் சுவையும் அப்படித்தான் இருக்கும் என்று நம்பப்படுகிறது. நாடு இருக்கும் நிலைமையில் தாமோதரன், தான் இம்முறை விருந்திற்கு வரவில்லை என்றுவிட்டார். மற்றவர்கள் எல்லோரும் வருவதாகக் கூறி இருந்தார்கள். அத்தோடு வரும் பிள்ளைகளுக்குப் பரிசுப் பொருட்கள் வாங்கி வந்து அதை உறைகளில் சுற்றி அதற்கு அலங்காரம் செய்யும் வேலைகளை ஏற்கனவே சொரூபா செய்து வைத்து இருந்தாள். நாட்டில் நிலைமை கவலைக்கு உரியதாய் இருந்தாலும் அதற்காக இங்கு வாழாமல் இருக்க முடியாது என்பது அருளின் எண்ணம். அதனால் அவன் மதுவும்

வாங்கி வைத்து இருந்தான். பலரின் சந்தோசத்திற்கும் துக்கத்திற்கும் அது காரணமாக இருப்பது தவிர்க்க முடியாதது ஆகிறது. தாமோதரன் வரவில்லை என்பது அவனுக்கு முதலில் கவலையைத் தந்தாலும் பின்பு ஒருவித ஆறுதலைத் தந்தது. அவரின் அதீத கவலை இங்கே பிள்ளைகள் சந்தோசமாய் இருப்பதைக் கெடுத்து விடும். அதில் இருந்து தப்பித்துக் கொண்ட ஒருவித நிம்மதி அவனிடம் வந்து இருந்தது. நத்தார் பண்டிகைக்கான உணவுகள், கேக், ஐஸ்கிறீம், குடிப்பதற்குக் குளிர்பானம், மது என்பதாக இன்று எந்தக் குறையும் இருக்காதவாறு பார்த்துப் பார்த்து அருள் வாங்கி வைத்து இருந்தான். சமைத்து முடித்த பின்பு மீண்டும் சூடேற்றக்கூடிய பதத்தில் பதமாக இறக்கி வைத்துவிட்டு புவனலோசினி வெளிக்கிட, அருள் காரில் அழைத்துச் சென்று வீட்டில் விட்டுவிட்டு வந்தான்.

*

அடுத்த நாள் விடுமுறை என்பதால் ஆறுமணிக்குப் பின்புதான் ஒவ்வொருவராக வரத் தொடங்கினார்கள். சிவா குடும்பம் வரும் போது கிட்டத்தட்ட ஏழுமணி ஆகிவிட்டது. வந்தவர்களில் பல ஆண்கள் பால் தேநீர் அருந்தவில்லை. அதற்கான காரணம் பற்றி யாருக்கும் விளக்கம் சொல்ல வேண்டிய அவசியம் இருக்கவில்லை. மற்றவர்கள் தற்போதைய பசியைத் தணிப்பதற்கு பலகாரங்கள் சாப்பிட்டுப் பால் தேநீரும் அருந்தினார்கள். அருள் அதிக நேரம் தாமதிக்க விரும்பவில்லை. அதைச் சிவாவும் விரும்பவில்லை. அவன் அதை உடனடியாகக் கேட்டான்.
"அப்ப தொடங்குவமே? நாளைக்கு லீவு எண்டாலும் பகலே எழும்பாமல் படுக்க முடியாதுதானே? இப்ப தொடங்கினால்தான் ஒரு கணக்கில முடியும். பிறகு போய் படுத்து எழும்பி எண்டு நேரம் பறந்திடும்." என்றான் சிவா.
"அது எண்டா உண்மை. சிவா அண்ணை சொன்னாப் பிழையா இருக்குமே?" என்றான் நிமலன்.
"பார் இந்தச் சின்னக் குடிகாரனுக்கு இருக்கிற அவசரத்தை?" என்றான் சண்முகன்.
"நீங்கள் பெரிய குடிகாரர் என்றாலும் எனக்குக் குடியில வாற ஞானம் உங்களுக்கு வருமா?" என்றான் நிமலன்.

"தான் கவிஞன் எண்டு சொல்லிக் காட்டுகிறான். இப்ப தந்தைக்கு மகன் குருவான மாதிரி என்னை நக்கலடிக்கிறான்." என்றான் சிவா.

அருள் அதற்கு இடையில் போத்தல்களையும் அதற்கு வேண்டிய துணைப் பொருட்களையும் எடுத்துக் கொண்டு வந்தான். வந்த அவனைப் பார்த்த "TS",
"ஒருக்கா ரீவியைப் போட்டுவிடு அருள்... செய்தியைப் பார்ப்பம். இண்டைக்கு இசுரேல் எம்பசியடியில பெரிய ஊர்வலம் ஒண்டு நடந்திச்சுது. நான் வேறை அதுக்க இசகுபிசகா மாட்டீட்டன். ஊர்வலம் கலவரமாய் போச்சுது. ஊர்வலம் என்னவோ அரசியல் கட்சிகளின்ரை சப்போட்டோடைதான் தொடங்கி இருக்குது. பிறகு பிளிற்சுக்கும் யங்வோஸ்சுக்கும் பொலிதிக்கும் ஏற்பட்ட பிரச்சனையில பெரிய கலவரம். பெற்ரோல் குண்டு, கண்ணீர் புகைக் குண்டு எண்டு அது பெரும் அமளியாப் போச்சுது. அதுக்க வேறை அல்லாஹு அக்பர் எண்டு கத்திக் கொண்டு கடைக் கண்ணாடியை உடைச்சு இன்னும் கலவரமாக்கினாங்கள். எனக்குப் பயமா இருந்திச்சுது. ஒரு மாதிரித் தப்பி வந்து சேர்ந்திட்டன்."

அருள் தொலைக்காட்சியை இயக்கினான். அதில் நடந்த கலவரம் பற்றித்தான் போய்க்கொண்டு இருந்தது. மதுவை அருந்திய வண்ணம் செய்தியைப் பார்த்தார்கள். செய்தி போய்க்கொண்டு இருந்ததால் அங்கு ஒருவித அமைதி நிலவியது. பெண்களும் பிள்ளைகளும் சாப்பாட்டு மேசையில் இருந்து "Snakes & Ladders King" விளையாடத் தொடங்கினார்கள். அவர்கள் அதை விளையாடத் தொடங்கினால் நேரம் போவது தெரியாது இருந்து விளையாடுவார்கள். செய்தியைப் பார்த்துக் கொண்டு இருந்த சண்முகன்,

"எல்லாற்றை போராட்டத்தையும் இவங்கள் ஆதரிக்கிறாங்கள். எங்களுக்கு மட்டும்தான் யாரும் ஒழுங்கா முன்னுக்கு வாறாங்கள் இல்லை. இவங்களை விடவா நாங்கள் பயங்கரவாதம் செய்கிறம். அதுவும் ஐரோப்பாவில நாங்கள் என்ன பயங்கரவாதம் செய்கிறம்? ஒரு உண்மையான போராட்டத்தை ஏன் இவங்கள்

ஆதரிக்கிறாங்கள் இல்லை. ஒரு நாடு வரும் எண்டு நினைச்சு இருந்தம். இப்ப எல்லாரும் கை விரிச்சதால அது கனவாகிப் போயிடும் போல இருக்குது?" என்றான் சண்முகன்.

"என்ன சண்முகா இண்டைக்குக் குடி வெறியில தேசியமும் முட்டி முட்டியா சுரக்குது போல? நீ சொல்லுகிறதிலையும் ஒரு நியாயம் இருக்குதுதான். பயங்கரவாதம் எண்டா இரண்டும் பயங்கரவாதம்தான். ஒரு பயங்கரவாதத்திற்குச் சப்போட் செய்து கொண்டு மற்றயதைக் கண்டு கொள்ளாமல் விடுகிறது கவலைதான். பலஸ்தீனம் பக்கத்தில இருக்கிறதால அது கண்ணில படுகுதாக்கும். ஏரிக் இலங்கைக்குப் போயும் என்ன நடந்தது? தலையை மட்டும் ஆட்டலாம். அங்க அதைவிட வேற ஒண்டும் செய்ய முடியாது. போராட்டம் முடிய இல்லை. பயங்கரவாதிகள் எண்ட பெயர் வலுவாகுது. அதுக்கு எங்கடை தலைமையைச் சொல்ல வேணும். அதுவும் இன்னும் எவ்வளவு நாளைக்கு எண்டது இப்ப கேள்விக்குறிதான்." என்றான் சிவா.

"சும்மா இரு சிவா. அவங்கள் நிண்டு அடிபடுவாங்கள். அவங்கள் ஒரு நாளும் தோற்க மாட்டாங்கள்." என்றான் சண்முகன்.

"நம்பிக்கை இருக்கலாம் சண்முகன். ஆனா... மூடநம்பிக்கை இருக்கக் கூடாது. எப்பிடி இனி இவையால நிண்டு பிடிக்க முடியும் எண்டு நினைக்கிறியள்? பக்கம் பக்கமா வெளிநாட்டில இருந்து கட்டுரை எழுதுகின்றவையின்ரை கற்பனையை நிஜம் எண்டு நினைக்கிறியளா? அதால வருகிற நம்பிக்கையா இது? இப்ப இரண்டு இராணுவம் போராடுது. அதில எது பலமா இருக்குது எண்டது எல்லாருக்கும் தெரியும். இனிப் புலிகள் பலமாக முடியாத மாதிரி இந்தியாவும் உலகமும் இலங்கையோடை சேர்ந்து சக்கர வியூகம் வகுத்து நிற்கிறதும் எல்லாருக்கும் தெரியும். அப்பிடி இருக்கப் புழுகுக் கட்டுரைகளை ஆதாரமாய் வைச்சு நம்பிக்கை வளர்க்கக் கூடாது. நான் சொல்லுகிற உண்மை கெதியாத் தெரிய வரும் எண்டு நினைக்கிறன்." என்றான் சிவா.

"சிவா சொல்லுகிறதைப் பலராலும் ஏற்றுக் கொள்ள முடியாமல்தான் இருக்கும். அதால அது பொய்யாகும் எண்டுகிறது இல்லை. மன்னாரில தொடங்கேக்க

உள்ளுக்க விட்டு அடிப்பம் எண்டு சொல்லிச்சினம். வாகரையில தொடங்கி மன்னார் வரையும் சொல்ல அப்பிடியும் இருக்குமோ எண்டு சில சனங்கள் நம்பித்தான் இருந்தவை. பிறகு மன்னாரும் போய் மல்லாவி ரவுண், பூனேரியன், மாங்குளம், கொக்காவில் ரவுண், புளியங்குளம், கனகராஜன்குளம், நெடுங்கேணி, சின்னப்பரந்தன், முள்ளியவளை எண்டு இப்ப இரணைமடு வரையும் வந்திட்டாங்களாம். இனியும் உள்ளுக்க விட்டு அடிப்பம் எண்டு சொல்ல முடியாது. கிளிநொச்சியக் கிட்டடியில பிடிச்சிடுவாங்கள். அப்ப எங்க ஓடப் போகினமோ தெரியாது. ஏன் சனத்தை வைச்சுக் கொண்டு இப்பிடி விளையாடுகிறாங்கள் எண்டு தெரிய இல்லை. நல்ல மனது இருந்தால் இப்ப ஆவது சனத்தை பிழைக்க விட வேணும். இல்லாட்டி ஒரு பேரழிவு இருக்குது. அதில எவ்வளவு சனத்தை இவங்கள் பலி கொடுப்பாங்களோ தெரியாது. பிழை எண்டு தெரிஞ்சும் மனச்சாட்சி இல்லாமல் புலிகளாலதான் இப்பிடிச் செய்ய முடியும்." என்றான் அருள்.

"இனி மன்னார் பக்கம் போக முடியாது. யாழ்ப்பாணப் பக்கம் கனவிலும் தலை வைக்க முடியாது. மட்டக்களப்பு, திருகோணமலை இனி எப்பவும் இல்லை. கடைசியா இருக்கிற இடம் முல்லைத்தீவுதான். முல்லைத்தீவுக்க போனா யார் இவைக்கு உதவி செய்கிறது? இந்தியா இப்ப சாப்பாட்டுப் பார்சலுக்குப் பதிலாக் குண்டுதான் போடும். அதை மீறிக் கடல் கடந்து இவைக்கு யார் வந்து உதவி செய்யப் போகினம்? சனத்தையும் இழுத்துக் கொண்டு போனா அவைக்கு எத்தினை நாள் இவை சாப்பாடு போடுவினம்? அரசாங்கத்தின்ரை சாப்பாட்டை நம்பித்தானே இவையின்ரை ஆட்சி நடந்தது? ஆனாப் புலியள் சனத்தை விடமாட்டாங்கள். சனத்தை விட்டால் கரையில போட்ட மீனாட்டம்தான் அவங்கடை நிலை. புலியளின்ரை வாழ்வா சாவா எண்டுகிறது சனங்கள் அவங்களோடை இருக்கிறதையும் இல்லாததையும் பொறுத்தது. சனத்திற்கும் விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம் இருக்கத்தானே செய்யும்? அதுக்கான எல்லைகளும் இருக்கத்தானே செய்யும்?" என்றான் நிமலன்.

"டே இவன் இவ்வளவு அரசியல் கதைக்கிறான். எண்டாலும் நிமலன் சரியாகத்தான் கதைக்கிறான்.

மந்தைக் கூட்டத்தைப் பலிக்குக் கொண்டு போகிறது போல சனத்தை தங்களோடை சாய்ச்சுக் கொண்டு போகிறாங்கள். நிமலன் சொல்லுகிறது சரிதான். கடைசியில இரண்டு பேரும் சனத்தை இடையில பகடைக் காயாய் வைச்சு அடிபட்டுக் கொண்டு ஆளையாள் சாட்டுவாங்கள். பாவப்பட்ட சனங்கள் ஒரு பக்கமும் போக முடியாமல் மாட்டுப் பட்டது இப்ப நல்லா விளங்குது." என்றான் சிவா.

"அப்பிடி எல்லாம் நடக்க விடாமல் ஏதாவது செய்வாங்கள் சிவா. சனத்தைப் பற்றி அவங்களும் கவலைப்படுவாங்கள் தானே? எல்லாரும் சுத்தி வளைச்சா அவங்களாலும் என்ன செய்ய முடியும்? ஆனா... அவங்கள் கடைசி வரையும் போராடுவாங்கள். இயலாது எண்டு வந்தால் சனத்தைத் தப்பவிட ஏதாவது வழி செய்வாங்கள். தற்காலிகமாகப் போராட்டம் ஓய்ஞ்சாலும் பிறகு தொடங்கச் சனம் முக்கியம்தானே? அதால... அவங்கள் அதில நிச்சயம் கவனமாய் இருப்பாங்கள் எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

""TS" அண்ணை "TS" அண்ணை. புலியள் எப்ப சனத்தைப் பற்றிக் கவலைப்பட்டவங்கள் இப்ப புதுமையாச் சனத்தைப் பற்றிக் கவலைப்பட? இருந்து பாருங்க கடைசியா அகப்பட்டு இருக்கிற சனத்திற்கு என்ன நடக்கும் எண்டு. திண்ணவேலியில இருந்து கிளிநொச்சி வரையும் அதுதான் உண்மையான கதை. விசுவாசம் கண்ணை மறைச்சா அது தெரியாமல் இருக்கும். அதுக்காக உண்மை ஒரு நாளும் பொய்யாகாது. வேசங்கள் ஒரு நாளும் நிஜமாகாது. எனக்குத் தெரிஞ்ச உண்மை இதுதான். அந்த உண்மையை மறைக்கவோ அல்லது எடுத்துக்கட்டிச் சொல்லவோ எனக்கு எந்தக் காரணமும் இல்லை."

"இது உன் மூளைக்கு எட்டின உண்மை. அதுதான் எல்லாருக்கும் உண்மையா இருக்க வேணும் எண்டு இல்லை. போராட்டம் எண்டா எப்பவும் சனத்தைப் பார்த்துக் கொண்டு இருக்க முடியாதுதான். அதுக்காக அவங்கள் சனத்தைப் பாதுகாக்காமல் போராட்டம் நடத்துகிறாங்கள் எண்டு சொல்லுகிறதையும் ஏற்றுக் கொள்ள முடியாது. நடக்கிற சம்பவத்தைவிட நாங்கள் அதைப் பார்க்கிற விதத்திலும் நிறைய இருக்குது."

"உங்கடை நம்பிக்கையைக் கெடுக்க வேணும் எண்டது என்னுடைய நோக்கம் இல்லை. ஆனா... கிளிநொச்சியும் போனா முடிவு நெருங்குது எண்டு அர்த்தம். இனிப் பழைய எழுச்சி ஒரு நாளும் வரப்போகிறது இல்லை. கடைசியா என்ன நடக்குது எண்டு பார்ப்பம். அப்ப நிச்சயம் உண்மை எல்லாருக்கும் தெரியவரும் எண்டு நினைக்கிறன்."
"நடக்காதது எண்டு நினைச்சது எல்லாம் நடந்திட்டுது. நடக்கும் எண்டு நினைச்சது ஒண்டும் நடக்க இல்லை. போராட்டம் இனி எப்பிடிப் போகும் எண்டதும் நாங்கள் நினைச்ச மாதிரி அது நடக்க வேணும் எண்டதும் இல்லைத்தான். ஆனாலும் நாங்கள் நினைச்ச மாதிரி நடக்க வேணும் எண்டு ஆசைப்படலாம்." என்றான் நிமலன்.
"நிமலன் அப்பிடி இப்பிடி எண்டு பெரிய அரசியல் கதைக்க றை பண்ணுகிறான். எண்டாலும் எதுவும் மாறப் போகிறது இல்லை எண்டதுதான் உண்மை." என்றான் சிவா.
"உந்த அவலத்தைக் கதைக்கக் கூடாது எண்டாலும் அது எப்பிடியோ எங்கடை கதைக்கு உள்ள வந்திடும். அதைவிட்டு நாங்களோ, எங்களை விட்டு அதுவோ, இருக்க முடியாத ஒரு குடுப்பினை. எப்பிடி எண்டாலும் உந்தப் பிரச்சனை தீர்ந்தால்தான் அந்த எண்ணங்களிட்டை இருந்தும் எங்களுக்கு விடுதலை கிடைக்கும்." என்றான் அருள்.

பாம்பு எப்படி ஓடியதோ தெரியாது மேசையில் இருந்த திவ்வியா அவர்களின் விளையாட்டைக் குழப்பினாள். சரிஸ்கா அதைப் பார்த்து சோகமாகச் சிரித்தாள். "TS" பரிதாபமாய் பார்த்துவிட்டு,
"சரி அவைக்குச் சாப்பாட்டுக்கு ரைம் ஆகுதுதானே? அதைத் தொடங்குங்க. அப்பிடியே நாங்களும் வந்து சேருவம்" என்றார்.

# 31 பற்றிய வீடு

வயிரப் பொடியை வானம் தூவி அன்னைக்கு ஆபரணம் அணிவித்த அந்த அழகுக் கோலம். அதில் அங்கங்கே மின்னும் துகள்களான நட்சத்திரங்கள் தரையில். இந்த அழகின் அற்புத விரிவு துருவத்திற்கே உரிய காட்சி. அந்தக் காட்சி ஒஸ்லோவில் விரிந்து கிடந்த அந்த நாளில்தான் இரண்டாயிரத்து எட்டாம் ஆண்டு தன்னை மாய்த்து இரண்டாயிரத்து ஒன்பதாம் ஆண்டு பிறப்பதற்கு வழி சமைத்தது. அழிவு, அமைதி, நட்பு, பகை, காதல், வெறுப்பு, கோபம், சாந்தம் என்று இந்த உலகம் பிரிந்து கிடப்பதே அதன் வழமை ஆகிவிட்டது. அமைதியோடு வேடிக்கை நிறைந்த இந்த நாடு. வாழ வேண்டும் என்கின்ற துடிப்பைக் கொன்று சாவைப் பரிசாகக் கொடுக்கின்ற அந்த நாடு. அந்த நாட்டின் நினைவுடன் இந்த நாட்டில் வாழ்வது பலருக்கு சுவர்க்கத்தில் ஒரு கால் நரகத்தில் ஒரு கால் வைத்தது போல இருக்கிறது. நாட்டைப் பற்றி யாரும் எதுவும் கதைக்க விரும்பாத காலம். வாயால் வீரம் பேசியவர்கள் அவர்களது வாயைத் தொலைத்து மௌனமான கோலம். ஈழத்தின் நாளைய வாழ்வு எப்படிப் போகும் என்கின்ற திகில் நிறைந்த மனதுடன் அலையும் பலர். நம்பிக்கை என்பது காகிதத்தில் கட்டப்பட்ட வீடு போலக் கலைந்து போகும் நிஜக் கோலமாகப் பலரின் மனதில். அதை ஒப்புக் கொள்ள முடியாத சிலரின் அடங்காத் தவிப்பின் உளரல்கள். எப்படியும் நடக்கலாம் என்கின்ற உலகை விளங்கிக் கொள்ளாமல் இப்படியும் நடக்குமா என்கின்ற திகைப்பு இன்னும் பலருக்கு. இருந்தும் நடப்பதை யாரும் தடுக்க முடியாத ஜதார்த்தத்தின் நிதர்சனம். உன்னை எதிரே வருபவன், பேய் எனலாம், நாய் எனலாம், தேவன் எனலாம். அது அவன் மனதில் உண்டாகிக் கண்ணில் முடியும் அவனுக்கே உரிய பார்வை. அது அவனுக்கே மட்டும் உரியது. அதை யாரும் இலகுவில் மாற்றிவிட முடியாது. மாற்ற நினைப்பதே ஒருவித மடமை. அதற்காகக்

கவலைப்பட முடியாது. பேய் என்று யாரோ கூறியதை எண்ணி உன்னிடம் இப்போது இருக்கும் கணங்களை இழந்துவிட முடியாது. நடந்தவை எப்போதும் மாற்ற முடியாதவை. நடப்பவை மட்டும் நமக்கு உரியவை. நடக்கப் போகின்றவை நம் வசப்படாதவை. மனிதன் என்பவன் இன்றும் மிருகம்தான். அவன் அந்த நிலையைச் சுயமாக அடையலாம். அல்லது கோபத்தில், போதையில் அடையலாம். மனிதன் மிருகம் ஆவதற்கு அதிக பிரயத்தனம் தேவை இல்லை. வந்த பாதையில் அவன் ஒரு அடி பின்னோக்கி எடுத்து வைத்தால் அந்த நிலைக்கு அவன் வந்து விடுவான். பலர் அந்த நிலைக்குப் போவதும் மீள்வதுமே உலக ஐதார்த்தம். பின்னோக்கிப் போக முயலும் பல மிருகங்களுக்கு இடையில் மனிதனாக வாழ நினைக்கும் மனிதனுக்கு அது பெரும் சோதனையாக முடிகிறது.

கரடி கடிப்பதற்காய் கரடியை நாம் திருப்பிக் கடிக்க முடியாது. பாம்பு கொத்தியதற்காய் அதை நாம் திருப்பிக் கொத்த முடியாது. கடிக்கும் நாயைத் திருப்பிக் கடித்தால் நாய்க்கு அல்ல மனிதனுக்குத்தான் பயித்தியம் என்பார்கள். அது அதற்கான இயல்பில்தான் நடக்கும். மனிதனும் அதற்குள் அடங்குவான். அதற்காக மனிதனாக வாழ விரும்பிய மனிதன் மிருகம் ஆகமுடியாது. மிருகம் ஆகினால் அவன் மனிதன் ஆகவில்லை என்பதே பொருளாகும். இந்த ஊடாட்டத்தைக் கண்டு பிடிப்பது இலகு இல்லை என்பதே மனிதனாக வாழ முயன்றவர்களின் அனுபவம்.

இந்தக் கணங்கள் மாத்திரமே எங்களுக்குச் சொந்தம் என்பதால் வந்த ஞானத்தில் இன்று வரும் ஆங்கிலப் புத்தாண்டையும் அதற்கான வான வேடிக்கைகளையும் கண்டு கழிப்பதற்குப் போவதாய் "TS" முடிவு செய்து இருந்தார். இந்தக் கணங்கள் அந்த நினைவுகளுக்கு ஏற்ற கணங்கள் இல்லை என்கின்ற திடீர் ஞானம் "TS"இற்கு உண்டானது. நாளை நடப்பதைக் கட்டுப்படுத்தும் எந்த ஆயுதமும் நம் கையில் இல்லை என்பது அவருக்கு நன்கு விளங்கியது. அத்தோடு தனித்துப் போகாது எல்லோரும் சேர்ந்து செல்ல வேண்டும் என்பது அவருடைய

ஆவலாகியது. அவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பலரையும் சம்மதிக்க வைத்தார். தாமோதரன் முதலில் அடம்பிடித்தாலும் இறுதியாக வருவதற்கு ஒப்புக்கொண்டார். பின்பு தங்கள் வீட்டில் சிற்றுண்டி பரிமாறவும் ஏற்பாடு செய்வதாகவும் கூறினார்.

பதினொரு மணிக்கு எல்லோரும் சோபியன்வர்க் பூங்காவில் கூடினார்கள். இவர்கள் அங்கே வரும்போதே பலர் தங்கள் வான வேடிக்கையைத் தொடங்கிவிட்டார்கள். சுதேசிகள் அதற்குப் பார்த்தும் பாராமலும் செலவு செய்வார்கள். அவர்களின் வாழ்க்கை முறை அப்படி. அதற்காக வந்தவர்கள் ஒன்றும் வெறும் கையோடு வரவில்லை. இருந்தும் நாட்டைப் பற்றிய நினைவு பலரது இந்தக் கணங்களை அவர்களை அறியாதே திருடிச் சென்றது. நாடுகளின் அதிகார வேட்கை பலமானது. அதில் சிறிய இனங்கள் அல்லது நாடுகளின் அபிலாசைகள் பலியாவது தவிர்க்க முடியாதது. ஈழத்திற்கும் அதே விதிதான். அதை மேலும் சிக்கலாக்கும் புலிகள். அவர்களின் வார்த்தைகள் பசப்பு வார்த்தைகளே என்கின்ற உண்மை துலங்கும் காலம் என்கின்ற உணர்வு சிலருக்கு. ஆனால் அது உண்மையாகக் கூடாது என்கின்ற பலரின் பதட்டம்.

சிவா குடும்பம், சண்முகன் குடும்பம் தொடக்கம் எல்லோரும் அங்கே வந்து இருந்தார்கள். பெண்கள் பலரும் சாரதி அனுமதிப் பத்திரம் வைத்திருப்பது இப்படியான கொண்டாட்டங்களின் போது பெரும் வசதியாக அமைகிறது. பட்டாசுகளுடன் பருகுவதற்குத் தேவையான அனைத்தும் தாராளமாய் கொண்டு வந்து இருந்தனர். அதைப் பரிமாறி, பரிமாறிப் பட்டாசு கொழுத்தத் தொடங்கினார்கள். அது ஆபத்து என்றாலும் அதைத்தான் பலரும் செய்கிறார்கள். ஒவ்வொன்றாகத் தொடங்கிய பட்டாசு சத்தம் வரவர அதிகரித்து இடைவெளி இல்லா முழக்கமாகத் தொடர்ந்தது. ஆகாயத்தில் வண்ண நட்சத்திரங்கள் தோன்றித் தோன்றி மடிந்தன. அந்தப் பட்டாசு வெளிச்சம் அழகாகத் தோன்றி, ஆடம்பரமாய் ஒளித்து, ஏதோ ஒருவித அமைதியோடு செத்துப் போகின்றது. பிரபஞ்சத்தில் நட்சத்திரங்களின் வாழ்க்கையும் அப்படித்தான் முடிகிறது. அந்தப்

பட்டாசுகளைப் பார்த்த "TS"இற்கு மனித வாழ்வு, பல போராட்டங்கள், உலகத்தில் வாழும் உயிரினங்கள், ஏன் நாம் வாழும் சூரியக்குடும்பம், அதைத் தாங்கி நிற்கும் பிரபஞ்சம் என்று எல்லாத் தோற்றமும், அதன் வாழ்வும், முடிவும் இப்படித்தான் அமைகிறது என்பதாகத் தோன்றியது. ஆதியும் அந்தமும் இல்லாது இந்தப் பிரபஞ்சத்தில் எதுவும் இல்லை. அதைக் கணிக்கும் தகமை சில வேளை எங்களிடம் இல்லாமல் இருக்கலாம். அதை வைத்துக் கொண்டு ஆதியும் அந்தமும் இல்லாதது என்று தொடங்க முடியாது. வாழ்க்கை என்பதும் இந்தப் பட்டாசுகளைப் போன்று தோன்றி முடிவது போல எமது போராட்டமும் முடியப் போகிறதா? அதற்கும் இதுதான் விதியா? என்கின்ற எண்ணம் அவர் உள்ளத்தை அரிக்கத் தொடங்கியது. அவரது கவனம் பட்டாசு வேடிக்கையை விட்டு விலகி எங்கள் போராட்டத்தின் நிலைமை பற்றிய கவலையில் நிலை கொண்டது. தாமோதரனின் நிலையும் அப்படியே இருந்தது. அவரால் சிரிக்கக்கூட முடியவில்லை. அழுதுவிடாமல் இருக்கப் பாடுபடுவது போல இருந்தது அவர் முகம். அவர் கற்பனை செய்திராத விசயங்களை இப்போது அவர் செய்தியாகக் கேட்டுக் கொண்டு இருந்தார். அவரால் அதை எல்லாம் நம்ப முடியவில்லை. பெடியளை யாராலும் தோற்கடிக்க முடியாது என்கின்ற நம்பிக்கை அவரிடம் எப்போதும் இருக்கிறது. அத்தோடு இலங்கை இராணுவம் பெடியளைத் தோற்கடித்து விடுமோ என்கின்ற பயமும் அவர் மனதில் இப்போது ஒளிந்து இருக்கிறது.

இருந்தும் அவர் தன் பயத்தை யாரிடமும் சொல்ல முடியாத தவிப்பு. சொன்னால் சிவா போன்றவர்கள் ஏற்கனவே நாங்கள் சொன்னதுதானே என்று சொல்லிச் சிரிப்பார்கள் என்கின்ற பயமும் அடிமனதில் இருந்தது. வான வேடிக்கை பார்த்துப் பலரும் தங்களை மறந்த நிலையில் சந்தோசமாய் இருக்கும் போது சிலர் மாத்திரம் அதில் முழுமையாக ஈடுபட முடியாது அந்தரித்தார்கள். அதில் முக்கியமானவர்கள் "TS"சும், தாமோதரனும் ஆவார்கள். அதை விடச் சண்முகனுக்கும், றுபனுக்கும் அதே வருத்தம் இருந்தாலும் அதற்காகத் தலையில் கை

வைத்துக் கொண்டு அலையும் எண்ணம் அவர்களிடம் இப்போது இல்லை.

நேரம் நள்ளிரவை நெருங்க நெருங்க வெடி ஓசை இடி ஓசையாக இடைவெளி இல்லாது முழங்க, மின்னலாக வண்ண ஒளிகள் தொடர்ந்தும் கண்ணைப் பறிக்க, அடுத்த வருடத்தை வரவேற்க எல்லோரும் மிகவும் ஆர்வமாய் இருந்தார்கள். சிவா சந்தோசமாகத் தனது பெரிய வெடிப் பொதியைத் தயார் செய்து கொண்டு இருந்தான். அதன் பின்பு சம்பையின் திறந்து பரிமாற வேண்டும் என்பது அவன் எண்ணம். ஒஸ்லோ நகரம் எங்கும் வான வேடிக்கையின் ஒளியும், ஒலியும் நிறைந்து இரத்தம் ஓடாத யுத்தகளமாய் கண்ணையும் காதையும் பறித்தது. கணங்கள் சத்தத்திலும், ஒளியிலும் கரைய காலம் அடுத்த ஆண்டில் மெதுவாகக் கால் பதித்தது.

சிவா சம்பையின் திறந்து எல்லோருக்கும் பரிமாறினான். பெண்களைத் தவிர அனைத்து ஆண்களும் வாங்கிப் பருகினார்கள். அதன் பின்பும் சிறிது நேரம் நின்று வேடிக்கை பார்த்துவிட்டு எல்லோரும் தாமோதரன் வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினார்கள்.

*

நகரத்தின் மத்திய பகுதியில் இருந்து பல தீயணைப்புப் படை வாகனங்கள் சந்திக்கு அவசரமாக வந்து தாமோதரன் வீட்டுப் பக்கம் திரும்பின. அப்போது அந்தப் பக்கம் ஒரு கட்டடத்தில் இருந்து புகை வருவதைப் பலராலும் அரை குறையாக அவதானிக்க முடிந்தது. ஆனாலும் அது எங்கிருந்து வருகிறது என்பதை முழுமையாகக் கணிக்க முடியவில்லை. அதை அடுத்து எல்லோரும் அவசரமாகப் புறப்பட்டு தாமோதரன் வீட்டை நோக்கிச் சென்றார்கள். தாமோதரன் அவசரமாக எல்லோருக்கும் முன்பாகச் சென்றார்.

தாமோதரன் வீட்டிற்கு அருகாக வர வர அது தாமோதரன் குடியிருக்கும் கட்டடத்தில் அவரின் வீட்டிற்கு மறு தொங்கலில் இருந்த நான்காவது மாடியில் தீப்பற்றி இருக்கிறது என்பது விளங்கியது. வானங்கள் விழுந்து நெருப்புப் பிடிப்பது குறைவு என்றாலும் முழுமையாக

இல்லை என்று கூற முடியாது. அதில் இது ஒன்றாக, அதுவும் தாமோதரனின் குடியிருப்பாக, எல்லோருக்கும் சிறிது திகைப்பாகத்தான் இருந்தது. இருந்தும் தீயணைப்புப் படையினர் விரைவாகச் செயற்பட்டுத் தீயை அணைத்தனர். தீயணைப்புப் படையினரின் விரைவு செயற்பாட்டால் தாமோதரன் நித்திரை கொள்வதற்கு வேறு இடம் போக வேண்டி வராது என்கின்ற கணிப்பு இருந்தது. இருந்தும் தீயணைப்புப் படையினர் மட்டுமே இறுதி முடிவைக் கூற வேண்டும். பலரும் என்ன நடக்கிறது என்கின்ற விடுப்புப் பார்க்கக் கூடிவிட்டார்கள். தீயணைப்புப் படையினர் தீயை அணைத்து, பின்பு அந்த வீட்டை ஆராய்ந்து, கடைசியாகப் பற்றிய அந்த வீட்டைத் தவிர மற்றவர்கள் தங்களது வீட்டைப் பாவிக்கலாம் என்று அறிவித்தார்கள். அதனால் தாமோதரன் எல்லோரையும் அழைத்துக் கொண்டு சந்தோசமாய் தனது வீட்டிற்குச் சென்றார். இருந்தும் அவர் மனதில் வருடம் பிறந்த முதல் நாளே இது என்ன அபசகுனம் என்கின்ற எண்ணம் இருந்தது. இருந்தும் அதை தற்போது பிரஸ்தாபித்து மற்றவர்களின் சந்தோசத்தைக் கெடுக்க வேண்டாம் என்று அதைப் பற்றிப் பேசாது விட்டார்.

தாமோதரன் குடி வகை எதுவும் வாங்கி வைத்திருக்கவில்லை. அவர் அந்த மனநிலையில் இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும். அதனால் பலரும் அதை எதிர்பார்க்கவில்லை. இருந்தும் மூன்று விதமான கேக்கும் குடிப்பதற்குக் குளிர்பானம், கோப்பி, தேநீர் என்பனவும் பரிமாறினார். எல்லோரும் அதைச் சுவைத்துவிட்டு பின்பு தங்கள் இல்லம் நோக்கிப் புறப்பட்டார்கள். வெளியே வெடி ஓசை அடங்கி இருந்தது. ஈழத்தில்...?

# 32 தைப்பொங்கல்

சிவா ஒருவித துக்கத்தோடும் ஒருவித ஆவலோடும் தமிழ்க் கடைக்குச் சென்றான். நாளைக்குத் தைப்பொங்கல். அதற்கான பொருட்கள் வாங்கிவர வீட்டில் அவனைப் பணித்து இருந்தார்கள். அதை அவன் செய்யத் தவறுவது இல்லை. தமிழ்க் கடை எப்போதும் போல இருந்தாலும் பார்க்கும் தமிழர்களின் முகங்கள் சூப்பிய பனங்கொட்டைகள் போன்று சோபை இழந்து தோன்றின. விரைவாகப் பொருட்களை வாங்கிக் கொண்டு அங்கிருந்து ஓட வேண்டும் போல் அவர்கள் அவதிப்படுகிறார்கள் என்பதாக அவனுக்குத் தோன்றியது. எது நடந்தாலும் அவர்கள் தைப்பொங்கலை மறந்ததாய் தெரியவில்லை.
மற்றவருக்காக தங்கள் வயிற்றை யாரும் பட்டினி போடுவதில்லை. தமிழுக்கான போராட்டமாக இருந்தாலும் எங்கோ நடப்பதற்காய் இங்கே தைப்பொங்கல் பொங்காது இருப்பதில் பிரயோசனம் இல்லை என்கின்ற தெளிவு பலருக்கு இருப்பது சிவாவுக்கு விளங்கியது. வாழை இலை, இளநீர், கரும்பு தொடக்கம் அனைத்தும் விற்பனை செய்து கொண்டு இருந்தனர். வியாபாரம் சமுக நீதி அநீதி பார்த்து நடப்பதில்லை. அத்தினையும் வாங்கிக் கொண்டு, ஆனாலும் கவலையாக, முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு செல்லும் அவர்களைப் பார்க்க அவனுக்குக் கவலையாகவும் இருந்தது. அதேவேளை நகைப்பாகவும் இருந்தது.

கிளிநொச்சி, கிளிநொச்சி என்றார்கள். அதுவும் கைவிட்டுப் போன போது என்னதான் அவர்கள் போராட்டத்தைப் பார்த்து நகைத்தாலும் சிவாவுக்கும் இன்று அது வலியைத் தந்தது. புலிகள் தோற்றதற்காய் அல்ல. தமிழர் தங்கள் முகத்தையும் உரிமையையும் இழந்து, யாரும் அற்ற அடிமைகள் ஆகியதற்கு. இது இப்படியே நடக்கும் என்பது அவனுடைய நீண்டகால அனுமானம். அப்படி இருந்தும் அதுவே நிஜமான போது அவனுக்கு மிகவும் சோர்வாகவே இருந்தது. கிளிநொச்சி என்கின்ற நகரத்திற்குள் இராணுவம் ஒருபோதும் நுழைய முடியாது என்கின்ற அழிக்க முடியாத கற்பனை அவர்களாலும், அவர்களின்

எடுபிடிகளாலும் நன்கு வளர்க்கப்பட்டது. அவர்களது கோட்டை, அவர்களது இராட்சியம், அவர்களது களஞ்சியம், அவர்களது திறைசேரி ஆகிய பலவற்றையும் தாங்களே அழித்து, நகரத்தை இழந்து போனவர்கள் எதற்காக மக்களை மாத்திரம் தயவு தாட்சண்ணியம் இல்லாமல் தங்களோடு இழுத்துக் கொண்டு போகிறார்கள் என்பது அவனுக்கு இப்போது நன்கு விளங்கியது. அதை இப்போது சொன்னால்கூடத் துரோகி என்று தயங்காது முகத்திற்கு எதிரே கூறுவார்கள். இவர்கள் அத்தினை நபர்களின் கூற்றும் உண்மைக்கு முன்பு ஒரு நாள் அடிபட்டுப் போகும் என்பது சிவாவிற்கு நன்கு தெரியும். இருந்தும் அதை இப்போது இவர்களுக்கு நிரூபிக்க முடியாது. அதனால் தொடர்ந்தும் இவர்களது திருக்கூத்தைத் தவிர்க்க முடியாது பார்க்க வேண்டும் என்கின்ற சலிப்பு அவனிடம்.

தைப்பொங்கலுக்கு நோர்வேயில் தமிழருக்காக அரச விடுமுறை விடுவது இல்லை. அவர்களுக்கு அது என்ன என்பதே தெரியுமா என்கின்ற சந்தேகம். தெரிந்தாலும் முக்கியத்துவம் கொடுக்க முடியாத யதார்த்தம். தமிழர்கள் பலரும் வேலையால் வந்தே பொங்க வேண்டும். வேலை இல்லாது வீட்டில் இருப்பவர்கள் நேரத்திற்குப் பொங்கலாம். அல்லது வேலையில் இருந்து விடுப்பு எடுத்துக் கொள்ள வேண்டும். சிவா அன்று விடுப்பு எடுத்ததோடு "TS"இற்கு அலைபேசியில் தொடர்பு கொண்டு, தான் அவர்கள் வீட்டிற்கு வருவதாகக் கூறி இருந்தான். அவன் ஆங்கிலப் புதுவருடத்திற்குப் பின்பு நடந்தவை பற்றி யாரிடமும் விபரமாகக் கதைக்கவில்லை. யாருடனும் கதைக்க முடியாத ஒரு மூட்டம். அந்த மூட்டத்திற்குள் எரிகுழம்பான வேதனைப் பல மனதுகளில். அதைப் பற்றிக் கதைக்க வேண்டும் என்கின்ற ஆவல் அவனிடம். "TS"இற்கும் அதைப் பற்றிக் கதைப்பதில் ஒரு இரகசிய ஆர்வம் உண்டு. இருந்தும் இப்போதும் புலிகளைக் குறைத்துக் கதைப்பது அவருக்குச் சங்கடத்தை உண்டு பண்ணும். அதேவேளைச் சிவாவோடு கதைப்பது ஒருவித உண்மை தேடும் அலசலாக இருக்கும் என்பதில் அவருக்கு ஒருவித ஆர்வமும் ஆத்ம திருப்தியும் உண்டு.

*

கதவைத் திறந்த "TS"சை இன்ப அதிர்ச்சி அலை அலையாகத் தாக்கியது. சிவாவின் பிள்ளைகளைக் கண்டு நிறையக் காலம் ஆகிவிட்டது. அவர்கள் இவ்வளவு பெரிய பிள்ளைகள் ஆகி நிற்பது பிரமிப்பையும் சந்தோசத்தையும் இரட்டிப்பாகத் தந்தது. அந்தத் திகைப்பில் இருந்து தன்னை விடுவித்து அவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு வந்தார். அவர்களின் குரல் கேட்டுத் திவ்வியாவும், சரிஸ்காவும் வெளியே வந்தார்கள். அவர்கள் இருவரையும் பார்த்த அஸ்வினி, அரன் ஆகிய இருவருக்கும் சந்தோசம் ஆகிற்று. எப்போதாவது "TS" வீட்டிற்கு வந்தால் அவர்கள் அதிக நேரம் அந்த அறையில் கழிப்பார்கள். இன்றும் ஆர்வமும் சந்தோசமும் அவர்கள் முகத்தில்.
"என்ன "TS" அண்ணை... அவங்களையே பார்த்துக் கொண்டு நிக்கிறியள்? நாங்கள் உள்ள வரலாமே? " என்றாள் மனோ சிரித்துக் கொண்டு.
"அது ஒண்டும் இல்லை... இவங்களைப் பார்த்து நிறைய நாளாச்சுது. நல்லா மாறீட்டாங்கள்." என்று "TS" அபாரமாக வழிந்தார். பின்பு உள்ள வாங்க.... உள்ள வாங்க... என்ற வண்ணம் அவர் உள்ளே சென்றார். சரிஸ்கா வந்து பார்த்துவிட்டு வாங்க என்று எல்லோரையும் பார்த்துச் சிரித்த வண்ணம் கூறினாள். பின்பு சிவாவைப் பார்த்து,
"என்ன சிவா அண்ணை... சூடான அரசியல் கதைக்கப் போகிறியள் போல இருக்குது?" என்று கேட்டாள்.
"உண்மைதான் சரிஸ்கா. நீயும் எங்களோடை இருந்து அரசியல் கதைக்கலாம் தானே?" என்று சிவா கேட்டான்.
"எனக்கு உங்கடை கருத்துச் சிலது பிடிக்கும். ஆனா... அதையே கதைச்சுக் கொண்டு இருக்கிற ஆர்வம் கிடையாது. நாங்கள் கதைச்சும் ஒண்டும் ஆகப் போகிறது இல்லைத்தானே?" என்றாள்.
"ம்..." என்ற வண்ணம் சிவா வந்து சோபாவில் இருந்தான். அஸ்வினியும், அரணும் திவ்வியாவும் சரிஸ்காவின் அறைக்குச் சென்றார்கள். சரிஸ்கா புவனலோசினியைப் பார்க்கச் சமையல் அறைக்குச் சென்றாள். புவனலோசினி வேலையால் வந்து ஆதவனை நினைத்துச் சர்க்கரைப் பொங்கலும், உழுந்து வடையும் செய்து கொண்டு

இருந்தாள். அதன் வாசம் மெதுவாக வீடு முழுவதும் நிறைந்தது.

உள்ளே வந்து சோபாவில் அமர்ந்ததை அடுத்து "TS", "ம்... நீ சொல்லு சிவா." என்றார். அதில் ஒளிந்து இருக்கும் ஆர்வத்தைக் கண்டு கொண்ட சிவா சிரித்துவிட்டு,
"நீங்கதான் சொல்ல வேணும். நான் ஏற்கனவே சொன்னது உங்களுக்குத் தெரியும் தானே? இப்ப நடக்கிறதும் உங்களுக்கு நல்லாத் தெரியும். அப்ப நீங்கள்தான் சொல்ல வேணும்." என்றான்.
"ம்... நீ சொன்னது நிறைய உண்மை சிவா. ஆனா... என்ன செய்கிறது? யார் குத்தினாலும் அரிசி ஆகினால் சரி எண்டு பார்த்தன். இப்ப அதுவும் நடக்காது போல இருக்குது."
"போராட்டத்திற்கு யார் குத்தினாலும் அரிசியானால் சரி எண்டுகிறது சரி வராது அண்ணை. அப்பிடி இருந்ததின்ரை முடிவுதான் இப்ப எங்கடை போராட்டத்தின்ரை முடிவாகி இருக்குது. முட்டை போட்ட கோழி போல தங்களைத் தாங்களே காட்டிக் குடுத்தது மட்டும் இல்லாமல், சனத்தையும் எதுக்கு இழுத்துக் கொண்டு ஓட வேணும். இந்தியாவை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது எண்டு எல்லாருக்கும் ஏற்கனவே நல்லாய் தெரிஞ்சு இருந்தது. ஆனா உங்கடை தலைவருக்கு அந்தச் சின்ன விசயம் மட்டும் தெரியாமல் போயிட்டுதா? சரி கழுத்தில சயனெட் குப்பி தொங்கப் போட்டுக் கொண்டு திரிகிறவை எதுக்கு சனத்தை இழுத்துக் கொண்டு போக வேணும். அதுகளுக்கும் அப்ப ஒவ்வொரு குப்பியைக் குடுத்து விடுகிறது தானே? அதே அவையின்ரை திட்டம் அண்ணை? என்னைப் பொறுத்தவரை இது ஒரு கீழ்த்தரமான, மட்டமான, சுயநலமான திட்டம். இதால நிறைய அப்பாவிச் சனங்கள் அழியப் போகுதுகள். அது தெரிஞ்சும் சொந்த இனத்தையே பலி கொடுக்கிற சுயநலம் புலியளிட்டை மட்டும்தான் இருக்கும். இருக்குது."
"அப்பிடி இல்லை சிவா. சனத்தை இப்ப இழுத்துக் கொண்டு போகிறது தப்பு மாதிரித் தெரிஞ்சாலும் அவங்களுக்கு வேற வழி இல்லை. சனத்தை விட்டிட்டுப் போனாலும் தப்பாகத்தானே கதைப்பினம். அதே வேளை

கூட்டிக் கொண்டு போனாலும் இவங்களால காப்பாத்த முடியுமா எண்ட கேள்வியும் இருக்கிறது உண்மைதான்."
"நிச்சயம் இவங்களால காப்பாத்த முடியாது அண்ணை. கடைசிக்கட்டம் கொடுமையா இருக்கலாம். இனக்கலவரம் வரேக்க நாட்டுக்க வைச்சே மிருகத்தைவிட மோசமா நடந்தவங்கள் அவங்கள். காட்டில தனியாப் பெம்பிளையளும், பிள்ளையளும் இவையோட நிண்டு அகப்பட்டால் என்ன செய்வாங்கள் எண்டு யோசிக்க வேணும். அதுக்கான அனுபவமும் ஆதாரமும் நிறையவே இருக்குது. அவங்களுக்குப் பல குணங்கள் இருக்குது. சில வேளை சில குணங்கள் வெளிப்படும். அதுதான் கலவரத்தில நடந்தது. யுத்தத்தில, அதுவும் காட்டிற்க அப்பிடி நடக்காது எண்டுகிற எந்த உத்தரவாதமும் கிடையாதுதானே? அப்பிடியான ஒரு இக்கட்டில ஏன் பொதுசனத்தைக் கொண்டு போய் விடவேணும்? ஆனா... அது அவங்களுக்குப் பழக்க தோஷம். ஆரம்பத்தில இருந்தே அதுதானே நடக்குது. அது மாறும் எண்டு நாங்கள் எப்பிடி எதிர்பார்க்கிறது? போராட்டம் மக்களுக்காக இருந்தாத்தானே அதைப்பற்றின சிந்தனை வரும். இந்தப் போராட்டம் யாருக்கான போராட்டமாய் திரிஞ்சு போய் கிடக்குது எண்டது எல்லாருக்கும் நல்லாத் தெரியும். ஏதோ நாங்கள் நினைக்கிற மாதிரி நடக்காட்டிச் சரிதான்."
"நடக்காது எண்டு நம்புவம் சிவா. நாங்கள் இங்க இருந்து கற்பனை செய்கிற மாதிரி அங்க இருக்காது தானே? நாங்கள் என்ன செய்ய முடியும்? நல்லதா நடக்கும் எண்டு நம்புவம். எல்லாரும் இறுக்கிப் போட்டாங்கள். அவங்கள் அழிகிறதால தமிழற்ற எதிர்காலம் அழியப் போகுது."
"ஆனா... நான் நினைச்ச மாதிரியே நடக்கும் போல அரைசல் புரைசலான செய்தி. யார் உண்மை சொல்லுகினம் யார் பொய் சொல்லுகினம் எண்டு தெரியாட்டியும் இது ஓரளவுக்கு நம்பக்கூடிய இடத்தில இருந்து வந்தது எண்டு கேள்வி. இராணுவமும் அப்படித்தான் சொல்லிக் கொண்டு இருக்கிறாங்கள்."
"என்னத்தை சொல்ல வாறா சிவா?"
"முல்லைத்தீவு ரவுணும் கெதியா ஆமியிட்டடை விழுந்திடும் எண்டு சொல்லுகிறாங்கள். போராட்டம் கிட்டத்தட்டத் தோல்வியில முடிகிறது நிச்சயம் எண்டது

தெரியுது. ஆனா... கடைசியா மாட்டுப்படப் போகிற சனங்களின்ரை, அப்பாவி பெடியள், பெட்டையளின்ரை நிலமை என்ன ஆகும் எண்ட பயம் அவங்களுக்கு இருக்கிற மாதிரித் தெரிய இல்லை. தாங்கள் அழியேக்க தங்களோடை சேர்ந்து அதுகளும் அழிய வேணும் எண்டு நினைக்கிறாங்கள் போல இருக்குது."

"நீ என்ன சொல்லுகிறா சிவா? முல்லைத்தீவும் போயிடும் எண்டுறியா?"

"அது போயிட்டுது எண்டுகிறாங்கள்... போகுது எண்டுகிறாங்கள். எப்பவும் இராணுவம் போகும் எண்டுகிற நிலை எண்டுகிறாங்கள்... அதுவும் போனா எங்க போகப் போகினம் எண்டது கேள்வியாக இருக்கும்."

"கடவுள்தான் காப்பாத்த வேணும்."

"ம்... கடவுளையும் காப்பாத்த விடுவாங்களா?" என்றான் சிவா.

# 33 ஓயாத ஓப்பாரி

மரத்தின் கொப்பில் ஏறியிருந்து அதன் அடியைத் தறித்த பின்பு மரம் விழுந்ததாய் ஒப்பாரி வைப்பவர்களைப் பார்த்துச் சிரிப்பதா அழுவதா என்கின்ற வினோதம் சிவாவிற்கு ஒருபோதும் தீர்வதில்லை. மரத்தில் ஏறியிருந்து அதன் அடியை அவர்கள் தறித்ததாக இப்போதும் அவர்களுக்குச் சொல்ல முடியாது. அவர்கள் பார்வை அப்படியானது. மரத்தை யாரோ தறித்துவிட்டதாகச் சண்டைக்கு வருவார்கள். மரத்தைத் தாங்கள் தறிக்கிறோம் என்பதே விளங்காதவர்கள் அந்த மரம் விழுந்துவிடாது எப்படிக் காப்பாற்ற முடியும்? இலக்கு அற்று, என்ன செய்கிறோம் என்பது விளங்காது, செயல்களைச் செய்பவர்களால் எதையும் காப்பாற்ற முடியாது. கிட்லர் மீசை வைத்துக் கொண்டு சத்தியாக்கிரகம் செய்வது போல பல திருக்கூத்துக்கள் தொடர்ந்தும் நடக்கின்றன. இதைக் கோமாளித்தனம் என்று சொல்வதா அல்லது ஆற்றாமையில் ஏற்பட்ட அலமலக்கத்தின் உச்சி என்று சொல்வதா? போராட்டம் என்றால் வன்முறை முதன்மையானது என்கின்ற தப்பான அவிப்பிராயத்தோடு தங்கள் கால்களைத் தாங்களே காயப்படுத்திக் கொண்ட ஒரு இனம். அதைத் தவறு என்று சிறிதும் உணரமுடியாத அவர்களின் மனநிலை. அதனால் உண்மையான ஒரு உரிமைப் போராட்டம் இன்று ஊமையாகிப் போக வேண்டிய கட்டாயம்? அது ஏன் ஊமையாகிறது என்கின்ற உண்மை விளங்காது தெருத் தெருவாக நின்று ஊளையிடும் புலம் பெயர்ந்த அவர்களின் சொந்தங்கள்? இதன் எதிர்காலம் எப்படி இருக்கும்? ஏதோ ஒரு ஊர்வலம் தயாராகிறது. அது கடைசியில் எப்படி முடியப் போகிறது? அரசியல் அற்ற வன்முறையால் மட்டும் நல்ல முடிவு வந்துவிடுமா?

சிவாவிற்குத் தனது இப்படியான எண்ணங்களை மற்றவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது என்பது விளங்கும். இருந்தும் உண்மை அதுதான் என்பதில் அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அவன் நினைத்தது போலவே பலவும் நடந்து கொண்டு

வருவது அவனைக் கவலையில் ஆழ்த்தும். கவலையாக இருப்பினும் இந்த உண்மையால் அவனது எண்ணம் மேலும் வலுத்து இருந்தது. முல்லைத்தீவு நகரமும் போனது. அவர்களது சுரங்கங்கள், கோட்டைகள் எல்லாவற்றையும் கைப்பற்றியதாக இராணுவம் கூறிவிட்டது. அதன் பின்பு ஆற்றாமையில் விமானம் மூலம் கொழும்பில் தற்கொலைத் தாக்குதல் செய்வதால் என்ன வந்துவிடப் போகிறது? இந்த நவீன காலத்தில் அவர்கள் விமானங்கள் விளையாட்டுப் பொம்மை விமானத்திற்குச் சரி என்று சிவாவிற்குத் தெரியும். மேலும் தாங்கள் பயங்கரவாதிகள் என்பதை வெட்ட வெளிச்சமாக நிரூபிக்க மட்டுமே அதனால் முடிந்தது. இதனால் யாருக்கு என்ன ஆதாயம் வரும்? தமிழர்கள் பயங்கரவாதிகள் என்று ஐயம் இல்லாது ஏற்றுக் கொள்ளப்படும். இதைத்தான் புலிகள் தங்கள் அரசியல் ஆக்கி வைத்து இருக்கிறார்கள் என்று சிவாவிற்கு அதிக கோபம் உண்டு. கோபம் இருந்து என்ன செய்யமுடியும்? யார் குரலும் அவர்கள் காதில் ஏறாது என்பது அவனுக்கு நன்கு தெரியும். கடைசியாக ஐநா சபையும் இரண்டு பக்கமும் கொலைகாரர்கள் என்றுவிட்டது. அதுவே உண்மை என்பது சிவாவின் எண்ணம். இலங்கையில் அவர்கள் முதலில் கொன்றார்கள். அதற்காக இவர்களும் கொன்றார்கள். இவர்கள் கொல்வதா என்று அவர்கள் மேலும் மூர்க்கமாகக் கொன்றார்கள். நாடே கொலைக்களம் ஆகியது. அதன் கடைசி முடிவு இப்போது அரசாங்கம் நினைத்த இடத்தில் நடக்கிறது.

இங்கு இருக்கும் பலர் அரைப் பயித்தியம் ஆகிவிட்டார்கள் என்பதும் சிவாவிற்குத் தெரியும். ஒன்று கடைசிப் பந்தயத்தில் தொகையாகக் காசைக் கொடுத்து ஏமாந்தவர்களின் கூட்டம். அதைவிடச் சுதந்திர நாட்டில் உல்லாசமாய் இருக்கலாம் என்று பலகாலமாய் செய்த முதலீடு கப்பல் கடலில் மூழ்கியதான முடிவாக மறைந்து போயிற்றே என்கின்ற ஏக்கம். ஒரு சிலருக்கு இனி எங்களுக்கு ஒரு நாடு கிடைப்பது சாத்தியமே இல்லை என்கின்ற உண்மையான அடக்க முடியாத சோகம். அதற்குள் ஒரு நரிக் கூட்டத்திடம் புலிச் சொத்து என்கின்ற பொதுச் சொத்து அகப்பட்ட சந்தோசம். அதை

இனி அவர்கள் என்ன செய்வார்கள் என்கின்ற ஆதங்கம் பலருக்கு. யாரின் தனிச் சொத்தாக அது மாறப் போகிறது என்கின்ற கேள்வி. அதனால் எழும் கோபம், சோகம். அத்தினை சோகங்களும் ஒப்பாரிகளும் தொடர்கின்றன. ஆனால் ஐரோப்பா பயங்கரவாதிகள் என்று புலன்களையும் மனதையும் இறுக்கமாக மூடி வெகு காலம் ஆகிவிட்டது. அதை இனி யாராலும் மாற்ற முடியாது. சனத்தைப் புலிகள் இழுத்துக் கொண்டு போகும் போது புலம்பெயர்ந்த தமிழர்கள் புலன் பெயர்ந்து இருந்து விட்டார்கள். இழுத்துக் கொண்டு போனவர்களிடம் இருந்து சனம் இப்போது, போகும் உயிர் போகட்டும் என்று தப்பிப் போகத் தொடங்கிவிட்டதாக தகவல் வருவது பற்றியும் சிவாவிற்குத் தெரியும். எப்போது அவர்கள் ஒட்டுமொத்தமாக வெளியேறுவார்கள் என்பது தெரியாது. கடைசியாகப் புலிகள் சமாதானம் பேச, அரசு சேடம் இழுக்கும் அந்த அமைப்புக்குக் கருணை காட்ட மறுக்க, தலைமையைக் காக்க வேண்டும் என்று இங்கே ஒப்பாரி வைப்பதில் என்ன மனச்சாட்சி இருக்கிறது என்பது சிவாவிற்கு விளங்கவில்லை. சனத்தைக் கேடயமாக்கிப் போராடிய இவர்களுக்காக இங்கு என்ன கூத்து ஆடியும் எதுவும் நடக்கப் போவது இல்லை என்பது உண்மை ஆகிவிட்டது. அது நீண்டகாலப் புலிகளின் திட்டமிடலால் ஏற்பட்ட மாற்ற முடியாத விளைவு. அந்த அறுவடையில் அவர்கள் இருப்புக் கேள்வியான நேரம் இது.

*

சிவா தொடக்கம் அனைத்துத் தமிழருக்கும் போராட்டம் இப்படி முடிவதில் மிகவும் கவலையாக இருந்தது. அதுவும் கொத்துக் கொத்தாகச் சனங்கள் கொலையாவது மிகவும் வேதனை தந்தது. அதுவும் புலிகள் அகப்பட்டுக் கொண்டது பலருக்கும் மிகவும் மனவருத்தத்தைத் தந்தாலும் சிலருக்கு மாத்திரம் பட்டினத்தார் வார்த்தைகள் பலித்ததான அற்பச் சந்தோசம். அது அற்பச் சந்தோசமே. மொத்தத் தமிழரும் ஒட்டுமொத்தமாய் அம்மணமானதான அவமானம் அந்த அற்பச் சந்தோசத்தை மிதித்து உதறிச் சென்றது.

சிவா தனக்குள் ஓடும் யோசனையோடு நடந்து வந்தான். இன்று ஊர்வலம் நடக்கப் போகிறது என்று கேள்விப்பட்டு இருந்தான். ஏற்கனவே இலங்கைத் தூதரகத்திற்குள் வன்முறை செய்து நல்ல பெயர் எடுத்து வைத்திருந்தார்கள். வெறிகாரன் என்றாலும் யோசிப்பான். இந்த வன்முறையாளர்கள் தங்கள் போராட்டத்தைத் தாங்களே கொச்சைப்படுத்தினார்கள் என்பதை விளங்கிக் கொள்ள இல்லை. அதையே வீரம் என்று பெருமை பாராட்டினார்கள். இலங்கை அரசும் அதன் தூதரகமும் அதை ஒட்டுமொத்தத் தமிழரின் போராட்டத்திற்கு எதிராகத் திட்டமிட்டு முறையாகப் பாவிக்கிறது. அது அடங்கவில்லை. இப்போது புதிதாக ஒரு ஊர்வலம் இன்று நடக்கும் என்று கூறி இருக்கிறார்கள். அந்த ஒப்பாரியில் கலந்து கொள்ளும் எந்த எண்ணமும் சிவாவிற்கு இல்லை என்றாலும் ஊர்வலத்தில் என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும் என்கின்ற அற்பச் சந்தோசம்.

*

அந்த ஊர்வலம் அவஸ்தை கொடுக்க வேண்டும் என்கின்ற நோக்கத்தோடு அதிரடியாகத் தொடங்கப்பட்டது என்பதை அது தொடங்கிய நேரத்தை வைத்து எவராலும் அறிந்து கொள்ள முடியும். அந்த ஊர்வலத்திற்கு நோர்வேயில் இருந்த அவர்கள் விசுவாசிகள் மட்டும் அல்ல, டென்மார்க், சுவீடன் ஆகிய நாடுகளில் இருந்தும் ஆட்கள் அழைத்து வரப்பட்டிருந்தனர். கடலாக வந்த அவர்கள் கையில் தவறாது புலிகளின் சிவப்புக் கொடி. அதைப் பிடித்ததால் இரத்தக் கடல் சுனாமியாக ஒஸ்லோ நகருக்குள் புகுந்ததாகத் தோன்றியது. புலிகளின் கொடியோடும் படத்தோடும் வரும்போது ஐரோப்பாவில் தற்போது தமிழரின் உரிமைப் போராட்டம் என்னவாகப் பார்க்கப்படும் என்கின்ற தெளிவு சற்றும் அற்றவர்களாக, அதைத் தங்கள் வீரப்பிரதாபமாக நினைத்துப் புகைப்படங்களையும், கொடியையும் தாங்கிய கூட்டம் ஒஸ்லோவின் பணக்காரர்கள் குடியிருக்கும் மேற்குப் பக்கத்தின் அமைதியை, அவர்கள் மதிய உணவு உண்ணம் வேளையில் குலைத்த வண்ணம், அவசரமாக வந்தார்கள். அதைப் பல சுதேசிகளால் இரசிக்க முடியவில்லை. உங்கள் போராட்டம் உங்களோடு எங்கள் அமைதியை ஏன் குழப்புகிறீர்கள் என்பது அவர்கள் கேள்வி ஆகியது.

ஆனால் உணர்ச்சி வெறியில் தத்தளித்த பலருக்கும் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது முழுமையாக விளங்கவில்லை. இதனால் எதுவும் நடக்கப் போவது இல்லை என்கின்ற அனுமானம்கூட அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. என்றாலும் அவர்களும் பாரிய திட்டத்தோடு வருவது அப்போது யாருக்கும் விளங்கவில்லை. அப்போது அவர்கள் வருகை யாரையும் பயமுறுத்தவும் இல்லை. எல்லோரும் விடுப்புப் பார்த்தார்கள்.

ஊர்வலத்தைக் கட்டுப்படுத்தப் புலிகள் என்று கூறும் புலம் பெயர்ந்தவர்கள் இம்முறை தாங்களே ஏற்பாடு செய்திருந்தார்கள். சட்டப்படி ஏற்கனவே செய்தது போல் எதுவும் செய்யாது செவிடுபடக் கத்திய வண்ணம் முதலில் வெளிநாட்டு அலுவலகத்திற்கும், பின்பு பாராளுமன்றத்திற்குமாய் ஊர்வலம் நகர்ந்தது. ஊர்வலம் போக்குவரத்தைத் தடைசெய்து அவதியை ஏற்படுத்தினாலும் பெரிதாக வன்முறை எதுவும் முதலில் வெடிக்கவில்லை.

மகிந்தாவின் பொம்மையை ஏரிக்கும் போது பெரிய அமளி உண்டாகியது. இங்கு ஊர்வலங்களில் நெருப்பு, எரிப்பு என்பன பாவிக்கப்படுவது இல்லை. நெருப்பு இங்கே உள்ள கட்டடங்களுக்கு ஒத்துக் கொள்ளாத விசயம். மகிந்தாவை இங்கு இருந்து எரிப்பதால் அங்கு என்ன மாறப் போகிறது என்பது சிவாவிற்கு விளங்கவில்லை. போராட்டத்தை ஒழுங்காகத் திட்டமிட்டு நடத்தாது ஆயுத மோகத்தையும், வன்முறையையும் பாவித்து, அவதார புருசர்கள் என்கின்ற மமதையில் கொலைகள் செய்வதால், விடுதலையோ அல்லது அதன் மேல் அனுதாபமோ பிறக்காது என்பது ஏன் இந்தப் புலன் பெயர்ந்த புலம் பெயர்ந்தவர்களுக்கு இப்போதும் தெரியவில்லை என்கின்ற கேள்வியோடு சிவா அதற்கு மேல் அங்கு நிற்க விரும்பாதவனாய் நகரத் தொடங்கினான்.

*

காலமும் வாழ்க்கையும் கட்டுக்குள் கட்டுப்படாதவை. அதற்கு யாரது அனுமதியும் தேவை இல்லை. "TS"

துன்பத்தில் இருந்து விடுபட்டு எப்போதும் ஆனந்தமாய் எப்படி இருப்பது என்கின்ற சிந்தனையில் இப்போது அடிக்கடி மூழ்கித் திளைத்தார். அவரின் மூளையில் காலம் தந்த பாடத்தில் சில பொறிகள் தட்டின. அதனால் இவ்வுலகின் நிரந்தரம் இல்லாத மாயைகளை நிரந்தரமாக எண்ணிய மடமை அவருக்கு தெளிவாகிற்று. தன்னை முழுமையாக இழக்கும் பொழுதே ஆனந்தத்தைப் பெற முடியும் என்பது அவருக்கு விளங்கியது. நான் என்கின்ற ஆணவம் சாகும் போதே பரமானந்தம் என்கின்ற ஆத்ம விடுதலைக் கிட்டும் என்பது அவருக்கு விளங்கியது.

நான், எனக்கு என்கின்ற இவ்வுலக மாயத்தை மறந்து "TS" சிறிது சிறிதாக அமைதி காணத் தொடங்கினார். அவர் தனது நானைச் சிறிது சிறிதாக வதைத்து ஆனந்த மயமானார். அவர் ஆனந்த ஒளியில் அவர் குடும்பமும் ஆனந்த மயமானது.

நான், எனது என்பது இல்லாத போது இவ்வுலக வாழ்க்கை பிறப்பு எய்துவதற்கு அல்ல அதை அறுப்பதற்கு என்பது அவருக்குத் தெளிவாக விளங்கியது. அதுவே எல்லை இல்லா விடுதலைத் தந்தது. அது பரமானந்தம் தந்து பரமாத்மாவை அடையும் வழியை அவருக்குக் காட்டியது. அவர் இப்போது அமைதியின் உருவமாக உலாவினார்.

சிவாவிற்கு "TS" மேல் முன்பைவிட அதிக மரியாதை வந்து இருந்தது. காலம் இனி எங்கள் அடையாளத்தை எங்களோடு அடக்கம் செய்யும் என்பதும் அவனுக்கு விளங்கியது.

மொழியா எல்லா வலிகளும் ஒரு நாள் இல்லாது அழியும் என்று அவன் திடமாக நம்பினான்.

முற்றும்...